உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமாதைத்

# திருவேங்கடஸ்வாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# பிரபோதசந்திரோதயம் என்னும்

# மெய்ஞ்ஞான விளக்கம்.



இஃது

தஞ்சாவூர் ஜில்லா நாகபட்டணம் தாலூகா, நாகூர் பிரம்மஸ்ரீ
வயித்திநாதய்யரவர்கள் குமாரர், மதுரைஜில்லா பெரியகுளம்
போஸ்டாபீஸ் ஹெட் ஸிக்னலர்

**வ. வெங்கடராமய்யரவர்களது**

வேண்டுகோளின்படி

ஸ்ரீ சிதம்பரத்தின்கண்ணே யெழுந்தருளியிருந்த

ஸ்ரீ கோயிலூர்

**ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பலஸ்வாமிகள்**

முன்னிலையில், அவர்கள் மாணாக்கர்கள்

சுப்பராயசுவாமிகள், இராமாநுஜமுதலியார் இவர்களால்
முன் பிழையறப்பரிசோதிக்கப்பட்ட பிரதிக்கிணங்கத், தற்காலம்

பெரியகுளம், வி. எம். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
கீழ்மங்கலம்,

**பிரம்மஸ்ரீ கெ. எஸ். சுப்பராயய்யரவர்களாற்**

பிழையறப்பரிசோதிக்கப்பட்டு,

ஷை பிரம்மஸ்ரீ வ. வெங்கடராமய்யரவர்களாற்

பெரியகுளம்

**ஸ்ரீ மீனாம்பிகை அச்சியந்திரசாலையிற்**

பதிப்பிக்கப்பட்டது.

---

**இரண்டாம்பதிப்பு.**

---

பரீதாபி௵ தைமீ



விலை ரூ 4—0—0

# மெய்ஞ்ஞானவிளக்கம்

(வ. வெங்கடராமய்யர் பதிப்பு).



## இப்புத்தகம் விற்கும் இடங்கள்.



கோ. சித. மடாலயம்,

சிதம்பரம்.

ஸ்ரீ மீனாம்பிகை அச்சுக்கூடம்,

பெரியகுளம், (மதுரைஜில்லா).

உ

சிவமயம்.

# அபிப்பிராயம்.

சென்னை பிரசிடென்சி காலேஜ் தமிழ்ப் பண்டிதர் பிரம்மஸ்ரீ மஹாமஹோபாத்யாயர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் எழுதியது.

---

பெரியகுளம் போஸ்டாபீஸ் ஹெட்சிக்னலர் ம-া-া-ஸ்ரீ வ. வேங்கடராமையர், சிரமத்தைச் சிறிதும் பாராட்டாமற் பதிப்பித்து வெளிப்படுத்திய பிரபோதசந்திரோதய மென்னும் புஸ்தகத்தின் காக்ஷி மிகுந்த திர்ப்தியை விளைவிக்கின்றது. அத்வைத சாஸ்திரங்களிலுள்ள அரியநுட்பங்களை யாவரும் வருத்தமின்றி யறிந்துகொள்ளும்படி செய்விக்கும் நன்மை வாய்ந்த ஷை நூலின் பெருமையை அறியாதார் யாவர்? அதனை நல்ல கடிதத்தில் மிக அழகாகப் பதிப்பித்திருத்த லன்றிப் படிப்பவர்களுக்குச் சிறந்த கருவிகளாகிய பல பகுதிகளைத் தக்கவர்களைக்கொண்டு எழுதுவித்துப் பதிப்பித்து அதனுடன் இவர் சேர்த்திருத்தல் மிகப்பாராட்டற் பாலது. தமிழ் நாட்டினர் இப்புத்தகத்தை வாங்கிப்படித்து இன்புறுவாராயின், இப்பதிப்பு முதலியவற்றால் நேர்ந்த பொருள் நஷ்டம் நீங்கப்பெற்று மேற்கூறிய வேங்கடராமையர் மிக்க ஊக்கமடைவாரென்று நம்புகிறேன்.

சென்னை.
11-7-1913.

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.

## இப்புத்தகத்தில் அடங்கியவை.


க. முகவுரை.

உ. சருக்க அட்டவணையும், விருத்தத் தொகையும்.

ந. காபிரைட் பாத்தியம்.

ச. பிரவிர்த்தி நிவிர்த்தி சந்ததிகள்.

ரு. மோகனுதியர் வம்சபரம்பரை.

சா. விவேகனுதியர் வம்சபரம்பரை.

எ. ரிஜிஸ்தர் அறிவிப்பு.

அ. நூல்.

கூ. அரும்பத வுரை.

க0. மதவிளக்கச் சுருக்கம்.

கக. பரியாயப்பெயர் விளக்கம்.

கஉ. சரித்திரமேற்கோள் விளக்கம்.

கந. சிவ விஷ்ணுத் திருப்பதிகள்.

கச. செய்யுள் முதற்குறிப்பகராதி.

கரு. பிழை திருத்தம்.




சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

---

மலர்தலைஉலகிற் பலபிறப்புறீஇ அலகிலாதியற்றிய அருந்தவமிகையாற், புண்ணியபூமியிற் புருடராய்ப்போந்தும், நண்ணுதற்குரிய நாற்பொருட்பேற்றிற் கண்ணிய அறமும் கதியெனும் வீடும் எண்ணுராகி, "இரதியைநிகர்த்த பெண்ணரணங்குகள் பெருந்தனம் நசைஇக் கொக்கோகத்திற்கூறியவண்ணம் கூடியும், பாடியும், கொஞ்சியும், குலவியும் தெவிட்டா இன்பந்திளைத்துவப்பதுவே நித்திய இன்பமாம் உத்தமமுத்தி" என்று கூறும் சாருவாகனெனச் சிலர் சாத்திரப்பயிற்சிதன்னமும் இன்றி, வாய்வரூஉமொழிகளைவரையாது வழங்கி, மிருகபக்ஷிகள்போன்று அருந்தல் பொருந்தல் மாத்திரங்கைக்கொண்டு, பிறவிப்பயனைப்பெறுது தம்வாணளை வீணளாக்கிப், பிறந்திறந்துழலும் பெற்றியைநோக்கிப் பேரருள்பூத்து, அன்னோர் மெய்யுணர்ந்தின்பம் மேவுதற்பொருட்டும், புத்தரும், சமணரும், உலோகாயதரும் புக்கிடமின்றிப் போதற் பொருட்டும், உயர்நலம்விழையும் உத்தமர்தமக்குவெள்ளிடை விலங்கலென வேதாந்தப்பொருள் விளங்கற்பொருட்டும், ஓர்வேதாந்த நூலை விளம்பிடுவாயெனப் பராவருந்தமதுபரமாசாரியர் இராகவானந்தர் இயம்பியருளக், கங்கையிற்சிறந்த காவிரிபாய்தலிற்கன்னலும், செந்நெலும், கதலியும், கமுகும், இன்னனபிறவும் எழிலுறவளர்ந்து, மேதினிவதனப்போதெனமிளிரும் சேணர்சிறப்பிற்சோணுடதற்கோர் திலகம்போன்ற திவ்வியநகராம் வாதையொன்றறியா மாதையம்பதிக்கண் இற்றைக்குச் சற்றேறக்குறைய ௩௫௦ வருடங்கட்குமுன்னர்த் திருவவதரித்தருளிய நம் புலவர்பெம்மான் ஸ்ரீ திருவேங்கடஸ்வாமிகள் காவியரூபமான

மெய்ஞ்ஞான விளக்கம் எனப்பெயரிய இந்நூலை இயற்றியருளினர். இத்தகைய அரும்பெறல் நூல் முகவுரை, சருக்கத்தொகை, சருக்கஅட்டவணை, வம்சாவளி, முதற்குறிப்பகராதி முதலியனவும், சிலபுராதனச்செய்யுட்களுமின்றிப் பதமும் பாட்டும் முறைபிறழ்ந்து மயங்கி மாறிக்கிடப்ப மலின காகிதத்தில் அக்ஷரவழுக்களோடச்சிடப்பட்டுக் கேவலநிலையிற்கிடத்தலைநோக்கி யவற்றைச்சீர்திருத்திச் சுத்தப்பிரதியாய் அச்சிடவேண்டும் என்னும் எனது நீடிய அவாவினாற் சிதம்பரத்தின்கண் ணெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பலஸ்வாமிகள் முன்னிலையில், அவர்கள் மாணாக்கர்கள் சுப்பராயஸ்வாமிகள், இராமாநுஜ முதலியார் என்னுமிவர்களைக் கொண்டு பரிசோதித்துச் சென்ற ௧௮௯௮-ம் வருஷம் முதற்பதிப்பை அச்சிற்பதிப்பித்தேன்.

சில முக்கிய விஷயங்களைச்சேர்த்து மற்றுமோர் முறை இதனை அச்சிடவேண்டுமென்னும் எனது அவாவினால் பெரியகுளம் வி. எம். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் கீழ்மங்கலம் பிரம்மஸ்ரீ கெ. எஸ். சுப்பராய அய்யர் அவர்களால் முதற்பதிப்பிலிருந்த வழுக்களைக்களைந்து அவர்கள் எழுதிய அரும்பதவுரை, மதவிளக்கச்சுருக்கம், பரியாயப்பெயர் விளக்கம் என்பவற்றோடு யான் எழுதிய சிவவிஷ்ணுத் திருப்பதிகள், சரித்திர மேற்கோள்விளக்கம் என்பவற்றையுங்கூட்டி இவ்விரண்டாம் பதிப்பை அச்சிற்பதிப்பித்தேன்.

இப்பதிப்பிற் சில்லிடத்தில், இன்னோசைபயத்தற்பொருட்டுச், சிலவடமொழிகள் உச்சரிப்பிற்கிசையத் திருத்தப்பட்டும், தன்னொழிமெய்ம்முன் யவ்வரிற் றுன்னுவதாகிய இகரம் ஒழிக்கப்பட்டும், சீர்குறைந்தவிடங்களிற் சில எழுத்துக்கள் விரிக்கப்பட்டுமிருக்கின்றது.

இந்நூல் சென்ற ௧௯௦௨-ம் ௵த்தில் எம். ஏ. பரீக்ஷைக்கும், சுமார் ௩௫ வருஷத்திற்கு முன் பி. ஏ. பரீக்ஷைக்கும் பாடபுத்தகமாகக்கொள்ளப்பட்டது.

எமது அவகாசக்குறைவாற்பலபிழைகளிதிலிருத்தலுங் கூடும். அவற்றை எம்பால் அன்புகூர்ந்து திருத்திவாசித்துக் கொண்டு எனக்கும் பக்ஷத்துடன் எழுதித் தெரிவிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

இதனைப்பரிசோதித்த ௸ கே. எஸ். சுப்பராய அய்யர் அவர்களுக்கும், பதிப்பிக்குங் காலத்து ஒப்புநோக்கி வேண்டிய உதவிபுரிந்து வந்தவர்களாகிய பெரியகுளம் மைனர் இரிகேஷன் ஓவர்சியர் தஞ்சாவூர் ஜில்லா விஷ்ணம்பேட்டை பிரம்மஸ்ரீ வி. முத்துரெங்கய்யர் அவர்களுக்கும், பெரியகுளம் பிரம்மஸ்ரீ எஸ். எம். நீலகண்ட சாஸ்திரிகள்அவர்களுக்கும் யான் நன்றியறிதலுள்ளவனாயிருப்பதோடு, அவர்களுக்குச் சர்வ இஷ்ட சித்தியையும் அனுக்கிரகித்தற்பொருட்டு ஸ்ரீ பாண்டரங்கன் இணையடிகளை என்றும்இறைஞ்சுகின்றேன்.

இப்புத்தக விற்பனையான் வரும் இலாபப்பொருள் கதியினால்குங் கங்கையைக் கொணர்வித்துப் புண்ணியகாலங்களிலாலயந்தோறும் அபிஷேகத்திற்களிக்கும் சற்காரியத்தில் விநியோகப்படுத்தப்படும் என்பதைஅன்பர் திருமுன்னறிவிக்கின்றேன்.

பெரியகுளம்
1913ஹு ஜனவரிமீ
13உ

இங்ஙனம்,
வ. வேங்கடராமய்யர்,
பெருமாள்கோவில்
தெற்குமடவளாகம், நாகூர்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மெய்ஞ்ஞானவிளக்கச் சருக்க அட்டவணையும், விருத்தத்தொகையும்.

——(**)——


| சருக்கத் தொகை. | சருக்கப்பெயர். | பக்கம். | விருத்தத் தொகை |
|---|---|---|---|
| | பாயிரம் | ௧ | ௨௯ |
| ௧ | உற்பத்திச்சருக்கம் | ௫ | ௩௬ |
| ௨ | மோகனரசாட்சிச்சருக்கம் | ௧௦ | ௩௫ |
| ௩ | அவித்தியாபுரச்சருக்கம் | ௧௫ | ௮௪ |
| ௪ | விவேகன்வனம்புகு சருக்கம் | ௨௬ | ௨௯ |
| ௫ | விவேகன் மந்திரச்சருக்கம் | ௩௦ | ௪௦ |
| ௬ | விவேகனொற்றுக் கேள்விச்சருக்கம் | ௩௫ | ௮௭ |
| ௭ | விவேகன்சேனை கரந்துறைசருக்கம் | ௪௭ | ௫௩ |
| ௮ | சத்துவச்சிரத்தை தூதுச்சருக்கம் | ௫௪ | ௨௩ |
| ௯ | மோகனொற்றுக் கேள்விச்சருக்கம் | ௫௮ | ௨௧ |
| ௧௦ | இடம்பனுக் கோலைவிடுசருக்கம் | ௬௦ | ௨௦ |
| ௧௧ | இடம்பாங்காரச் சருக்கம் | ௬௩ | ௧௧௭ |
| ௧௨ | மோகன்காசிபுகு சருக்கம் | ௭௯ | ௧௪ |
| ௧௩ | சாருவாகச் சருக்கம் | ௮௧ | ௨௫ |
| ௧௪ | கலிச்சருக்கம் | ௮௫ | ௨௮ |
| ௧௫ | மித்தியாதிட்டிச் சருக்கம் | ௮௯ | ௨௨ |
| ௧௬ | சிரத்தைபோக்கிடையூற்றுச்சருக்கம் | ௯௨ | ௧௯ |
| ௧௭ | சாந்திச் சருக்கம் | ௯௪ | ௨௭ |
| ௧௮ | சமணாதியர் சருக்கம் | ௯௮ | ௭௫ |
| ௧௯ | வயிரவி வதைச் சருக்கம் | ௧௦௭ | ௨௮ |
| ௨௦ | சிரத்தை மீட்சிச்சருக்கம் | ௧௧௧ | ௨௮ |
| ௨௧ | விவேகன்போதகரைவரவழைத்தச [ருக்கம் | ௧௧௫ | ௩௩ |
| ௨௨ | உபநிடதை வேள்விச்சருக்கம் | ௧௧௯ | ௬௫ |
| ௨௩ | சக்கரதீர்த்தச்சருக்கம் | ௧௨௮ | ௨௪ |
| ௨௪ | காமனாதியர்சருக்கம் | ௧௩௧ | ௬௯ |

| சருக்கத் தொகை | சருக்கப்பெயர். | பக்கம். | விருத்தத் தொகை |
|---|---|---|---|
| ௨௫ | நியாயன் றாதுச்சருக்கம் ... | ௧௪௦ | ௩௮ |
| ௨௬ | காமனுதியர் வீரலாபச்சருக்கம் ... | ௧௪௫ | ௧௨௦ |
| ௨௭ | நிரூபகாதியர் வீரலாபச்சருக்கம் ... | ௧௬௦ | ௧௦௪ |
| ௨௮ | விவேகன்காசிபுகுசருக்கம் ... | ௧௭௩ | ௩௦ |
| ௨௯ | படையெழுச்சிச் சருக்கம் ... | ௧௭௭ | ௩௯ |
| ௩௦ | காமனுதியர் வதைச்சருக்கம் ... | ௧௮௨ | ௭௯ |
| ௩௧ | உலகாயிதன் வதைச்சருக்கம் ... | ௧௯௩ | ௬௪ |
| ௩௨ | புத்தர் வதைச்சருக்கம் ... | ௨௦௨ | ௮௫ |
| ௩௩ | சமணர் வதைச்சருக்கம் ... | ௨௧௩ | ௫௧ |
| ௩௪ | மோகன் வதைச்சருக்கம் ... | ௨௨௦ | ௩௭ |
| ௩௫ | மானதன் புலம்புறுசருக்கம் ... | ௨௨௬ | ௩௪ |
| ௩௬ | கலைமகள் தேற்றச்சருக்கம் ... | ௨௩௦ | ௨௨ |
| ௩௭ | விவேகன் முடிசூடுசருக்கம் ... | ௨௩௩ | ௫௨ |
| ௩௮ | மாயைச் சருக்கம் ... | ௨௪௦ | ௩௦ |
| ௩௯ | மீமாஞ்சச்சருக்கம் ... | ௨௪௪ | ௩௨ |
| ௪௦ | சமுச்சயன் சருக்கம் ... | ௨௪௯ | ௬ |
| ௪௧ | சாங்கிய மதச்சருக்கம் ... | ௨௫௦ | ௨௮ |
| ௪௨ | தார்க்கிகன் மதச்சருக்கம் ... | ௨௫௪ | ௧௫ |
| ௪௩ | வேதாந்தி மறுத்தற்சருக்கம் ... | ௨௫௬ | ௧௦ |
| ௪௪ | யோகமதச்சருக்கம் ... | ௨௫௭ | ௨௭ |
| ௪௫ | பாஞ்சராத்திரச் சருக்கம் ... | ௨௬௨ | ௧௬ |
| ௪௬ | சைவ சித்தாந்தச் சருக்கம் ... | ௨௬௪ | ௨௨ |
| ௪௭ | வேதாந்தச் சருக்கம் ... | ௨௬௭ | ௧௯ |
| ௪௮ | பிரபோதன் முடிசூடுசருக்கம் ... | ௨௭௦ | ௨௮ |

ஆக சருக்கம் ௪௮-க்குத் திருவிருத்தம்... ௨௦௧௯.


மெய்ஞ்ஞானவிளக்கச் சருக்க அட்டவணையும்,

விருத்தத்தொகையும்,

முற்றுப்பெற்றது.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காபிரைட் பாத்தியம்.

—:(o):—

ஸ்ரீ சிதம்பரத்தின்கண்ணுள்ள ஸ்ரீ கோயிலூர் சிதம்பர (கோ — சித.) மடாலயத்திற்கு இப்பதிப்பிற்குமுந்தின பதிப்பின் (முதற்பதிப்பின்) டைடில்பக்கம், முகவுரை, அவ்விரண்டிலுங்கண்டிருக்கும் பெயர்கள், அச்சியற்றிய கையெழுத்து முதலியவைகளை ஒவ்வொரு பதிப்பிலும் மாற்றாமலும், வேறேயொருவருடைய பெயரைச் சேர்க்காமலும் இதனை அச்சிற்பதிப்பித்து, வரும் லாபத்தை முகவுரையிற்கண்ட தர்மத்தைப்பரிபாலனம் செய்துகொள்ளும் பாத்தியத்தையும், இப்புத்தகத்தின், இங்கிலீஷ் பிரான்சு இலாகாக்களிலிருந்து பெற்றிருக்கும் காபிரைட் பாத்தியங்களையும் என் ஜீவகாலத்திற்குப்பிறகு பெற்றுக்கொள்ளும்படி மதுரைஜில்லா பெரியகுளம் தாலூகா கஸ்பா பெரியகுளம் சப்டிஸ்திரிக்டு ரிஜிஸ்டராபீசில் 1899 ஹு ஏப்பிரல்மீ 5உயில் 3-வது புத்தகம் 1-வது வாலியம் 127, 128, 129-வது பக்கங்களில் 4-ம் நிர் தஸ்தவேசாக ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது. என் ஜீவகாலத்திற்குப்பிறகு காபிரைட் பாத்தியங்கள் ஷை மடாலயத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிறபடியால் ஷை மடாலயத்தார் யாதாமொரு அனுமதியையெதிர்பாராமல் உடனே புத்தகம் அச்சியற்றிக்கொள்ளலாகுமென்பதை மிகவும் வணக்கத்துடன் தெரியப்படுத்தலானேன்.

இங்ஙனம்,

வ. வேங்கடராமய்யர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரவிர்த்தி நிவிர்த்திசந்ததிகள்.

——):*:(——

அசஞ்சல சுபாவமா யிருந்தவிடத்தி லிருக்குங் காந்தசமுகத்தில் அயவூசி சலனமுறுவதைப்போல நிச்சலன நிர்விகார நிர்க்குண நித்த அகண்டாகார சுப நிரதிசய பரிபூரண சின்மய சதானந்தப் பிரம்மசந்நிதானத்தில் அகட விகட சாமர்த்தியமுள்ள மாயை விகாரமடைந்து சூலாகி மானதனென்னும் ஒரு புத்திரனை யீன்றாள்.

அம்மானதனுக்குப் பிரவிர்த்தி நிவிர்த்தியென விரண்டு மனைவியர்கள்.

## அவ்விருவரில்,

| பிரவிர்த்தியின் சந்ததிகள். | | நிவிர்த்தியின் சந்ததிகள். | |
|---|---|---|---|
| புத்திரர்கள். | புத்திரிகள். | புத்திரர்கள். | புத்திரிகள். |
| க மோகன் | க தீவினை | க விவேகன் | க மயித்திரி |
| | | உ நிருபகன் | |
| உ ஆங்காரன் | உ கபடி | ந பொறை | உ கருணை |
| | | ச சந்தோடன் | |
| ந மதனன் | ந அகீர்த்தி | ரு சமன் | ந நீதி |
| | | சா தமன் | |
| ச மானன் | ச அநீதி | எ விராகன் | ச முதிதை |
| | | அ இயமன் | |
| ரு காமன் | | கூ நியமன் | ரு உபேட்சை |
| | | க0 ஆதனன் | |
| சா கோபன் | | கக பிராணுயாமன் | |
| | | கஉ பிரத்யாகாரன் | |
| எ மச்சரன் | | கந தாரணன் | |
| | | கச தியானன் | |
| அ சங்கற்பன் | | கரு சமாதி | |
| | | கசா சத்துவன் | |
| கூ இராசதன் | | கஎ அமுதசீலன் | |
| | | கஅ தவன் | |
| க0 சந்தேகன் | | | |
| கக தாமதன் | | | |

| இலக்கம். | மோகனுதியர் பெயர். க | மனைவியர் பெயர். உ | புத்திரிகள் பெயர். ங | புத்திரர் பெயர். ச |
|---|---|---|---|---|
| க | மோகன் | துன்மதி 1. | ... | .... |
| | ... | பாஷண்ட-விஞ்ஞை 2. | ... | அஞ்ஞன் |
| உ | அகங்காரன் | அகந்தை | மமதை | லோபன் |
| ங | காமன் | இரதி | .... | விடயானந்தன் |
| ச | கோபன் | கொலை | .... | கலகன் |
| ரு | மச்சரன் | அசூயை | .... | வயிரன் |
| சு | மதன் | மறதி | .... | அனத்தன் |
| எ | மானன் | வெகுமதி | .... | உற்சாகன் |
| அ | இராசதன் | முயற்சி | இராசதச்சிரத்[தை | காரியன் |
| கூ | தாமதன் | சோம்பல் | நித்திரை 1. | ... |
| | ... | ... | தாமதச்-சிரத்தை 2. | .... |
| கo | சங்கற்பன் | கற்பனை | .... | விகற்பன் |
| கக | சந்தேகன் | அசித்தி | .... | கலக்கன் |
| | **மோகனுதியர் சகோதரிகள்.** | **பர்த்தாக்கள்.** | | |
| கஉ | தீவினை 1. | அனுசாரன் | .... | .... |
| | அகீர்த்தி 2. | ... | மிச்சாதிட்டி | விடயசங்கன் |
| கங | கபடி 1. | கலியன் | .... | சஞ்சலன் 1.<br>அதன்மன் 2. |
| | அநீதி 2. | ... | .... | .... |

# வம்சபரம்பரை.

| புத்திரர்மனைவியர் பெயர். ரு | பௌத்திரர் பெயர். கூ | பௌத்திரர் மனைவியர் பெயர். எ | பிரபௌத்திரர் பெயர். அ |
|---|---|---|---|
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| இச்சை | இடம்பன் | வஞ்சனை | அசத்தியன் |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| அமரியாதை | அக்ரமன் | ... | ... |
| கெடுதி | நாசன் | ... | ... |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| யோசனை | வெகுமுகன் | ... | ... |
| ... | ... | ... | ... |
| | | | |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| ... | ... | ... | ... |
| அதோகதி | துக்கன் | ... | ... |
| ... | ... | ... | ... |

முற்றிற்று.

# விவேகஞாதியர்

| இலக்கம். | விவேகஞாதியர் பெயர். ௧ | மனைவியர் பெயர். ௨ |
|---|---|---|
| ௧ | விவேகன் | சுமதி 1. |
| | .... | *உபநிடதை 2. |
| ௨ | நிருபகன் | யுக்தி |
| ௩ | பொறை | உறுதி 1. |
| | .... | மரியாதை 2. |
| ௪ | சந்தோடன் | மகிழ்ச்சி |
| ௫ | சமன் | சாந்தி |
| ௬ | தமன் | தாந்தி |
| ௭ | விராகன் | விரத்தி |
| ௮ | சுசீலன் | கீர்த்தி |
| ௯ | தவன் | நல்விருத்தி |
| ௧௦ | சத்துவன் | புனிதை |
| ௧௧ | இயமன் | அயிஞ்சை |
| ௧௨ | நியமன் | மனநிலை |
| ௧௩ | ஆதனன் | திதி |
| ௧௪ | பிராணயாமன் | பூர்த்தி |
| ௧௫ | பிரத்தியாகாரன் | மீட்சி |
| ௧௬ | தியானன் | காட்சி |
| ௧௭ | தாரணன் | திருதி |
| | ... | ... |
| ௧௮ | சமாதி | தன்னிலை |
| | ... | ... |
| | **விவேகஞாதியர்சகோதரிகள்** | **பர்த்தாக்கள்.** |
| ௧௯ | மயித்திரி | சமாதானன் |
| ௨௦ | நீதி | நியாயன் |
| ௨௧ | கருணை | தருமன் |
| ௨௨ | உபேட்சை | பூரணன் |
| ௨௩ | முதிதை | அவிரோதன் |

* உபநிடதையின்றோழி-கீதை, மாதா - வாணி, பிதா - வேதன், தமயன்-வேதாந்தி, நித்தஅநித்த விசாரணைப்பெண், நற்கதிவாஞ்சைமாது என்பவர் சாத்திரமென்னும் சாமரம் வீசுவோர்.

# வம்சபரம்பரை.

| புத்திரர் பெயர். ௩ | புத்திரிகள் பெயர். ௪ | தௌகித்திரிகள் பெயர். ௫ |
|---|---|---|
| ... | ... | ... |
| பிரபோதன் | ... | ... |
| நிச்சயன் | ... | ... |
| அடக்கன் | ... | ... |
| சன்மானன் | ... | ... |
| அற்புதையன் | ... | ... |
| அகமுகன் [வான் | ... | ... |
| தனிவத்துநோக்கு | ... | ... |
| சுகன் | ... | ... |
| ... | பிரசித்தி | ... |
| பரோபகாரன் | ... | ... |
| தருமன் | சத்துவச்சிரத்தை | சாந்தி |
| இரவாமை | ... | ... |
| சத்தியன் | ... | ... |
| அத்தேயன் | ... | ... |
| தீர்க்கவாயுள் | ... | ... |
| நிருலேபன் | ... | ... |
| ஐயமொன்றில்லான் | ... | ... |
| அப்பிரமன் 1. | ... | ... |
| ஆத்திகன் 2. | ... | ... |
| நிருவிகற்பன் 1. | ... | ... |
| மோனன் 2. | ... | ... |
| ... | ... | ... |
| ... | ... | ... |
| ... | ... | ... |
| ... | ... | ... |
| ... | ... | ... |

முற்றிற்று.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

——)*(——

இதனால் சகல கனவான்களுக்கும், அச்சுக்கூடத் ததிபர்களுக்கும் அறிவிப்பது யாதெனில், இந்தப் பிரபோத சந்திரோதயம் என்னும் சாஸ்திரம் அடியில் கையொப்பமிட்டிருக்கிற என்னால் அச்சிடுவித்து ரிஜிஸ்தர் செய்யப்பட்டிருப்பதால் இதனை என்னுடைய அனுமதியின்றி அச்சிடுவோர் 1867 ௵த்து 25-வது ஆக்ட்டு, 20-வது பிரிவு, 6-வது உட்பிரிவின் விதிப்படி நான் கோரும் நஷ்டத்திற்கும், பினல்கோடுசெக்ஷன் குற்றத்திற்கும் உத்தரவாதிகளாக வேண்டுமென்பதைக் கவனிக்கக் கோருகிறேன்.

இப்புத்தகத்தைப்போல யாரேனும் "முன் பிரதிக்கிணங்க" என்றாவது கூலிக்காவது சொந்தத்திற்காவது அச்சிட்டாலும், அச்சிட்டு வைத்திருந்தாலும், அச்சிட்டு விற்றாலும், அப்படி அச்சிட்டதையாவது பிரான்சு இலாகாவிலிருந்து அச்சுப் போட்டுவந்ததையாவது குறைந்த அல்லது சரியான விலைக்காவது கம்மிஷனுக்காவது வாங்கிவிற்றாலும், அப்படி கூலிபெற்று அச்சிட்டவரிடமிருந்தாவது கூலிகொடுத்து அச்சிடுவித்தவரிடமிருந்தாவது புஸ்தகவியாபாரிகளிடமிருந்தாவதுஅவர்களாற்சொல்லப்படும் எவ்விதமுகாந்திரங்களையும் ஏற்றுக்கொள்ளாமல் நஷ்டம் ரூபாய் மூவாயிரத்தை வசூல்செய்யவும், அவர்களைக்குற்றத்திற்கு உள்ளாக்கவும் என்னால் முயற்சி செய்யப்படும்.

இப்புத்தகம் என்னால் காப்பி ரைட் ரிஜிஸ்தர் செய்யப்பட்டிருப்பதோடுகூட கஅ பவுன் இங்கிலீஷ் டெம்மி கிளேஸ் காகிதத்தில் பைக்கா டைப்பில் பெரியகுளம் ஸ்ரீ மீனாம்பிகை அச்சியந்திரசாலையில் அச்சுப்பதித்து புஸ்தக முழுதும் உயர்ந்த காலிகோ பயிண்டுசெய்து என்னுடைய இங்கிலீஷ் ரப்பர் ஸ்டாம்பும் ஸ்வயமான கையெழுத்தும் போடப்பட்டிருப்பதுடன் அதன் முதுகில் தங்கக் கிலிட்டினால் "பிரபோதசந்திரோதயம்" என்றும் போடப்பட்டிருக்கிறது.

இப்புத்தகத்தின் விலை ரூ. 2—0—0, தபாற் செலவு பிரத்தியேகம்.

என்னுடைய இங்கிலீஷ் ரப்பர் ஸ்டாம்பும் ஸ்வயமான இங்கிலீஷ் கையெழுத்தும் இல்லாத புத்தகங்களை எவரும் வாங்காதிருக்கக்கோருகிறேன்.

இங்ஙனம்,

வ. வேங்கடராமய்யர்.

கடவுள் துணை.

# பிரபோத சந்திரோதயம்

என்று வழங்குகின்ற

# மெய்ஞ்ஞானவிளக்கம்.



## கடவுள் வாழ்த்து.

பாயிரம்.

கலிநிலைத்துறை.

திருமடந்தைதன் காதலன்சிவந்ததாண்மலருங்
கருணையந்தடங்கண்களுநாபியங்கமலத்
தொருகுழந்தையுமுடுத்தபொன்னுடையுந்தொடுத்த
மருமலிந்தபைந்துளவுமென்மனத்துள்வாழியவே. (க)

பொன்னிமாநதிபுடைபரந்தோங்கலிற்புதுப்பூங்
கன்னிவாழையுந்தாழையுங்காய்க்குலைக்கமுகும்
பின்னிநீள்கதிர்ச்செந்நெலுங்கன்னலும்பிறவு
மன்னிநீடியவளவர்சோணாட்டொருவள்ளல். (உ)

குழைக்குமம்பொனிற்குயிற்றியபன்மணிக்குன்றுந்
தழைக்கும்வெண்ணிலாவரமியத்தலங்களுந்தரளத்
திழைக்குமேழ்நிலைமாடமுங்கூடமுமெங்கு
மழைக்குலந்தவழ்நெடுமதின்மாதைக்குமன்னன். (௩)

கலிவிருத்தம்.

அந்தணர்திலகன்மூதறிஞர்சேகரன்
மந்திரமனைத்துமோர்வடிவமாயினோன்
றந்திரமுதுமறைதவழுநாவினு
னிந்திரகற்பகமென்னுஞ்செங்கையான். (௪)

அறம்பொருளின்பம்வீடாயநால்வகைத்
திறந்தெரிந்தந்நெறிசெலுத்துஞ்செய்கையான்
புறம்பெனவுள்ளமும்புனிதமாயினோன்
மறங்கெடத்தருமநூல்வளர்க்கும்வாய்மையான். (௫)

சத்தியமுதுமறைசாற்றுமந்நெறி
யொத்திடுந்திறமுணர்ந்தூழிபேரினு
நித்தநைமித்தியநெறிதப்பாவகை
பத்தியிற்புரிந்திடும்பான்மைபூண்டுளான். (௬)

மண்ணிடத்தவரவர்மதியுமற்றவ
ரெண்ணியவெண்ணமுமினியயாவையு
முண்ணிலவுறவகன்றொருங்குகாட்டலாற்
கண்ணடியாமெனக்கருதுஞ்சூட்சியான். (௭)

திணிபுயத்தரசர்தஞ்செம்பொன்மாமுடி
மணிநிரைத்தீபஞ்சூழ்வனசத்தாளினன்
பணிகொளெண்டிசையெனும்பாவைமார்செவிக்
கணிமலர்த்தாரெனலாகுங்கீர்த்தியான். (௮)

மேயபற்பல*துறைமேற்கொண்டெய்ப்பினு
மேயவில்வாழ்க்கையிலிருந்துமன்னதிற்
பாயுநன்மதுமலர்ப்பதுமப்பாசடைத்
தூயதண்புனலெனத்தோய்ந்துந்தோய்ந்திலான். (௯)

மனையறம்பூண்டுநல்வாழ்வின்வைகியு
மனையபல்கிளைஞரோடளவளாவியு
நனியுலகளித்துமெய்ஞ்ஞானமெய்திய
சனகனைப்போலிருந்தருளுந்தன்மையான். (௧0)

ஈசனைத்தூணினின்றிங்குவாவெனப்
பேசியவன்புடைப்பிரகலாதன்போற்
பாசொளிவிளங்குகோபாலமூர்த்தியைப்
பூசனைநாடொறும்புரியும்பத்தியான். (௧௧)

---

* துயர் என்றும் பாடம்.

கற்பவையாவையுங்கற்றுவான்வரு
பொற்புறுபலத்துளம்பொருந்துருவகை
பற்பலநல்வினைபயின்றுகண்ணனுக்
கற்பணமாமெனவமைக்குமன்பினன். (௧௨)

கரும்புயன்மேனியான்கமலநாபியுட்
டரும்புகழ்நான்முகன்றனக்கொப்பாகவே
யரும்பொறைவாய்மைநல்லறிவின்வேலையாய்
வரும்பெருமாள்பெருவரத்திற்றேன்றினேன். (௧௩)

சீதைகாதலனெனத்திசைகளெட்டையு
நீதியாற்புரந்துநன்னெறிநடாத்திய
வேதபாரகன்றிருவேங்கடேந்திரன்
மாதயாநிதிபுவிமன்னர்மன்னனே. (௧௪)

பன்னருமனுமுறைபகர்ந்தநீதியா
லன்னவன்புவிபுரந்தருளுங்காலையி
லின்னருட்சற்குருவிராகவானந்தர்
பொன்னடிக்கமலங்கள்போற்றன்மேயினன். (௧௫)

ஐம்பொறிவென்றுகாமாதிமூவிரு
வெம்பகைகடந்துநால்வேதத்துச்சியிற்
செம்பொருளுணர்ந்துபல்சீவகோடியும்
பைம்புனலிரவிபோற்பார்த்துளான்றனை. (௧௬)

ஒருவடநீழலினுற்றுநால்வருக்
கருமறைபகர்ந்தருளாதிதேசிக
னிருநிலத்தெம்மனோர்க்கிரங்கிமானுடத்
திருவுருவெடுத்தெனத்திகழுவான்றனை. (௧௭)

காட்டினிலருந்தவம்புரிந்துகாயத்தை
வாட்டியமுனிவரர்மகிழநெஞ்சினி
லீட்டியசமாதியிலிருந்துபேரின்ப
வீட்டினையிதுவெனவிளக்குவான்றனை. (௧௮)

கண்டனன்குருபதகமலஞ்சென்னிமேற்
கொண்டனனங்கவன்குறிப்பைநோக்கியே
மண்டலம்புரக்குநின்வயினுரைப்பதொன்
றுண்டெனமுகமலர்ந்தினையவோதினன். (௧௯)

அறம்பொருளின்பமுமிலத்தோர்பெறத்
திறம்படப்புரிந்தநீவீடுந்தேர்ந்தவ
ருறும்படிஞானநூலொன்றுசொல்கென
நிறம்பயிருரிஞனிதுநிகழ்த்தினன். (உ0)

இல்லறம்பூண்டுவாழெம்மனோர்க்கது
சொல்லுதற்கெளியதோதுறவுபூண்டுமன்
கல்லுறுமுழையினுங்கானினும்புகுந்
தல்லறீர்ந்துறைபவர்க்கலதென்றோதினன். (உக)

ஓதலுமிராகவானந்தயோகியும்
போதமுள்ளோர்மனைவாழ்க்கைபூணிலென்
னேதமில்லுணர்விலாரிடைந்துகானினும்
பேதுறுமுழையினுமிருந்தென்பேறெனு. (உஉ)

வரியுடற்பாந்தள்கன்முழையில்வைகியென்
னெரிசினப்புலிவனத்திருந்துமென்பயன்
றிரிபின்மெய்ஞ்ஞானியெத்திறத்திருந்துமென்
விரிவுறவனையநூல்விளம்புவாயென்றான். (உங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருந்தவன்பகர்ந்தமாற்றமனைத்தையுமனத்துட்கொண்டு
பொருந்துமெய்புளகமல்கப்பூரித்துப்புவிக்கெலாந்தன் [குந்
பெருந்தனமெவையுநல்கும்பெற்றிபோன்மற்றெல்லோர்க்
திருந்துநல்லறிவுநல்குந்திறத்தினைச்சிந்தைசெய்தே. (உச)

அலகில்வேதாந்தநன்னூ லனைத்தையுந்தொகுத்துநாடி
யுலகியனெறிவழாமலுருவகப்படுத்தியார்க்கு
மிலகுமெய்ஞ்ஞானநல்குமின்பமாக்கதையெஞ்ஞான்று
நிலைபெறவுரைப்பனென்றுநெஞ்சகத்துன்னிமன்னோ.(உரு

அம்புவிமாந்தர்க்கெல்லாமாயுளோசிறிததற்குள்
வெம்பிணியிளமைமூப்புவிழிதுயில்சோம்புகாதல்
கம்பலையிவற்றைநீக்கிக்கற்பதெங்ஙனங்கற்றாலுந்
தம்புலஞ்சிறிதுஞானசாகரம்பெரிதென்றுன்னி. (உசு)

அத்தகைவேதாந்தப்பாலாழியைத்தனதுபுந்தி
மத்தினாலுழக்கிமேனாண்மால்புலவோர்க்குவாரிப்

புத்தமுதெடுத்தாற்போலப்பொருவிலாஞானசார
மெத்தனையவற்றையெல்லாமின்புறத்திரட்டிவாங்கி. (உஎ)

சகத்தொருப்ரபோதசந்த்ரோதயமெனுநாடகந்தான்
மிகுத்துரைசெய்தக்ருஷ்ணமிச்சிரன்றனுநாணப்
புகழ்த்திருவேங்கடேந்த்ரன்பூசுரர்குலத்துக்கெல்லாம்
வகுத்தகாப்பியமதாகவடமொழியதனிற்செய்தும். (உஅ)

கற்பதற்கெளிதாய்நாவிற்கனிந்துதேனூறமேலாந்
தற்பரஞ்சோதிதானைத்தம்முளேயுதயமாகச்
சொற்பசுந்தமிழினாலுந்தொகுத்ததைமாதைவேந்தன்
பற்பலவருணத்தோர்க்கும்பாங்குறப்பகர்தலுற்றான்.(உகூ)

பாயிரம் முற்றிற்று.

## க-வது உற்பத்திச் சருக்கம்.



### எண் சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நீர்கொண்ட பெருக்கினைவெங்கானலிற்கண்டாற்போனெடு விசும்புமுதனிலநீரொன்றினிடத்தொன்று, வேர்கொண்டமூவுல குமதுதேராதார்க்குமெய்யாகித்தேர்ந்தளவின்மீண்டுமவைபொ ய்யாந், தார்கொண்டபணியுருப்போலங்கிபிடானந்தந்தானாகி நி ருமலமாய்த்தழைத்தோங்குமொளியா, யேர்கொண்டவாத்தும போதந்தனையேவணங்கியிதயகமலத்திருத்தியெப்போதும் வாழ் வாம். (க)

இடையினெடுபிங்கலையூடியங்காத வண்ணமிடைநாடி நிறு த்தியகாற்றென்பதனைச்சி, யடையும்வகைபுரிந்துமுபசாந்திமி கும்யோகியகத்து நிறையானந்தமா மமிர்நிற்படிந்தும், புடவிமு தனுலகெலாம்பொதிந்து மிளந்திங்கட்புரிசடையோனெற்றியிற் கண்போற் காட்டும்பரிசாற், றடையறக்காணவும் விளங்குஞ்சின் மயவுள்ளொளியே சந்ததமுமேலாகித்தழைத்துவாழியவே.(உ)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அத்துவிதம்வாசாமகோசரமஞேதீதம்சலமூலந்
தத்துவமப்பிரமேயஞ்சர்வசமஞ்சச்சிதானந்தஞ்சாந்தஞ்
சுத்தமவியத்தமவிகாரமனுபவந்துரியஞ்சுயம்ப்ரகாசம்
நித்தியநிர்க்குணமனந்தநிரதிசயம்பிரமமெனநின்றதொன்றே. ()

போந்துவிகாரஞ்சிறிதும்பொருந்தாதுதன்னியல் பிற்பொருந்திநிற்பக்,காந்தமசையாதிருந்து மக்காந்தத்தெதிருசிகம்பித்தாற்போல்,வாய்ந்தவதன்சந்நிதியின்மாயைவிகாரம்புரிந்துமணிச்சூன்முற்றி, யேய்ந்தபெயர்மானதனென்றெடுத்தோதவொருமகவையீன்ருண்மன்னோ. (ச)

இருளதனையொளியாக்கி யொளியதனையிருளாக்கி யின்பந்தன்னை, யரியகொடுந்துயராக்கியத்துன்பந்தனையின்பமாக்கிச்செய்கை, மருளுறுமந்நெடுமாயைமார்பிலணைத்தேவளர்க்க வளர்ந்தான்யாதும்,பொருவறுதன்ருதையெனுந்தருவினுக்கோர்புல்லுருவிபோலவன்றே. (ரு)

வேறு.

பெறலருமனையமைந்தன்பிரவிர்த்திநிவிர்த்தியென்னு
மறுவிலாமதிமுகத்துமாதராரிருவர்தம்மைத்
தறுகண்மாமாயையென்னுந்தாயுளங்களித்துநோக்க
நறுமலர்மாலைசூட்டிநன்மணம்புரிந்தான்மன்னோ. (சு)

மானதன்றனக்குமுந்திமணஞ்செய்தமனையாடன்பா
லானமோகனைப்பெற்றுப்பாலாங்காரன்மதனன்மானன்
வேனில்வெங்காமன்கோபன்வெய்யமச்சரன்சங்கற்பன்
றனிராசதன்சந்தேகன்றுமதனிவரையீன்ருள். (எ)

இனையமாமைந்தர்தம்மையீன்றருள்ப்ரவிர்த்திபின்னு
மனையவருடன்பிறப்பாமவர்கடிவினைமாதென்றும்
வினையுறுங்கபடியென்றும்வெய்துறுமகிர்த்தியென்றும்
புனைபெயரநீதியென்றும்புதல்வியர்தம்மையீன்ருள். (அ)

மருவுமந்நிவிர்த்தியென்னுமடக்கொடிவிவேகன்மற்ற
நிருபகன்பொற்றசந்தோடனெடுஞ்சமன்றமன்விராகன்
றருமியமாதியெண்மர்சத்துவனமுதசீலன்
பொருவிலாத்தவனென்றின்னபுதல்வர்யாவரையுமீன்ருள். (கூ)

மதிநுதனிவிர்த்திபின்னுமயித்திரிகருணைநீதி
முதிதைநல்லுபேட்சையென்னுமொய்குழலவர்தம்மைப்
புதியபாற்கடல்வருந்திப்புவிக்கமுதீந்தாற்போல
வதிசயமெவர்க்குமெய்தவருந்தவத்தீன்ருண்மன்னோ. (கய)

மாயைதம்மகற்குவாய்த்தமனைவியரிருவர்தம்பா
லாயபுத்திரர்கண்மற்றையரிவையர்தங்கட்கெல்லா
நேயமாமணஞ்செய்தற்குநினைத்துமர்மோகப்பிள்ளைக்
கேயதுன்மதியைமுந்தியின்புறப்புணரச்செய்தே. (கக)

*ஆமிடலகங்காரற்கேயகந்தையைமணஞ்செய்வித்துக்
காமனுக்கிரதிதன்னைக்கடிமணம்புரிவித்தாங்கே
யேமுறக்கொலையைக்கோபற்கின்புறவிணக்குவித்துத்
தீமைமச்சரற்கசூயைத்தேவியைப்புணர்ப்பித்தாளால். (கஉ)

மதன்மறதிக்குமானன்மணம்வெகுமதிக்குநல்கி
யிதமுறமுயற்சிதன்னையிராசதற்கிசையச்செய்து
விதமுறுசோம்பறன்மேல்விருப்பந்தாமதனுக்காக்கிக்
கதமிகுசங்கற்பற்கோர்கற்பனைதனைச்சேர்வித்தாள். (கங)

அறிவிலாச்சந்தேகற்கோரசித்தியைப்புணரச்செய்து
பிறவுநல்வரிசைசூழத்தபிரவிர்த்திமக்கட்கெல்லா
நிறைவுறச்செய்துமற்றந்நேரிழையீன்றமாதர்
மறுவுறுநால்வருக்குமணம்பெறக்கருத்துளுன்னி. (கச)

பின்னரும்ப்ரவிர்த்தியீன்றபெண்களில்ஞசாரற்கு
மன்னுதீவினையகீர்த்திமனைவியராகச்செய்து
சொன்னவெங்கபடியென்னுந்தோகையுமநீதியென்னுங்
கன்னியுங்கலியற்கெய்தக்கடிமணஞ்செய்வித்தாளால். (கரு)

அகந்தையையகங்காரன்சேர்ந்தருமகண்மமதையோடு
மிகுந்தலோபனையும்பெற்றானிச்சையையவனும்வேட்டுத்
தகுந்திறலிடம்பன்றன்னைத்தந்தனனிடம்பன்றானு
மிகுந்தவஞ்சனையைப்புல்லிமிகுமசத்தியனையீன்றான். (கசு)

இதமுறுங்காமராசனிரதியைப்புணர்ந்துபின்னர்ச்
சுதனெனவிடயானந்தத்தோன்றலைப்பயந்தான்மற்றைக்
கொதிதழற்கொடியவாட்கட்கொலையெனுமாதைச்சேர்ந்து
கதுமெனக்கடியகோபன்கலகன்வந்துதிக்கச்செய்தான். (கஎ)

---

* மாமிடல் எனவும் பாடம்.

அச்சுறுமதன்றனக்கோரனத்தனைமறதிபெற்றா
ளச்செனுமனத்தனுக்கேநாசனைக்கெடுதிதந்தாண்
மச்சரற்கசூயையீன்றாள்வயிரனைவயிரன்றேவி
யிச்சகத்தமரியாதையெய்துமக்ரமனையீன்றாள். (கஅ)

மானனுக்கிசையவாய்த்தமனைவெகுமதியென்றேது
மீனெனமிளிருமைக்கண்மெல்லியல்வயிற்றில்வந்தான்
றானொருற்சாகனென்னத்தகுமியற்றனையன்பின்ன
ரீனகற்பனைசங்கற்பற்கீன்றனள்விகற்பன்றன்னை. (கசு)

விகற்பன்யோசனையைச்சேர்ந்துவெகுமுகன்றன்னைப்பெற்றான்
றகைத்திடுங்கலக்கன்றன்னைச்சந்தேகற்கசித்தியீன்றா
ணிகழ்த்துதாமதற்குச்சோம்பிநித்திரைவஞ்சியோடுந்
திகைத்துமச்சிரத்தையென்னுஞ்சேயிழைதனையும்பெற்றாள். ()

முடிவுறுவிராசதற்குமுயற்சிபாற்சிரத்தையென்னுங்
கடிமலர்க்குழலிமற்றோர்காரியனுடன்வந்தாளா
லடைவுறுவனுசாரற்கோரகீர்த்திபான்மிச்சாதிட்டி
யுடனொருவிடயசங்கனுதித்தனன்கணத்துமாதோ. (உக)

சஞ்சலனதன்மனென்னுந்தனையனரக்கபடிதன்பா
லஞ்சலில்கலியன்பெற்றானவன்மகனதன்மன்றானு
மெஞ்சலிலதோகதிக்கேயின்புறப்புணர்ந்தெப்போதுந்
துஞ்சலில்லாதபொல்லாத்துக்கனுற்பவிக்கச்செய்தான். (உஉ)

அத்தலைப்ப்ரவிர்த்திமக்களதிமோகன்முதலாயுள்ளோர்
மெய்த்துறுமணமுமன்னார்வியன்மக்கட்பேறுஞ்சொன்னோ
நித்தியரானமற்றைநிவிர்த்திசேய்விவேகனாதி
யுத்தமர்மணமுமன்னார்க்குதித்தமக்களையுஞ்சொல்வாம். (உங)

சுருபநல்விவேகவேந்தன்சுமதியைமணந்தான்பின்னர்
நிருபகனுத்திமாதைநேர்ந்தனன்பொறையன்வேட்டான்
வருமியலுறுதிமாதைமகிழ்ச்சிக்குமணஞ்சந்தோடன்
றருமுனஞ்சமன்றமன்போய்ச்சாந்திதாந்தியைச்சேர்ந்தாரால். ()

விரத்தியைவிராகன்சென்றுமேவினன்சுசீலன்றன்பால்
வரப்பெருங்கீர்த்திவாய்த்தாண்மகிழ்தவனல்விருத்தி
தரத்திருமாலைபூண்டான்சத்துவன்புனிதைக்குள்ளம்
பொருத்தினனயிஞ்சைதன்னைப்புணர்ந்தனனியமன்றானே. (உரு

பதியெனநியமன்றன்னைப்பற்றினண்மனநிலைப்பெண்
டிதியையாதனன்வேட்டான்பூர்த்தியைப்பிராணுயாமன்ருன்
விதிமுறைபுணரச்சேர்ந்தான்மீட்சியைப்பிரத்யாகாரன்
கதிதருதியானனென்பான்காட்சியைக்கலந்துசேர்ந்தான். (உகூ)

திருதிதாரணனுக்காணுடேவிதன்னிலையென்ருேது
மரிவையைச்சமாதிசேர்ந்தானவருமின்னவாறு
பரிவொடுமணந்துதத்தம்பாவையர்தம்மோடின்பம்
புரியுநல்லுறவுகூர்ந்துபுணர்ச்சியின்முயங்குங்காலை. (உஎ)

பெயர்த்துமந்நிவிர்த்தியீன்றபெண்களிற்சமாதானற்கே
மபித்திரிநியாயனுக்குவள்ர்நீதிதருமனுக்கே
யயர்த்திடாக்கருணைவஞ்சிபூரணற்கருளுபேட்டை
முயற்சியினவிரோதற்குமுதிதைசேர்ந்திணங்கச்செய்தாள். (உஅ)

நிருபகற்குத்தியீன்ருணிச்சயன்றன்னையின்பந்
தருபொறைக்குறுதிமாதுதந்தனளடக்கன்றன்னை
மருவுசந்தோடனேடுமகிழ்ச்சிக்கற்புந்தையன்வந்தா
னருளுடைச்சமன்சாந்திக்கோரகமுகன்றனையனைன். (உகூ)

தாந்தியத்தமனுக்கீன்ருடனிவத்துநோக்குவானை
வீந்திடாவிராகன்றேவிவிரத்திநற்சுகனைப்பெற்ரு
ளாந்திறற்சுசீலனுக்கேயருங்கீர்த்தியீன்ருளோங்கி
வாய்ந்திடும்புதல்வியென்னவரும்பிரசித்திதன்னை. (௩௦)

அத்தவனல்விருத்திக்கணுகினன்பரோபகாரன்
சத்துவன்புணர்சுத்திக்கோர்தருமனுஞ்சிரத்தைபென்னு
மெய்த்திருமகளுந்தோன்றமெல்லியலவள்பால்யாரு
மெய்த்துளங்கனியச்சாந்தியென்றெருசெல்விவந்தாள். (௩க)

இயமனுக்கயிஞ்சையீன்ருளிரவாமையென்னுஞ்சேயை
நியமனுன்மனநிலைப்பெண்ணெடியசத்தியனைப்பெற்ருள்
செயலுறுமாதனற்குத்திதியத்தேயனைப்பயந்தா
டயவுறுதீர்க்கவாயுடனைப்ராணுயாமனீந்தான். (௩உ)

விந்தைசேர்ப்ரத்யாகாரன்மீட்சியைப்புணர்ந்துமேவ
வந்தனனிருலேபன்ருன்மகிழ்வுறுங்காட்சிதன்பா
லந்தியானனுக்குவந்தானையமொன்றில்லான்பின்னர்த்
தந்தனடிருதியென்பாடாரணற்கிருவர்தம்மை. (௩௩)

மருவுமப்பிரமனென்றும்வயங்குமாத்திகனென்றும்பேர்
தருமவர்வந்தபின்னைச்சமாதிக்குந்தன்னிலைக்கு
நிருவிகற்பனுமற்றேதுநிகழ்த்துறுமோனன்றானுங்
கருவுயிர்த்தெழுந்தார்யாருங்கண்களித்தினிமைகூர. (௩௪)

கதிகொள்காசிபனைமேனகாதலாற்றிதியுந்தூய
வதிதியும்புணர்ந்துநல்குமசுரருஞ்சுரரும்போல
முதியவண்மோகன்முன்னூழுடருமிளையாளீன்ற
மதியுடைவிவேகனாதிமக்களும்வளருங்காலை. (௩௫)

வனைந்தபூங்குழலாண்மாயைமகன்புணர்மடந்தைநல்லா
ரினந்தரும்புதல்வரீட்டம்யமுனைமாநதியுமீசன்
புனைந்தவானதியும்போலப்புடைபரந்திலங்குந்தோற்றங் [ள்
கனிந்தகண்களிக்கப்பார்த்தோர்கைதவங்கருத்துட்கொண்டா

உற்பத்திச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் ௩௫.

## உ-வது, மோகனராசாட்சிச்சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மேவுநங்கணவன்யாவும்விடயத்துவிருப்பமில்லா
னோவிலாவிளமைபெற்றுமொருபோதுமெம்மைநோக்கான்
மூவகையுலகங்காக்குமுதன்மைநம்புதல்வற்காக்கிக்
காவலன்றன்னைநீத்துக்களித்துமென்றகத்துட்கொண்டாள். ()

தனையுவந்தீன்றமாயைதன்குறிப்பறிந்துமைந்தன்
புனைதருநவத்துவாரபுரங்கள்பல்கோடிகண்டு
தினையளவளவைத்தாகச்சீவபல்கோடியாக்கி
யனையதன்றாதைதன்னையங்கங்குச்சிறைசெய்தானால். (௨)

இடம்பெறுஞ்சோதிரூபமேகமாகியும்பல்கோடி
யுடம்புகடோறுமங்கங்குறைகின்றதெவ்வாறென்னிற்
படர்ந்தொளிபரப்புஞ்சோதிப்பரிதியொன்றாயுந்தெண்ணீர்க்
கடந்தொறுமோரோர்விம்பங்காட்டுதல்போலுமன்றே. (௩)

அருஞ்சிறையனையவண்ணமாங்கவனிடுதலோடும்
பெருந்திறன்மோகாங்காரர்பிதாமகன்றன்னைப்பற்ற
விருந்திறற்காமனாதியிளைஞருநெருக்கிப்பின்னும்
வருந்தவாசாதிபாசவகையினாற்பிணித்தார்மன்னோ. (௪)

மாசுறுமாயைப்பாட்டிவஞ்சனைநினைந்தவாறுந்
தாய்செயலுணர்ந்துசேய்மூதாதையைத்தகைந்தவாறு
மாசைவன்கயிற்றாற்காமனாதியோர்பிணித்தவாறு
மீசனுமிடரிலோனுக்கிடர்வந்துவிளைந்தவாறும். (ரு)

கண்டகங்கலங்கிவெய்யகண்டகர்புரிந்தவஞ்சம்
பண்டைநூனெறியிற்சொல்லும்படியன்றிப்பழியையாரே
விண்டுரைசெய்யவல்லார்விழுமியதருமநீக்கிக்
கொண்டவெம்பாவத்தோரைக்குறுகினும்பாவமன்றோ. (சு)

எனவிவைவிவேகனுன்னியியம்புவன்றருமமென்னு
மனமெனுந்தாதைபாதம்வணங்கிநிற்பயந்ததாதை
தனையிருஞ்சிறையிலிட்டுத்தாயெனுமாயைவஞ்ச
நினைவினதியற்கைசெய்தனெறியன்றென்றினையசொன்னான். (எ)

தருமமாவதுவேயின்பந்தருமலாற்றருமநீக்குங்
கருமமாவதுபோற்றோன்றிக்காட்டினும்பசுமட்பாண்டத்
தருமையாய்நிரப்புந்தெண்ணீரனைத்துமப்பாண்டத்தோடு
மொருமையாய்க்கெடுதலேபோன்றொருகணத்தழியுமன்றே. (அ

அன்னநல்லறம்யாதென்னிலரியநற்றாதைதானே
தன்னருட்டெய்வமென்னுந்தன்மையத்தன்மைநீக்கிப்
பின்னபின்னங்களாகப்பேதகம்பிதாவைச்செய்தன்
மன்னநிற்கியல்போவென்றான்மானதனிதற்குச்சொல்வான். (கூ)

அன்னையானவடாதைக்குமதிகமன்னையும்பிதாவு
முன்னையோர்தெய்வமென்றமொழிக்கெவர்முதன்மைபூண்டார்
பின்னொராச்சிரமத்தேகிப்பிதாவையும்வணக்கங்கொள்ளுஞ்
சன்னியாசிகளும்வந்தத்தாயரைத்தொழுவரன்றே. (க0)

அனையதாதலினாலீங்கென்னன்னைதன்னகத்துட்கொண்ட
நினைவினதியற்கைசெய்தனீதியுந்தருமந்தானு
மெனவிவையுள்ளத்துன்னியெண்ணிலாநவத்துவார
மனைதொறுமெந்தைதன்னைவருவித்தனன்யானென்றான். (கக)

உரைசெயுமச்சொற்கேட்டவுயர்மதிவிவேகன்றாயர்
விரைசெறிகமலப்பாதமேன்மையோர்வணக்கஞ்செய்த
லரசினைத்துளவந்தன்னையாவினைவந்திப்பார்போற்
புரைதவிர்வணக்கமல்லாற்புத்திகேட்பதனுக்கன்றே. (கஉ)

அந்நெறியல்லவென்னிலன்னையும்பிதாவுமார்க்கு
முன்னறிதெய்வமென்னமொழிந்தசொற்கேட்டுந்தாயைச்
சின்னபின்னங்களாகச்சிதைத்ததுபரசுராமன்
றன்னியற்றாபிற்றாதைதனைநமையேபெரிதென்றன்றோ. (௧௩)

வனத்திடைப்புகுமந்நாளில்வரிசிலைத்தடக்கைராமன்
றனைத்தருந்தாதைமாற்றந்தலைமிசைக்கொண்டதல்லால்
வினைத்திறங்கொடிதென்றுன்னிவேணிவற்கலையைநோக்கி
நினைத்தழுதிரங்குந்தாயர்நெடுங்கணீர்துடைத்ததுண்டோ. (௧௪)

ஆதலாற்றாயர்தம்மையவமதித்தகற்றினாலுந்
தாதைபானேயமாற்றித்தள்ளுதறக்கதன்றாற்
றீதிலாநெறிசென்றன்னான்சிறைவிடுத்தன்புகூரு
மீதலாற்றருமம்வேறொன்றில்லையென்றினையசொன்னான். (௧௫)

அனையசொற்கேட்டலோடுமறிவின்மானதனும்வேந்தன்
றனையனைச்சுளித்துநோக்கித்தாதையென்றாலும்பின்ப
மனையொடுமகனென்றாலும்வாழ்குடித்தீங்குசெய்யும்
வினையம்வல்லவரோடுண்டோமெய்யுறவென்னச்சொல்வான். ()

விழுமியபைங்கூழோங்கவிளைத்ததோர்செய்பிற்றான்பண்
டுழுதவெள்ளேறென்றாலுமூடுபுக்கியங்குமாகிற்
பழுதுறச்சிதைக்குமென்றேபன்மணிக்கயிற்றாற்சேர்த்துத்
தொழுவிடையடைப்பரன்றேதொல்புவிக்குரியமாந்தர். (௧௭)

எள்ளுறத்தகையபொல்லாவியற்கையபிரவரென்றாலுந்
தள்ளுறவினரல்லாரைத்தம்முளேயடக்காராகி
லள்ளுறத்தீங்குசெய்வாரழுதடுகனலைத்தாந்த
முள்ளுறச்சிறைசெய்யாரேலூரையுஞ்சுடுமதன்றே. (௧௮)

இத்திறமனைத்துநாடியினியநங்குலத்துட்டோன்றும்
புத்திரபவுத்திராதிபொங்குநற்கிளைகளோங்கு
மத்திறஞ்சிதைக்குஞ்செய்கையவன்கருத்தாதலால்யான்
மெய்த்திறந்தாதைகுன்றவெஞ்சிறைபிட்டேனென்றான். (௧௯)

என்றவன்றன்னைமீட்டுமிறைஞ்சியேவிவேகர்கோமா
னின்றிருகரங்கள்கூப்பிநிலத்தினீரின்றன்மை
குன்றியதிறம்போலன்னைகுணத்தைநமேற்கொண்டதல்லா
னன்றியுற்றாதைதன்மைநயந்திலேபோலுமன்றே. (௨0)

தாயின்வெவ்வினையினின்றுதந்தைநல்லியற்கைநீத்த
மாயவல்லரக்கர்கோமான்வளைகடலிலங்கைமூதூர்
நாயகன்குலத்தினோடுநரரும்வானரருங்கொல்லப்
போயினதன்மையெந்தப்புவனமுமறிந்ததன்றோ. (உக)

செம்மையிற்றிறம்பியன்னைசிறுதொழிற்செய்கைபூணி
லிம்மையிற்பழியும்வாணாட்கிறுதியுமியைந்துபின்னை
யம்மையினரகுமெய்தியநங்கிளைச்சுற்றத்தோடும்
பொய்ம்மையிலின்பவீடும்போக்குதிவறிதினென்றான். (உஉ)

என்றவன்றன்னையோர்பாலிருந்தமாமோகனோக்கிப்
பொன்றினன்றாயர்செய்கைபுரிந்திலங்கையர்கோனென்னில்
வன்றிறற்றாதைமாற்றமறுத்தவனியனுமாற்றி
நின்றனித்தாயியற்கைநீசெயத்தகுமோவென்றான். (உங)

ஆயவனுரைத்தலோடுமறநெறிவிவேகன்பெற்ற
தாயர்தந்தையர்யாரேனுந்தகுந்தகாநெறியிற்செல்லிற்
றீயதுநன்றிதென்றுதேர்ந்துநன்னெறியிற்சேர
றாயவர்துணிவிதென்றுபின்னருமொன்றுசொல்வான். (உச)

மாவிறலரக்கியின்றமைந்தரிலொருவன்பெற்ற
பாவிதன்னியற்கைசெய்துபல்கிளையோடுமாள
வோவினல்லறஞ்செய்தன்னுடன்பிறந்திருந்துமேன்மை
மேவினனுளனாலின்றும்வீடணனொருவனென்றான். (உரு)

என்னலும்வெகுளிபொங்கியெரிவிழித்தியல்விவேகன்
றன்னைநெஞ்சழன்றுநோக்கித்தாதைமற்றொன்றுசொல்வான்
றுன்னுவேய்கதலிஞெண்டுமுத்திபின்கருப்போன்முன்னென்
னன்னையைக்கொலைசெய்யென்றயத்திறனழகிதன்றே. (உசா)

கருங்குழற்றிதிபாற்றோன்றுங்கனகனோடவுணர்தங்கள்
பெருங்கிளைஞரையுங்கொல்லப்பிரகலாதனன்வந்தாற்போற்
சுருங்கிடைநிவிர்த்திதன்பாற்சுற்றத்தோடெனக்குமிங்கே
யொருங்குறக்கேடுசூழ்தற்குற்பவித்தனைகொலென்னா. (உஎ)

படாவகைதாதைதன்னைப்பல்சிறைப்படுத்ததல்லா
லடாதெனவதைத்தேனல்லேனவ்வகைநீயுமென்னைக்
கெடாதுயிர்செகுப்பதன்றிக்கேடுறக்கிளையைச்சாடுங் [டோ.
கொடாரியின்காம்புபோன்றாய்குலத்திற்குமுனைப்போலுண்

நன்றுநன்றிதுவிவேகநமக்குநந்தமர்க்குநீயே
யன்றிவெம்பகைமற்றுண்டோவருங்கிளையோடியானும்
பொன்றுவதியற்றியெந்தப்புவனமும்பெறுபோவென்றே
முன்றொழுதருகினின்றமோகனைப்பார்த்துச்சொல்வான். (௨௯)

எந்தையைச்சிறையான்செய்யவென்கருத்துணர்ந்திறுக்கிப்
பந்தனஞ்செய்துசூழ்ந்தபல்கிளையவற்றினோடும்
வந்தனம்புரிந்துமற்றென்வாய்மொழிதலைமேற்கொண்ட
சுந்தரமைந்தநின்போற்சுபுத்திரரொருவருண்டோ. (௩௦)

சாலவுழப்புமுற்றித்தளர்ந்தொருசார்வுமின்றி
யாலமாமரம்போனின்றேற்கம்மரத்துதித்தவீழ்போன்
மேலுயர்பணைகளென்னவிளங்குநங்கிளைகளெல்லாம்
பாலநீயலதாரிங்கென்பரங்கெடப்பரிக்கவல்லார். (௩௧)

என்பனபலவுங்கூறியெடுத்துமார்பிறுகப்புல்லி
முன்புநின்றன்புகூருமோகமாமதலைக்காங்கே
யின்புறுங்காமனாதியிளைஞருஞ்சாருவாகன்
மன்பெருங்கலிகபாலன்மற்றையோர்முற்றுஞ்சுற்ற. (௩௨)

சந்ததியெனக்குநீயேதந்தனனுலகம்யாவு
மைந்தநீகோடியென்றேமாமணிமகுடஞ்சூட்டி
யெந்தையைவெளிப்படாமலிருஞ்சிறைப்படுத்தியென்னோ
டந்தமிலூழிகாலமரசியல்புரிதியென்றான். (௩௩)

பின்னரும்விவேகனோடும்பெற்றதாய்நிவிர்த்திதன்னை
யென்னரும்பகைஞரென்றேயிகந்தனனின்றுதொட்டு
நின்னரும்புவியினோர்பானிற்கவுமிடங்கொடாம
லன்னவரினத்தையெல்லாமகற்றுதிபுறத்திலென்றான். (௩௪)

தாதைதன்கருணையேவறன்றலைமீதுதாங்கி
மேதகுநிவிர்த்தியோடும்விவேகனையகலத்தள்ளிப்
பூதலமுதலாவுள்ளபுவனங்களெவையுங்கைக்கொண்
டேதும்வேறிணையிலாமலினிதுவீற்றிருக்குங்காலை. (௩௫)

மோகனரசாட்சிச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம்-௧௦௦.

---

## ௩-வது, அவித்தியாபுரச்சருக்கம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அளவிலாக்கொடியோரோங்கியடர்த்தலாலருள்விவேக
னிளைஞருங்கிளையுந்தானுமினியதன்சுமதிமாதுந்
தளர்வுறுநிலையராகித்தாவில்புண்ணியத்தலங்க
ளுளவெவையவைகடோறுந்தனித்தனியொதுங்கிப்போனார். (௧)

அந்தமிலறத்தோர்யாருமருந்துயர்கூர்தலாலே
யுந்துவெண்டிரைசூழ்ஞாலத்துயர்திசைதோறும்வைகு
மிந்திரன்முதலாவுள்ளவிமைப்பிலாவிமையோரெல்லாந்
தந்தமக்கியன்றதானதானம்விட்டோடிப்போனார். (௨)

பகைபிறிதின்மையாலும்படர்ந்துதன்கிளைஞரோங்கு
மிகைவலிச்செருக்கினாலுமேவியசெல்வத்தாலுந்
தொகையறுதீமைத்தேவிதன்மதிவாய்மைதன்னா
லிகலுடைமோகவேந்தனின்னனகருமஞ்செய்தான். (௩)

### கலிவிருத்தம்.

கல்லாமைகொலைதீமைகளவாசையின்சொற்
சொல்லாமைநடுவின்மைசுடுகோபமிவையே
யல்லாமலறமேதுமறியார்தமுளமாம்
பொல்லாவவித்தியாபுரமொன்றமைத்தான். (௪)

அம்மாநகர்க்குள்ளவரனைதவெளிதோ
தம்மாதுலன்பெண்டிர்தாய்தந்தைமகவென்
றிம்மாமயக்கஞ்செயினமாவததுவே
விம்மாவெழுந்தாழவீழ்விக்குமகழே. (௫)

ஒழியாதசிவனுக்குமுவணத்திறைக்கும்
பழியாதுமில்லாதபதுமாசனற்கும்
விழியாயிரங்கொண்டவிண்ணோர்பதிக்கு
மழியாதசங்கற்பமகழ்சூழ்ந்தமதிளே. (௬)

இன்னானியானின்னனிவனானென்மனையென்
பொன்னாடையென்வாழ்வுபொருளென்குலத்தோர்
மின்னாருமென்பூணென்விளைபூமியெனவே
பன்னாளுமொழிகின்றபதணங்கொள்வதுவே. (௭)

பின்னுங்கொடிக்காதல்பிரியாதுனுணர்வா
முன்னுங்கொடாரிக்குமுள்ளொன்றுசிறையா
துன்னுங்கொடுந்தீயொழுக்காமிழுக்கே
துன்னும்பெருங்காடுசூழ்கின்றததுவே. (அ)

அடைவொன்றுமைந்தாவியகலாதொர்பொழுது
நடைசென்றுபடர்கின்றநன்காவலுடனே
விடயங்களைவையேனும்வெளிகாணுமுன்போய்ப்
புடைமண்டியெறியும்பல்பொறிகொண்டததுவே. (கூ)

குலகோபமடுவுற்றகொலைபாதகத்தோ
ரலகோடிமறமன்றியறமொன்றுமுணரா
ருலகோடிநொடியின்கணுடன்மீளும்விசையார்
பலகோடிபடைவீரர்பதிகொண்டததுவே. (கo)

அயராமலெதுபெற்றுமமையாமன்மேன்மேற்
பெயராமல்வளர்கின்றபிழைகூரவாவா
முயல்வானமதியாலுமுடிகாணவரிதா
வுயர்வானகிரிதுர்க்கமொன்றுள்ளததுவே. (கக)

நேராகவேசெல்லுநெறியின்றியறமுற்
றோராதுதிருகிச்செலுறுகோணலுளவா
யாராதவறிவின்மையதுவல்லதெவையும்
பாராதகுடிலங்கொள்பலவாசலுளவே. (கஉ)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காலிரண்டுநிறுத்திமேலிருகைபிணைத்தொருபுறவெலும்
பாலிணக்கிமுகட்டுமேல்வளையடர்நரம்பெனுமாக்கையாற்
கோலியிட்டபழுக்கழிக்கொருகுறைவுறமல்வரிந்துமேற்
றோலிணக்கியகற்றைவேய்ந்துயர்சுவர்புலால்கொடியற்றியே. ()

வந்துபோகவிரண்டுவாசல்வகுத்துமற்றெழுசாளரந்
தந்துசாக்கிரமாதியீரிருதளமெடுத்ததன்மேன்மலர்க்
கொந்துலாவியமாமுடிக்கனகும்பம்வைத்தவிர்கூந்தலா
முந்துநீள்கொடிமாடநாலுமுகக்கண்மாளிகைமுற்றினன். (கச)

## கட்டளைக்கலிப்பா.

மீதிற்காணும்பசும்புற்பனியென மின்மினிக்குமொளியென
வேட்கைகூர்,வாதைக்காமினிசஞ்சலநெஞ்சென மாறிமாறிவருக

ண்ணாிமையென, வூதைக்காலெறிநீர்மேற்குமிழெனவும்பர்மேக
த்துமின்னெனவோர்கணப், போதைக்காயிரமாளிகைகட்டி
வீண்போக்கிப்போக்கிப்புதுமாளிகைசெய்வான். (கரு)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அனையமாமணிமாளிகைக்குளமைத்தநெஞ்செனுமாரனத்
தினியதுன்மதியென்ற தேவியொடேறிவைகினனெண்ணிலா
வினையம்வல்லதொர்மோகனென்றுசொல்வேந்தனன்னவன்மே
ன்மையா, நினையுமாறிதாயினுஞ்சிலநிகரிலாநெறிபகருவாம்.()

## கட்டளைக்கலிப்பா.

வாதித்திந்திரன் வச்சிரவாண்முனைவாய்மழுங்கமலையரிந்தா
லெனச்,சேதித்தற்குஞ்சிதையாமற்பாரித்துத்திரண்டகல்லினுஞ்
சிக்கென்றசிந்தையான், சோதிச்செம்பொற்சுடர்வடமேருவைச்
சுற்றிக்கங்குலொழிக்கின்றபன்னிரண்,டாதித்தர்க்குமகலாதவல்
லிருளனைத்துங்கூடியொருவடிவாயினோன். (கஎ)

நசையுரைக்கினெடுமரப்பாவைதன்னுவசைக்கினுநாவசை
க்கின்றிலான், வசையுரைக்கின்மயிர்க்காலுக்கோரொருவாய்
கொலோவெனவார்த்தைசொல்வாயினன், பசையகற்றியதன்ப
ழிகாண்புழிப்பார்வையோர்த்ருதராட்டிரனாயினே, னிசைவிலக்கி
ப்பிறர்பழிநோக்கிற்கணீரைஞ்ஞூறுடையிந்திரனாயினோன்.(கஅ)

புகலுவார்பெருவம்புகள்கோடிபோய்ப்புகுந்திருக்கின்றபு
ற்றொப்பதாயினுந்,திகழுவாரறநுண்ணூனுழைத்திடற்செல்கிலா
வச்சிரச்செவித்திண்மையா, னிகழ்வதாயிமைப்போதுமிலக்கின்
றியேகும்வாழ்வுமியாக்கையுநோக்கியு, நிகரிலாவிலைவீடுழிகா
லமுநிற்பதாகநினைக்குநினைப்பினன். (ககூ)

எற்றவர்க்கொன்றையியவென்றுரற்குறைந்திரண்டுகையுமிழ
ந்தவனாயினோன், மேற்றனக்கெனவேற்புழிக்கார்த்தமாவீரியார்
ச்சுனன்வெட்கும்பல்கையினு, ளுற்றுநல்வழிச்செல்வுழிக்கான்
முடமாகு*மைந்தனவனெனவாயினோன், மாற்றுந்தீவழிச்செல்
வுழிச்செம்பொன்மால்வரையைச் சூழ்கதிர்மண்டலம்போன்று
ளான். (உ0)



---

* மந்தன் எனவும் பாடம்.

பாவகன்மமாம்வெந்நீரின்மூழ்கிமேற்படர்வழுப்பெரும்ப
ட்டாடைசாத்திப்பின், மேவுகின்றவவகுணப்பல்பணிமீதுபூண்
டுவிடாததுர்வாசனைப், பூவணிந்தபகாரமெனுஞ்சந்தம்பூசிப்புன்
மையாம்போனகந்தன்னையுண்,டாவதற்றகுடிலத்தண்ணீர்குடித்
தடர்பிறப்பிறப்பூஞ்சலினடுவான். (உக)

## கலிநிலைத்துறை.

விதிதனக்கதிலையென்னினுமுயற்சிகொடுவிரவுதுன்
மதிநடத்தயமலோகபரியந்தமிசைவாவியே
கதிவிசைக்கொடுசுழன்றுலகமுழுதுமொர்கறங்குபோ
லெதிருறக்கடவியிகனுமவனொருவிடயவிரதமே. (உஉ)

சொற்பொறைத்தருவைவேரறமடித்தினியசுகுணமாம்
வெற்பிடித்தறமெனுங்கதலிமாய்த்துமிகமேன்மையோ
ரற்பெனத்தகையவோடையிடைபுக்கதுகலக்கிமே
லிற்புடைக்குமவனேறுமருளென்னுமதயானையே. (உ௩)

## ஷ வேறு.

உற்றபொருள்பற்றியிகல்வெற்றிகொளமுற்றுமதையுன்னிமா
நற்றனுவினம்பினொடுவாயுகதியும்பிறவுநாணவேழ்
கற்றடமுமேழ்கடலுமேழ்புவியுமங்கொருகணத்திலே
சுற்றிவருமற்றவனியற்கவலையாகுமொர்துரங்கமே. (உச)

மாதவனிடத்துமதிவேணியனிடத்துமலர்வனசமேல்
வேதனதிடத்துமுனிவோர்தமதிடத்துமெதிர்மேவியே
மூதறிவைபெற்றியுறுகாயம்வருவிக்குமொருமோகன்வெம்
பாதகமியற்றும்விபரீதநெறியாகியபதாதியே. (உரு)

எண்டிசையுமேழ்கடலுமெட்டுமலையும்புவனமேழிரண்
டுண்டெனவயங்குதொகையுங்குலவுபாதலமுமும்பரு
மண்டலமுமெங்கணுநடந்துதடையின்றிவிசைமண்டியே
யண்டபகிரண்டமுமயக்குநெடுமோகனவணியே. (உ௬)

செங்கதிர்நெடுங்கிரணமெள்ளளவுமெங்குமதுதெரிவுறு
தங்கணெடுவானிலிருண்மேகபடலம்படருமமைதிபோற்
பங்கமறுமீசனொளிர்சோதியிலகாதவகைபகலினுங்
குன்றிலனவேமிசைகவிக்குமதிகேடனுமொர்கவிகையே. ()

சாலவழலுந்தழலினுங்கொடியதந்தவுரைதக்கதீ
மேலுருவினைச்சுடுமதல்லதருவத்தையும்வெதுப்புமோ
வாலமெனவெங்கணுமடர்ந்தபடுபாதகனவன்கொடுங்
கோவினதுவெம்மை*யெவருக்குநினையிற்றழல்கொளுத்துமே.()

ஷ வேறு.

இத்தன்மையயாவுமியைந்துலகேழுமேழுந்
தத்தந்திறைகொண்டெதிர்வந்தடிதாழ்ந்துபோற்றச்
சித்தங்களிகூர்ந்துதன்றன்மதித்தேவிசெவ்வாய்
முத்தந்தருமின்னமுதுண்டுமுயங்குநாளில். (உகூ)

ஆங்காரன்மலர்க்கணைக்காமனடுத்தகோபன்
றீங்கானவுலோபன்மதத்தசெருக்கன்மான
னீங்காதவதன்மனெடுங்கலிநீடிடம்பன்
வாங்காதவசத்தியனுதியர்மற்றையோரும். (ந௦)

வருகென்னுமுன்வந்தனர்வந்துவணங்கிநின்று
கரபங்கயமுச்சிமுகிழ்த்தருட்கண்ணினோக்கந்
தருகென்றனரங்கவருக்கெதிர்தக்கதக்க
வுரைதந்தயல்சூழவிருத்தியொருண்மைசொல்வான். (நக)

நந்தாதைநமக்கவனேழிருஞாலமெல்லாந்
தந்தாளுதியென்றனனன்றதுதக்கதென்றே
பைந்தார்முடிசூடினன்யான்பகைபற்றறுத்துச்
சிந்தாகுலமாற்றுவதுங்கடிறத்தினன்றே. (நஉ)

என்னுவியுமென்கணுமிங்கெனிரண்டுதோளு
மன்னாரணிவீருமுமைத்துணையாய்ப்படைத்தேற்
கொன்னாரிகலெங்குளதோர்சிறிதுள்ளதேனு
முன்னாகநமக்கெதிர்வந்ததுமூளுமன்றே. (நந)

எள்ளிற்சிறுபாதியிற்பாதியதென்றதேனுந்
தள்ளப்படுநுண்பகையென்றுதவிர்ப்பதன்றூன்
முள்ளிற்பெருவன்மரந்தன்னைமுளைக்குமுன்னே
கிள்ளிற்கெடும்பின்புகுடாரிக்குங்கேடுறாதே. (நச)

---

* உயிருக்கும் என்றும் பாடம்.

நாகக்குருளைச்சிறுபற்படுநஞ்சினுலும்
வேகக்கரடக்களியானையும்வீந்துசாயும்
வாகைச்சிலமானிடராற்சிலவானரத்தா
லேகுற்றதிராவணனுவியினத்தொடன்றே. (௩௫)

ஷ வேறு.

இனையதன்மையதாதலின்விவேகனையினிநீர்
தினையினுஞ்சிறுதன்மையனெனன்றுளந்திறம்பி
யனைவருஞ்செயலயர்த்திடாதாங்கதற்கேற்ற
வினையமும்பெருஞ்சூட்சியுங்கைக்கொளவேண்டும். (௩௬)

ஈதுதக்கதென்றுரைத்தசொற்கேட்டெழுந்திரதி
மாதுகாதலன்மன்னனைமலர்க்கரங்கூப்பிச்
சோதிவாண்முகநோக்கிநின்னருட்பணிசுமக்கப்
போதுவோமெமக்கெப்பணியுரைக்கினும்பொருளோ. (௩௭)

ஈரமுற்றொருநல்லறிவெங்ஙனமியங்கும்
பேருடைப்பிரமாதியர்மூவர்க்கும்பிறர்க்கும்
பாரமுற்றெழுமெண்ணிலாநின்பெரும்படையி
லோரொருத்தரோவெல்வதற்கமையுமாலுலகில். (௩௮)

மிடையும்வல்லகங்காரனேமுதலியமேலோர்
படையுமுந்திடவேண்டுமோநின்னருட்பணியா
லுடையநல்லறிவொருக்கியீரோமெனுமுலக
மடையவெல்வதற்கடியனேனிருக்கவுமையா. (௩௯)

ஆயினுந்திருவருட்படியேயனைவோரு
மேயசெய்வினைமுடித்துமால்விடைதருகென்று
மேயதாட்டுணைவணங்கியகாமனைவியந்து
நாயகன்சிறப்பவரவர்க்கிவைசெயநயந்தான். (௪0)

கொடையிலாண்மையிற்கேண்மையிற்பொருவருங்குணத்திற்
படையிற்சீர்மையிலொழுக்கத்திலெவரையும்பழிக்கு
நடையிற்றாய்மையில்வாய்மையினுகரீகத்திற்
றடையில்செய்கையிற்றவத்தினிற்பெரும்புகழ்தன்னில். (௪௧)

நிதியின்மேன்மையிற்குலத்தினிற்பெருநியமத்தி
லதிகன்யானெனுஞ்சிறப்புமேற்கொண்டகங்கார
வெதிருறுஞ்சமன்வலிதொலைத்துலகெலாமெய்திப்
பதிகொளும்படிகவுடமேவுதியெனப்பணித்தான். (௪௨)

மகரகேதனமதிக்குடைவாரிவார்முரசு
நிகரில்கோகிலக்காளமந்தானிலநெடுந்தே
ரிகலுமாலிருள்யானைபைங்கிளிப்பரியிரண்டு
சிகரபாளிதக்குங்குமப்பூண்முலைச்சேனை. (சங)

மலருமைங்கணைகருப்புவிற்சுருப்புநாண்மடல்வா
ளலகில்பல்சிறப்பனைத்துமக்காமனுக்களித்தெவ்
வுலகினுந்திறணிருபகன்புகாவகையுடற்றி
யிலகுதேவியோடிருத்திபோய்க்காஞ்சியிலென்றான். (சச)

கறிக்கும்பற்பறைகட்பொறியனற்கணைபுரூர
நெறிக்குந்திண்சிலைநெட்டுயிர்ப்பாம்விசைநெடுந்தேர்
செறிக்குமெய்க்குறுவேர்வுடற்கவசம்வாய்த்தீச்சொற்
றறிக்கும்வெற்றிவாளுரப்பொலிக்கொற்றவெண்சங்கம். (சரு)

மற்றும்பற்பலவுரிமையக்கோபற்குவழங்கி
யுற்றதேவியுன்மகனொடெவ்வுலகமுமுலாவிப்
பற்றறும்படிபொறைமுதலோர்பகைபடுத்து
முற்றும்வாழ்திபோயவனதேயத்தென்றுமொழிந்தான். (சசு)

கேட்டிரப்பொலிப்பல்லியம்பல்சுமைக்கிரீட
மோட்டுமைக்கடன்மரக்கலத்தேர்பலியுடைவா
டாட்டுணைக்கதிவாம்பரியப்பரிதனக்கே
யீட்டுஞ்சீவிதம்வன்மலைநாடுமற்றெவையும். (சஎ)

கொடுத்துலோபனுக்கொத்தநன்முகமனுங்கூறி
யடுத்தநின்மனையாசையோடணுகிநீராடை
யுடுத்தபார்தொறும்விராகனும்விரத்தியுமொதுங்கக்
கெடுத்துவாழ்திபோய்க்கேரளதேயத்திலென்றான். (சஅ)

சாற்றும்வீறெனும்யானைசிங்காரமாந்தடந்தே
ராற்றுபொய்வணக்கடுஞ்சிலைகுடிலச்சொல்லனலம்
பேற்றுமுட்கவட்டொழுக்கமாமிவுளியென்றினைய
கூற்றெனுந்திறலிடம்பனுக்குடன்படக்கொடுத்தே. (சகூ)

நினைதுவஞ்சனைத்தேவியுநீயுநின்மகனும்
வினையசத்தியன்றன்னொடெவ்விடத்தினுமேவி
நினைவிலையுறுத்தனையனைமெய்யனைநீக்கி
யனையகாசிமாநகரில்வீற்றிருத்தியென்றறைந்தான். (ருo)

மனத்தெழுங்களிப்பெனுங்கரியெவரையுமதியாத்
தொனிக்கடும்பறைதன்னைமேலேற்றுமாதுரங்க
மெனைத்துமம்மதற்கீந்தகங்காரனுக்கியன்ற
வனைத்துங்கொள்கவென்றவற்குளவரிசையுமளித்தே. (ருக)

மறதியென்னுநின்றேவியோடுலகெலாமருவி
யறிவுறுந்தகையடக்கனைவேரொடுமடக்கிப்
பிறிதுமுள்ளவெம்பகையையுந்துரந்தென்றும்பேரா
துறைதிபோதிகோதாவிரிதீரத்தென்றுரைத்தான். (ருஉ)

கெடலறிந்துமேலோரொடும்பொரன்மதக்கரியென்
படினுமற்கடமுட்டிபோற்பிடிப்பதாம்பதாகை
யிடையின்முன்புணர்காரியஞ்சிதைந்துயிரிறினுந்
தொடர்வதல்லதுவிடாமையாம்வேகமாதுரங்கம். (ருங)

அனத்தனுக்களித்தானியுநாசனுமாகும்
வினைத்தன்றேவியும்பிள்ளையுங்கொடுபுவிவென்று
தனிக்குமற்புதையன்பிராணயாமன்சத்து
வனைத்துரந்துகன்னடதேயம்புகவகுத்தான். (ருச)

எவர்நலத்தையும்பழிப்பதாம்பல்லியமின்ப
மவரவர்க்குறிலதுபொறுதமைகணையடுத்தோர்
சவைதனிற்புகிற்றரித்திடாக்காற்பரிதனித்தேர்
கவலையுட்கொடுபோர்த்தமுக்காடெனுங்கவசம். (ருரு)

மச்சரற்கிவைமுதலியயாவையும்வழங்கி
யிச்சையுற்றிடுமசூயையோடுலகெலாமெய்தி
யச்சமுற்றசந்தோடனைமகிழ்ச்சியையகற்றி
நச்செனும்படிமராடதேயத்துறநவின்றான். (ருசு)

முகந்திருப்பெனுமுடிக்குவாம்பரிமிகமுறுகி
யகங்கறுப்பதாங்கவிகையாகட்டுமென்றதட்டிப்
பகர்ந்திடுந்தொனிக்கடும்பறைப்ரதிக்ஞையாம்பதாகை
தகைந்தடிக்கடிதலையசைக்கின்றதேர்சவரம். (ருஎ)

கமையுறுவயிரனுக்களித்துலகெலாங்கடந்துன்
னமரியாதையாலக்ரமப்பிள்ளையாலனையர்
சமதிருட்டியைநியாயனைத்தடுத்தவிரோத
னியல்கெடுத்துநீயிருக்கியாற்கிராதநாட்டென்றான். (ருஅ)

வழுவிலோரையுந்தாழ்வதொன்றின்மையாமகுட
மெழுவதின்மையாம்பீடம்வந்தெவர்தொழுதிடினுந்
தொழுவதின்மையாங்கங்கணமுனைநெடுஞ்சுடர்வேல்
குழைவதின்மையாங்கயமிறுமாப்பெனுங்கொடித்தேர். (ருகூ)

இனையயாவையுமானனுக்கீந்தவனில்லாள்
புனைமலர்க்குழல்வெகுமதிதன்னொடும்புகுந்தே
யனையதாந்தியோடருந்தமன்றன்னையுமடக்கி
வினையின்மேற்றிசைச்சோமநாதத்துறவிடுத்தான். (சு0)

மறித்துநொய்யவர்தம்மையுந்தாழ்வதாமகுடம்
புறத்துளோர்புகலிகழ்ச்சியுங்கேட்பதாம்பொற்பூண்
செறுத்துளோரொடுந்தங்குறைசொல்வதாந்திமிலை
குறித்தசெய்கைமுற்றுமையாம்விகடமாக்குதிரை. (சுக

மருவுவெய்யசங்கற்பனுக்கிவையெலாம்வழங்கி
யரிவைகற்பனைத்தேவியோடவனியிலளாவி
நிருவிகற்பனுநிலைமையுமுருவகைநெருக்கிப்
பொருவில்குச்சரதேயமீதுறைகெனப்புகன்றான். (சுஉ

மண்டலங்கரிபரிகுடைசிவிகைமாமகர
குண்டலம்புனைபல்கலன்பெருநிதிக்குவைகள்
கெண்டையங்கண்மினர்பெருஞ்சேனைபொற்கிரீடங்
கண்டலம்புகாவறுமனோராச்சியக்காணி. (சுந)

பகருமற்றிவைவிகற்பனுக்கீந்துநின்பாலன்
வெகுமுகன்றனுலகமுகன்றன்னையும்விலக்கி
மகிழும்யோசனைத்தேவியோடெங்கணுமருவிப்
புகலுநின்றிருத்தாதையோடுறைதிபோவென்றான். (சுச

எவ்விடத்தினுநிலைபெறுதியங்கலாமிரதங்
கவ்வையுற்றிடுமயக்கநீங்காமையாங்களிமாச்
செவ்வொழுக்கம்யாரிடத்துந்தேர்வின்மைபாந்திறல்வா
ளவ்வையொத்தவர்தம்மொடும்போர்செயலனிகம். (சுரு)

இசைக்குமற்றிவையாவுஞ்சந்தேகனுக்கீந்துள்
ளசித்தியும்மகன்கலக்கனுமாயுலகனைத்தும்
விசித்திநிச்சயனையுமுன்றன்னையும்விலக்கி
முசித்திடாமல்வாழ்ந்திருத்திகொங்கணந்தெனமொழிந்தான்.()

தடையறும்படியெங்கணும்வைகுறுஞ்சயனம்
விடுகுறட்டுவெம்பல்லியங்கனவிடைமின்னு
ருடல்பெயர்ப்பதாஞ்சகடனெட்டுயிர்ப்பெனும்வாசி
யிடருறுத்தினுந்தேர்கிலாதின்புறும்யானை. (௬௭)

சொன்னயாவையுந்தாமதற்கீந்துநின்சோம்பி
யென்னுமாதுரித்திரையெனுங்கன்னியுமெய்த
வன்னசத்துவன்புனிதையிவ்வுலகுறுதகற்றிப்
பன்னுதென்றிசைப்பாண்டியின்வைகெனப்பணித்தான். (௬௮)

வினவுறுதுற்றநட்பையுமறப்பதாம்விருது
மனதில்யாரையுமதித்திடாதிருப்பதாம்வடிவா
டனதுசெய்வினைக்கதிவிடாதியற்றலாந்தனித்தே
ரினிமைகேட்கினுங்கேட்கிலார்போல்வதாம்யானை. (௬௯)

இத்தகைச்சிறப்பிராசதற்கீந்துலகெவையு
முத்தியோகனுமுயற்சியுந்தொடரநீயுலாவிச்
சத்துவன்றனைவிரத்தியைவிராகனைத்தள்ளி
மெய்த்துவாழ்திகன்னுடகநாட்டெனவிதித்தான். (௭0)

தாமதச்சிரத்தையுமிராசதச்சிரத்தையுமா
மாமடந்தையர்க்கேற்பனயாவையும்வழங்கி
நாமசத்துவச்சிரத்தையைத்தொலைத்தெந்தநாட்டுங்
கர்மசத்திரமெனவழங்கும்படிகழறி. (௭௧)

இந்தியங்களையெங்கணுஞ்செலுத்துறலிரத
முந்துநன்முறைக்கேடெனுமதகரிமுறையோ
டந்தநல்வழிச்செல்வுறுவாசிநாவடக்கா
தெந்தவன்சொலுஞ்சொல்வதாங்கடும்பறையெவையும். (௭௨)

அதன்மனுக்களித்ததோகதித்தேவியுமவன்றன்
சுதனெனப்பெருந்துக்கனுமுடன்வரத்தொடர்ந்து
திதமெனத்திகழறனையுஞ்சுகனையுஞ்சிதைத்தே
யெதிர்கடற்கரையூர்தொறுமுறைதியென்றிசைத்தான். (௭௩)

தேறுருவஞ்சாரனுக்கினிமையுஞ்செப்பி
மாறுசெய்கைமிச்சாதிட்டியென்னுமுன்மகளும்
வீறகீர்த்தியாந்தேவியும்விடயசங்கமனுங்
கூறுமைந்தனுமிங்குநம்மருகினிற்குலாவி. (௭௪)

திகழ்சுசீலனைத்தடுத்துநீயுன்மகன்றிறலா
லகமுகன்றனையடக்கியுன்றேவியாமவளாற்
றிகழுபேட்சையைத்தீர்த்துநின்மகள்கொடாத்திகன்ற
னிகல்கெடுத்துலகேழையுமடக்குதியென்றான். (எரு)

வேந்தன்வெங்கலியனையழைத்திழிநருவிற்கு
மாந்தரில்லினுமலைந்துசூதாடுவார்வயினு
மேய்ந்தகைப்பொருட்பெண்டிர்வாழ்சேரியினிடத்தும்
போந்துவைகுதியென்றுபின்னருமிவைபுகன்றான். (எசு)

நீவிலக்கியாசாரனைமயித்திரிநிலையுன்
றேவியைக்கொடுசெகுத்துநன்மனநிலைசெருக்கை
மாவிறற்சுதன்சஞ்சலனாலெதிர்மலைந்தே
யாவிசெற்றெனதருகினுமிருத்தியென்றறைந்தான். (எஎ)

மற்றுளோருக்குமவரவர்க்கேற்றனவரிசை
முற்றுமேசெய்துபகையும்வாழ்தானமுமோகன்
சொற்றனன்னவன்சொன்னவைசென்னியிற்சூடிக்
கொற்றவார்கழற்றாள்பணிந்தருள்விடைகொண்டார். (எஅ)

இன்னதன்மையர்யாவருந்துறைதொறுமெய்திச்
சொன்னசொன்னசொற்படிபணிபுரிந்திடத்துன்னார்
முன்னர்முன்னர்வந்தடிதொழவாழுநாண்மோக
மன்னர்மன்னவனுரைத்தனன்றேவிக்கோர்மாற்றம். (எகூ)

அன்னமன்னதுன்மதியிதுகேட்டியாலாவி
யுன்னையன்றிவேறெனக்கிலையாதலானுன்ற
லின்னநங்கிளைபல்குநீயென்மொழிக்கிசைந்தா
லென்னருங்கருத்தின்படிக்கிசைவதேயியல்பால். (அ0)

உரையதென்னெனிற்பாஷண்டவிஞ்சையென்றொருத்தி
வரைவுவேண்டுவன்யானெனப்பகர்ந்துசம்மதிகொண்
டருகினின்றதோர்தாமதச்சிரத்தையையாங்கே
விரைவுதூதுவிட்டவளையுமணஞ்செய்தான்வேந்தன். (அக)

மணந்தகாலையிற்பாஷண்டவிஞ்சையைமன்னன்
புணர்ந்துநண்புறமுயங்குநாளவள்வயிற்பொல்லாக்
குணந்தரித்துலகடங்கலுநடுங்குறக்கொடுங்கே
டுணர்ந்ததாதையிற்கொடியஞோஞ்ஞன்வந்துதித்தான். (அஉ)

ஆயமைந்தனுமஞ்ஞன்முப்புரத்தினையழித்த
தீயதென்னவுமருந்தினுற்றீர்வதொன்றில்லா
நோயதென்னவுமுயர்ந்தவர்க்கிடர்செயுநொய்யோர்
மாயவெம்பழியென்னவுநாடொறும்வளர்ந்தான். (௮௩)

அனையனிவ்வணம்வளர்ந்திடமோகவெவ்வரசன்
மனையுமைந்தருஞ்சுற்றமுமல்கியவாழ்விற்
றனைமறந்துலகடங்கலுந்தன்னொருகொடுங்கோல்
வினைசெயும்படியரசுவீற்றிருக்கின்றவேலை. (௮௪)

அவித்தியாபுரச்சருக்கம் முற்றிற்று.
ஆ - விருத்தம்-௧௮௪.

## ௪-வது, விவேகன் வனம்புகு சருக்கம்.



கலி நிலைத்துறை.

காமனுதியர்பெரும்படைகைபரந்தெழுந்து
பூமிமீதுளபுண்ணியத்தலங்களைப்பொருந்திச்
சேமமாயுறைவிவேகனைமுதலியோர்திறத்தி
னேமமானதுநிலைகெடப்புடைக்குமந்நாளில். (௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நல்லறநடுங்கியதுமாதவமொடுங்கியதுஞானநெறியு
மல்லலின்மயங்கியதொழுக்கநிலைகுன்றியதொரட்டவிதமாந்
தொல்லையியமாதியெனும்யோகமுமயங்கியதுதூயமறையோ
டெல்லையில்புராணமுமடங்கியதடங்கியதிரக்கமதுவே. (௨)

மங்கையர்கள்கற்பழியவாழ்குடிமைகுன்றியதுவாய்மைகுடி
போய்த், தங்கலினெடும்பொறைதகர்ந்ததுபெருஞ்சமதமங்கள்
குலையச், சிங்கலுறலுற்றதுபசாந்தியொடுதாந்தியொர்சிரத்தையு
டனே,பொங்கியமயித்திரியுபேட்சையருண்மாமுதிதைபோயுலை
யவே. (௩)

தம்பமெனநின்றகுலமால்வரையுளோர்கணிலைசாய்ந்ததறிஞோ
ர்,வெம்பமறையோர்கள்புரிவேள்விமுதலாயதும்விலங்கியதுமே
ற்,பம்பரமெனும்படிசுழன்றதுறவோரிதயபங்கயமுநீ
டும்பருலகுங்குலைகுலைந்தலையமண்முழுதுகுலுக்கியதுவே. (௪)

இத்தகையதாகியுலகேழினுடனேழுமழலிட்டதளிர்போன்
மெத்தவெயிலூடுலையுமென்பிலதுபோன்மிகவும்வெம்பிவிடவே
சத்துருவிரோதமடருங்கொடுமைகண்டுமெய்தளர்ந்துவலிதாழ்ந்
தத்தகாமசிரோமணிவிவேகனெனுஞ்சார்தனிபொதுங்கினனரோ (௫

தன்றடையன்வாலிகடியத்திறலழிந்துபுவிதன்னிலரணற்
றன்றிரவிமைந்தனொர் மதங்கநெடுமால்வரையடுத்துறைதல்போ
னன்றறிவின்மோகன்வலியானிலைகுலைந்தனையனண்ணினன்மனா
ங், கன்றுதனுருதநரநாரணருறும்பதரிகாச்சிரமமே. (௬)

பண்டுதுரியோதனனையாதிகொடியோர்புரிபகைத்திறமையாற்
கண்டுதெரியாதவகைமெய்த்தருமபுத்திரர்கரந்துறைதல்போன்
மிண்டுகலியால்வலிதொலைந்துநளராசன்வனமேவியதுபோன்[ல்
மண்டுபகையாலடல்விவேகன்வலிகுன்றமெய்மறைந்துறையுநா

ஷ வேறு.

இயமமுநியமமுமாதனமுமியலும்ப்ராணாயாமமுநற்
றயவுறுப்ரத்யாகாரமுமத்தாரணை த்யானசமாதியொடே
நியமரொரெண்மரமைச்சர்களுநிருபகனும்பெருநீள்பொறையும்
வியனுறுசந்தோடன்றனும்மெய்யனுநல்லறவீரனுமே. (௮)

சாருமடக்கனுநிச்சயனுஞ்சாந்தியுந்தாந்தியுஞ்சமதமமு, மோரு
மயித்திரிகருணையகத்துள்வருமுதிதையுபேட்சையொடும், பேரு
ம்விராகனிவிர்த்தியெனும்பெண்ணியலார்பலபின்னுமுளோ
ராரும்விவேகனிருந்துழிவந்தடியின்விழுந்திதறைந்தனரால். (௯)

தாவுமடற்புலியாரணியந்தன்னிலுறைந்ததுதனைநீங்கிப்
போவதுபெற்றுநல்விதிவலியாற்பொன்றுதறப்பியபுல்வாய்போ
ற், பாவிபடைத்தலைவீரரெமைப்பங்கமுறச்செய்தபாடுபொறுத்
தாவிபிழைத்தனமையாநின்னருளெம்மிடத்துளதாதலினால்.(௧௦

அஞ்சினமஞ்சினமையாநின்னருளலதில்லையெமக்கொரரண்[யாந்
வெஞ்சினமோகன்விடும்படையான்மெய்தடுமாறிமெலிந்தனம்
தஞ்சமகற்றியொளித்துறையுந்தன்மைநினக்கிதுதகவாமே[றே
யெஞ்சலில்வல்லிருண்மல்குதல்கண்டிரவியொதுங்குவதியல்பன்

தாழுமவர்க்கொலிவாரிதியுந்தன்னுளமிழ்த்துமொர்நாவாயாற்
போழுமவர்க்குநன்மணியுஞ்செம்பொன்னுமளித்தவைபுனைவிக்
கும், வாழுமவர்க்குளதுறவெங்குமற்றையவர்க்கிலைமரபினுமீ
ரேழுலகத்தையுமடுகிற்குமெரிசிறிதாயினுமெண்ணுரால். (௧௨)

பாரியநின்றொடுபுகின்மோகன்பகைநொடியிற்பொடிபண்ணே
மோ,நீரியலின்றிநல்விதைபோய்நன்னிலமுறினும்பயிர்நீராமோ
கூரியபைங்கொடிபலவுங்கொள்கொம்பொழியிற்படர்குணமுண்
டோ,வீரியரெத்தனையோரேனும்வேந்தனிலாப்படைவெல்லாதே

பாவமியற்றிநல்லறமோரும்பரிசுகெடுத்துயர்பழியோடிம்
மூவுலகத்தையுமரசாளுமுறைபிலிதுன்மதிமோகனையு
மாவிசெகுத்திலமென்றுலுள்ளன்பழிசிந்தையனவனன்றே
காவினிடைக்குயில்கூவாதேதற்காகமதொத்தகணக்காமே. (கச)

மாயைமகன்சரியெல்லோருமக்கணமக்கெனமதியாமற்
றாயையுமுன்னையும்வேறுபடத்தள்ளிவிடுத்துன்றன்முனெனுந்
தீயவனுக்கணிமுடிசூட்டிச்செல்வமளித்தருள்செயலென்னே
நீயவனுக்கெதுபிழைசெய்தாய்நின்னியலுக்கதுநெறியன்றே.

என்றிவையன்னவர்சொன்னவெலாமிருசெவியுட்கொடிரு
த்திரெனுத், துன்றுமலர்க்கையமைத்துமுகந்தோறும்விழித்தரு
ள்சூழ்வித்து, வன்றுயர்மாற்றிவிவேகர்பிரான்வருமியமாதிய
மைச்சரொடே,யொன்றுரைசெய்வதுகேண்மினெனுவுள்ளநிகழ்
ச்சியுணர்த்தினனல். (கரு)

ஷை வேறு.

ஆரமுதங்கொடுத்தவர்க்குமாருயிரைச்செகுக்கவிடமளிக்கு
ம்பாந்தட்,சீரனையன்செயலறிந்துந்திறன்மாயைமகன்றனக்குன்
றிருத்தாதைக்குப், பாரநெடுந்துயர்விளைத்துப்படுத்தசிறைவிடுத்
திலையேற்பாவமென்று, பேரறமன்றுரைத்ததொன்றேகுற்றமல்
லாலென்மீதிற்பிழைவேறுண்டோ. (கள)

அந்தமொழிக்கவன்கனன்றெனன்னையுடனென்னையும்வே
றகற்றிமற்றோர்,மைந்தனெனுமாமோகன்றனக்குரிமையத்தனை
யும்வழங்கிப்பின்னை,யெந்தவுலகினுக்குமிறையிவனெனவேமுடி
சூட்டியெனைத்தாழ்வித்த,தந்தையின்னமென்னமிகைசெய்யினு
ம்யானதுகடத்தறருமமன்றே. (கஅ)

சொற்றருமஞ்சிதைக்குமன்னர்சொன்னபடிசொன்னவரே
தொலையாச்செல்வம்,பெற்றவர்களவைதிருத்திப்பேசினர்க்குமு
ற்கேடுபிறக்கும்பித்தர்க், குற்றகுணநாலினுஞ்செவ்வொழுங்கன்
றேவூன்பொசிக்குமுழுவைமுன்போய்க், கற்றறிநல்லறமோதிற்
கடுங்கொலைமாபாவமெனுங்கருத்துறுதே. (ககூ)

அன்றுலிற்றுயின்மானுமண்டருமந்தரமலையிட்டலைவதாக்கி
நின்றுலுந்தன்வருத்தநினையாதபாற்கடலினீர்மைபோலக், கொ
ன்றுலுமழலெழத்தீக்கொளுத்தினுஞ்சிற்றறிவாளாற்கெர்ய்து

கொய்து, தின்றாலும்பொறுப்பதல்லாற்றீங்குதந்தைக்கிழையா
தென்சிந்தையென்றான். (௨௰)

என்றலுமாங்கவையினுள்ளோரெவர்கருத்துமவரவர்தமிணை
க்கண்கூறத், தன்றனைக்கட்பார்வையினாற்றானுணர்ந்துமுன்னெ
ழுந்துதடக்கைகூப்பி, நின்றுவிவேகனைத்தொழுதுநிறைமதிவா
ண்முகநோக்கிநீதியாவு, மன்றுணரவியபாதியெண்மருக்குணியம
னெனுமமைச்சன்சொல்வான். (௨௧)

குருவரசனன்னைபிதாத்தம்முனெனத்தொழத்தகுமைங்குர
வரேனும், பெருமிதங்கொண்டடுமடாதிதுவென்பதுணராமற்பி
ழைசெய்வாரேற், றருமநெறியுணர்ந்தமிக்கோரவரவர்க்குத்தக்
கதக்கதண்டஞ்செய்தன், மருவுதிரைக்கடலுடுத்தமாநிலத்திற்ப
ண்டைமனுவசனமன்றோ. (௨௨)

அறனழியத்தீங்குசெயுந்தானவரைவானவர்கோனன்றுதொ
ட்டு, மறனழியப்போர்தொலைத்துவருவதின்றுமுளதவன்றன்ம
ட்டோபின்னும், பொறைவடிவுகொண்டதன்மபுத்திரனும்பாரத
ப்போர்பொருதநாளிற், றிறனழியக்கிளையையெலாஞ்செகுத்த
தைந்தாம்வேதமொழிச்செய்கையன்றோ. (௨௩)

மூதாதைதனைச்சிறையிட்டுனக்குமுன்றாய்க்குந்துயரமூட்டி-
ப்பஞ்ச, பூதாதிபலவுயிர்க்குமிடரிழைத்தவஞ்சகர்மேற்போர்செ
யாம, லாதாரந்தமர்நமக்கென்றன்புசெயிற்பின்புகுணமவர்க்கு
ண்டாமோ, கோதாயவன்பிணிக்கோர்கொடியமருந்தூட்டினல்
லாற்குணங்கொடாதே. (௨௪)

காமாதிபடைஏரெனுங்காலிபுகாதறன்வேலிகட்டித்தீய, மா
மோகமிகுமோகனெனுங்களையும்வேரோடுவாங்கிநீக்கிக், கோ
மானின்கருணைவெள்ளநீர்பாய்ச்சியுணர்வெனும்பைங்கூழ்மீ
தோங்கற், காமாறுவிளைக்கினல்லாலாராவின்னமுதமெவர்க்க
ணுகலாமே. (௨௫)

மாதாவின்குறைதவிர்த்துன்மரபிலெம்மனோர்குறையுமாற்
றிமற்றை, மூதாதைகொடும்பிணிப்பின்மூட்டறுத்துமீட்டுலகமூ
ன்றுநீயே, யாதாரமெனக்கொடியவவித்தைநகரரசனையுமடர்த்
துமற்றைத், தீதாயவெவ்வினையுந்தீர்த்தருளென்றிவ்வாறுசெப்
பினால். (௨௬)

௸ வேறு.

தருமத்தின்றளர்ச்சியாலுந்தறுகண்மர்மோகன்வெய்ய
கருமத்தின்கொடுமையாலுங்காரியங்கழறுங்கல்விப்
பெருமைத்தன்மைச்சராலும்பெறுதமர்பகைஞரேயென்
றொருமித்ததாங்கேயாருமொப்பிலாவிவேகற்குள்ளம். (உஎ)

கருத்துறுநிகழ்ச்சியன்னான்கமலவாண்முகத்தின்செவ்வி
யுரைத்திடவுணர்ந்தெல்லோருமுளத்தினன்மகிழ்ச்சியுற்றார்
வருத்துறுமோகனென்பான்வருந்தறுசுமதியென்னு
முருத்தவெண்ணகையும்வந்துமுதல்வனைக்கூடினாளால். (உஅ)

கோவியல்விவேகவேந்தன்கொடியிடைச்சுமதியென்னுந்
தேவியோடளவளாவிச்சிந்தையிலன்புகூர்ந்து
தாவினல்லறம்பாலிக்குந்தன்மையாலுண்மைநீதி
யாவதுதம்மிலெண்ணியன்னவனின்னசெய்தான். (உ௯)

விவேகன்வனம்புகுசருக்கம் முற்றிற்று.
ஆக - விருத்தம்-உக௫.

---

## ௫-வது-விவேகன் மந்திரச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நித்தியம்பிரிவுறுதநிருபகன்பொறைவிராகன்
சத்தியன்றருமசீலன்சமன்றமன்சமாதானன்சீர்ச்
சுத்திதன்பதிநியாயன்சுகனியமாதியெண்ம
ரித்திறத்தவரியாருமிங்ஙனம்வருகவென்றான். (க)

எனவிவையுரைத்தலோடுமிருந்தவரெழுந்துவேந்தன்
கனைகழற்சரணம்போற்றிக்கைகுவித்தருகினெய்த
வினையுணரனையரோடும்வேறொருசாரிற்சென்று
நினைவுறுநிகழ்ச்சியொன்றுநிகழ்த்துவானகத்துட்கொண்டான்()

அன்னவர்முகங்கடோறுமருள்விழிபொழியநோக்கி
யென்னுயிர்க்குயிருநட்புமிகவுறும்படையும்வாழ்வுந்
துன்னுநற்கிளையுமற்றத்தொகுதியுநீரேயல்லாற்
பின்னெனக்குறுதியாகும்பெற்றியார்பிறருமுண்டோ. (௩)

ஆதலான்மொழியக்கேண்மினனைவருமறம்பண்டோதித்
தாதையால்வருத்தமுற்றுத்தளர்பிரகலாதன்போன்று
மீதலான்மோகனாலுமீடுபட்டெளிமையாகிப்
போதலாற்றமயன்றள்ளப்புறஞ்செல்வீடணனும்போன்றேன் ()

ஆயினுமவர்போலுய்தற்கறநிலையுளதாலீன்ற
தாயினுமினியனென்றதாதையென்பவனுமந்தத்
தீயவர்பிணிக்கும்பாசப்பிணிப்பினாற்சிமிழ்ப்புண்டந்தோ
வோய்வுறுமதனாலீங்கெனுறுகணார்தவிர்க்கற்பாலார். (௫)

வன்றொழில்வாழ்விலுந்தம்வறுமையேயினிதென்றுன்னு
நன்றறிவாரிற்புல்லர்செல்வரோடுவோராமற்
புன்றொழில்செயலாலென்றுபுகன்றருமுன்னூலோர்வாய்மை
யின்றதுநம்பாற்கண்டோமிதற்குவேறுவமையுண்டோ. (௬)

ஆண்டமைபிகந்துமோகனரசுகைக்கொண்டவன்றே
மூண்டடறொலைத்திடாமன்முதிர்ந்தபின்முயறனாகந்
தீண்டுமெவ்வுழித்தடாதுசிரத்தினஞ்சுற்றபின்னை
மீண்டிடமந்திரிப்பார்வினையம்போன்றிருந்ததன்றே. (௭)

ஆங்காரன்வெற்றியண்டரண்டமுமளந்ததங்கைப்
பூங்காமன்விசையமெய்தப்புவனமும்விழுங்கிற்றென்றுந்
தீங்கானகோபன்சேனைதிரிபுவனத்தெல்லோரும்
பாங்கானலோபனேவற்பணிசெயாதவர்கள்யாரே. (௮)

உடம்பெடுத்தவரெல்லோருமுலோபன்மாமகனென்றோது
மிடம்பனுக்காளாய்நின்றாரிணையிலாமதாந்தகாரந்
தடம்பயில்ஞாலமெல்லாந்தாவியதருமைகேள்வன்
றிடம்பணிசுமந்தபார்மேற்செல்லாததிசையொன்றுண்டோ (௯)

கலியனுக்குலகமெல்லாங்கைவசமானனென்னும்
வலியனுக்கெதிர்கொளாதார்வானின்மண்ணுலகினில்லைப்
புலியெனுமதன்மனோடார்போர்செயவல்லார்பொய்ய
னலிவினுக்கிடங்கொடாதார்நாவசைத்திடப்பெறாரே. (௧௦)

நேரொருவருமில்லாவந்நெடும்படைத்தலைவர்தம்மு
ளோரொருவருக்கேபோதாதுலகெலாமவருக்கெல்லாம்
வேரொருமோகனானேன்வெற்றியாருரைக்கற்பாலா
ராரொருவருக்குங்கூடாதவர்களோடெதிர்க்கவம்மா. (௧௧)

இத்திறமனையர்தன்மையெனிலினியெவ்வாறன்னார் [ந்
பொய்த்திறஞ்சிதைத்துமெய்ம்மைபுகுத்தியெவ்வுயிர்க்குமுள்ள
தத்துறலொழித்தம்மேலோன்றளைவிடுவிப்பதென்னா
வொத்துறுமுழையர்சிந்தையுணருவானுரைத்தலோடும். (௧௨)

எழுந்தனனெழுந்துவேந்தையிணையடியிறைஞ்சியேத்திச்
செழுந்திருக்கரங்கள்கூப்பித்திறனிருபகன்செந்தீபக்
கொழுந்தெனவொளிரும்புத்திகோசரமெவர்க்குந்தோன்ற
மொழிந்தனன்கருமச்சூட்சிமுடிவுறத்தேர்ந்துநோக்கி. (௧௩)

கலி விருத்தம்.

விருத்தியுறமுற்றுணரும்வேந்தவெமையெல்லா
மிருத்தியுரைசிற்சிலவியம்பியதுநீயெங்
கருத்துணர்வதற்கலதுகாரியவிசாரந்
திருத்தியுணர்தற்கெனிலொர்சித்திரமிதாமால். (௧௪)

செங்கதிரவர்க்கெதிரொர்தீபமிடலேபோற்
றங்குபிரமர்க்கொருசடங்குசொல்வதேபோற்
புங்கவநினக்கொருவர்புத்திசொல்வதேனு
மிங்கெனதுபுன்சொலுமியம்புவதுகேளாய். (௧௫)

முந்துவிடநாகமொருமூச்சுவிடுமுன்னே
சிந்துமெலிபற்பலதிரண்டுவருமேனு
மிந்தனமலைக்குவமையென்னநிறைவுற்றும்
வெந்தழலினுட்பொறிதெறித்திடினும்வேமால். (௧௬)

எறிகடனெடும்புவியிலேதுமிலரேனு
மறிவுடையரேயுடையர்யாதுமறிவில்லார்
செறிவுடையசெல்வமொடுசீருடையரேனும்
வறிதுடையரல்லதவர்மற்றுடையரன்றே. (௧௭)

மறிதிரைசுருட்டியெறிவாரியையும்வானூ
டுறுசிகரவிந்தமெனுமோங்கலையுமேனைச்
செறிவுறவடக்கியதுசிந்தைதெளிவெய்துங்
குறுமுனிவனங்கொருகுடங்கைதனிலன்றோ. (௧௮)

அருகிலெவர்வந்துறினுமாவதெனநின்றோ
டொருவரெதிரோசிவனொருத்தன்மலைவின்றண்
வரியரவமாற்பகழிமற்றுமுளவேனுந்
திரிபுரமெரித்ததொருசிறுநகையினன்றோ. (௧௯)

நீயிதுகருத்துறநினைக்கினெடுமோகன்
மாயவினையுந்திறலுமற்றுள்செருக்குந்
தீயபலசேனையொடுசெல்வமுமனைத்து
மேயெனுமொர்மாத்திரையிலிற்றுவிடுமன்றே. (௨௦)

என்றவனுரைத்தமையுமெல்லையினெழுந்தே
நின்றுகைகுவித்தொருநெடும்பொறையனென்போ
னன்றறிவிவேகன்முகநாள்வனசநோக்கி
யொன்றுளதுசொல்வனிதுகேளென்வுரைத்தான். (௨௧)

மிக்கவலியோரெனினுமேவலரைவெல்வோர்
தக்கபருவத்திஞெடுசாருமிடநோக்கி
யக்கருமமுற்றும்வகையாய்ந்தழிவுறாதே
தொக்கபடைகொண்டமர்தொலைத்திடுவரன்றே. (௨௨)

படைபொருவதற்குரியபருவம்வருமட்டுந்
தடையிலமர்யாரும்வலிதாழ்ந்துறைதல்வேண்டுங்
கடையுகமிதென்றுபடர்காலமுணராதே
யிடையிலெழுவாரிதியுமெல்லைகடவாதால். (௨௩)

சாரும்வகைமெல்லெனவியற்றுதறவிர்ந்தே
காரியவசத்தினர்கள்கைபதறல்செய்யார்
பாரையுமடங்கநிமிர்பாறைசிறுதூரின்
வேரதுபிளந்திடவெடிக்கும்வகைகண்டே. (௨௪)

ஒற்றரைவிடுத்தினிநமொன்னலர்கள்செல்லா
நற்றலமதெங்ஙனெனநாடியுணர்வுற்றே
கற்றறிஞர்சிற்சிலர்கள்காமியர்கள்வேடம்
பற்றியவையுட்புகல்பணித்தருளவேண்டும். (௨௫)

நம்படையையங்கணுறநாடொறும்விடுத்தே
தம்பதிகடோறுமிகுதானைகள்பெருக்கி
வெம்பகைவலித்திறமுணர்ந்துகொடுமேற்போய்க்
கம்பலெநெடுஞ்சமர்கடப்பதினிதென்றான். (௨௬)

௸ வேறு.

அந்தாவதெனச்செங்கையமைத்தங்கறிவுடையோன்
சந்தோடமொடடக்கன்றனைத்தான்பார்த்திடலோடும்
வந்தான்மணிமுடிதாழவணங்கிக்கைகுவித்தே
யெந்தாயிதுகேளென்றுரையிவ்வாறுமொழிந்தான். (௨௭)

பொறைசொல்லியபொருளேயுறுபொருளாயினுந்துவரைக்
கிறைவன்பதினாறுயிரமெழின்மங்கையரின்பம்
பெறினுந்துறவுட்கொண்டதுபெயராமைநிறுத்துந்
திறமங்கவனல்லாற்பிறர்செய்கிற்பவரெவரே. (௨௮)

தொன்னாட்டவமுயன்றோர்களுந்தொழில்வெய்யவருறையு
மந்நாட்டிடைப்புக்கார்க்குணமம்மூர்க்கரொடொப்பார்
முன்னாட்டியமதுரக்கனிமுதிருப்பளமுற்றாற்
பின்னாட்டன துருவத்தொடுபேரும்பிறிதாமால். (௨௯)

கருங்கோகிலத்திளம்பார்ப்பொருகாக்கைச்சிறுகூட்டின்
மருங்கூடிசைகாட்டாததைவஞ்சித்ததனிசையாற்
சுருங்காவலிக்கொடியின்றோனிதொலைத்தாலெனப்பின்னா
ளருங்காரியமுடிக்குந்திறமவரெங்குளரென்றான். (௩0)

இவ்வாய்மொழியடக்கன்றனியியம்பாமுன்சந்தோடன்
கைவாரிசமுகுளித்திறைகதிர்வாண்முகநோக்கி
யொவ்வாரொடுமுறவாயவருருவங்கொடுமுள்ள
மவ்வாறியையாருஞ்சிலரதுகேளெனமொழிவான். (௩௧)

கனகங்கரிபரிதேர்குடைகாலாண்மணிமகுடம்
புனையும்பணிமடமங்கையர்புணரப்புவியரசாய்
வினையின்கண்முயன்றாலுமுள்விழைவங்கதினில்லாச்
சனகன்சதிருரையாதவர்தரைமீதெவர்தாமே. (௩௨)

ஏதுந்தெரிகிலரும்புகலேவற்றொழில்செய்துங்
காதும்பலியிடுவானொடுகோளிக்கெதிர்வந்தும்
போதும்புரவலனூர்திபுயங்கொண்டுசுமந்து
மோதுஞ்சடபரதன்றனையுணராதவனலனே. (௩௩)

பரியுங்கழைக்கூத்திக்கெவைபற்றென்றவைபற்றிப்
புரியுந்தொழில்செய்துந்தருபுனன்மிச்சினுகர்ந்துந்
துரிசன்றியொர்சிவனும்பரிசுத்தன்னெனச்சொல்லுந்
திரியம்பகனுள்ளம்பிறர்தேராதவரலரே. (௩௪)

அத்தன்மையரெனவேதமதணிவேடமதொன்றாய்ச்
சித்தம்பிறிதொன்றாகியசிலசீரியருளராற்
பொய்த்தங்குலகியலைப்புளியங்காய்தனிற்றோடாய்க்
கைத்தங்கதுபின்முற்றுமக்கனியோடெனக்கழல்வார். (௩௫)

காதிற்கயலெனவேபொருகண்ணாரொடுமின்பஞ்
சாதிக்கினுமேலோர்மதிதானங்ஙனமுறுமோ
வீதிக்கிடைநடனத்தொழில்வெவ்வேறுசெய்திடினுந்
தாதிக்குளமவளேந்தியதண்ணீர்க்குடமீதால். (௩௬)

தக்கோர்பலமடவார்முலைதழுவிக்கொடிருந்தென்
மிக்கோரலர்சிலர்மாதவவேடங்கொடிருந்தென்
னக்கோதறுமுளத்தோர்க்குமகந்தூய்மையிலோர்க்குந்
திக்கோதுறுமிழிபென்பதுஞ்சிறப்பென்பதுமுளதோ. (௩எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆதலிலொற்றர்தம்மையழைத்துலகெங்கும்போக்கிப்
பூதலவைப்பிலன்னுர்பொருவலிபுகாதசூழல்
யாதெனத்தேர்ந்துபின்னம்மினத்தரையங்கணேவித்
தீதுறுமணையராற்றல்செகுப்பதுசீரிதென்றான். (௩அ)

மற்றிவைமகிழ்வோன்கூறவருஞ்சமன்றமணமுன்னும்
பெற்றியரெவருமின்னபெற்றியேபகையைவெல்லச்
சொற்றருமறிவுமெண்ணுஞ்சூட்சியுந்துணிவுமென்னு
வுற்றதுதாட்சியெய்தாதுனுற்றுதல்கருமமென்றார். (௩௯)

ஓதியவச்சொற்கேளாவுயர்மதிவிவேகர்கோமா
னீதிநல்லமைச்சராதியோர்மொழிநினைத்துமோக
ஞதியர்புரியுந்தீமையணைத்தையுமுணர்வானெற்றிப்
போதினில்விடுவேனென்னுப்புந்தியினினைந்துசொல்வான். (௪0)

விவேகன் மந்திரச்சருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம் - உ௫௩.

## ௬-வது, விவேகனெற்றுக்கேள்விச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருமனல்விசாரன்றாயசத்தியனமிர்தசீலன்
வருதிர்நால்வருமிங்கென்னவந்தனர்வணங்கிநின்று
திருவருளென்கொலென்றுசெங்கைகூப்பினரைநோக்கி
யொருமொழிகேண்மினென்றுனெற்றுவிட்டுறுதிகொள்வான்.

அகலிடமுழுதுமேவியையுருவண்ணந்தேர்ந்து
பகலிரவிடைவிடாமற்படர்வுழிப்படர்ந்துபின்னு
ளிகல்புரிபருவநோக்கியாங்கரந்துறைதற்கேற்ற
புகலிடந்தெரித்திரென்னப்பிறித்திவைபுகல்வதானுன். (உ)

அடர்விசும்பறனீசெல்கவம்புவிமிசைவிசாரன்
படருகமெய்யன்றென்பாற்பற்றுகவமிர்தசீலன்
றடமலிபாதலத்திற்சாருகவென்றலோடும்
விடைதருகென்றுதாழ்ந்துவிரைந்தனர்வழிக்கொண்டாரால்.(௩

அவ்வகைவேடமாறியவரவர்பணிமேற்கொண்டு
தெவ்வமருலகமூன்றுந்தெரிவுறத்துருவிச்சென்றே
யெவ்வெவர்வலியும்வாழ்வுமிழிதொழிற்குறும்புமுள்ளங்
கைவருநெல்லிபோலக்கண்ணுற்றுக்கடிதின்மீண்டார். (௪)

ஒத்தவிண்ணுலகிற்சென்றவுயர்குணத்தருமனெய்தி
வித்தகவிவேகவேந்தவிரைமலர்ச்சரணம்போற்றிப்
பொய்த்தவர்திறனுஞ்செய்யும்புன்மையும்புலவர்போற்று
முத்திறத்தவர்க்குந்தீராமுரணையுமொழிவதானான். (௫)

கலிநிலைத்துறை.

மன்னாசொலக்கேளவ்வைகுந்தமுதலாயவானத்துநம்
மொன்னார்செயுந்தீமையென்னாலெடுத்திங்ஙனுரைசெய்வதோ
சொன்னாலுநாவேநினைத்தாலுமுள்ளஞ்சுறுக்கொள்ளுமே
லன்னார்கடுஞ்செய்கைவினவிற்செவிக்கேயுமழல்பற்றுமே. (௬)

ஆலாலமன்னார்கொடுந்தீமையுட்கொண்டதாற்றாமையான்
மாலாமவன்கண்சிவத்துக்கறுத்தங்கம்வாயுந்துவர்த்
தேலாவிடைச்சேரிநெய்வெண்ணெய்தயிர்பாலெடுத்துண்டுமே
பாலாழியிற்பள்ளிகொண்டேகிடந்தானோர்பக்கத்தரோ. (௭)

அதிரச்சிவன்றன்னையன்னார்கொடும்போரடர்த்தேறவே
கதிரிற்சிவந்தங்கமோர்பாதியோர்பாதிகருகித்தழ
னுதலிற்பொடித்துக்கனல்கொண்டதாற்றாமனோவுற்றநோய்
மதியைப்புனைந்தானுநதியைச்சுமந்தானுமாறாதரோ. (௮)

சோகானலம்பற்றிமுன்போர்சிரம்போய்த்துணுக்கிட்டுமே
போகாததுள்ளங்கொதிக்கின்றவெப்பம்பொறாவன்மையா
லேகாதுதண்ணென்றசெந்தாமரைப்போதிலெப்போதுமே
வாகாயிருந்தும்மனத்தாபமயனுக்குமாறாதரோ. (௯)

வடியாட்பெருந்தொந்திவயிறன்றனைப்பாதைவழிதோறுமே
குடியாக்குவித்துத்தன்னாணுங்கெடுத்துக்குறங்குக்குளோர்
துடியாக்கடும்பெண்ணையுறைவித்துநிருவாணசொருபத்தொடே
முடியாக்கொடுங்கேடர்செய்வித்ததப்பாலுமுழுமோசமே. (௧௦)

வீடாதமோகன்படைத்தீச்சுடப்பட்டுமெய்வெம்பியச்
சூடாறநிழலின்றியீசன்சிறுப்பிள்ளைதுள்ளித்துடித்
தோடாதபுனமெங்குமோடிக்குறப்பெண்களுறைகுன்றிலோர்
மாடாயுநின்றங்கொர்மரமாயுநின்றேமறைந்தானரோ. (௧௧)

அந்தாபதன்சொற்றசாபத்தினனெந்தகங்குன்றியே
முந்தாயிரங்கோசநெடுமாமரந்தூங்குமுதுவாவல்போ
னந்தாதுடம்பெங்குநாலப்பழிப்பெய்திநாகாதிபன்
மந்தாரநிழலூடிருந்தாலும்வெந்தாபமாறுதரோ. (௧௨)

மீளாதசிவபத்திசெய்கின்றமார்க்கண்டன்மேலுங்கொடுங்
கோளானதைச்சென்றிழைப்பித்துமேனுளோர்கூற்றின்கணே
மூளாவெழுந்தீமுகத்திற்பிறப்பித்துமுக்கண்ணனோர்
தாளாலுதைப்பித்துவீழ்வித்தவன்செந்தழற்கோபனே. (௧௩)

துண்ணென்றகொடியோர்கொடுஞ்செய்கைபற்றித்துடித்த ல்லவோ,மண்ணென்றுமிதியாமலவ்வெப்பினுக்கோர்மருந்துண் டுமே,கண்ணென்றுறங்காமலிமையாமன்முன்னங்கலந்தேறுமே ல்,விண்ணின்றுமிழியாமலிப்போதும்வானோர்விழிக்கின்றதே.

இத்தன்மைமுத்தேவர்முதல்வானுளோர்செய்கையென்றோதி யே, யத்தன்மன்முடிதாழமப்போதுகோமானடிப்போதிலே மெய்த்தன்வணக்கஞ்செய்திப்பாதலத்துள்ளவினைகேளனச் சித்தந்தனிச்செல்லும்வகையோர்சுசீலன்றெரித்தோதினன்(௧௫)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஐயகேணெடியபாதலத்தினுமடுத்தமோகனவணையால்
வெய்யகோபனெடுகாமனதியர்விளைத்தவெவ்வழல்வெதுப்பவே
பையராவரசுகண்சிவந்துநெடுமூச்செறிந்ததிபயம்பிடித்
துய்யுமாறரிதெனப்பதுங்கினனிவ்வுலகமுச்சியினுறுத்தவே(௧௬

கொடுவிடத்தினுமனவர்செயற்கொடுமைகொடுமையென் றறிஞர்குழுவெலா,நடுவுரைக்குமதுபொய்க்குமோவழலுநஞ்சுயி ர்த்தபலநாகரும், படுகொலைப்பதகருக்கயர்ந்தரிகொள்பாயலீச னணிபணிவளைத்,திடுவதற்குரியசாபநாண்பிறவுமென்னலாகிய வியற்கையால். (௧௭)

கெட்டபாதகர்கண்மோகனதியர்கிளர்ந்துபூமிகிடுகிடெனவே
துட்டபாவவினைசெய்தவெம்மையதிபாரமாய்முடிசுமந்திடு
மட்டமாசுணமுமற்றைவாளரவுமாதிசேடனுமயர்ந்துதாம்
பட்டபாடதுபொறுமையாலிவைபகர்ந்ததென்றுசிலபன்னினன்

அருடரித்ததுரியோதனதியரிலன்புறுந்திருதராட்டிரக்,குரு டனைத்தகடுமானதன்பிரவிருத்தியாலுதவுகொடியராந், திருட ருக்கினியொளித்துவாழ்வதொருதேயமெங்ஙனெடும்பகைக்,க ருடனுக்குமுயிருய்பலாகுமெதிர்கண்ணுறுவிடனிலென்பரால்.()

பாமரத்திமிரபானுவன்னநிருபகனிருக்கவுமெவ்வுலகினுங், காமனுக்குவலிகைம்மிகுந்ததெனகாலமென்பரதிகோபன்வன், றீமையைப்பொறையடர்த்திலாததெனசெய்கையென்பர்வலிசிந்திடத்,தாமதித்ததெனகந்தைகேள்வனெயொர்சாந்திதன்கணவனென்பரால். (உ௦)

ஊடுபுக்குலகைவவ்வுமச்சரனொருக்குமக்ரமமொருத்தர்சந்தோடனுக்குரைசெய்வாருமில்லைகொல்சுடும்புலைத்தொழிலிடம்பனும்,வேடனிற்கொடியன்வஞ்சமுட்டெளியர்வினவுறூர்கொலவிரோதனூர்,மூடமுற்றவயிரன்கெடும்படிமுயன்றிடார்கொலெனமொழிவரால். (உக)

தகவுடைத்திறல்விவேகர்கோனைமிகுதறுகண்மோகனொருதாமதன்,மகளைவிட்டறமயக்கியோசுமதிமாதைவிட்டகலமாற்றியோ விகழ்வதற்கரியபருதிபோலவனிருந்துமூடுபனியென்னவாம் [ல் பகையகற்றும்வகைசிந்தியாததெனபாவமென்றுமிவைபகர்வரா

இன்னவண்ணமொருகோடிகோடியுளவின்னமின்னமவர்யாவருஞ், சொன்னவண்ணமெனவமிர்தசிலனிதுசொல்லநோக்கியொருசுமதிமான்,முன்னவன்றன்மணிமுடிதுளக்கியிளமூரல்செய்தளவின்முடிகவிழ்ந், தன்னவண்ணலெதிர்மெய்யன்வந்தியமலோகவன்மைசொல்வதாயினன். (உ௩)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

காலனுங்கோடிகோடிகாலதூதுவரும்வேலை
ஞாலமுந்திசைகளெட்டுநஞ்செனப்படர்ந்துதாவிச்
சாலவுங்கொடியராகித்தழற்பொறிவிழிகள்சிந்த
நீலமாமுகில்கள்போலநெஞ்சமுங்கரியராகி. (உ௪)

புண்ணியம்புரிந்தோர்சென்றுபுகுதுமச்சுவர்க்கவாசற்
றிண்ணியபொற்கபாடஞ்சிக்குறச்சேமஞ்செய்தே
யெண்ணியசிலர்வந்துற்றுலிடையிடைதிறந்துவிட்டு
நண்ணியசெம்பொற்கோயினவமணிப்பீடமேற்றி. (உரு)

இளமையிலோடியாடுமியக்கத்திலோதிக்கற்கு
மளவையிலெவ்வனத்திலரிவையரின்பமுற்றும்
விளைவினிற்பிறிதிலின்னவேளையென்றின்றிநென்ன
லுளனிலனின்றைக்கென்றிவ்வுலகதிசயிக்கச்செய்தே. (உசு)

பெண்ணிலாணுருவின்மற்றெப்பிறப்பிலென்றாலுங்காயத்
துண்ணிலாதாவிவாங்கியுடல்பிறிதொன்றினேற்றி
யெண்ணிலாச்சீவகோடியெவற்றையுங்கருணைகூருங்
கண்ணிலானேவலாலக்கடியமாநரகில்வீழ்த்தே. (உஎ)

கொடியவெம்பாவத்தோரைக்கூறுகூறாகவாள்கொண்
டடிமுதன்முடியீறாகவரிந்துமாரழலிலிட்டுங்
கடியபாம்பட்டைசெந்தேள்கைம்மிகுங்குழியிற்சேர்த்து
மிடியெனத்தழலிற்காயுமிருப்புத்தூணேடுசேர்த்தும். (உஅ)

இவ்வகையனந்தங்கோடியெண்ணிலாநரகிற்றுன்ப
மவ்வகையுழக்குமாந்தரளவெடுத்துரைக்கவென்னிற்
பவ்வநுண்மணலும்போதாப்பாவியர்பதைக்குந்தோறு
முய்வகைசெய்திலோமென்றென்றலாதினையசொன்னார். (உகூ)

வேறு.

பெண்டீர்மக்கள்கிளைஞரிவர்பின்னுக்குதவியென்றெண்ணிக்
கண்டீரறத்தைவிட்டவராற்கடன்பட்டிறுத்தோமென்பர்சில
ருண்டீருடுத்தீர்சுற்றத்தீருற்றவேளைக்கொருவரும்வந்
தண்டீரந்தோவும்மைநம்பியானதிதுவோவென்பர்சிலர். (௩௦)

மாறுபாடாய்க்கொடுஞ்சாருவாகப்பாவிமறங்கூறி
வேறுலோகமில்லையென்றான்வினவிக்கெட்டோமென்பர்சிலர்
நீறுகோபிதிருநாமநெற்றிக்கணியாநெடுஞ்சமணர்
தேறுநூலின்வழிபுகுந்துதிகைத்தோமென்றுசிலர்சொல்வார். ()

கணத்திற்கணத்திற்பிறந்திறுமெக்காயங்களுமற்றவைக்குண்டோ
புணர்க்கும்பவமுநரகுமென்றுபுத்தன்கெடுத்தானென்பர்சில [ற்
ருணர்ச்சிதருநல்விவேகணையுமூலைத்தசொடும்பாதகர்க்குமெம்பா
பணித்தகன்மக்கொடும்பாவம்பலிக்கவென்றுபலர்சொல்வார்.

தேடிப்பொருளைச்சிறுதொழிற்கேசெலுத்தியுணர்ச்சிதெரியாம
ற்,பாடிப்பதருக்கிறைத்ததெல்லாம்பலித்ததெமக்கீங்கென்பர்சி
லர்,கேடிப்படிவந்தெமைச்சூழக்கெடுத்தபாவியுலகிலின்ன
நாடிப்பிறக்கவிடினுமங்ஙனுடோமென்றுசிலர்சொல்வார்.(௩௩)

என்றுமிறவோமென்றிருந்தோமிறந்துபடுவதீதறிந்தா,லன்றுப
டைத்தபொருளையன்றேயருள்வோமறையோர்க்கென்பர்சிலர்
சென்றுவரவாங்கெம்மையின்னஞ்செலுத்திற்புதைத்ததிரவியத்
தை,யொன்றுமொழியாதறம்புரிந்திங்கோடிவருவோமென்பர்சி
லர். (௩௪)

பிறந்தவுடனே துறந்துசுத்தப்பிரமமுணர்ந்துபிறப்பதனை
மறந்திந்நரகத்தெய்தாமைவருமோநமக்குமென்பர்சில
ரிறந்துநிரையத்தழுந்தியிடரிவ்வாறுழப்பதறியாமற்
சிறந்தவிவேகர்பெருமான்றன்செயலைத்தவிர்ந்தோமென்பர்சிலர்

இவ்வாறிவ்வாறருநரகத்திடையுற்றோர்களெடுத்தோது,மவ்
வாய்மொழியும்படுந்துயருமாரேமொழியவலரென்ற,மெய்வாச
கன்சொற்செவிவெதுப்பவினவுமெல்லைமேதினியோ,ரொவ்வாவி
யற்கைபுகுந்துணர்ந்தவிசாரன்பணிந்தீதுரைசெய்தான். (௩௬)

## கலி நிலைத்துறை.

நின்றாய்வழிக்குட்புகுந்தங்கவர்க்கஞ்சிநீர்ச்சாதியோ [க்
டொன்றாயொரோடைக்குண்மூழ்குஞ்சௌபரிதன்னையுள்ளூடுற
குன்றாதமயலைக்கொளுத்திக்கரைக்கேகொணர்ந்தப்புறந்
தன்றாய்வழிச்செய்கைபுகுதச்செய்தானன்னதறுகண்ணனே. ()

தாமச்சமதுவின்றிநட்டாற்றிலோடந்தனித்தேறியே
மாமச்சகந்திக்கொர்பெரியோரிதஞ்சொல்லிமணமெய்துவித்
தாமச்சரீரத்திலணையப்புணர்ப்பித்தறக்கேடுசூழ்
காமச்சளன்செய்தகன்மத்தையென்னென்றுகைக்கொள்வதே.

மேலானமறைதேர்வியாசன்றனைச்செய்யும்வினையின்னதீ
தேலாததென்றுதுவிதவாகமனமென்றுமெண்ணாமலே,சூலாகவி
ளைஞோர்கள்பெண்டிர்பெருங்கொங்கைதோய்வித்தவைவங்,கோ
லாண்டத்துங்கொடுங்கோலையார்கண்டுகூசார்களே. (௩௯)

அறவுங்கொடுந்தீமையவர்செய்தலாற்றாமையாலல்லவோ
வுறவுந்தம்மனையுந்தம்மூருந்தம்வளநாடுமுறுசெல்வமும்
பிறவுந்தவிர்ந்தன்னபிரவிர்த்திவிட்டுற்றபெரியோர்களுந்
துறவின்கண்வந்தூர்தொறும்போயிடும்பிச்சைதுய்க்கின்றதே.()

அஞ்சாக்கொடும்புல்லரழலுக்கிவ்வழல்சீதமாமென்னவே
பஞ்சாக்கினிக்குட்பயின்றோருமப்புன்மைபாராமலே
துஞ்சாத்தடங்கண்முகிழ்த்தாரும்வெளியூடுதோன்றாமலே
யெஞ்சாப்புனல்புக்கொளித்தாருமுளர்நம்மினத்தோர்களே. ()

பிழையோடுபயில்வோர்பெருந்தீமைதமையும்பிடித்தேறுமென்
றுழையோடுகானத்தினூடோடினார்கள்சிலருள்ளஞ்சியே
மழையோடுமலையின்புறத்தோடினார்கள்சிலர்மலைபுக்குமம்[ளே.
முழையோடினார்கள்சிலரோடாததிசையெங்ஙன்முனிவோர்க

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வேதியர்கருமம்யாவும்விலங்கியக்கருமமற்றைச்
சாதியர்புரிவதாகித்தாழ்ந்தவர்க்குயர்ந்தோர்பின்சென்
றாதியம்பெறுதற்குன்னியுடன்படவணக்கஞ்செய்து
சோதிடமேலோர்கேட்பச்சொல்லுவர்கடையராகி. (சங)

ஆலயமகரம்பொன்றியரிசிவபத்தியின்றிச்
சாலைநந்தவனம்யாவுந்தகர்ந்துறக்கருமந்தாழ்ந்து
சீலநல்லொழுக்கங்குன்றிச்செய்திடாக்கருமஞ்செய்து
மாலுறுமாதர்தங்கண்முயக்கமேமயக்கமாகி. (சச)

காரணமின்றியேயுங்கடுஞ்சமர்விளைந்துமேன்மை
சீரணித்தில்லந்தோறுங்கீழ்மையேசெறிந்துமுன்சொ
லாரணநெறிகண்மாற்றியறமுறுநெறியிற்சென்று
தாரணிவழக்கமெல்லாந்தலைதடுமாறிற்றம்மா. (சரு)

எவ்வழிச்செல்கின்றாருமித்தகையணையரல்லாற்
செவ்வழிப்படர்கின்றாருஞ்சிற்சிலருளரென்றாலும்
வெவ்வழிக்கொடியர்தீங்குவிளைப்பரென்றஞ்சியன்னா
ரவ்வழிச்சார்ந்ததன்மையறிவரிதெனக்குமன்றே. (சசு)

பின்னருமனையமோகப்பிரளயமிறுத்தல்செய்யாத்
துன்னருந்தலங்கடெண்ணீர்த்தூயநன்னதிகண்மேன்மை
பன்னருங்கிரிகள்வண்டுபயின்மலர்வனங்களார்க்கு
முன்னருமனையர்தீமையொழிப்பவுஞ்சிலவுண்டென்றான். (சஎ)

என்றவனுரைத்தலோடுமியலறிவிவேகர்கோமா
னன்றறிவிசாரன்றன்னைநயந்தனனோக்கியன்னார்
புன்றொழிலின்னுஞ்செல்லாப்புண்ணியத்தலமுமாறுங்
குன்றமும்வனமும்யாவுங்கூறெனக்கூறலுற்றான். (சஅ)

## சிவத்திருப்பதிகள்.

### ஷை வேறு.

வள்ளறில்லைவேட்களநெல்வாயில்கழிப்பாலைமணமயேந்திரப்
பள்ளிமுல்லைவாயில்கலிக்காமூர்சாய்க்காடுபல்லவனீச்சரம்பூங்
கள்ளலர்சேர்வெண்காடுதிருக்காட்டுப்பள்ளிகுருகாவூர்காழி
புள்ளிருக்குவேளூர்கோலக்காக்கண்ணார்கோயில்புன்கூர்நீடூர்.

இறப்பில்கடைநின் றியூர்வேள்விக்குடியன்னியூரெதிர்கொள்
பாடி, குறுக்கைகருப்பறியன்மணஞ்சேரிகுரக்குக்காவாழ்கோ
ளிபுத்தூ, ருறைத்தமண்ணிப்படிக்கரையோமாம்புலியூர்திருநா
ரையூர்கடம்பூர், கறுத்தகண்டன்காருட்டுமுள்ளூர்பந்தணநல்
லூர்கஞ்சனூரே. (ருo)

பயில்கோடிகாப்பனந்தாண்மங்கலக்குடியாப்பாடிசேய்ஞல்
வியலூர்தேவன்குடியின்னம்பர்கொட்டையூர்வைகாவிசையமங்
கை,துயர்தீரும்புறம்பயநற்பழனம்வடகுரங்காடுதுறையேயையா
றயர்வாறுநெய்த்தானம்பெரும்புலியூர்மழபாடியன்பில்கானூர்.

திருப்பழூவூர்மாந்துறைபாற்றுறையானைக்காப்பாச்சிலாச்சி
ராமம்,விரைத்தடஞ்சூழ்பைஞ்ஞீலியீங்கோய்மாமலையிவைகாவி
ரிவடக்குக்,கரைப்பதிகளறுபத்துமூன்றுமிப்பாற்கடம்பந்துறை
வாட்போக்கி,யிருத்துபுகழ்க்கற்குடிபராய்த்துறைதென்மூக்கீச
மெறும்பியூரே. (ருஉ)

பழுதில்சிராப்பள்ளிநெடுங்களந்திருமேலக்காட்டுப்பள்ளியா
லம், பொழிறிருப்பூந்துருத்திகண்டியூர் திருச்சோற்றுத்துறை
தென்புள்ளமங்கை, கழறுசக்கரப்பள்ளிதென்குடித்திட்டைவே
திகுடிகருகாவூர்சீர்,தழுவுபாலைத்துறையாவூர்ப்பசுப தீசநல்லூர்
சத்திமுற்றம். (ருஙா)

தாணுவுறைபட்டீசம்வலஞ்சுழியேயாறைவடதளியேகும்ப
கோணமதிற்கீழ்க்கோட்டங்காரோணமிடைமருதூர்குளிர்நாகீ
சம்,வாணிபுகழ்குரங்காடுதுறைநீலக்குடிவைகன்மாடக்கோயில்
பூணுநல்லங்கோழம்பமாவடுதண்டுறைதுருத்திபுகழ்மாயூரம். ()

திருவழுந்தூர்விளநகரந்திருப்பறியனனிபள்ளிசெம்பொன்
பள்ளி, யுரைசெய்வலம்புரந்தலைச்சங்காடாக்கூர் கடவூரவ்வூர்ம
யான,மருவியவேட்டக்குடிநற்றெளிச்சேரி தருமபுரம்வளர்நள்
ளாறு,விரைகமழ்கோட்டாறம்பர்ப்பெருங்கோயின்மாகாளமீய
ச்சூரே. (ருரு)

குறைவிலிளங்கோயிறிலதைப்பதிபாம்புரமொர்சிறுகுடியே
யின்பந்,துறுமிழலைவன்னியூர்கருவிலிநற்பேணுபெருந்துறையே
நீலக்,கறைமிடற்றனுறைநறையூர்ச்சித்தீசமரிசினதிக்கரையிற்பு
த்தூர், மறுவில்சிவபுரங்கலயநல்லூர்நற்கருக்குடிதென்வாஞ்சி
மூதூர். (ருசா)

நன்னிலத்துப்பெருங்கோயிறுக்கொண்டீச்சரம்பனையூர்ந
வில்வீரட்ட,மென்னுமவ்விற்குடிபுகலூர்வர்த்தமானீச்சரமேறே
றுமெங்கை,தன்னதிராமனதீச்சரம்பயற்றூர்செங்காடுசாத்தமங்
கை,கின்னரஞ்சேர்மருகனுகைக்காரோணஞ்சிக்கல்கீழ்வேளூரே

திருவளர்தேவூர்பள்ளிமுக்கூடறிருவாரூர்திருவாரூரி
லரனெறிமின்பரவையுண்மண்டளிவிளமர்கரவீரந்தலையாலங்கா
டுரைசெய்பெருவேளூர்நற்குடவாயில்சேறைநாலூர்மயான [ரே
மிரைசெய்கடுவாய்க்கரைப்புத்தூரொடிரும்பூளையவளிவணல்லூ

பருதிநியமம்மரதைப்பெரும்பாழிபூவனூர்பகரும்வெண்ணி
தரைபுகழ்பாதாளீசந்திருக்களர்சிற்றேமமுசாத்தானந்தேவர்
துருவிடும்பாவனங்கோட்டூர் கடிக்குளநீணெறிதிருவெண்டுறை
யேதெங்கூர்,நிருமலர்கொள்ளம்பூதூர்பேரெயில்கொள்ளிக்காடு
நெல்லிக்காவே. (௫௯)

கலியகலுநாட்டியத்தான்குடிதிருக்காறுயிறுக்கன்றுப்பூர்
தென்,வலிவலங்கைச்சினம்வாய்மூர்கோளிலிதென்மறைக்காடும
ங்கைபாக, ரிலககத்தியான்பள்ளிகோடிபொன்னித்தென்கரை
நூற்றிருபத்தேழாந், தொலைவில்பதியிவையாகச்சோணுட்டுத்த
லநூற்றுத்தொண்ணூறுமே. (௬0)

திருக்கோணமாமலைகேதீச்சரமீழத்திரண்டாஞ்செப்பிலிப்பா
லருட்கூடலாப்பனூர்பரங்குன்றேடகங்கொடுங்குன்றமலன்புத்
தூர், கருப்பாறும்புனவாயிலிராமீசமாடானைகானப்பேர்தா
பரப்பூவணஞ்சுழியனெல்லைகுற்றுலம்பாண்டிபதினாலூரே. (௬௧)

மொழியுமலைநாட்டிலஞ்சைக்களமொன்றேயவிநாசிமுருகன்
பூண்டி,குழகர்நணுக்கொடிமாடச்செங்குன்றூர்வெஞ்சமாக்கூட
னீடேர், பழுதில்கொடுமுடிகருவூர்கொங்கிலிவையேழாகும்பதிக
ளிப்பா,லழிவில்புகழரத்துறைதூங்கானைமாடந்திருக்கூடலையாற்
றூரே. (௬௨)

சீரெருக்கத்தம்புலியூர்திணைநகர்சோபுரமதிகைசிறந்தநாவ,லூ
ர்விருத்தகிரிநெல்வெண்ணெய்கோவலூரறையணிநல்லூர்சோலை
த்தேன், மாரிகக்குமிடையாறுவெண்ணெய்நல்லூர்துறையூர்தெ
ன்வடுகூரோங்கும், பார்துதிக்குமாணிகுழிகடைஞாழன்முண்டீ
சம் பனங்காட்டூரே. (௬௩)

இயலாமாத்தூரருணையிவைமகதத்திருபத்திரண்டேரிப்பாற்
றயவாளரேகம்பமொண்காந்தன்றளியுமேற்றளியினோடும்
வியனுமனேகதங்காவதநெறிக்காரைக்காடுவேதகீதம் [டுரே
பயில்வீதிக்குரங்கணின்முட்டந்திருமாகறலோத்தூர்பனங்காட்

கூடும்வல்லமாற்பேறிலம்பயங்கோட்டூருறல்விற்கோலமாலங்
காடுதிருப்பாசூர்வெண்பாக்கமுயர்காளத்திகள்ளிலொற்றி, யா
டல்வலிதாயமுல்லைவாயில்வேற்காடுமயிலாப்பூர்வான்மி, நீடுகச்
சூரிடைச்சுரந்தென்கழுக்குன்றச்சிறுபாக்கநிகழ்த்திற்பின்னும்.

வக்கரைநல்லரைசிலிதொல்லிரும்பைமாகாளமிவைவழுவின்
மேலோர்,தொக்கதொண்டைமண்டலத்தின் மெய்த்தலமுப்பத்
திரண்டாந்துளுவநாட்டிற், றிக்குயர்கோகருணமொன்றாஞ்சீசயி
லநீலகிரிதிருக்கேதாரந், தக்கவனேகதங்காவதங்கயிலைவடக்கி
வையைந்தலங்களாமே. (௬௬)

ஈண்டுபுகழ்ச்சோணாட்டிலொருநூற்றுத்தொண்ணூறீழத்திர
ண்டு,பாண்டியிலீரேழ்மலைநாட்டொன்றுகொங்கேழ்மகதமிருப
த்திரண்டு, பூண்டதொண்டைநாட்டின்முப்பத்திரண்டுதுளுவொ
ன்றுவடபுலத்தைந்தாக, வாண்டசிவத்தலமிருநூற்றெழுபத்து
நான்குதொகையாகுமன்றே. (௬௭)

## ௰ வைப்புப்பதிகள்.

எழுமூர்கொல்லிக்குளிரறைப்பள்ளிபேராவூரேழூர்தோழூ
ரழகூர்வீரட்டமேமப்பேறுதக்களூரளப்பூர்கச்சிப்,பழையார்ந
ற்பலதளிகாம்பீலியேரிடவைகுறும்பலவுவெங்கூர்,குழையூர்
கொங்கணம்பிரம்பிலேலமகூடந்தஞ்சைகொடுங்கோளூரே. (௬௮)

கஞ்சாறுகுன்றியூர்முழையூர்விராடபுரங்கண்ணைகாட்டூ
ருஞ்சேனைமாகாளமேமநல்லூர்பொதியின்மலையுருத்ரகோடி
பஞ்சாக்கைநியமநல்லூர்விளத்தொட்டிகுமரியறப்பள்ளிபேரூ
ர், விஞ்சாலகண்டர்கடைமுடிகருகற்குரனகரம்வெற்றியூரே.()

கொங்கசோகந்திரிசோமீசமயிண்டீச்சரமாகோணஞ்சூல
மங்கைகோட்டுக்காடுமந்தானமந்தாரம்வாரணாசி
பொங்குதீம்புனலூற்றத்தூர்நாங்கூர்வாதவூர்பொய்கைநல்லூ
ரங்கணமாட்டூர்கொழுநன்மற்குன்றநெற்குன்றமத்தியூரே.(௭௰)

இடாிலிடைப்பள்ளியெச்சிலிளமர்புலிவலமுறையூரிறையான் சேரி,படம்பக்கங்குணவாயில்பூழியூர்கூந்தலூர்பட்டிகுத்தங், குடியத்தங்குடிகுருந்தங்குடிதிருவண்குடிசாலைக்குடிவேதீசம்,பிடவைகுரக்குத்தளி தென்னிறைக்காட்டூர்நிறைக்காட்டூர்பிறைக்காட்டூரே. (எக)

## விஷ்ணுத் திருப்பதிகள்.

திருவரங்கமுறந்தைமுட்டந்தஞ்சைவம்புலாஞ்சோலைதிகழுமன்பி,லொருகரம்பைவெள்ளறைபுள்ளம்பூதங்குடியாதனூர்திருப்பேர்,மருவழுந்தூர்சிறுபுலியூர்சேறைதலைச்சங்கநாண்மதியம்வாலி,பொருவிறிருக்குடந்தைகண்டியூர்விண்ணகரங்கண்ணபுரமூதூரே. (எஉ)

நாகைகண்ணங்குடிநந்திபுரவிண்ணகரம்புருடைநறையூர்பின்னுஞ்,சேகறுநற்சீகாழிச்சீராமவிண்ணகரஞ்சித்ரகூட,மாகவித்தலங்கண்ணமங்கையுடனுங்கைமணிமாடக்கோயில்,பூகமலிதிருத்தெற்றியம்பலம்வெள்ளியங்குடிசெம்பொன்செய்கோயில். (எங

கண்ணனுறைமணிக்கூடங்கருணையரிமேயவிண்ணகரம்வைகுந்தவிண்ணகரந்தேவனூர்தொகைகாவளம்பாடிவெள்ளக்குளஞ்சீர்,நண்ணியபார்த்தன்பள்ளிவண்டுவரைதிருப்பாவநாசமென்னப், பண்ணமருஞ்சோணாட்டிற்றிருப்பதிகளிவையொருநாற்பத்துமூன்றே. (எச)

பொருவரியசோலைமலைகூடன்மெய்யங்கோட்டியூர்புகழ்புல்லாணி,யொருதிருத்தண்கான்மோகூர்வில்லிபுத்தூர்குறுங்கைகுருகூரேபின்னு,மருவுதொலைவில்லிமங்கலத்தொடுசீவரமங்கைவளர்தென்பேரை,திருவைகுந்தம்புளிங்குடிதென்குளந்தைவரகுணமங்கைதிருக்கோளூரே. (எரு)

புரைதீர்பாண்டியிற்பதினெட்டிப்பாற்கேரளத்தனந்தபுரஞ்சீரார்வண், பரிசாரங்காட்கரையொர்குட்டநாட்டுப்புலியூர்பகர்செங்குன்றூர், திருமூழிக்களநாவாய்வல்லவாழ்வாட்டாறுதிருவண்வண்டூர்,மருவாறன்விளைகடித்தானந்திருவிற்றுவக்கோடிவ்வகைபன்மூன்றே. (எசு)

தூயகச்சியூரகம்பாடகம்வெஃகாநிலாத்திங்கட்டுண்டமத்திமேயபரமேசுரவிண்ணகரமோடயிந்த்ரபுரம்வியன்வேளுக்கைமாயர்கடிநகரங்காரகங்கள்வனூர்திருக்கார்வானமெவ்வுணேயரட்டபுயங்கமொடுநீர்மலைநீரகமொர்திருநின்றவூரே.(எஎ)

கடன்மல்லைதிருவல்லிக்கேணி புட்குழிநகரங்கடிகையெங்கோ னிடவெந்தைவேங்கடமாமலை தொண்டைநாட்டிவையோரெண் மூன்றப்பால், வடசிங்கவேள்குன்றயோத்திநைமிசாரணியமது ரைகீர்த்தி, படர்கங்கைக்கரைக்கண்டம்பதரிகாச்சிரமமியற்பிரு தியூரே. (எஅ)

தண்டுழாய்வனஞ்சாளக்கிராமமாய்ப்பாடிவைகுந்தம்பாலாழி பண்டையோர்புகழ்சோணாட்டுப் பதிநாற்பதின்மூன்றுபாண்டி மூவா, றண்டுசேர்மலைநாட்டிற்பன்மூன்றுதொண்டைநாட்டதனி லெண்மூன், றுண்டுமேல்வடக்கொருபன்னிரண்டாகத்திருப்பதி நூற்றெருருபதாமே. (எகூ)

இத்தகைப்புண்ணியத்தலங்களெண்ணிலவாலின்னமுமற்றிவை களெல்லா, மத்தனுஞ்செந்திருமாலுமங்கங்கேயுறைவிடமாமவ ற்றுட்பின்னு, மெய்த்தருமதீர்த்தமும்பற்பலவுளவாயினுமோக வேந்தன்றன்னுன்,மைத்தமழைக்கார்காலத்திரவிமதியுடுவினம் போல்வயங்குமென்றான். (அ௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அந்தவாசகமனைத்தையுந்திருவுளத்தடைத்தறிஞர்தம்பிரான்
கந்தமார்மலரலங்கலுறுமகுடந்துளக்கிமிகுகல்விசேர்
நந்தமாபடைஞர்தம்மையவ்வயினடத்துதும்மெனநயப்புறு
விந்தவாசகம்விசாரனுக்கெதிரெடுத்துளன்புடனியம்பினான். ()

சத்தமுற்றகடல்சுற்றநின்றதொருசக்ரவாளகிரியுட்படு,மெய்த் தரைக்குளதிமோகனுதியர்நம்மேவலார்படைஞர்யாவரு,மெத்த லத்திலவர்புக்குவைகினரதின்னதின்னதிவரிவர்களென்,றெத்து ரைத்தியெனவோடும்வந்துதொழுதுற்றதன்மையவனுரைசெய் தான். (அஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நாமனுகற்கியலாதவவித்தியாபுரத்தினிலோர்நவத்துவார,மா மனையிற்றுன்மதியும்பாஷண்டவிஞ்சையுமாமடவார்தம்பாற்,பா மரவெங்கலிசாருவாகனனுசாரன்காபாலிசூழக், கோமகனத்தி றன்மோகன்வீற்றிருந்தெவ்வுலகினுந்தன்கொடுங்கோலோச்சி.

ஆங்காரன்முதலோரையங்கங்கேயமைத்துலகமனைத்துந்தத் தம், பாங்கானசெயலியற்றும்படிபணித்தானவன்சொன்னபடி யேசெங்கைப்,பூங்காமன்றேவியொடும்புதல்வனெடுங்காஞ்சியுள் ளேபுகுந்தெப்போது,நீங்காமலிருந்துமெந்தநெடும்புவனத்தினு ந்தன்வெற்றிநிகழ்வித்தானல். (அச)

மமதைமடக்கொடிதாதைகவுடதேயத்துமவன்மகனுலோபன்
கமையினெடுங்கேரளத்தும்லோபனீன்றருளிடம்பன்காசியூடு
மமையுமதனென்பவன்கோதாவிரிதீரத்துமற்றையதன்மப்பாவி
தமரமிகுங்கடற்கரையிற்றலந்தொறுங்கோபன்யவனர்தனித்
தேயத்தும். (அசு)

மச்சரன்மராடத்துஞ்சந்தேகன்கொங்கணத்தும்வருசங்கற்பன்
குச்சரதேயத்துமிராசதனெடுதாமதனின்பங்குலவுபாண்டி [து
யிச்சைபெறுஞ்சோணாட்டுமியன்மானனெனன்பவன்பச்சிமதேயத்
நச்சுவயிரன்னெயினர்தேயத்துமனத்தன்கன்னடதேயத்தும். ()

இனையரவரவர்யாருமிப்படியோரோர்தலத்திலிருந்துந்தத்த
மனைவியொடுமக்களொடுமாறுமலெவ்வுலகும்வவ்விவெம்போர்
வினையிவருக்கிவரெனவேவேறுகூறிட்டுநமர்விலகத்தாக்கி
யனைவரும்வைகினரெனக்கேட்டவரவருக்கிவ்வார்த்தையரசன்
சொன்னன். (அஎ)

விவேகனெற்றுக்கேள்விச்சருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம்-ருசo.

---

## எ-வது, விவேகன்சேனைகரந்துறைசருக்கம்.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நிருபகனெடும்படைஞர்காஞ்சியுமவன்சுதனெடும்படைஞர்கோ
கருணதலமும்புகுதநல்லமிர்தசீலன்வகைகாசிபுகவும்
பொருவருமனந்தசயனந்தனில்விராகர்பதிபோதவுமலர்த்
திருமருவுபத்ரகிரியூடியலடக்கன்வலிசென்றிடவுமே. (க)

சத்தியனினம்பகிரதிக்கரைதொறும்பொறைதனக்குரியபேர்
மெய்த்ததொருசிந்துநதிதீரமுமடக்கவவிரோதன்வகைகா
ளத்திகிரிசேடகிரியாதிமலையிற்புகவுமத்தமனினஞ்
சுத்தமதிநாதமுதலெத்தலமுமத்திசைதொடர்ந்திடவுமே. (உ)

பூவிரவுநாசிகையுளேநிருவிகற்பனடல்புகவுமுயர்கோ
தாவிரிநதித்தலேமகிழ்ச்சிபதிதானைசிலசாரவுநெடுங் [யாங்
காவிரிவைகைக்கரைதென்மண்டலமெவற்றுண்மிளிர்கட்புனிதை
தேவிமகிழ்சத்துவன்விடும்படைஞர்சிற்சிலர்கள்சென்றிடவுமே.

சேதுமறையாரணியநாகைமுதலாமுவரிதீரமெவையு
மாதருமசேனைசிலவைகவுமொர்கங்கையொடுவாருதிகுலா
வோதரியசங்கமுதலாயதலமூடுரமனெண்படைஞர்தாம்
பேதமறவவ்வயினியங்கவுமெடுத்திவைபிறித்துரைசெய்தே. (ச)

மற்றையவருக்குமுயர்நற்றலமிவர்க்கிதெனவைகுதல்வகுத்
துற்றதிருவேடமெவருக்குமுணராவகையுபாயமுமிதற்
கிற்றெனவுரைத்தெவருநல்வழிபுகுந்தகையியற்றியடையார்
வெற்றியகனும்படிவிலக்குதிரெனுவினையவிண்டுரைசெய்தே.(ரு)

பின்னருநிருபகணேநோக்கியிருபத்தியர்கள்பேரருளுட, னின்
னருநெடுங்கிளைஞர்சிற்சிலரைநம்படைஞர்நிற்புழிதொறு,மின்ன
தலமெங்கணினுமோரொருவர்சாரர்தமையேவுதியெனுத்,தன்ன
ருகினீரெவருநிற்றிரெனநற்படைஞர்தம்மொடுசொன்னுன். (சு)

ஆவததுசெய்துமணேவோர்களுமியோகினியருட்டுணையினுற்
காவலநின்னேவன்முடிசூடினமெனத்தொழுதுகாஞ்சிநகர்வா
யேவினன்வியன்படைநிருபகனெடும்பொறையியம்புமொழியாற்
கோபனுறையும்பதியுளங்கவனினத்தர்விடைகொண்டுசெலவே.

ஒப்பரும்விராகன்விடவுற்றதனினத்தர்களுலோபனுறையு
மப்பதியினெய்தினரடுத்தசமனுந்தமனுமன்பினர்தமைச்
செப்பரியதாமிகறெறும்படைஞரிடைசெலுத்தினர்மதன்
மெய்ப்பதிபுகத்திறனடக்கனவனேவலரைவிட்டனனரோ. (அ)

வேறுமுளதெள்ளியருமவ்வவர்தமக்கெதிர்விரோதருறையுங்
கூறுபதிதோறும்விடுநற்படைஞர்மாறுருவுகொண்டறிஞருந்
தேறியுணர்தற்கரியராகிமிகமாசுபடர்செம்மணியுமே, னீறுபடர்
செந்தழலுமென்னமெய்மறைந்தணுகிநின்றனர்களால். (கூ)

தருமன்முதலோர்கள்வனவாசமெனவேதலைவர்தாமுறையவே
யுருமறைவுறும்படிவிராகன்முதலோர்கள்விடுமொண்படைஞர்
தம்,பெருமையுமொழுக்கமுமியற்கையுமறைத்தெளியபேதைய
ரையு,மருவுவர்வணங்குவரிணங்குவரடிக்கடிவழுத்துதல்செய்வார்

ஆடுமவரோடும்விளையாடுவர்மடந்தையரனேகருடனே
கூடுமவரோடுறவுகூடுவர்விழாவினியகோயில்குளமென்
றோடுமவரோடுமபலோடுவர்நகைப்பவரொடுந்நகைசெய்வார்
பாடுமவரோடுமியல்யாழினொடுமேழிசைகள்பாடுவர்களால்.(கக)

ஷை வேறு.

நிருபகனேவலர்புகுந்துநீணகர்க்காஞ்சியினவர்க்குநேயமாகி
யொருபொழுதும்பிரியாம னுயிர்க்குயிர்போற்சிற்சிலரோடுறவு

பூண்டு, பருவமுமற்றவரவர்தம்பண்புமுணர்ந்தியற்காமப்பயன் போதிக்குங், குருவெனவந்தவர்விரும்பிக்கேட்பதற்கின்னனவா ய்மைகூறினரால். (கஉ)

இருந்தராதலப்பரப்பிலிடுக்கண்மேலிடுக்கணெய்தியிமைப்பில் வீந்து,வருந்துமானுடப்பிறப்பின்மங்கைநல்லாரொடுமயங்கிமகி ழ்ந்துகோடல், பருந்தின்வாய்படுமரவம்பிடித்தமண்டூகங்கொள் சிறுபறவைசெந்தே,னருந்துமாறொப்பதனாலங்கதுசிற்றின்ப மெனலாயிற்றன்றே. (கங)

பொருவருநல்லின்பமியாததனினுமென்றூற்சுவர்க்கம்பொன் னாட்டின்க,ணரைதிரைமூப்பவையகன்றெந்நாளினுமெவ்வனமா கிநறுந்தேன்சிந்துஞ், சுரதருவினீழலின்மந்தானிலம்வந்தசைப்ப மணிச்சொன்னபீடத், தரமகளிர்செவ்விதழ்த்தேனனவரதந்தெ ள்ளமுதோடருந்தலாமே. (கச)

தாழ்வறுந்தம்பெண்டிரல்லாற்றையலார்பலர்முயக்கந்தவிர்ந்து தூய,வேழ்விவிரதாதியிவைபுரிதிரென்றூரணையமொழிவினவலோ டுஞ்,சூழ்வினையாங்கதின்முயன்றுசுத்தநதிபடிந்துதத்தஞ்சுகன்ம த்தோடும், வாழ்விடைவைகினரவரைக்கண்டுபாவனைசிலர்செய் வாருமானர். (கரு)

சிந்துநதிதீரமுற்றசெழும்பொறைத்தானையர்யவனதேயத்துள் ளோர், தந்தமியல்புரிந்தனையர்தம்மொடுநண்பாய்ச்சிலர்பாற்ற னித்தோர்சாரில்,வந்துபரிபாகமுணர்ந்திதுகாலமிடமிதென்றும தித்துக்கோபன், வெந்திறல்குன்றும்படிக்குவினையமுணர்ந்திவ் வாய்மைவிளம்பினரால். (கசு)

வலியோர்மேல்வரும்வெகுளிமறித்துடனேதமைக்கெடுக்கும் வறிதேகோப, மெலியோர்மேல்வரிலிகத்தில்வெம்பழியுமேனர கும்விளைக்குமல்லா, னலிவோர்தம்முவப்பினுக்குநகைக்குமெய் துங்கேடினியநட்புமாற்றும், புலியோகம்பசுவினம்போற்பல்கா மையதன்சினத்தின்பொருட்டாலன்றே. (கஎ)

அடிதாக்கக்கையேற்பாரேனுமவர்குற்றமுணர்ந்ததற்குத்தக்க படியாய்ச்செய்துறுகருமம்பழுதுபடாதியற்றுவதேபலமாய்க் கொண்டு, கடிதோச்சிமெல்லெனப்பூப்போலெறியுந்தன்மையர் க்கெக்காலுங்குன்றூ,நெடிதாக்கந்தருமிஃதியாநிகழ்த்தியதும்மி டத்தில்வைத்தநேயத்தென்றூர். (கஅ)

என்றலுமேயொக்குமொக்குமெமைக்கெடுத்ததுள்ளதுபண்
டெழுந்தசீற்ற,நன்றெனவேகருத்திலுன்னிவல்லரக்கர்போன்ற
வருநல்லராகிச், சென்றவிடத்தாற்செய்குற்றமுணர்ந்ததற்குத்த
க்கபடிசெலுத்தித்தாழ்ந்து,நின்றனராலாங்கவரைக்கண்டடங்கி
ப்பற்பலருநிற்பதானார். (௧௯)

தூயவிராகன்படைஞராயினர்கேரளத்தலங்கடோறுமுள்ளோர்
நேயம்வரப்பின்றொடர்ந்துநெஞ்சிரக்கஞ்சிற்சிலர்க்குநிகழ்வதாக
வேயவியாபாரமொன்றுபத்தாகப்பலிக்கினுமீதென்னலாப, மா
யபொருளொன்றனந்தகோடியாம்வாணிபநல்லறத்திலுண்டால்.

வாணாளோர்கணப்பொழுதுநிலையலவென்றறிந்துமலைவனங்க
டோறும்,வீணாகவலைந்துலைந்துமிகுதனமார்ச்சிப்பதுவேவிரதமா
கி,பூணாசைகாய்கனியாயுடுப்பதுமோர்முழத்துண்டாயுலகவாழ்
வுஞ்,சேணாடுபுகுவாழ்வுஞ்சிதைத்துநட்டம்பிறப்பித்தல்செய்கை
யன்றோ. (௨௧)

ஈட்டியநுந்திரவியத்தைப்பொன்காத்தபூதம்போலிருந்துகாக்க
மூட்டியசிந்தனையைவிட்டுத்தவந்தானந்தன்மத்தைமுடிவுறமற்
காட்டியமுதுண்டுடுத்துக்கலிதீர்ந்துவிண்மனைக்கபாடம்பண்டு
பூட்டியதுதிறந்ததனுட்பொன்னுலகநாயகராய்ப்புகுதிரென்றார்.

ஈனமிலார்மொழிந்தசெஞ்சொலினிதினிதென்றுட்கருதியெம்ம
னோர்க,ளானவர்தேடியபொருளுமவர்போனபோக்குமெங்கே
யதனாலன்ன,தானமுதலாயபலதானமும்யாஞ்செய்துமென்றுத
ருமநீதி,போனவழிபுரிந்தனரவ்வாறுகண்டோர்சிற்சிலரும்புரிவ
தானார். (௨௩)

கங்காசாகரசங்கமத்தில்விடுஞ்சமன்படைஞர்கவுடதேய,மங்கா
ருமாந்தர்தம்மோடடுத்தனையர்செய்தொழிலுமாற்றியன்னார், த
ங்காதறொடர்நண்பாய்த்தடுத்துமறுத்தெப்பொருளுஞ்சாற்றலா
கி,மங்காநல்லுபசாந்தம்வரச்சிலர்க்குள்ளாந்தரங்கமாற்றஞ்சொ
ன்னார். (௨௪)

அகங்கரிப்புவரிலெவர்க்குமறங்கெடுக்குங்கற்றகல்வியழிக்கு
முள்ளம், புகைந்தெழுப்புங்கனலைமிகப்புழுங்குவிக்கும்பிறரை
நகைபுகுத்துமார்க்குந், தகைந்துசுவர்க்கத்தினையுந்தடுக்குமகற்
றுஞ்சிறிதுதவஞ்செய்தாலுஞ், சுகந்தவிர்க்குமீளாநரகினுய்க்கு
மிதுநமர்க்குத்தூய்மையன்றே. (௨௫)

தக்கனியாகம்புரிந்ததலைநாளிலகங்கரித்துத்தனக்குமேலா,மு
க்கணனையிகழ்ந்தமையான்முடிபோயுமடுத்தவர்க்குமூக்குப்போ
யு,மிக்கதடக்கைபோயுமேனிகுழம்பிப்போயும்விழிபற்போயும்
புக்கதிசைதெரியாமற்புறம்போயும்பட்டதுயர்புதுமையன்றே.

ஆதலினாலக்குணத்தைவேரோடும்புறத்தகற்றினதுவேதூய
மாதவமும்பெருந்தனமும்வண்மையுந்திண்மையுமறிவும்வாழ்வு
ந்தேசு, மோதரியசுவர்க்கமும்வேறுறுபொருளுமென்றனரதொ
க்குமென்றே,காதலித்தார்சிலரவரைக்கண்டுசிலரவ்வியற்கைகை
க்கொண்டாரால். (௨௭)

காசிமீதுறுமமிர்தசீலன்விடும்படைஞரவர்கண்ணாய்நின்று
நேசியாதவரொடுநன்னேசமுற்றுங்கவரிடம்பனியமம்பூண்டு
மாசிலாவினம்போன்றுவஞ்சகங்கொணெஞ்சமவர்வாக்கிற்பல்
கப்,பேசியாரமுதமெனப்பின்சிலரையுட்களங்கம்பெயர்த்தல்செ
ய்வார். (௨௮)

இவ்வுலகோர்தம்மைவென்றுபொருள்கவர்தற்கிவரியற்றுமிடம்
பாசார, மவ்வுலகுஞ்சென்றிடுமோவென்றுநகும்பூதங்களைந்துமு
ள்ளே, கவ்வையுறுமுட்கவடுகண்டுநமன்றமருமரைக்கணத்திலா
வி, தெவ்வரெனக்கொடுபோயத்தீநரகில்விடுத்துமென்றுசிந்திப்
பாரால். (௨௯)

அகங்காட்டுந்தங்கபடமவரவருள்ளொளித்தாலுமடுத்தபேர்க்கு
முகங்காட்டுமல்லவெனின்மொழிகாட்டும்பிறர்நகைக்குமூரல்கா
ட்டுஞ், சுகங்காட்டுவதுபோன்றுதுக்கமிகப்பின்காட்டுந்தொழி
லாமாபோ, லிகங்காட்டுநமதியன்மேலெண்ணிலாநெடுந்துயருக்
கேதுவாமால். (௩௦)

கரதலாமலகம்போற்கருத்தியலும்புறத்தியல்போற்காட்டுவார்
க்கு,விரதமாதவம்பிறவும்வேண்டுமோவவர்புகுதாவீடுமுண்டோ
சரதமாமிதுவென்றாரென்றலுமீதுள்ளதென்றுதம்மிற்றாய,நிர
தராயினர்சிலர்பின்னுஞ்சிலராங்கவர்மொழியானெறியினின்றார்.

தனியடக்கருயர்கோதாவிரிதீரப்பத்திராசலத்தினெய்தி,மனிதர
வர்தமைப்போலமதவேடம்பூண்டுநண்பாய்மருவியனார்,வினவு
பருவங்குறித்துவேறுவேறிடத்தினிற்போய்மென்காய்முற்றிக்,க
னியவரும்பதமுணர்ந்து காந்தலாகியதெனச்சொற்கழறினாரால்.

கற்றறிவுகுலமேன்மைகருணைபெரும்புகழ்செல்வங்கைம்மாறெ
ண்ணு, துற்றுதவுங்கொடைசீர்மையொழுக்கமருந்தவநியமமுற
வின்கேண்மை,மற்றெதிரிலாத்திண்மைவாய்மைமிகுந்தூய்மைகு
ணம்வனப்பியாவும்,பெற்றிடினுமடக்கமில்லாப்பெருமிதத்தால
த்தனைக்கும்பிழையுண்டாமால். (௩௩)

இழிகுலத்தோராயினுந்தம்மியலடக்கமுயர்குலத்திலேற்றுந்தீய
பழியகற்றும்புகழ்பெருக்கும்பண்புநண்புமிகவிளைக்கும்பைம்
பொன்னாட்டின்,வழிபுகுத்துமென்றிணையபிறவுமிதமுறப்பகர்ந்
துமருந்தாற்பித்தர், கழிமதத்தையடக்குதல்போனற்குணஞ்சிற்
சிலர்க்குவரக்கற்பித்தாரால். (௩௪)

சோமநாதம்புகுந்ததமன்படைஞராயினர்தஞ்சொரூபமாற்றித்
தாமநாட்டுறைவோர்க்குத்தமர்போலவ்வியற்கைசெய்துதமக்கு
ள்ளாக்கி, யேமுறுதேம்பினியலடக்கற்கியன்றபடியியம்பிமா
னங்,காமுறுமெய்வணக்கமங்கணுள் ளார்சிலர்க்குவரக்காண்பித்
தாரால். (௩௫)

அந்தமராடம்புகுந்தசந்தோடன்கிளைஞரவரவர்க்குவாய்த்த,தந்
தமர்போலுடன்பழகித்தம்மொழிகேட்பதற் குரியசமயம்பார்த்
து,நந்தவமெவ்வளவுளதவ்வளவலதென்படினுமின்பநல்காதெ
ன்றே,வந்தபெருமச்சரத்தால்வருங்கேடுசிற்சிலர்க்குமாற்றினா
ரால். (௩௬)

நிருவிகற்பரவிரோதர்நிச்சயர்சத்துவர்வாய்மைநிகழ்த்துமெய்யர்
மருவுதற்குத்தகுந்தலத்தில்வைகிநெடுஞ்சங்கற்பர்வயிரர்பொய்
யர்,கருதரியசந்தேகரிராசதர்தாமதரிணையர்கண்ணுறுமற்[தார்.
பருவமுணர்ந்தவரவர்க்குப்பண்புமியலும்பிறிதாம்படிபோதித்

எந்நாட்டுமெத்தலத்துமற்றவருமவரவருக்கியன்றதேசெய்,தந்
நாட்டில்வாழ்வாருமவரவரைப்போல்வார்போன்றடுத்துவைகி
முன்னாட்டுஞ்சந்தனமாமுதுமரங்கள்பலகானின்முளைத்துவாய்த்
துப்,பின்னாட்டம்மணம்பிறவும்பெறச்செயல்போற்சிற்சிலரைப்
பேதஞ்செய்தார். (௩௮)

ஆயகாலையிலுலகிலங்கங்கேதவம்பொறைநல்லருளாசார,நேய
மாவிரதமன்புதானதன்மம்வாய்மைநெறிநியமம்யாவுந்,தூயகா
ன்மலைநதியின்றுறைநெடும்புண்ணியத்தலமித்தொடர்ச்சிதோறு
மேயசீரிருட்டறையினேற்றியதீபங்களைப்போலிலங்குமம்மா.

## கலிவிருத்தம்.

சாதிநன்மடந்தையர்தங்கள்கற்பொடு
வேதியர்கருமத்தின்விளைவும்பின்னரு
மோதியவருணத்திறெழுக்குந்தம்முறை
நீதியின்வழாமன்னர்நெறியினின்றவே. (௪0)

ஆயிடைவிவேகர்கோனவனியெங்கணும்
போயினநமர்செயல்புகுந்துநோக்கியே
நீயிவண்வருகெனநியாயனைச்செல
வேயினனவன்றெழுதிமைப்பினெய்தினன். (௪க)

வயினதேயன்னெடுவாயுவேகமும்
வியனுறுமதிமனோவேகமுந்தளர்ந்
தயர்வுறப்படர்ந்துலகனைத்துஞ்சிந்தையு
நயனமுங்களிப்புறநாடிக்கண்ணுற்றான். (௪உ)

கண்ணுறநோக்கியோர்கணத்துமீட்டும்வந்
தண்ணறன்செம்மலரடிவணங்கியே
தண்ணுறுதடமலர்த்தடக்கைகூப்பியிம்
மண்ணுறுபகைவலிவாட்டங்கூறுவான். (௪௩)

அரியரபத்தியினணங்கனார்கடாம்
புரியருட்டுணைகொடுபோயநந்தமர்
பரிவுறுமடியனேன்பார்த்தபோதினுந்
தெரிகிலர்பிறர்க்கவர்தெரியற்பாலரோ. (௪௪)

அனையவர்கண்ணுறாராயினுஞ்சிலர்
மனைதொறுங்காமநல்வழியிற்சென்றன
வினைசெயுங்கோபமுமிகைகண்டல்லது
நினைவிலெப்பொழுதினுநிகழ்ந்ததில்லையால். (௪௫)

அடர்ந்திடுலோபமுமறமுறுநெறி
நடந்திலதாந்தவஞாலமெங்கணும்
படர்ந்துமுள்ளடங்கியபாவைபோன்றது
திடந்தருமானமுஞ்சிலர்க்குமாய்ந்ததால். (௪௬)

பொங்கியதழலிடைப்புனலுற்றலென
மங்கியதகங்கரிப்பென்னும்வன்மையுந்
தங்கியமச்சரந்தானுமேன்மையோர்
வங்கிசந்தவிர்ந்துகீழ்மரபிற்சேர்ந்ததால். (௪எ)

திடம்பெறுமுணர்வுறச்சிலர்சிலர்க்கெலா
மிடம்பமவ்வவரைவிட்டீடுபட்டதா
லுடம்படுதருமமூலூர்தொறுஞ்சில
நடம்புரிகின்றதாலதன்மநாணவே. (சஅ)

கையுறத்தேற்றிடுங்கடத்துட்டோயம்போ
லையுறதெளிந்ததாலனேகருக்குளம்
பொய்யுறலொருபுறம்போயதோர்புற
மையுறு*பகைக்குளம்வயிரம்போயதால். (சகூ)

எய்த்துறுந்தாமதவிராசதங்கள்போய்ச்
சத்துவகுணஞ்சிலர் தமக்குவந்ததாற்
கைத்திடுஞ்சிலர்க்குச்சங்கற்பங்குன்றியே
மெய்த்திடும்படிநிருவிகற்பஞ்சேர்ந்ததால். (ருo)

அனத்தமுந்துக்கமுமனேகருக்கெலா
மனத்தகன்றனமழைவான்வழங்கின
வினைத்திறநந்தமர்வினைத்ததன்றியவ்
வினத்தவர்க்கவையெலாமியற்கையல்லவே. (ருக)

இடிநிகர்வஞ்சகரினிச்சின்னாளினின்
மடிகுவரென்பதற்கேதுமற்றிவை
முடிவுறுமலதுநின்முயற்சிதாழுமோ
படியினல்லறம்வெலும்பாவந்தோற்குமால். (ருஉ)

என்றிவைபுகன்றிடுமியனியாயனைத்
தன்றுணைக்கைகளாற்றழுவியின்னமுஞ்
சென்றவணிகழ்ந்தமைசெப்பென்றன்புறும்
வென்றிநல்லறிஞர்கோன்விடுத்தவேலைவாய். (ருங)

விவேகன் சேனைகரந்துறைசருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம் - நகூங.

## அ—வது, சத்துவச்சிரத்தை தூதுச்சருக்கம்.

—:*:—

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பின்னருமமைச்சர்யாரும்பிறிதுமோர்சூழ்ச்சியுன்னி
மன்னவன்வதனநோக்கிவன்பகைமுடித்தற்கையா
வின்னமோர்கருமம்யாங்களீங்குரைசெய்வதுண்டா
லன்னதும்பகரக்கேட்டுன்னகத்துறுநிகழ்ச்சிசொல்வாய். (க)

---

* பகைக்குமுன் எனவும் பாடம்.

கருமமற்றஃதியாதென்னிற்கடியமாமோகன்பண்டே
மருவுதுன்மதியையல்லான்மணந்துபாஷண்டவிஞ்சை
யரிவையையவள்வயிற்றிலஞ்ஞனென்றொருவன்றோன்றத்
தெரிவருமயக்கமெய்திச்செருக்கிவீற்றிருக்கின்றானல். (உ)

அந்தவெம்பகையையெல்லாமடக்குநின்னாற்றலேனு
மிந்திரன்முதலோர்தங்களிடர்கெடுத்தவுணராஞேர்
தந்திறன்முழுதுஞ்செற்றதயரதனிராமனென்றோர்
மைந்தனையின்றிராவன்பகைதீர்த்ததேபோல். (ந)

பைந்தொடிச்சுமதிக்குள்ளம்பண்புறச்செய்துன்றந்தை
தந்தையைவிடுதற்கேற்றசந்ததிபெறுதற்கன்பு
வந்துபநிடதமாதைமணஞ்செயவேண்டுமெங்கள்
சிந்தையீதென்றுபையச்செவியிடையுரைத்தார்மன்னே. (ச)

அவ்வுரைகேட்டலோடுமகமகிழ்ந்தரசர்கோமான்
செவ்விதுசெவ்விதென்னாத்திருமுடிதுளக்கியானு
மிவ்வகைசிந்தைசெய்தேனியம்பினீர்நீருமென்னா
மெய்வலியமைச்சர்தம்மைவேறுறவிருத்திமாதோ. (ரு)

பொருந்துமெல்லணையிலின்பப்பூவையுந்தானுமேவி
யிருந்துமற்றவளைநோக்கியென்னுயிர்க்குயிரும்வாழ்வுந்
திருந்துநல்லுறவுங்கண்ணுஞ்சிந்தையும்பிறவுமெல்லா
மருந்ததியனையாய்நீயேயலதுமற்றொருவர்யாரே. (சு)

ஆயினுஞ்சொல்லக்கூசியஞ்சுமேநெஞ்சநின்பா
லேயதோர்கருமமென்றானென்றலுமெழுந்துபோற்றி
நாயகநினதுவாய்மைநான்மறுத்திடவொன்றுண்டே
னேயமென்றுரைப்பதிந்தநீணிலத்தில்லையென்றாள். (எ)

பெண்ணியலதுசொலாமுன்பெருந்தகையவளைநோக்கிக்
கண்ணினுமினியராகிக்கரவிலாவுள்ளத்தோடு
மெண்ணியதளிப்பார்கண்ணுமிரவச்சமுறுவரிந்த
மண்ணியன்மாந்தரென்றான்வஞ்சிமற்றிதனைச்சொன்னாள். (அ)

இற்பிறப்புடையமாதர்யாதுரைசெயினுங்கேள்வன்
சொற்பணிபுரிந்துதெய்வந்தொழாதவற்றொழுதுபேணிப்
பிற்படநுகர்ந்துதுஞ்சிப்பிறர்பழிப்பகற்றிமுற்றுங்
கற்பினில்வழாதுநிற்றல்கடனவர்க்காகுமன்றே. (கூ)

அப்படியாதலானின்னருட்பணிபுரிதலன்றோ
வெப்படியுரைசெய்தாலுமென்கடனியற்றுமேவல்
செப்படியேனுக்கென்றாடேவியங்கவளைநோக்கி
மைப்படிகண்ணியீதென்மனத்துறுநிகழ்ச்சியென்றான். (க௦)

பகைவலிக்கொதுங்கிநின்றோம்பல்கியதனையர்சுற்ற
மிகைவலிகடத்தற்கேற்றவினையம்வேறில்லையுண்டோர்
வகையுபநிடதமாதைமணஞ்செய்வதற்குநின்னாற்
றகையிலையென்னின்மேன்மைச்சந்ததிப்பேறுண்டென்றான்.(கக

என்றலுஞ்சுமதியையவெண்ணியகருமநன்று
நன்றதுசெய்தியென்னாநயந்துடன்படுதலோடு
மன்றலங்குழலினாளைவனமுலைகுழையப்புல்லி
யன்றுவெம்பகையைவென்றானெனவுவகைபூத்தான். (க௨)

காவலனிடையூறின்றிக்கருமமுற்றுதற்குபாயம்
யாவதுவிடுப்பதாரையெனவிவைகருத்துளுன்னி
யாவதுசிந்தித்தப்பாலருகிவண்வருகவென்று
தாவில்சத்துவச்சிரத்தைதனையழைத்தினையசொன்னான். (க௩)

முன்னைநாணளனுக்காகமுயன்றியற்றமையந்திக்கோ
ரன்னமாகியபுள்ளெய்தியாங்குரைசெய்ததென்ன
வொன்னலாருணராவண்ணமுபநிடக்கன்னிமாலை
தன்னையான்புனையத்தூதுசாற்றுதிபோதியென்றான். (க௪)

அங்கவனதுசொலாமுனருளியற்சிரத்தைசெங்கைப்
பங்கயமுகிழ்த்துன்னேவற்பணிதலைக்கொண்டேன்வைய
மெங்கணும்படர்ந்ததெவ்வர்யான்படர்நெறியினெய்தி
வெங்கடும்புலிபோல்வெளவின்மீள்வதெவ்விதத்திலென்றாள். ()

அஞ்சனீயணங்கேயுண்டாலரிசிவபத்தியென்னுஞ்
செஞ்சொல்யோகினிகணம்பாற்றிருவருள்செய்யவல்லார்
தஞ்சமாமனையர்தம்பாற்சார்ந்துசெஞ்சரணம்போற்றிக்
கஞ்சன்மாமகள்பாற்செல்லுங்கருமமுங்கழறிமாதோ. (க௬)

கொடுந்திறன்மோகன்றன்னாற்குலைகுலைந்துலகும்யாமும்
படுந்துயரனைத்துங்கூறிப்பாவையரருட்கணோக்க
நெடுந்துணையாகக்கொண்டுநீயுபநிடதமாதி
னிடந்தனிலீங்கென்வேட்கைபாவையுமியம்பிமன்னோ. (க௭)

அன்னவளிசைவுபெற்றிங்கணுகுதிபோதியென்ன
மன்னவனுரைத்தலோடுமாதுமப்பணிமேற்கொண்டு
நன்னெறிபடார்ந்துசம்புநாரணர்பத்தியென்னச்
சொன்னயோகினிகள்கஞ்சத்துணைமலர்ச்சரணந்தாழ்ந்தாள். ()

௯ வேறு.

மேவியசத்துவன்மகளைமிகுந்திறல்யோகினிகளருள்விரும்பிநோக்கி,நீவிரைவினீங்குவந்ததென்கொலென்றுவினவாமுன்னெடியமோகப், பாவியகங்காரன்முதற்படைஞரொடெவ்வுலகுநஞ்சுபடார்ந்தாலென்னத், தாவியதீத்தொழிலியற்றுந்தன்மையினனன்மையெல்லாந்தவிர்ந்தவாறும். (௧௯)

தருமநிலைகுலைந்ததுவுஞ்சாந்தியொடுந்தாந்தியொடுஞ்சமதமத்தின்,பெருமைபொறையழிந்ததுவுந்தவந்தலைசாய்ந்தொதுங்கியதும்பேதுற்றுங்கே, நிருபகன்சந்தோடன்மற்றோர்நீங்கியதுநன்னெறிசென்னீதியோடுங்,கருணைமுதிதையுபேட்சைமயித்திரிமெய்தளர்ந்ததுவுங்கழறிப்பின்னும். (௨௦)

அறிஞர்பிரானக்கொடியோர்க்கஞ்சியொளித்திருப்பதற்கோரரண்வேறின்றி, யுறுகிளைஞரொடும்பதரிகாச்சிரமவனத்திடைவந்துற்றவாறு, மறுவினுபநிடதைமணவேட்கையினுற்றனைவிடுத்தவாறுந்தெவ்வர், செறினுமும்தருட்டுணைகொண்டேகுதியென்றனையனுரைசெய்தவாறும். (௨௧)

ஓதினளோதியமொழிகேட்டுருகியஞ்சலென்றுயர்யோகினிகளாகு, மாதருமவ்வுபநிடதைமன்னன்மணம்புணர்வதற்குமாமோகன்றன், றீதகலக்கிளைஞரொர்டுஞ்செகுப்பதற்கும்யாங்கடுணைசெய்துநங்காய்,போதியெமதருட்காவல்பூண்டென்றாரவர்சரணம்போற்றிச்சென்றாள். (௨௨)

நாமாதின்மகளிடத்திலறிஞர்பிரான்செலவிடுத்தநங்கைதீயகாமாதிப் படைவேலை கடந்திட யோகி னிகளருட்கலமேற்கொண்டு, போமாறுபடருநெறிப்புகுந்தமைசொற்றனமவித்யாபுரத்திலிப்பான்,மாமோகவேந்தனங்குமுயன்றமையுநிகழ்ந்தமையும்வருத்தல்செய்வாம். (௨௩)

சத்துவச்சிரத்தைதூதுச்சருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம்-௪௧௩.

## கூ-வ்து, மோகனெுற்றுக்கேள்விச்சருக்கம்.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சஞ்சலன்கபடிகலிகுதர்க்கன்மிகுசாருவாகனவகீர்த்திமா,வஞ்சகம்பெறுகபாலிகன்சபதன்மற்றுளோருமயல்சுற்றவே, துஞ்சல்கொண்டிரவு பகன்மு யங்கியொரு துன்மதித் தெரிவைசொன்னதே,நஞ்செனுங்கொடியமோகமன்னவனடத்திவைகுறுமந்நாளிலே. (க)

மற்றொர்நாளிலிகன்மைத்துனன்கலியைவருகவென்றருகழைத்துநம், பற்றலார்திசைமலங்கியோடினர்படிந்ததன்மையுமுடிந்தது, மிற்றைநாள்வரையிலொருவராயினுமெமக்குரைத்திலரதென்கொலோ,வுற்றகாரியமதின்னதென்றுணர்தியொற்றராலெனவிதுரைசெய்தான். (உ)

ஐயநீயிதுபணிக்குமுன்னுமுனதடியன்யானுலகனைத்தினும்,வெய்யதூதுவரையேவிவிட்டனன்வெதுப்புவித்தசிறுவித்துமே, வையமீதினின்முளைக்குமோவனையர்வன்மையுஞ்சிலவழங்குமோ,வெய்யுமாரன்முதலோர்களெங்கணுமிருந்தநம்படைஞரெளியரோ.( )

என்றுவெங்கலியெழுந்தியம்பினனிருந்தவெல்லையவனேவலாற்சென்றுவன்புவியடங்கலுஞ்செயறெரிந்தவொற்றர்கடிரும்பியேமன்றலந்தொடையன்மோகமன்னனையுமார்புமண்ணுறவணங்கிகன்றும்வெங்கபடிநாதனுக்குமிருகைகுவித்தினையகழறினர்[யுட்

நம்படைத்தலைவர்காமனதியரிஞ்ஞாலமுற்றுமுறநண்ணியேதம்படைத்திறல்செலுத்தியங்கவர்தலத்திருந்தும்வலிதள்ளியேவெம்பகைத்திறமொடுக்கியுங்ககனமேகமின்றிமழைவீசல்போலம்புவிக்குளிதுவரையுறுதசிலவதிசயங்களுளவாயவால். (ரு)

கச்சிமாநகரிலிரதியுங்குலவுகாமனுங்குடியிருந்துமே
யிச்சியாமன்மடவார்கடந்திறமிகந்துபற்பலரிடந்தொறு
முச்சிமாலையுதயத்தில்வந்தனமுமோமசாந்தியுமொழுக்கமு
நச்சியாகமுதலாயசெய்வினையுநண்ணியங்கிவைநடந்தவே. (சூ)

பொங்குகோபனுறையும்பதிக்குளுளபொறுமையுஞ்சிறிதுபுருடர்பா,லங்குலோபனுறையத்தலத்துமியலருள்வழங்கியததன்றியும் வெங்கண்மாமமதைதந்தைவாழ்பதியின் மீதுவாழ்வர்சவுமியர்கடாங்,தங்குமானனுறைதானமூடுமுளர்தாழ்விலாதமுடிதாழ்குவார்

மச்சரன் றனியல்சிலர்புரிந்திலர்மராடமீதுமயன் மாற்றுமோர்
நிச்சயன் றனெறிகொங்கணத்தினுநிகழ்ந்ததானிருவிகற்பமுங்
குச்சரந்தனிலுமுற்றதுட்டெளிவு கொடியடம்பனிலை கொண்டி
டும்,விச்சையுற்றுவளர்காசிமாநகரமீதுமோர்புறம்விளைந்ததால்.

சத்துவக்குணமிராசதத்தினொடுதாமதன்புகுதலத்தினுஞ், சித்து
வித்தை யெனவே நிகழ்ந்த சிலசிலரிடத் திலெவர் செய்கையோ
வத்திரைக்கடனெடுங்கரைத்தலமனைத்தினும்பதிகொடதன்மனு
மெய்த்திருக்கமிகுசோரமாய்ச்சிலரிடத்தினல்லறமியங்குமால்.

யாமியற்றுநெறியல்லசெய்கையலவிந்த்ரசாலமெனவெங்கணுந்
தாமியற்றுதல்செய்வார்கடம்மையிவர்தாமெனத்தெரிவதின் [ர்
றியே,பூமியிற்றலமனைத்துநந்தமர்புகுந்துகேட்கிலவைபுரிகுவோ
காமியக்கருமமிவையரம்பையர்கள்காதலிற்பயில்வதென்பரால்.

அருள்விவேகனொடுசுமதிவைகும்வனமவ்விடத்திலு மடுத்திலார்
நிருபகன் பொறைமகிழ்ச்சிமாமகிழ்நனிச்சயன்றனிவிராகர்கோ
ன்,றருமன்மெய்யனவிரோதன்மிக்கசமதமரடக்கர்பதிசத்துவன்
மருவியங்கனையர்வைகிடம்பிறர்மதித்தியாரறியவல்லரே. (கக)

தனதுபோதகரைவேடமாற்றிநமர்தம்முளேவியொர்சிரத்தை
யாம், வனிதைதன்னையுபநிடதவஞ்சியைமணஞ்செய்தற்குமலர்
வாணிபா, லனையதூதெனவிவேகன்விட்டனனடுத்தசெய்கையி
வையாமெனு,வினவுதற்குரியர்சொன்னதும்முளதுவிளைவிதென்
றுரைவிளம்பினர். (கஉ)

## கலி நிலைத்துறை.

அச்சொலாங்கவன்கேட்டலுமறிவிலாமன்ன
னச்சராவெனவெகுளியும்பயமுமுண்ணலியக்
கைச்சபேரிருட்கருத்திலோர்புடையவைகரந்து
பிச்சர்போலொருவெண்ணகைவெளிப்படப்பெயர்த்தான்.

ஈடுபட்டெனுலிருக்கவுநிலைபெறுதேகிக்
காடுபுக்கவர்மீள்வராமீண்டுமெய்கரந்து
நாடுபுக்கறமவரவர்க்குரைப்பராநமர்போ
லாடுமற்றவர்செயல்பிறரறிவதற்கரிதாம். (கச)

வேதனீன்றருளுபநிடதப்பெண்மேல்விவேகன்
காதலாயினனுமவன்கடிமணம்புணரத்
தூதுபோயினள்சத்துவச்சிரத்தையாஞ்சுருதி
மாதையாங்கவன்மணஞ்செயும்யோகமும்வருமாம். (கரு)

மெலியுநுண்ணிடைப்பாஷண்டவிஞ்சையைமேவி
வலியயான்பெற்றமைந்தனைப்போற்பெறமடவார்க்
கலியையன்னவன்மணஞ்செய்வான்குறிக்குமுள்ளாசை
புலியின்வன்றிறம்பூசையுங்கற்பதுபோலாம். (கசு)

குறுமுயற்குலங்கோளரிவாயகப்பட்ட
கறையடிக்கிடர்தீர்ப்பதுபோலுநங்கணத்தோர்
பிறழவிட்டிலாப்பிணிப்பினுற்சிமிழ்ப்புற்றமோனச்
சிறையகற்றுதற்காங்கவர்புரிகின்றசெய்கை. (கஎ)

பாட்டனைச்சிறையென்பிதாவைத்தநாட்பாசப்
பூட்டவன்றனையாம்புனைவித்தநாட்பொருந்தாக்
காட்டகன்றிடத்தமரொடுதன்னையுங்கலக்கி
யோட்டுகின்றநாளுருவலியின்றுவந்துளதோ. (கஅ)

இனையவாசகநன்றிதுநன்றிதென்றிசையா
வனையதூதரையவமதித்துரைத்துநீராங்கே
வினவுவார்சிலர்வாக்கினிற்கேட்டதோவேறோர்
கனவுகண்டதோபுகன்றதென்றுரைத்தனன்கடியோன். ()

பின்னுமோகனையொற்றர்கள்வணங்கியெம்பெரும
பன்னுகின்றவர்பற்பலரரியரபத்தி
யென்னும்யோகினிமாரருட்டுணையினுல்யாவு
முன்னுமங்கவர்முயற்சியென்றனரென்றுமொழிந்தார்(உ௦

நெறிதிறம்பினேனிவ்வுரைகேட்டுவெண்ணிலவின்
முறுவல்செய்தெவர்தமக்குமோர்பேதமைமூட்டு
மறிவின்மங்கையர்தங்களைப்பின்செல்வாராண்மை
யிறுவதன்றிவேறெங்ஙனஞ்செல்கின்றதென்றான். (உக)

மோகனெற்றுக்கேள்விச்சருக்கம் முற்றிற்று.

ஆகூ - விருத்தம் - சஙஎ.

---

## க௦-வது, இடம்பனுக்கோலைவிடுசருக்கம்.



### கலிநிலைத்துறை.

அருகிருந்தவெங்கலியனைப்பின்னுநம்மடையார்
வெருவுறும்படியடர்த்துலகனைத்தினுமேவி
யிருதினத்தில்வாரணசியந்தலத்திடையாமும்
வருதுநீயுமங்குறுதியென்றருள்விடைவழங்கி. (க)

சாருவாகனென்பவனையுங்கலியெனத்தக்க
காருலாவியவிடத்தொடுந்தீயெனக்கலந்து
பாருலாவுநற்றலந்தொறுங்கரந்துறைபவரைப்
பேருருவகைகொணர்தியாற்பிடித்தென்றுவிடுத்தான். (௨)

புத்தனைப்பெருஞ்சமணனைக்கபாலிவெம்புலியைக்
கைத்தசிந்தையனழைத்துலகெங்குநீர்கற்ற
வித்தையைப்புகச்செலுத்திவைதிகத்தியல்விலக்கிச்
சத்துவச்சிரத்தையைக்கொணருதிரெனச்சாற்றி. (௩)

போமினென்றனனென்றலுங்கலியனும்போற்றித்
தூமணம்பெருச்சாருவாகனுமிகத்துதித்துத்
தாமியைந்திடுந்தலந்தொறும்போயினர்தவிர்ந்தோர்
நாமடந்தைபாற்சென்றநற்சிரத்தைமேனடந்தார். (௪)

அனையர்யாரையுமவ்வழிவிடுத்தபின்னரசன்
வனையுமாண்புடைக்காசிமாநகர்க்கியாம்வருது
மினையநாளிதுபொழுதிதுசெய்தியென்றெழுதி
வினையிடம்பனுக்கோலையைத்தூதொடும்விடுத்தான். (௫)

அன்னகாலேயில்வாரணுசித்தலமதனுட்
பன்னசாலேசெய்தேவல்பற்பலர்செயப்பதியாய்
மன்னனேவலான்மனக்கவட்டிடம்பன்செய்மார்க்க
மின்னதாமெனத்தெரிந்துரைசெய்குவரெவரே. (௬)

இரவிடைப்பலவேசியர்விதவையரிவரை
வரவழைத்தவரிளமுலேக்கோட்டிடைமருவிக்
கரநெகிழ்த்திடாதணைத்திதழ்சுவைத்துளங்களித்துச்
சுரதவித்தையில்விடர்சிகாமணியெனத்தோய்ந்து. (௭)

காமமங்கதைப்பகலெலாமொருபுடைகரந்து
தாமுயர்ந்தவரிவரெனப்பற்பலர்தம்முன்
ஞேமமும்பலகருமமுஞ்செய்குவாரொப்பத்
தீமுகந்தனில்வாய்மிணுமிணுத்துநெய்சிந்தி. (௮)

தருப்பைமாந்தழைவெண்பொறியட்சதைசமிதை
நெருப்பினுக்கயலுபகரணத்தொடுநிரப்பித்
திருப்பவித்திரச்செங்கையைமூக்கிடைச்செலுத்திப்
பொருத்துகுண்டலக்குழையினுமடிக்கடிபோக்கி. (௯)

சேருமக்கினிகோத்திரச்சாலையிற்சிலரை
வாரும்வாருமென் றழைத்துவெண்ணீற்றையும்வழங்கிப்
பேருமோர்சருவக்ஞதீட்சதரெனப்பெற்றுப்
பாருளோரையுமத்தொழில்புரிந்திடப்பணித்தான். (க0)

காதல்வேசியர் தம்மொடுமுயங்கியகங்குற்
போதகன் றபினிவர்சிதேந்திரியரிப்புருடர்
வேதவேதியரிவரியோகியரிவர்விரத
மாதபோதனரெனச்சிலர்புரிவர்நல்வஞ்சம். (கக)

பத்தியாய்வரவழைத்திளவிதவையர்பலருக்
கத்தியானபோதனைசெய்வார்போற்குருவாகி
முத்தியானமுமாலையுமகன் றபின் மணாளர்
சித்தியாயினரவர்க்கெனச்சிலர்சிலர்சேர்வார். (கஉ)

தாமரைத்திருமணியுமெய்க்கோபிசந்தனமுஞ்
சோமனுத்தரிகமுஞ்செவித்துளவமுந்துலங்க
நாமகீர்த்தனம்பயிற்றுவார்போற்பலநடித்துக்
காமவேட்கைதீர்கள்வரும்பலரிராக்காலம். (கங)

இனையபற்பலடாம்பிகருலகெலாமியங்க
மனையில்வாழ்வுறுமிடம்பன்முன்மோகமாமன்னன்
வினையினேவியதூதன்வந்திறைஞ்சிமேல்விளைவு
மனையன் றன்வரவுஞ்சொலியோலையுமளித்தான். (கச)

ஆசிலச்சுருளோலையைச்சிரசில்வைத்தருகிற்
பாசமுற்றதோர்புலமகன்வாங்கிடப்பணித்து
நீசிறந்திடும்படிக்கிந்தமுடங்கலைநிமிர்த்து
வாசியென் றனனென் றலுமனையன்வாசித்தான். (கரு)

முழுதுமூன் றுலகும்புகழிராசமாமோக
னெழுதிடம்பனுக்கனுப்பியபத்திரமிரண்டு
பொழுதிலெய்துதும்யாமுமக்காசிமாபுரத்திற்
பழுதுறுவகையியற்றவுந்தனதுசெய்பணியே. (கசா)

இந்தவாசகங்கேட்டலுமனமகிழ்ந்திடம்பன்
வந்ததூதுவர்க்கேற்றநல்வரிசையும்வழங்கி
நந்தமோகமாமன்னவனவித்தைமாநகர்விட்
டிந்தமாநகர்க்கெய்தல்யாஞ்செய்தவமென்றே. (கஎ)

முன்னசத்தியப்பிள்ளையையழைத்துமாமோக
மன்னன்வைகவுமாளிகைசிறப்புறவகுத்துக்
கன்னல்வாழைவான்கமுகுதோரணமிடக்கயங்கள்
தொன்னகர்த்திருவீதிகடோறுமேதொகுத்து. (க௮)

பந்தரிட்டுமேற்றுகில்விதானித்ததன்பாங்கர்க்
கந்தநாண்மலர்தொடுத்துநற்பூரணகலசந்
தந்தமாமணைதொறுமமைத்தினையனதயங்க
விந்தநாளனைவருஞ்செயப்பணித்தியென்றிசைத்தான்.(க௯

எவரையும்பணித்தின்னணம்புரிவித்தவெல்லைக்
கவுடதேயமீதிருந்துவாழ்வுறுமகங்காரன்
புவனமன்னவன்செயறெரிந்துணர்வுறுபொருட்டா
லவணகன்றியற்காசிமாநகரில்வந்தடுத்தான். (உ௦

இடம்பனுக்கோலைவிடுசெருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம்-சஙுள.



## கக – வது, இடம்பாங்காரச்சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மானமென்றுரைப்பதெழுந்துமேற்சொலித்துவருவதுபோன்று
நன்மனித, ரானவரெவருமடங்கவாய் மொழியா லதட்டுவான்
போன்றுநல்லறிவி, னீனர்மற்றவர்தாங்கற்றதேவித்தையென்ப
வர்போன்றுமெவ்வுலகு, மூனமற்றொளிரும்வடிவினல்விழுங்கியு
மிழுவான்போன்றும்வந்துற்றான். (க)

நற்புனற்கங்கைநதித்துறைதோறுநண்ணிநாளுவருணத்துந்
தற்பணஞ்சந்திவந்தனமோமஞ்சாந்திமாதவஞ்செபநியமங்
கற்பநல்வேதசாத்திரபுராணங்கற்றவைகருத்துறக்கருமம்
பற்பலவியற்றுமவரவர்தம்மைப்பார்த்தவனிணையனபகர்ந்தான்.

அவ்வருணமுநான்காச்சிரமமுநான்கவற்றுணிற்பவர்கடாமாகி
யிவ்வரு ணச்சிரமத்தினுக்கியற்கையிவைசெய்கையிவையென்ப
தின்றிச், செவ்வையினெழுகுங்கிருதகிர்த்தியராய்ச்செய்தவைமு
டித்திடுஞ்சிலர்போற், கவ்வையினீங்கிநின்றனரிரண்டுகாலுடை
மிருகமிக்கள்வர். (௩)

அரம்பொருவேற்கணகந்தைகேளத்தியானமாமினையர் கத்துவ
துஞ், சுரம்பதங்கிரமஞ்சடையவரோகஞ்சொல்லுமாரோகமாவ
ருணம்,வரும்பொருடேயங்காலநற்பருவமாத்திரைமங்களாசார
முரம்பெறுவேதமோதிலக்கணத்திலொன்றையுமின்ன தென்று
ணரார். (௪)

இவனவதானியிவன்கிரமதாடியிவன்சடாவல்லவனென்பா
னவனுபாத்யாயனவன்வேதபட்டனவனத்தியாபகனென்று
நவநவமாகப்பேர்பலபுனைந்துநல்குதானங்களும்பெற்றெத்
திவசமும்புசித்திவ்வுலகைவஞ்சிக்குந்திருடரிங்கிவரிவர்சிலரால்.

குருமதம்பாட்டஞ்சாலிகாநாதக்கொள்கைநன்மிச்சிரன்கூற
வருமதம்பின்னுமகோததிசூத்தமாவிரதத்துளவண்மை
பொருவருநியாயசூத்திரஞ்சிறந்தபூடணங்காபிலப்பொருளென்
றுரைசெயுநூலின்புத்தகமிருந்தவூரினுமிவர்புகாதொழிந்தும்.

தற்கசாத்திரத்திலிவர்மிகப்பெரியர்சாங்கியசாத்திரந்தாமாய்
நிற்குநரிவர்வேதாந்தசாத்திரத்தினிபுணராமிவரிவர்நெடுநாட்
கற்பமீமாஞ்சைவல்லவரிவர்யோகம்பயின்றவர்வியாகரண
நற்கலையிவரேயுணர்ந்தவரென்றுநாமதேயம்பலநவில. (௭)

சுவடியுங்கயிறுங்கம்பையுநெடுவெண்சோமனுத்தரிகமுந்துலங்
கப், பவுரிடப்பொருடாமுணர்த்துவார்போற்பொற்பவித்திரம
ணிவிரற்செங்கை,யவணபிநயம்போலடிக்கடிநீட்டியணிந்தகுண்
டலமசைத்தம்பொன்,கவருதற்கிணையர்கற்றகூதெந்தக்கள்வரே
யுலகினிற்கற்றார். (௮)

ஆதிநாண்மாறன் மறையையாயிர நல்லருந்தமிழாயுரைத்ததினு
மோதிநாவழுந்தார்பொய்கைபூதம்பேயுற்றபேறையுஞ்சிறிதுண
ரா, ரீதினர்சொன்னதிதுபிரபந்தமிதுதிருவாய்மொழியென்றுங்
காதினல்வினவார்பாஞ்சராத்திரம்வைகாநசமீதென்றுங்கருதார்

அவையவர்தன்மையாயினும்பட்டாசாரியரழகியநம்பி,யுவைய
வேதாந்தாசாரியராமானுசமெனவொப்பிலாநாம, மிவையிவை
புனைந்துதிருத்தி மெய்யெங்குமிடையிடை யெண்ணிலக்கின்றித்
தவளமண்சாத்தியதனதனடுவேதகுந்திருச்சூரணந்தரித்து.(௧௦)

தூசுநீர்க்காவியுறப்புனைந்தணிந்துதுளசிதாமரைமணிதோண்மே
லாசின்மூப்பிளமைசாதிவேற்றுமைகளகன்றெவர்க்காயினுமடி
யேன், ருசனென்றிறைஞ்சிப்பிறர்பொருள்கவர்ந்துசாத்திமேன்

முத்திராதான, மாசிலாதவர்போலிருந்தனரிவர்போல்வஞ்சனை யாவரேவல்லார். (கக)

இரவெலாங்காமக்கணிகையர்முயக்கிலின்பமுற்றியற்பகலெல் லாங், குரவராயணிவெண்ணீற்றுருத்திராட்சக்கோலமார்ச்சால மாங்குழைவும், பரவுபாவனையுந்தேவதார்ச்சனைதாம்பண்ணல் போலுருப்பலபரப்பி, விரவுமாமணிதொட்டாட்டலும்பார்க்கி ன்மிகக்கொடிதிவர்வஞ்சவேடம். (கஉ)

திருத்தகுமூவர்புகறிருப்பாட்டுத்தெள்ளமுதத்தையுந்தேக்கா துருக்கெடுத்தகற்று நற்றிருமூலரோது மந்திரத்தையுமுணரா தருட்கெடுத்தறந்தாங்காட்டுவோர்தமைப்போன்றரும்பொருள் கவர்ந்தவரவர்க்குக்,குருக்கொடுத்தொருசாண்கும்பிதூர்க்கின்ற கொடியராலிந்நிறைகுழுவோர். (கஙு)

நிறைந்திடக்குடத்தின்மலமுறப்புறத்தினீர்கொடுகழுவினணிக ர்ப்ப, வறந்துடைத்தன்புந்துடைத்ததம்முளத்திலருமலமிருக்க த்தண்புனலாற், புறந்துடைத்தங்கமுழுதும்வெண்ணீற்றைப்பூச ணிக்காயெனப்பொதிந்து,பறந்துபற்பலர்கைப்பொருள்கொள ச்சைவப்பழங்கள்போன்றவரிவர்பலரால். (கச)

அட்டிடுவெண்சோறவரவரிடச்சென்றருந்தலாமுலகினையது போற், றெட்டியதிலையென்றரனடியார்போற்றெரிந்திடப்பன்ம யிர்திரட்டி,நெட்டியற்கொன்றைக்காய்கள்போனீட்டிநிமிர்தலை ச்சுமையெனநிரப்பிக், கட்டியசடையின்கொழுந்தினுநெடிதாற் கண்டகரிவர்மனக்காதல். (கரு)

புரத்தினீண்மடங்கடொறும்புராணிகராய்ப்போயிருந்தறஞ் சொல்வார்போலக்,கரத்திலேயெடுத்தேதோசிலபுகன்றுகாய்க னிதண்டுலங்கொணர்வார்,வரத்திலேகண்ணும்வாக்கிலிச்சகமும னத்துளேவஞ்சமுமாகிப், பரத்திரவியமேல்விருப்பமாமினையர் பாவனையாவரேபடித்தார். (கசு)

மூங்கினெட்டிலைபோற்கோபிசந்தனமுமுத்திரைப்பொறிகளுஞ் சாத்தி, யாங்கதனிடையங்காரமுந்தீட்டியங்குலிக்கோரொர்செ ம்படுக்கி,நீங்குமினென்றுபிறர்செலவிலக்கிநெட்டடிகுந்திவைத் தனேக, மீங்கிவர்புரிந்துந்தத்துவர்தாமென்றெத்துவாருலகினை யெங்கும். (கஎ)

சென்னியோர்பனங்காய்போலமுண்டித்துச்சீடர்பற்பலர்கள் பின்செல்லச், சன்னியாசங்கொண் டழன்மழுக்குறிகொடண் டொடுகமண்டலந்தாங்கி,மன்னியாதரிப்போர்மனைதொறும்புகு ந்துவயிறுசாணுந்தனிவளர்த்தற்,குன்னியூர்தொறும்போய்மட ந்தொறுங்குடிகொண்டொண்டுகில்காவிதோய்த்துடுத்தே.(கஅ

உற்றுபநிடதத்துட்பொருடன்னையுணர்வுறுதொருவருக்கொரு வர்,கற்றறிவோதியத்துவயிதந்தாங்கழறுவார்போன்றுகண்டெ ரியா,மற்றொருகுருடர்குருடருக்குரைக்கும்வழியெனச்சொற்று றைமயங்கித், தெற்றுரைசெய்துதியக்கமுற்றேதுந்தெளிவுறுதவ ர்களித்திரளால். (ககூ)

தத்துவெண்டிரைச்சீதளச்சிலாதலத்திற்றருப்பைநற்கம்பளம் புலித்தோல்,வைத்ததிலிருந்துபுறத்துபகரணம்வயங்கவோர்பட் டுமேல்வனைந்து,மெய்த்தநற்செபம்போல்வாய்மிணுமிணுத்துவி ழியினைமுகிழ்த்துமெய்யிறுமாந், தெத்தனைகோலம்பிறர்பொரு ள்கவர்தற்கெத்தனையிவர்செயுமிடம்பம். (உ0)

மாயவெம்பசியைத்தீர்ப்பதற்கேதும்மதித்திடாமற்றிரிதண்டு மேயவெண்பட்டநாமமுங்காவியிட்டபூந்துகிலுமேலிலங்கச்,சீய ரென்பவராயில்லறத்தோர்க்குஞ்சென்னிதாழ்த்திறைஞ்சியத்தி ருமால், கோயிலினமுதம்புசிப்பதற்கன்றோகொண்டன ரினைய ரிக்கோலம். (உக)

மத்துவகுருவாய்ச்சன்னியாசத்தில்வைகியும்பிறர்பொருள்வாஞ் சைப்,பித்தமேற்படர்ந்ததென்னலாங்காவிப்பெருங்கலைமருங்கி னிற்பிறங்கச், சுத்தவெண்சங்கம்பல்லியமுழங்கத்துலங்குபொற் சிவிகைமேல்வரலா, லித்தனைபேரும்பாக்கிவன்கமுகந்தோட்ட மென்றெண்ணலாமிடம்பன். (உஉ)

ஈங்கிவர்தம்மோடியைந்தொருவாய்மையியம்பினுமெண்ணிலாக் கொடிய,தீங்குவந்தணையுமென்றனைவரையுஞ்சிந்தனையிகழ்வுறச் சிரித்து, நீங்கினனகந்தைக்கொருதனிக்கணவனீணெறிப்படர்வு ழிநெடிதா, யோங்கியமுனிவராச்சிரமம்போன்றொளிருமோரு றையுள்கண்ணுற்றான். (உ௩)

## கலி நிலைத்துறை.

அனையமாமனையந்நகர்வீதியினடுத்த
மனைகள்யாவினுமுயர்ந்துவிண்ணளவுமேல்வயங்கி
வினையினனலந்தருப்பையாலெங்கணும்வேய்ந்து
புனையுநன்னெடும்பாசடைவடிம்பிடைப்பொதிந்து. (உச)

இந்துவெண்ணிலாப்பகலினுமியங்கியதென்னச்
சிந்துவெண்சுதையம்மனைச்சுவர்தொறுந்தீற்றி
முந்துபன்னிறச்சித்திரமியற்றியெம்முகத்தும்
பந்தரிட்டுநன்மாந்தழைத்தோரணம்பரப்பி. (உரு)

ஓங்குவாயிலினோங்குறநிமிர்ந்தெழுமுபய
மூங்கினீடிடநடுவுறநிறுவிநன்முறுக்கிட்
டாங்குவெண்ணிறப்பட்டினுற்கொடிக்கயிறமைத்துப்
பாங்கினேறுநீர்க்காவிவெண்டுகில்பலபரப்பி. (உசா)

அமுதடும்புகையக்கினிவேள்விபோலடுநெய்
குமுகுமென்றிடக்கொண்டெழுநறும்புகைகுலாவி
யுமிழ்வுறுந்தழற்சாம்பிராணிப்புகையோங்கு
மிமையமால்வரைக்கொழுந்துபோல்விண்ணினுமேற. (உஎ

காமதேனுவைப்போன்றபற்பலபசுக்கழுத்தின்
மாமணித்திரள்கணகணென்றொலித்திடவணைந்து
தாமணிப்படப்பிணைத்தவையாவையுந்தந்த
கோமயத்தினையடிக்கடிபற்பலர்கொணர்ந்து. (உஅ)

வேகசாநவிப்புதுப்புனல்கலந்ததுமெழுகி
யாகசாலைதேவார்ச்சனைசாலையின்னமுத
பாகசாலைவேதிகைசெபசாலைமேற்பசும்பொற்
றியாகசாலைநற்பட்டகசாலையெத்திறத்தும். (உகூ)

மருவிநாற்சதுரப்படப்பற்பலவன்னத்
திருவிசித்திரக்கோலமெங்கெங்கணுந்திருத்திப்
பரவுவாசலிற்படிதொறும்படிதொறும்பாங்கிற்
பொருவில்புட்பகந்தாட்சதையெழிலுறப்பொருத்தி. (௩0)

செம்புதம்பிகைகெண்டிகைகாசண்டிசெப்புக்
கும்பம்வட்டகைகொப்பரைகிடாரநற்கும்பாப்
பைம்பொனிற்றிகழ்தளிகைகாளாஞ்சிதாம்பாளம்
விம்பமாமயிற்பொறிகொடேண்டாக்குத்துவிளக்கு. (௩க)

தீர்த்தவேதிவெண்சங்குதர்ப்பணந்தூபதீபம்
வார்த்தகைம்மணிபஞ்சபாத்திரமாலவட்டம்
போர்த்தசத்திரசாமரமிணையதேபூசைக்
கேர்த்தநல்லுபகரணங்கள்யாவையுமெடுத்து. (௫௨)

ஆனதன்பரிசாரகர்கங்கைநீராடி
மோனராகியும்வத்திரங்கட்டிவாய்மூடிப்
பூநிறம்பெறுசாம்பராற்புளியினாற்பொன்போன்
மேனவின்றவையணைத்தையும்வெளிப்படவிளக்கி. (௫௩)

உரலுலக்கையேந்திரஞ்சுளகாட்டுக்கல்யூப
மரணிமற்றதுகடைகயிறட்சதையனனெற்
பொரிதுடுப்பம்மிசகடமான்றோல்பலபுலித்தோன்
மரவுரித்திரண்மகத்தினுக்குரியனமற்றும். (௫௪)

அறுகுமுஞ்சிநாணற்குசப்புற்றிரளரசோ
டுறுபலாசெருக்குச்சமியத்திநாயுருவி
குறுகுமுட்கருங்காலியிச்சமிதையின்குவையு
நிறையமுற்புகன்றவற்றொடுமிடையிடைநிரப்பி. (௫௫)

செழுந்திருப்பள்ளித்தாமநன்மஞ்சனதீர்த்த
மொழிந்தநல்லபிடேகமாத்திரவியமுழுதுந்
தொழுந்தகைப்பணியுட்பரிசாரகர்துளசிக்
கொழுந்தெனப்பலர்களபசந்தனத்தொடுங்கொணர. (௫௬)

இன்னசெய்வினையேவலரியற்றிடவிடம்பன்
கன்னரத்னபொற்குண்டலங்கைவிரற்கவினும்
பொன்னணித்திருப்பவித்திரம்புனைந்தபொற்பூணூன்
மின்னவச்சிரப்பொன்னரைஞாணிடைவிளங்க. (௫௭)

இருசெவிக்கிருபவித்திரமிருகைக்குமிரண்டு
தருசிகைக்குமொன்றிடைக்குமத்தருப்பைப்புற்சாத்தித்
திருவெண்பட்டுடைச்சோமனுத்தரிகமுந்திகழப்
பொருவின்மற்றொருரத்தினமெய்க்குடைபொலிய. (௫௮)

மெய்த்ததாணிலத்துறினுமதடிக்கடிவிளக்கிச்
சுத்தவாசமனஞ்செயக்கண்மலர்துடைக்க
வைத்தபாத்திரங்களிற்புனலேந்தியெம்மருங்கு
மொத்தபாவனைசெய்குவோரிடைவிடாதலவ. (௫௯)

இட்டமாயதன்போல்பவரெய்திலாங்கிருக்கச்
சட்டமாய்ரத்னகம்பளம்பலகைநற்றவிசு
வட்டமாய்ச்சிலசதுரமாய்ச்சிலவிருமருங்குங்
கிட்டவாதனம்வேதிகைமேற்பலகிடப்ப. (௪௦)

எடுத்துமுற்புறத்திரண்டுசேமக்கலமிருபா
லடுத்தசைத்தகண்டாமணியதனெடுமடிப்பத்
தொடுத்துவாசலிற்றாங்குமாமணியொன்றுதூங்கா
துடுத்தபார்மகள்கலையெனநிரந்தரமொலிப்ப. (௪௧)

மன்னுசூரியயந்திரமொன்றென்றைவைத்துத்
துன்னுமாமலரட்சதையறுகதிற்சொரிந்து
கன்னமார்புதோளிதழ்நாசிநுதன்முழங்கான்மற்
றின்னதானமட்சுவடுறவெழுந்தெழுந்திறைஞ்சி. (௪௨)

படியில்யாவருமிகுதனஞ்சொரிந்தடிபணியக்
கொடியபாவனையிவ்வகையெண்ணருங்கோடி
முடிவுறுதவையியற்றிநல்லுணர்விலாமூடக்
கடியலோபன்மாமகனினிதிருக்கின்றகாலை. (௪௩)

## கலிவிருத்தம்.

வந்தவகந்தைத்திருமணுளனெதிர்கண்ணுற்
றிந்தமனையிந்நகரில்யாவர்மனைகொல்லோ
சிந்தைதெளிவுற்றிலகுசீரியர்கள்வைகு
மந்தமனைபோலுமெனவையுறுமனத்தான். (௪௪)

ஏவரெனினும்பொழுதிரண்டினிதிருந்தே
பாவனைகொலல்லதுறுபத்திகொலதெல்லா
மாவதறிகிற்றுமினியப்புறமெனத்தன்
றேவியொடுமுன்னியதனுட்கடிதுசென்றான். (௪௫)

சென்றவனெழுந்திரவிவந்தனைசெய்வார்போ
னின்றவனயற்குறுகிவாழிமிகநீயென்
றொன்றுபுகலாசிசொலலுற்றனனுறமுன்
கன்றுமவுனத்தவன்முகங்கடுகடுத்தான். (௪௬)

ஆசிசொலவந்தவெமையஞ்சலிசெயாதே
மூசியகடுப்பொடுமுனிந்தனனிதென்னே
யேசியதுருக்கர்மனையிம்மனைகொலென்னுப்
பேசியெதிர்வைத்தவடிபிற்கொடுபெயர்த்தான். (௪௭)

பேர்த்தடிபின்வைத்திணையபேசுமவனைத்தன்
சீர்த்தகையமைத்தயலொர்சீடனையுமாங்கே
பார்த்தனனுளத்தினியல்பார்வையினுணர்ந்தோர்
வார்த்தையவனுங்கவுடமன்னனொடுசொன்னான். (சஅ)

மாச்சுரவியொன்றுளவசிட்டன்வரினுங்கா
றேச்சயலிருந்துகழுவிப்புகுதல்செய்வான்
பூச்சுரர்பிறர்க்கெமதுபொன்மனையின்மற்றோ
ராச்சிரமமென்னவனுகற்குரியதன்றே. (சகூ)

கோள்கடியுநங்குரவர்கோதிறவநீர்நுங்
கேள்கிளருநாட்டினிடைகேட்டுமிலிர்கொல்லோ
நீள்கடிமனைப்புனிதநீதியறியீரோ
தாள்கழுவுறுமல்வரிலாரிதுசகிப்பார். (ருo)

இத்திருமனைப்புறமுமுட்புறமுமெய்துஞ்
சுத்தியிதுகண்டுமொர்துருக்கர்மனையென்றீர்
புத்தியிதுவோவுமதுபொங்குசினம்வெம்போர்க்
கத்திரியருக்கும்வரல்கண்டவருமுண்டோ. (ருக)

தாங்குமொருசெம்பிலைகொறண்புனல்கருப்போ
பாங்குறுதமக்கெனவொர்பாத்திரமிலாநீ
ராங்கனமிருந்துபுனலையதருகென்று
லீங்கனமிருப்பவர்களீர்ம்புனல்கொடாரோ. (ருஉ)

என்றுரைபகர்ந்தவனெழுந்தருளுமென்னச்
சென்றுபுனலங்ஙனமொர்செம்பொடுகொடுத்தா
னன்றிதுரைநன்றெனநகைத்ததனைவாங்கிக்
கன்றியகருத்தினொடுகால்கழுவிவந்தான். (ருங)

வந்தவன்விரைந்தொருமணித்தவிசுறுமுன்
சிந்தையினழன்றெதிர்திரும்பவும்வெகுண்டான்
முந்தமொழிகின்றவன்முனிந்தவையுணர்ந்தே
யிந்தவுரைபின்னருமியம்புதல்செய்தானல். (ருச)

உய்தனுறமேல்விசிறுமோர்விசிறிதானுங்
கைதனினுமின்றிநிரைகாற்றினுமுறாதே
மெய்தவழும்வேர்வினொடுமேவினிர்நம்மாசா
னெய்தவருபீடமதிலேறுதிரிதென்னே. (ருரு)

பொருக்கெனநடந்திலகுபொற்றவிசினூடே
யிருக்கநினைவீரிதுநும்மேழைமதிகொல்லோ
வருட்குறியிலாவுமதகந்தைகொலடங்காச்
செருக்கிதறிவுள்ளவர்கள்செய்வதலவென்றே. (ருசு)

அத்தவிசினுக்கயலொராசனமமைத்தே
யித்தவிசிலிங்ஙனமெழுந்தருளுமென்னு
வொத்தபரிசாரகனுரைத்தமொழிகேட்டுச்
சித்தமறுகிக்கவுடதேயனிதுரைத்தான். (ருஎ)

கவுதமர்வசிட்டருயர்காசிபர்மரீசித்
தவமுனிவரித்தகையர்தம்முளுமியைந்தோ
மவரவர்செய்நிட்டையுமுள்ளன்புமறிவோம்யா
மிவர்புதுமைகண்டதெவ்விடத்துமிலையென்றான். (ருஅ)

இவ்வுரையவன்சொலவிடம்பன்மகிழ்சீட
னவ்விவிழியாளகந்தைநாயகனைநோக்கி
யவ்வுரைதனக்குமெனவையமுளதோநஞ்
செவ்வியவர்தம்பெருமைசெப்புமவர்யாரே. (ருகூ)

மாதொகையிலிப்புவியின்மண்டலிகரம்பொற்
போதுகைசொரிந்தனையர்பொன்மகுடரத்னச்
சோதிகொடுதாழ்ந்துவெகுதூரமிசையையன்
பாதுகைதமக்கிடுவர்பன்மணிவிளக்கே. (சுO)

நற்றிருவெண்ணீறுதவுநங்குரவருக்கே
பொற்றவிசுகம்பளமிரத்னமணிபொற்பூ
ணுற்றபரிநற்சிவிகையூரொடுபசும்பொன்
கொற்றவரின்மற்றிவைகொடாதவர்கள்யாரே. (சுக)

புண்ணியதினங்கண்முதலாயபலபோது
நண்ணியவனிக்குளுளநான்குவருணத்து
மெண்ணில்பலகோடிபெயரீங்குதவுசெம்பொன்
பண்ணியதவத்தனபதிக்குமுளதன்றால். (சுஉ)

அற்புதமிதென்றெமதிவ்வாச்சிரமமுற்றோர்
பற்பலருநல்கியவைபைம்பொனதுமட்டோ
நற்பசுநன்மேதிதகர்நற்றுகினலஞ்சேர்
நெற்பழனமற்றிவைநிகழ்த்திமுடியாதால். (சுங)

என்றவனியற்பெருமையாவையுமெடுத்தே
நின்றவனுரைத்தலுநெடுங்கவுடமன்னன்
றுன்றுகைபுடைத்துமுடிதோளொடுதுளக்கா
நன்றுமிகநன்றெனநகைத்திணையசொன்னான். (சுச)

வேதம்வருமாகமபுராணவிதியாவு
மோதவருமென்பதனிலொன்றுமுணர்வின்றிப்
பாதம்வருமன்னர்பணியப்பொருள்பறிக்குஞ்
சூதமருமித்தொழில்கொல்சோத்திரியர்செய்கை. (சுரு)

அன்பறிவுசத்தியமடக்கமுபசார
மென்பவையும்வேதியரியற்றொழிலும்யாவும்
வன்பொடுதவிர்த்தணையர்போலிவர்செய்மார்க்கம்
பொன்பொருவநொய்யர்புனைபூச்சுடைமைபோலாம். (சுசு

இப்படிகொலென்றவனிசைத்தமொழிகேளா
வொப்பரியநங்குரவருண்மையுமுள்ளன்பு
மப்பிரமஞதியரறிந்துணர்வதல்லால்
விப்பிரநும்மாலுணருமேன்மைகொலம்மேன்மை. (சுஎ)

என்றவனுரைத்திடலும்பாமுமுணராமற்
றென்றுபுவனங்களினுமுண்டுகொலொர்பூமே
னின்றபிரமாதியருநீடறிவினம்போ
னன்றுணர்வரோவினிதுன்வாய்மையெனநக்கான். (சுஅ)

ஈதவனுரைத்தலுமிடம்பனிவர்யாரே
வேதியரெனத்தனியமத்தியலைவிட்டோ
ராதனமமைத்தவரையாங்ஙனமிருத்தி
யேதமுறுதானுமொரெழிற்றவிசினெய்தி. (சுகூ)

இருந்தமறைவேதியனைநோக்கியெமதில்லிற்
பொருந்தினிர்மிகப்பெரியர்போலுமிந்நகர்க்கே
வருந்தகைமையென்கொலென்மகத்துவமனைத்துந்
திருந்தவுணராதுசிலசெப்பினிரிதென்னே. (எ0)

ஆயினுமதற்கெனவறிந்துணர்விலாதார்
தூயவர்தமைப்பழுதுசொல்லினுமிழுக்கோ
வேயுநமியற்பெருமையாம்புகலிலென்னு
மோயினுமனஞ்சிறிதொருண்மைசொல்வன்யானே. (எக)

அன்னவகையாதெனிலயன்பிரமலோகத்
துன்னரியகன்மவிதியொன்றின்மனமையுற்
றென்னைவரவங்ஙனமிருந்தனையனேறு
மென்னடையவாகனவிகங்கனைவிடுத்தான். (௭௨)

நிலத்தினிடையங்கதுபுகுந்துநிறைகங்கா
சலத்தினிடைமூழ்கியெதிர்சார்ந்தனையவேதன்
சொலத்தகுமவ்வாய்மைசிலசொல்லியொருதன்மேற்
செலத்திருவுளங்கொலெனநின்றமைதெரிந்தே. (௭௩)

நன்றெனநயந்ததனினற்பிடரினேறிச்
சென்றமரர்நாடுபுகுமப்பொழுதுசேணோர்
துன்றுமகவானெடிதுதூரமெதிர்வந்தே
யின்றமர்கவிங்ஙனமெனத்தொழுதிரந்தான். (௭௪)

அப்படிசெய்துஞ்சதுமுகன்பதியையண்மி
யிப்படியின்மீளுமளவின்கணெனவன்றான்
கப்படிமருப்புளகளிற்றின்மிசைதானுந்
துப்படிவெள்ளோதிமமொடுந்தனிதொடர்ந்தான். (௭௫)

ஓதுசனகாதியரும்யோகியருமோரேழ்
மாதவரும்வேறுளதபோதனருமற்று
மூதறிஞர்தங்களொடுமுண்டகமலர்ப்பே
ராதனனிருந்தருளுமந்நகரினெய்தி. (௭௬)

வேதியர்பிரானவையின்மேவுமுனெமைக்கண்
டேதின்முனிவோரெதிரெழுந்துவரயானு
மோதிமமிழிந்தவரொடுற்றதனைநோக்கிப்
போதிலயனுந்தனிபொருக்கெனவெழுந்தான். (௭௭)

எழுந்துதிகழாதனமெமக்குதவவெந்தச்
செழுந்தவிசுமாமுனிவர்தீண்டியதெனக்கொண்
டழுந்துமதியோசனையறுமலதன்மேற்றன்
கொழுந்துடையைநல்குதுமெனுந்தகைகுறித்தே. (௭௮)

அத்துடையும்வாணியையணைத்தபொழுதுண்டால்
வைத்துடையதென்றினியமாச்சுரபிநல்கு
மெய்த்துடையகோமயமதைக்கொடுவிளக்கி
யித்துடையில்வைகுமெனவாணையொடிரந்தான். (௭௯)

நன்றெனநயந்தமைமுகக்குறியினுடித்
தன்றவிசினேறியொருதான்முதலிருந்தே
நின்றவெனையங்கைகொடுநீட்டிமடிமேல்வைத்
தொன்றலவநேகவுபசாரமுரைசெய்தான். (அ0)

அம்மடியிலங்ஙன மரைக்கணமுறுமுன்
றம்மனதிலையுறறவிர்ந்ததிசயித்தே
யெம்மயலகன்றதுமதின்னருளினென்றச்
செம்மலரில்வேதனிவைசெப்பிடுமவ்வேலை. (அக)

நித்தியநெடுங்கருமநிட்டையதுதாழ்வா
மித்திசையினிற்கணமிருக்கிலெனவெண்ணும்
புத்தியையுரைக்குமுனுணர்ந்தனையபுண்மேல்
மெய்த்திசைமுகத்தனெமைமீளவும்விடுத்தான். (அஉ)

இன்னபிறநந்தகைமையெண்ணில்பலவென்றே
சொன்னனனிடம்பனிவைசொற்றமொழிகேளா
வுன்னவுரைசெய்யவிதனெப்பெதுகொலென்னு
வன்னவனுளத்தினெடிதாச்சரியமுற்றே. (அ௩)

புறந்தனைநகைக்கவளர்பொய்யிவனிடத்தே
பிறந்ததுகொலவ்வுருவிவன்கொன்மிகுபேரா
மறந்தவிரிடம்பனிவனுங்கொலவனுக்குஞ்
சிறந்திடுமிவன்கொலுபதேசகுருவாவான். (அச)

என்றிவைகுறித்திவருள்யாவனிவனேனுந்
துன்றியசெருக்கிதுதொலைத்திடுவனென்னு
வன்றிறலிடம்பனுடுமாமமதைதாதை
தன்றிறனெடும்பெருமைசாற்றிடுவதானுன். (அரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னகுலமென்பதின்றியிவடாயிங்கிவன்பிதாவென்பதின்றித், தன்னகரமீதெனவோர்தானமின்றிப்பிரதிட்டைதானுமின்றி,யன்னமனைவியைவாக்கிலடக்கியும் பற்பலரிடத்திலன்புகூர்ந்தும், மென்னடைபோ யுறைதல்கண்டு மிகநாணித்தனதுமுக ம் வெளுத்தோனுகி. (அசு)

பன்னுளுந்தான்வேதம்படித்ததையும்பகுத்துணரும்பண்பிலாமற், சின்னுளிலடுத்துவருங்கற்பமொன்றிலற்பவுயிர்தீர்வோ

னன்னந், தன்ஞலிங்கழைத்தனுப்பிச்சார்ந்தவுணேக்கண்டெழுந்துசற்காரஞ்செய், தன்ஞன்றன்குறங்கிருத்திவிடுத்தனனும்பெரிதுகொல்லோவந்தமேன்மை. (அஎ)

ஆற்றினிடைவலேச்சிதன்பாற்பிறந்தவருநெட்டாற்றினருகிஞணற், றாற்றினிடைப்பிறந்தவருந்தொடுகடத்திற்பிறந்தவருந்தோற்றுமெய்வேர், வூற்றினிடைப்பிறந்தவருமுள்ளத்திற்பிறந்தவருமொருமானீனு, மீற்றினிடைப்பிறந்தவருங் கிளிவயிற்றிற்பிறந்தவருமெதிர்கொண்டாராம். (அஅ)

மெய்ப்படிவம்பழிப்புடையவிண்ணவர்கோன்களிற்ருேடும்பின்மேவிஞஞ, மிப்படியெத்தனேமுனிவரிப்படியெத்தனேசுரரவ்விந்திரன்போ,லப்படியெத்தனேமகவானயனிவன்போலெத்தனேபேரழைக்குமுன்னே,செப்படியேங்களுக்கேவலென்றுவந்தென்வாய்மொழிதஞ்சிரமேற்கொள்வார். (அகூ)

சொற்பங்கமறமுயன்றதொலேயாநம்பெருந்தவத்தின்ருேடார்ச்சியாலே, கற்பங்கள்பலகோடியிதுவரையில்யாங்கண்டுகளித்தோமாவி, யற்பங்கொள்பலபிரமாதியர்முடிவுகாண்பரிதோவட்டகோணத், தற்பங்கனுரோமசனத்தாலசங்கனிணேயர்தங்கள்சாய்வுங்கண்டோம். (கூ0)

மிக்ககுலத்தானபவுரிடத்திஞநம்போல்பவரார்விளம்பக்கேளாயக்கவுடதேயமெனுநந்தேயந்தேயங்களதிற்சிரேட்டந்தெக்கணராடாபுரமாநன்னகரம்பொன்னகர்க்குந்திகழ்சிரேட்டமெக்குடியுமொவ்வாதநங்குடிகோத்திரப்பெயர்பூரிச்சிரேட்டம்..

ஆயகுடிப்பிறந்தோர்களனேவருக்குநந்தாதையதிகனன்ஞன்சேயெனவந்துற்பவித்தசெல்வர் பலரவருளும்யான் சேட்டன்பெற்ற,தாயர்குடிப்பிறப்பினுநந்தாரமுயர்வங்கிசமாந்தகைமையாலத், தூயபிதாவினுமுயர்ந்ததொல்குலமென்றென்குலத்தைத்துதியார்யாரே. (கூஉ)

ஒத்தபரிசுத்தரெமக்கிணேயாயநம்மனேவியுடனேதோன்று,மைத்துனன்றன்சிறுதாயர்மாமிக்குமகள்பதிதன்மாமஞர்தம், பத்தினிக்கோர்பொய்வார்த்தைபகைத்தவராரோ சொன்னபடியாலன்ஞர், கொத்தினில்வந்தவளென நங்குலமனேயாட்டியைத்தழலிற்குளிப்பித்தேமால். (கூ௩)

ஆசாரத்திற்கொடையிலறிவில்விவகாரத்திலன்பிற்சொல்லும் வாசாலகத்திலுயர்மதியினிறைசம்பத்தில்வாய்மைதன்னிற், கே சாதிபாதம்வரைவடிவழகிற்பெரும்புகழிற்கெம்பீரத்தி,லேசாத பெரும்புவனத்தெமக்கிணையாயினரொருவரெவரேயென்றான்.()

## கலி விருத்தம்.

ஈதவன்சொலுமுன்னிவனென்மூ
தாதையென்பதுதன்னுண்மதிக்கும்
போதம்வந்துபொருக்கெனவன்னான்
பாதபங்கயம்வந்துபணிந்தே. (கூரு)

தானெழுந்திருதாழ்குழைதொட்டு
வானிலங்குகைமாறியவன்று
ளானகஞ்சமதற்குளும்வைத்தே
நானிடம்பனமோகமவென்றான். (கூசா)

தூரநின்றவனீதுசொலாமுன்
பேரநின்றபிதாமகனுந்தன்
றீரநெஞ்சுதெளிந்துணர்வெய்தி
யாரவன்பிணைடாசியுரைத்தே. (கூஎ)

வெய்யபாவனைமெய்யிதுவென்றே
செய்யயானுமருண்டுதிகைத்தேன்
வையம்யாவுமயங்குறுமார்க்க
மையநீயலதாரிதுசெய்வார். (கூஅ)

ஒண்டுவாபரவந்தமதுன்னைக்
கண்டுபாவனையாமிதுகால
மண்டுமூப்புவருத்திய தன்னா
லண்டுசிந்தையயர்த்துளதாமால். (கூகூ)

உந்தையென்கணுலோபனுமுன்றாய்
நந்திருட்டணைநங்கையுநன்று
யிந்தவூரிலிருக்குநர்கொல்லோ
மைந்தவாழிகொல்வஞ்சனையுன்பால். (க00)

கூறசத்தியனென்றொர்குமாரப்
பேறுபொற்பொடுபெற்றனையென்றே
தேறுபற்பலர்செப்பமகிழ்ந்தோ
மீறின்மற்றவனெங்குளனென்றான். (க0க)

இந்தவாய்மொழிகேட்டவிடம்பன்
றந்தைதாதைதனக்கவன்றன்பால்
வந்ததாமிகுவாழ்விடைவைகு
மந்தவாறுரைசெய்குவதானான். (௧0௨)

மன்னனேவநின்மைந்தனுலோப
னென்னையீன்றதிருட்டணையென்னு
மன்னையோடரசாட்சியினுற்றா
னன்னலம்பெறுகேரளநாட்டில். (௧0௩)

யானுமென்மனைவஞ்சனையென்னு
மானுமன்னவண்மைந்தனுமாகிக்
கோனுநீயுமருள்செயக்கொண்டே
தானிம்மாநகர்தன்னிலமர்ந்தேம். (௧0௪)

ஈதுவஞ்சமியற்றியெவர்க்குஞ்
சூதுசெய்துசுகத்திலிருந்திப்
போதுவந்துபுகுந்தநின்னம்பொற்
பாதசேவையும்பண்ணுதல்பெற்றேன். (௧0௫)

சிரமமற்றொளிர்தெக்கணராடா
புரம்விடுத்திதுபோதிந்நகர்க்கே
வரவுபெற்றதென்மாதவமேனுங்
கருமமுற்றதுகட்டுரையென்றான். (௧0௬)

மாற்றமன்னதுகேட்டுமகிழ்ந்தோன்
வேற்றுமன்னவரால்விறன்மோக
னாற்றமெஞ்சினனென்றுரைகேட்டிங்
காற்றுறாமலடுத்தனனென்றான். (௧0௭)

இன்னவாய்மொழிகேட்டவிடம்ப
னென்னலார்சிறிதோங்கினரென்றே
சொன்னவார்த்தைதொனித்துளதானம்
மன்னன்வாழ்வுறுமாநகரத்தும். (௧0௮)

ஆயதன்மையறிந்துநம்மன்ன
னேயபூதலமெத்தலத்துள்ளுந்
தூயதானமெவற்றினுந்தூய்தா
மேயகாசியிதென்பதனாலும். (௧0௯)

நீரகச்சடைநித்தனுமாதுந்
தாரகப்பிரமந்தனைச்சாற்றி
யாரிறக்கினுமாங்கவர்சென்மம்
பேரமுத்திபெறச்செய்தலானும். (கக0)

மொய்த்திடுங்கொடுமூடர்தமக்கு
மத்தர்தம்முருவாக்குதலானு
மெய்த்தவஞ்செய்விவேகரினத்தோ
ரித்தலந்தனிலெய்துவரென்றே. (ககக)

பற்றலார்பகைபற்றறவாணுண்
முற்றமோதமுயன்றதிமோக
னிற்றைநாளிவணெய்துதுமென்றே
யொற்றர்தங்கையிலோலைவிடுத்தான். (ககஉ)

நிருபன்மோகனிந்நீணகர்க்கிந்நாள்
வருவதுண்மையம்மன்னவன்வந்தாற்
கருமமீதுகருத்திதுவென்றே
தெரியுமேலவைச்செய்கையினென்றான். (ககங)

அன்னவாசகங்கேட்டகங்காரன்
இன்னமாநகரின்கண்விவேக
மன்னனேவரின்மால்சிவபத்தி
மின்னனாரவன்மேலருள்செய்வார். (ககச)

அந்தமாதரருட்டுணைபெற்றால்
வந்தமோகனுமற்றுளயாமு
மெந்தவாறவரோடெதிரிட்டுச்
சிந்தவேசெருச்செய்குவதென்றான். (ககரு)

ஈதுகேட்டவிடம்பனுங்காம
னாதியோர்பொரிலவ்வரிபத்திக்
கோதில்யோகினிகூரருட்பார்வை
மீதுறாதவ்விவேகற்குமன்றே. (ககசா)

தூர்த்தராய்மனச்சுத்தியுறாதார்
தீர்த்தமாடித்திருத்தலந்தோறு
மூர்த்திசேவைமுடிக்கினுமுண்டோ
வார்த்தநற்கதியாங்கவர்க்கென்றான். (ககஎ)

இடம்பாங்காரச்சருக்கம் முற்றிற்று.

ஆகூ விருத்தம்- ருஎச.

## கஉ – வது, மோகன்காசிபுகுசருக்கம்.



கலி நிலைத்துறை.

இன்னவாறவரிருவரும்பகர்ந்தினிதிருக்கு
மன்னவேலையில்வித்தியாபுரத்தினுக்கரசாச்
சொன்னமாமகன்றனக்குமாமணிமுடிசூட்டி
முன்னன்மோகனக்காசிமாநகர்செலமதித்தான். (க)

வெய்யதுன்மதித்தேவியும்பாஷண்டவிஞ்சைத்
தையலுந்தொடர்ந்திருபுறத்தினும்வரத்தவிரா
மையல்கூர்வுறும்பெருங்கடற்றனையெம்மருங்கும்
பையராவரசுமிழ்ந்தவெவ்விடமெனப்படர. (உ)

எதிருந்தன்மருளொனுங்களிறெங்கணுமேக
வதிரும்பல்கதியைம்பொறித்துரங்கமுமடரச்
சதிருறும்படிமனோரதந்திசைதொறுந்தாவ
முதிருமாமழைக்கணமெனப்பழிப்பறைமுழங்க. (ங)

கொடிநெடுங்குடைகுஞ்சஞ்சாமரையெனக்கூறு
நெடியசின்னங்கடன்னியற்கேற்பவைநெருங்கக்
கடியவஞ்சகப்பாவமென்பவையெலாங்கலந்தோர்
வடிவுகொண்டெனச்சென்றனனுலகெலாமயங்க. (ச)

ஏகுமந்நெறிச்செல்வுழிநரையான்போத்திலகுங்
காகமற்றிவைவலத்திருந்திடஞ்செலக்காடை
தோகைமாமயில்வலியனென்றிணைப்புட்டொகுதி
சேகுறும்படிக்கிடத்திருந்தெதிர்வலஞ்செல்ல. (ரு)

இன்னபுட்குறியெங்கணுநிகழவந்தெய்து
மன்னர்மன்னவன்வரவுதமொற்றினன்மதித்தே
யன்னவல்லகங்காரனுமிடம்பனுமறிந்து
சொன்னயோசனையிரண்டெதிர்கொண்டுமுன்றொடர்ந்தார்

தனைவணங்கினர்தங்களைநோக்கியத்தலைவன்
மனையுமக்களும்வலியரோநுமக்கெனமன்னு
நினதருட்டுணையெமக்குண்டுவாழியநின்றோ
மினையயாவையுமரியதோவெங்களுக்கென்றார். (எ)

பரவுமவ்வகங்காரனைப்பின்னரும்பார்த்துன்
விரவுதேயம்விட்டிவண்வந்ததென்னென்றுவினவப்
புரவலன்றனைப்போற்றிநல்லொற்றரார்ப்புகுநின்
வரவுகேட்டுனைக்காணியவந்ததென்வரவால். (அ)

என்றவன்சொலக்கேட்டலும்வேறென்றுமில்லைகொ
ணின்றனுட்டிடையென்றலுமில்லையென்றுநிகழ்த்தித்
துன்றுவார்தெவ்வரிங்ஙனமென்னுமோர்சொற்கேட்
டொன்றியீங்கதையுணர்குவான்வந்ததென்றுரைத்தான். ()

அங்கவ்வாய்மொழிவினவலுங்கள்வர்போலவனி
யெங்குமீதொருபொய்யினைப்பிதற்றிமற்றெவரோ
மங்குல்வானிடைமின்னெனமறைந்தனர்வருங்கொல்
சிங்கவேறெதிர்சிந்துரங்களுமென்றுசிரித்தான். (கo)

அவமதித்திவைகேட்பவரறிவிலராமென்
றுவமையற்றபல்படைபுவியிடம்பெறுதோங்கக்
கவுடதேயனுமிடம்பனுமுன்செலக்கலங்கித்
தவமொதுங்கவக்காசிமாநகரிடைச்சார்ந்தான். (கக)

திகழவெங்கணுமலங்கரித்திலங்கொளிசேரு
நகரையப்பிரதக்கணமாயதினடந்து
பகலினும்புகும்வல்லிருட்பிழம்பெனப்படர்ந்து
சிகரகோபுரப்பைம்பொன்மாளிகையிடைச்சேர்ந்தான். ()

துன்மதித்திருத்தேவியோடம்மனைதுலங்கும்
பொன்மணித்தவிசேறினன்வைகியபோதி
னின்மலர்ச்சரண்சரணெனத்தொழுதயனின்ற
சின்மதிப்பலரவரவர்தமக்கருள்செய்து. (கரு)

எம்மருங்கினுமெவரையும்வரிசையினிருத்தித்
தம்முகங்களிற்றனதுகட்டுணைமலர்சாத்தி
வெம்மடங்கல்போற்பாஷண்டவிஞ்சைபால்வினவு
மம்மதங்கொடுமோகவேந்தின்புறுமந்நாள். (கச)

மோகன்காசிபுகுசருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ருஅஅ.

# கக-வது, சாருவாகச்சருக்கம்.



## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

எத்தலங்களும்புகுந்துசாருவாகன் படிப்போரினந்தற்சூழ,வத்தலங்கடொறுந்தன் வித்தையனைத்துமங்கங்கேநிறுவியவனியெங்குஞ், சுத்தமுறுவிரதபங்கஞ்சூழ்வித்துத்தாழ்வித்துச்சுருதிநூலைக், கைத்தசிந்தைமாமோகன்வைகியகாசிப்பதியிற்கடிதின் வந்தான். (க)

வந்தவனம்மாமோகமன்னன் வைகுமாளிகையின்வாசலெய்திநந்தம்வரவிவ்வுலகநாயகருக்குரைத்திரென்றுநவில்லோடு, மந்தமொழியவ்வாயிற் சோத்திரேந்திரியனென்பானரசன்பாற்போய்ப், புந்திமகிழ்வுறவணங்கிப்போற்றிசெய்தங்கவன்வரவுபுகன்றன் மன்னே. (உ)

இருளனையமதிச்சாருவாகனங்ஙன்வந்ததுகேட்டியன்மாமோகனருகிலிவணழைத்தி யென்னவவ்வாயிற்காவலன்சென்றையவீங்கு, வருதியென்றுபுகுத்தலுமேவந்துமன்னர்க்காசிசொல்லிவழுத்தியன்னான், கருணையொடுமயற்றவிசிற்கலந்துவைகித்தான் புரிந்தகருமஞ்சொல்வான். (ங)

ஐயநினதருட்படிசென்றுரணஞ்சொன்னெறிவிலக்கியவனியெல்லா, மையலுறும்படிக்கென்விஞ்சைமார்க்கத்திலெவர்க்குமுள்ளம்வருவித்தப்பால், வெய்யபகைத்திறஞ்சிறிதுவிளைந்ததையுங்களைந்துநின்பான் மீண்டேன்பின்னுந், துய்யதிருத்தலங்கடொறுங்கலிபுகுந்தானவனுமிந்நாட்டென்னுமென்றன். (ச)

என்றலுமேயம்மோகன்சாருவாகனைநோக்கியெவ்வாறிந்தத்துன்றுகடற் புவியோருன் சொற்கேட்கப் பயிற்றியதுசொல்வாயென்னத், தன்றிறல்விஞ்சையைப்புகன்றுதர்க்கமிடும்வைதிகத்தைத்தள்ளித்தான்போய், வென்ற விசயத்தையந்த வேந்தன் மனங்களிகூரவிளம்புவானல். (ரு)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எடுத்தவுடற்றனன்றமான் மாவென்றேறிபிதனையல்லால்வேறுளதாமிதுபோய்ப்பின்னை, யடுத்தபரலோகத்தும்பொசிப்பதுண்டாமறம்புரிந்தாங்கதன்பயனையென்னுமாசை, கொடுத்துமதுரக்கனிகைப்பலமாய்ப்பெற்றுங்கொள்ளாமலந்தரத்திற்குளிரத்தெண்ணீர், விடுத்துவளர்த்தொருதருவையிரதமூறுமென்கனியாங்கதிற்பெறுவார்வினையம்போலும். (சூ)

வள்ளமுலே மாதரனு பவமுறுமல்வாலிபம்வீண் போகவுப வாசஞ்செய்துந், தள்ளரியதவமுயன்றுங் கனிகாய்தின்றுந்தாங் கெட்டுங்கேடுபிறர்தமக்குஞ்சூழ்வித்,துள்ளது சொல்பவன்றனே ப்பொய் சொல்வோ னென்று முறுவிழியிற்றேன்றுததுண்மை யென்று, விள்ளுமவன்றனேமெய்சொல்வோனென்றும்விளம்பு துர்ப்புத்தியரிவர்போல்வெய்யோர்யாரே. (எ)

நெட்டுடலேயிருகூறுய்ப்பிளந்துசிவனிற்பததிற்கண்டவரார் நீர்தாம்பாரும்,விட்டுடலேயதுபோனவழியார்பார்த்தார்விண்ணு லகிலிருந்ததையார்விளங்கிவந்தா, ரெட்டுணேயவ்வளவிதற்குண் மெய்யுண்டானுலின்றுமுதல்யான்சாருவாகனென்னுங், கட்டு ரையும்வேண்டேன்பாஷண்ட விஞ்சைக் கல்வியையு மெவர்க்கு மினிக்கழறிடேனல். (அ)

எவ்வுயிர்க்கும்பிறப்புமவயவமுமொக்குமிதில்வருணபேதமுள வென்றுன்மேலா, மவ்வருணத்தவர்க்குறுப்பொன்றதிகமுண் டோவாகாயந்தனினின்றுமவர்வீழ்ந்தாரோ, செவ்வியவர்நரை திரைமூப்பிவைதாமின்றித்தீர்வையிற்சாக்காடுமின்றிச்சிறந்தார் கொல்லோ, கவ்வையிலாண்பெண்சாதியிரண்டினல்லாற்காசினி யில் வேற்றுருவங்கண்டார்யாரே. (கூ)

பொலிவுறுதாரம்பரதாரங்களென்றுபொறித்தகுறியுளதோ தம்பொருளீதென்று, மிலகுபரதிரவியமீதென்றுமாங்கேயெழு த்துவெட்டியிருப்பதுண்டோவெப்பெண்டிரும்,வலியவருக்கெப் பொருளுந்தமதன்றேகைமாட்டாதார்பிறர்மனேயாண் மற்றோர் செம்பொ,னலியிலதிபாவம்வரும்பழிமேலுண்டுநரகமென்றுபுக ல்வரெந்தநாளுந்தானே. (க0)

பூதமொருநான்கேதத்துவங்களின்பம்பொருளிரண்டேபுரு டார்த்தம்புலன்களாறே, யேதமிலார்கண்டபிரமாணந்தோற்று மிவ்வுடலேயான்மாவாமிறப்பேமுத்தி, வேதமதன்பொருளி வையேயென்று மேனுள் விண்ணவர்க்குச் சற்குருவாய்விளங்கு மாசான்,சாதுரியச்சாத்திரமாய்மகவானுக்குத்தலேநாளிற்சொற் றது போற்றுன்வேறுண்டோ. (கக)

வானமுதமெனவிரதமலிந்ததெண்ணீர்வாவிதமதருகிருக்க மடுத்துண்ணுமற், கானலேநீரென்றேடியுழலுவார்போற்கைப்ப லமாய்க் கிடைத்தவின்பங் கடிந்து புத்தி, யீனர்சிலர் சொன்ன

பொய்மை மெய்யென்றெண்ணி யிவ்வுலகிற்பற்பல பேரிரண்டுங் கெட்டுப், போனவர்க்குமின் பமுறவிவ்வாறேதிப்புத்திநல்கிரம மியலிற்பொருத்தினேனால். (கஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஓதியாவரும்படிக்கும்பலகலையில்யான்றெரிந்தீங்குரைக்குந் தண்ட, நீதியாமநுநீதிவார்த்தையெனுஞ்சாத்திரமேநிலைமையீது சாதியாதிருப்பதெந்தச் சாதியாகிலுமுளதோ தண்ணார்கங்கைக் கோதிலா ரமுதமுண்டார் கூவலூறு புனலையுமுட் கொள்வார் கொல்லோ. (கங)

மாமகங்கள்புரிவதென்றுவான்பொருளையுங்கெடுத்துவயிறும் வாடத்,தாமமுதமுண்ணமற்சார்ந்தவர்க்குமிடரியற்றித்தழல்வா ய்வெம்பித், தூமமுகத்தினுஞ்சுழன்றுதோகைநல்லாரனுபவமுந் துறந்துசுத்தப், பாமரராய்விழற்கிறைத்துப்பட்டனராலினையரிந் தப்பாவமுண்டோ. (கச)

தீரமுயல்வேள்வியுஞ்செய்திரவியமுந்தானிங்குத்தீர்ந்துமீட்டும் பேரரியவிசும்பதனிற்பின்பவர்போயின்பமதுபெறுவேமென்றல் வேரொடுந் தீப்பட்டு வெந்த வெங்காடு கிளைத்தெழுந்து மீட்டு முண்டா, யாரமுதக்கனிதரவாங்கதனிடைத்தாம்பெறநினைவா ராசைபோலும். (கரு)

பிறந்தவனியூடிருந்தார்தென்புலத்தோர்தமைக்குறித்துப்பி றர்க்கிடுஞ்சோ, றிறந்தவர்தம்பசிதீர்க்குமென்பதுண்டேன்முன் புநெய்யற்றிறந்ததீபஞ், சிறந்தசெம்பொற்றகளிமல்கத்திரும்ப மிகநெய்விடலத்தீபம்பின்னு, முறுந்தகையுண்டாமாகிலொக்கு மொக்குமனையர்சொல்லுமுண்மையாமே. (கசு)

சேணுலகொன்றுண்டதற்குச்சென்றனர்தந்தமரிறந்ததிதி யினிங்கே, பூணுருசிபெறவொருவர்க்குதவிலவர்பசிதீர்ப்பதுள தாமென்றூற், பூணுறுமேற்றளத்தொருவன்பசிக்கவைத்துக் கீழொருவன்பொசிக்கவைத்துக், காணுமிவனுண்டதவன்கடும் பசிதீர்த்துள தெனிலக்கருமமெய்யால். (கஎ)

எப்பொருளெப்பொழுதெவருக்கெத்தகையிலெய்தினுமதிகழ் வுறுமலப்பொழுதப்பொருளதனைற்பூசிமுடித்துண்டுடுத்தலவை யெந்நாளு, மெய்ப்பலமா மாதலினன் மேவுடலே யான்மா நன்

மின்னார்போக, மொப்பரிய முத்தி கண்டதே காட்சி யுண்டதே யுறுதியென்றான். (௧௮)

மண்டுபோரடற்சாருவாகனிவைசொலக்கேட்டுவருஞ்சந்தேகனுண்டதேயுறுதிகண்டதேகாட்சிபிறிதிலை மற்றொன்றுமென்றால் விண்டதோர்கிருச்சிரஞ்சாந்தபனமுதலரிதாயவிரதம்யாவும்,பண்டையோர்முயல்வதென் கொல்புகலென்றானதற் கினையபரிசு சொன்னான். (௧௯)

பூதலமெங்கணுநமதுபொருவருநூலுணர்ந்துதம்மிற்புணர்ந்துகாமக், காதலருங்கன்னியருங்களிகூருமினியநலங்கண்டாற்றுமல், வேதமொழியென்றுமதுமெய்வசனமென்றுமின்பவிகடஞ்செய்யும், பாதகர்வஞ்சித்துலகிற்பற்பலர்க்கத்துர்ப்புத்திபயிற்றல்செய்தார். (௨0)

சிறுபொருளீந்திடலதுமேற்செம்பொனுலகளிக்குமென்றுந்திகழ்மின்னார்பாற், பெறுசுகமீங்ககற்றிலது பின்பரமபோகநலம்பெறலாமென்று,மறியவுரைத்ததற்குவமையடுத்தசெய்யிற்றெளித்தவிதையாங் கேமண்ணே, டுறினுமது மீட்டும்விளைந்தொன்றனந்தமாப்பலிப் பதொப்பாமென்றும். (௨௧)

வீணுகப்புகன்மொழியைமெய்யெனவுட்கொண்டிதுநல்விரதமென்று, நாணுளுந்தங்களைத்தாமேநலிந்தூண்டுறந்துமற்றைநலமுநீக்கிக், காணுததெள்ளமுதைக்கனவிலுண்பார்போற்கண்ணுங்கருத்துங்கெட்டுச், சேணொன்றுளததற்குட் சென்றுபயன்பெறுதுமென்றுசிந்திப்பாரால். (௨௨)

சுந்தரமங்கையர்களபத்துணைமுலைதோய்ந்தநுபவிப்பார்சுகலீலைக்குஞ், செந்தழலிற்பயின்றும்விரதம்புரிந்துமுபவாசஞ்செய்தும்பிச்சைக், கெந்தமனைதொறும்புகுந்துமிப்படிவீண்டுயருழப்பாரிடர்க்கும்பார்க்கி, லந்தரமெத்தனைகாணுமம்புவியின்மூடருமீதறியார்கொல்லோ. (௨௩)

என்பவையாங்கவன்புகலச்சந்தேகனின்பமொக்குமிதற்குளேயுந், துன்பமும்வந்திடையிடையேதுடர்வதுண்டேயென்றினையசொல்லாமுன்ன, மென்புனலினுரையென்றும்வியனெல்லினுமியென்றும்விடுவாருண்டோ, வன்புடையோர்துன்பகற்றியின்பத்தையெந்நாளுமடைவரென்றான். (௨௪)

அன்னமொழிகேட்டலுமேயமுதிருக்கவிடநுகர்வாராரேநீமுன், சொன்னமொழிக்குத்தரமுஞ்சொலவுளதோவென்றுசெங்கைத்துணையாற்புல்லி,மன்னவனச்சாருவாகற்குரியவரிசைசெய்துமகிழும்வேலைத்,தன்னிகரிலாக்கபடிதன்கொழுநனங்குவந்துதலைப்பட்டானால். (உரு)

சாருவாகச்சருக்கம் முற்றிற்று.

ஆ. விருத்தம்-சுகந.

---

## கச-வது, கலிச்சருக்கம்.

---:*:---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வெங்கலியன்வந்தெதிர்வணங்குதலுமன்னவன்விழிக்கருணையா
லிங்கினிதிருத்தியெனவன்னவனருட்படியிருந்தவுடனே
யங்கவன்முகத்திலகத்துறுநிகழ்ச்சியையறிந்தயலுளோர்
தங்களையகற்றியவனுற்றவகையென்கொலவைசாற்றெனலுமே.

மற்றவனெழுந்தெதிர்வணங்கினனிருந்துபினுமண்டலமெலாங், கொற்றவநின்னன்பொடுதொடர்ந்தனனிகழ்ந்தநெறிகூறவெளிதோ, நற்றலமடங்கலும்விவேகன்முதலோர்செயனடந்துமுளநம், மொற்றருரைசெய்ததுவுமுண்மையவர்பொய்ம்மொழியுரைத்திடுவரோ. (உ)

புண்ணியசிவத்தலமனைத்துமுளயோகினிகள்பொங்குதழன்முக்
கண்ணுநிமிர்கோபமுநெறித்தபுருவத்தொடுகடித்தவெயிறு
மெண்ணரியகைப்படையொடேந்துதிரிசூலமுமெடுத்தகயிறும்
வெண்ணிறவிபூதியணிமேனியுநமக்கெதிர்விழிக்கவசமோ. (ங)

பொங்குமரிபத்தியெனும்யோகினியுமங்கவர்புகும்பதிதொறுஞ்
சங்கமொடுசக்கரமும்வாள்கதைநெடுஞ்சிலைதரித்தகரமும் [ற்
வெங்கனகனைப்பொருதசிங்கமெனவேயழலும்வெஞ்சினமுமே
றுங்கமணியும்மிலகுநாமமுமடுத்தவுயிர்சூறைகொளுமே. (ச)

ஒக்கவருமன்புளவிவேகனினமாயினருழைப்பெருகுதம்
மெய்க்கருணைகூர்விழியுமின்சொன்மொழியுஞ்சவுமியப்படிவமுங்
கைக்கமலநல்குமபயக்கொடையுமாயியல்கனிந்துரியதம்
மக்களையணைத்துடையதாயரெனலாயினரம்மங்கையர்களே.(ரு)

நந்தமருருக்கொடவர்தந்தமுருமாறிமிகுநற்றலமெலாம்
வந்தமனிதர்க்கணையர்வாய்மொழிபயிற்றியுண்மறைந்தவர்கடஞ்
சிந்தையைமுகக்குறியினடியிவர்தெய்வமெனல்தேர்வுறுமுனே
யந்தவரிபத்திசிவபத்தியெனுமாதரையடுத்தனர்களால். (கூ)

அத்தகைய ராயினரை யண்மியுறைதெய்வமரை யடுத்துமுனநாள்
மெய்த்தவ ம்ருகண்டுமக னத்தனருள்பெற்றிடினும் வெம்மறலி
போய்க், கைத்தலநெடுங்கயிறுவீசியதெனப் புடைகலந்தனனெ
டுஞ், சத்தியவடாள்கொடெனையெற்றுமுன்விலங்கியுயிர்தப்பின
னரோ. (எ)

பண்டனையயோகினிகள்பக்கலிலிருந்தசிலபத்தரையுமியா [ந்
னண்டிமகனைக்கொடவர்தாதையைவதைத்துமுளனுரெனினெடு
தண்டிபிரக்லாதனிவர்சந்ததிதனைக்கறிசமைத்திடல்சிறுத்
தொண்டனொடுதேவியுமுளத்திடைமதிக்கவினைசூழ்ந்துமுளனல்

ஈனவினைசெய்தெனையடுத்தனனசாமிளனிறந்தொழியுநாட்
டானனையன்மக்களைநராயணனெனுமுனெதிர்சண்டனையுமே
யானவரிபத்தியெனுமங்கவடுரந்தனளவ்*வங்கிலனெனுங்
கானவனைமற்றவள்புரத்தல்சிவகங்குலிலொர்காதையலவோ.(கூ

நம்மையுறவாயினர்செய்புன்கருமமங்கவையுணன்மையதுபோற்
றம்மையறியாதொருசெயல்செயினுமன்னவர்தமைத்தழுவியே
யெம்மைநினைவோரினையரென்றுயர்தலங்கடொறுமிப்படிபெருங்
கொம்மைமுலையோகினிகள்செய்புமனியாயமெவர்கூறுமவரே.

பூதலமனைத்து முளவாகிய தலங்களிடைபோ முனெதிரே, காத
லொடுவந்துகைகலந்தடிவணங்கினர்கடிந்ததனைவிட், டாதரவொ
டுஞ் செபதபங்களின் முயன்றுபுனலாடி யெனையப், பேதையர்
கள்வன்புகொடுபார்த்துமிலரென்னொடொருபேச்சுமிலரால். ()

இத்தகைபுகுந்ததுதலங்கடொறுநம்பகையதின்னமுயரால்
வித்தினிலெழும்படியெனத்தலையெடுக்கிலெவர்வெல்வரதலாற்
சத்துவசிரத்தையரிபத்திசிவபத்தியருள்சாந்திமுதலோர்
மொய்த்துபநிடத்தியைவிவேகனொடிணக்கவுமுயன்றனர்களால்

கற்பனைசெய் திப்படிதலங்கடொறும்யோகினிகள்காத்தமை
யினுற், பற்பலர்புரிந்தவினையப்புறமும்வந்ததுபடர்ந்துவிடிலார்
நிற்பவரவர்க்கெதிரதற்குரியசெய்திறநினைத்தியெனவே,முற்பட
நிகழ்ந்ததுமறிந்ததுநெடுங்கலிமொழிந்தனனரோ. (கங)

---

* அங்குலன் எனவும்பாடம்.

அன்னமொழிகேட்டெழுசினத்தொடுபயத்தையுமகத்துளடை
மன்னனதிமோகனிளவாணைகைபுரிந்திலகுமாமுடியசைத் [யா
தின்னதுகொலோகருமமெங்கெழினுமங்கவரையான்விடுவனே
பன்னகநெடும்படமெடுக்கினும்விடுங்கொலுயர்பட்சிபரசே.(கச

அன்னதிறல்யோகினிகளன்புதுணைபெற்றிடினுமம்புயன்மகட்
கின்னமடவார்பலரையேவிமணமெய்தினுமியற்சுமதியாந்
தன்னறிவையன்னவளையஞ்சலெனவந்திடர்தடுத்திடினும்யான்
சொன்னபணிசெய்பவர்நிவிர்த்திமகனுருயிர்தொலைத்திடுவரால்.

என்றினையபற்பலமொழிந்துகவுடேசனெடிடம்பன்முதலாம் [ற்
வன்றிறலினோர்தமையழைத்திரென வேவலரவ்வாய்மையவர்பா
சென்றுரைசெயாமுனயல்வந்தடிவணங்கியிருசெங்கைகுவியா
நின்றவரையங்ஙனமிருத்திவினையுற்றதுநிகழ்த்தினனரோ. (கரு)

மாற்றமவைகேட்டகவுடர்க்கிறைவன்மன்னனைவணங்கிய
டையா, ரூற்றம்விளைகின்றதெனும்வார்த்தையுலகெங்கணுமொ
லித்ததுமெய்யாய், மேற்றலமடங்கலும்வெளிப்படையுமானதி
னிமேலுமவர்போ, ராற்றல்படராமுனமடர்த்திடுவதேசெயலத
ன்றியுளதோ. (கஎ)

பத்தியெனுமாதரைவெலற்கரிதெவர்க்குமவர்பார்வையருள்சேர்
மித்திரரிடத்தில்விடுதற்குரியபேர்தமைவிடுத்தனையர்தஞ்
சுத்தியகல்வித்திடிலிவர்க்கவரருட்டுணைசுருங்குமதன்மே
லெத்திறமிருக்கினுநமக்கதுதொலைத்திடுவதெண்ணமலவே.(கஅ

அல்லதவர்பேரருடவிர்ப்பதரிதாயினுமடற்படையெலா, மொ
ல்லைவரவிங்ஙனமழைத்துரியகாமன்முதலோரொடுமியா, மெல்ல
வருமோர்புடைநெருக்கிலெவர்நிற்பவரெதிர்க்குமவர்தந், தொ
ல்லரணுமப்பொழுதுசூறைபடு மென்றிவைதொகுத்துரைசெய்
தான். (கசு)

அன்னமொழிகேட்டயலிருந்தவர்கள்யாவருமிதன்றியுளதோ
வொன்னலரைவென்றிடவுபாய மெனவோதினருரைத்ததுகொ
ளா, மன்னவனுமென்னினைவிலுன்னியதுமீதெனமகிழ்ந்தருளி
யே, தன்னருகி லொற்றரை யழைத்தவர் தமக்கினைய தானுரை
செய்தான். (உ0)

காமனதிகோபனடலோபன்மதன்மானன்மிகுகற்பனைவிடா
மாமகிணன்மச்சரனிராசதனதன்மனவமானன்வயிரன்
றூமதனெடுங்கலகனதியர்தலத்திவர்தமைக்கொணரநீர் [தான்.
போமினெனநாளவதியிட்டெழுதியோலைகொடுபோக்குதல்செய்

போற்றிநெடுமன்னவனையப்பணிதலைக்கொடவர்போயபினை
யோர், மேற்றிசைமருங்கினுறைமானன்விடுமொற்றன்முடிவேந்
தன்மனைவாய்ச், சாற்றென்வரவென்றனன்மொழிந்தமொழிசா
ற்றியருடந்தபடியே, யேற்றபடிகாவலர்புகுத்துமுனம்வந்தவனி
றைஞ்சிமொழிவான். (உஉ)

அந்தமதிநாதபுரமானனினருட்பணிசெயன்பனவனால், வந்
தனனியானிதவனோலையெனலோடுமெதிர்வாங்கியதன்மேற், பந்
தம்விடுவித்தொருவனவ்வயின்விளைந்தவினைபத்திரமிமிர்த், தெந்
தமுடிமன்னரும்வணங்குமிறைவன்செவியிடைப்புகல்செய்வான்

நந்தமரெனத்தருமன்மாரனையடுத்துரியநட்புடையர்போல்
வந்தமரபோகமிவைநல்குவதெனப்பலமகங்கண்முதலா
மந்தவமியற்றுதல்செய்தன்னவனைவஞ்சனைசெய்தப்புறமுமே
லுந்தவிளைவித்தவனினத்தொடுபுகுந்தனனம்மூர்கடொறுமே.()

சாந்தியெனுமாதுமவடாயுமலர்வாணிமகடன்னருகிலே, போந்
தியல்விவேகனொடிணங்கும்வகைகங்குல்பகல்போதனைசெய்தார்
வாய்ந்திடுநம்மாநகரில்வந்தவினைகண்டதிதுமற்றுமினிமே, லாந்
திறமிதெப்படிகொலோவிளையுமென்பவையறிந்திலமரோ.(உரு)

தீட்டுபலவாசகமிதென்றொருவனோதுதல்செவிப்புகுதவே
கேட்டுநெடுமன்னவனவ்வொற்றன்முகநோக்கிமிகுகேடிதுவரக்
காட்டும்விறலத்தருமனைக்கடிதுபற்றியிருகாலினுமுறப்
பூட்டுதளையிட்டுவரமானனொடுநம்பணிபுகன்றிடுதியால். (உசு)

என்றவனையேவியயல்சூழ்ந்தவரைநோக்கியுயரீசனயன்மால் [ற்
வன்றொழிலையல்லதினமுற்றிலர்கள்சாந்தியையவ்வாணிமகள்பா
சென்றுடன்விவேகனொடிணக்கவுளளோவொருசிரத்தைமகளம்
மென்றளிரடிச்சிறுமியின்றுளளெனிற்றனிவிலக்கவரிதோ(உஎ)

பேதையவளைப்பெறுசிரத்தையைமுனுஞ்சில்ர்பிடித்துவர
வே, போதவிடுவித்துமுளனன்னவடனக்கிடர்புகுத்தினுயிர்தன்
காதன்மகளுக்கிறுமகீர்த்திமகளாலுமொர் கணப்பொழுதிலே
யேதம்விளை விப்பனவளைக் கொணர்மினென்னருகி லென்றுரை
செய்தான். (உஅ)

கலிச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம்-கூசக.

## கரு-வது, மித்தியாதிட்டிச்சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விப்பிரமையென்றோதுமென்கொடிநன்குடையவஞ்சிமிச்சா திட்டிக், கப்பணிசென்றுரைத்தலுமேயம்பொன்மணிச்சிலம் பார்ப்பவரவிந்தத்தோ, டொப்புறுஞ்செஞ்சீறடிபேர்த்தோதிம த்தின்பெடைநடைகண்டொதுங்கவானின், மைப்புயன்மின்னெ னத்துவண்டுமருங்கொசியவரும்பொழுதிம்மாற்றஞ்சொன்னாள்.

மின்னனையாய்நெடுநாளாய்வேத்தவையில்வந்திலன்யான் வெள்காதெய்தி, மன்னனையாங்கெதிருறக்கைமுகிழ்த்தாலுமுன் போலவருகவென்றே,யென்னையுமாதரித்தழைப்பன்கொல்லோ வென்றுரைத்தசொற்கேட்டிளங்கொம்பன்னாள், பொன்னனை யாய்நின்னழுகுகண்டுமுண்டோவுருகாதபுருடரென்றாள். (உ)

ஈதுரைசெய்தவடனைப்பார்த்தென்னழகையிகழ்வதுனக்கியல் போவென்ன், வோதுமுனமன்னவன்செய்வரிசையினாற்காண்டி யெனதுண்மையென்று, மாதுநல்லாள்விப்பிரமை பின்னருமிச் சாதிட்டிமயிலேகங்குற், போதுதுயின்றிலைகொனெறிதடுமாறி நடப்பதென்னோபுகறியென்றாள். (ங)

விரைமலர்ப்பைங்குழற்றுதியவ்வுரைசெய்திடக்கேட்டமிச்சா திட்டி,யொருவருக்கோர்மனைவியராமவர்க்குமிராவிழிதுயிலாது லகிலுள்ள, புருடரெனுமெல்லவர்க்கும்பொதுமனையாயவரவர் பாற்புணர்ந்துகூடி, வருவினையேற்கிரவிதென்றும்பகலிதென்று ந்துயில்வதற்குவருமோவென்றாள். (ச)

அன்னசொற்கேட்டவளரசற்கத்தொழில்சம்மதங்கொலென வன்னமன்னாண், மன்னவனேவற்பணியான்மற்றவையான்புரி வதன்றிவரையாச் செய்கை, யென்னதியற்கையினலவென்றீது ரைத்தாளாகினமதிறைவனல்லாற், பின்னருநின்னலம்புணர்ந்த பேரெவரென்றாளதற்கப்பேதைசொல்வாள். (ரு)

இரதிபதியதன்மனடுகோபனவன்மகன்கலகனியலாங்காரன் றருசுதனாகியலோபன் மகனிடம்பனிடம்பனருடனையன்மானன் விரவுமதன்மச்சரன்சங்கற் பனெனத்தகைய பிரவிர்த்தி மாதின் மரபில்வருமனைவரு மென்வனமுலையினிடைப்புணருமகிணரென் றாள். (சூ)

என்றலுமேவிப்பிரமையிரதிமுதன்மனைவியராங்கிருப்போர் தங்கள், வன்றலைவருனைப்புணரின்மனக் கறுப்பங்கவர்க்குநின்

பால்வாராதோதான், பொன்றிகழும்வனமுலையாயென்னுமுன்னவ்வவர்தம்பூவைமாரு, மொன்றியெனைப்புகழ்வர்மற்றெனுறவகற்றிலவர்க்குமுண்டோவூற்றமென்றாள். (எ)

## கலி விருத்தம்.

இவ்வாறுவிப்பிரமையென்பவளொடோதிக்
கைவால்வளைப்பணிகலிப்பவெதிர்வீசிப்
பொய்வாசகம்பலபுகுந்துவிளையாடுஞ்
செவ்வாயிதழ்க்குறிநகைப்பிடைதெரித்தே. (அ)

தகரக்குழற்றொடைசரிந்ததைமறித்தும்
புகுதப்புனைந்திடுதல்போலொருகரத்தாற்
சிகரத்தனத்தினிடைசேருமவர்தங்கூ
ருகிர்தைத்ததிற்பலர்களுடைவெளியிட்டே. (கூ)

பட்டாடைகொண்டிலகுபாதாதிகேச
மட்டாய்மறைத்துமிகவாடைமணம்வீசக்
கட்டாரைவேல்களிருகாதினுமடர்ந்தே
நெட்டாவியுண்டெனையர்நெஞ்சையுமழிக்க. (க௦)

திலதத்திருக்குறிதிருத்துநுதலானு
மிலகப்புரூரமெனுமிந்த்ரசிலையானு
மலருற்றவாண்முகமயக்குமியலானு
முலகத்தில்யாவரையுமுள்ளுயிருருக்கி. (கக)

வந்தாணெடுஞ்சபையின்மாமோகமன்னன்
செந்தாமரைப்பதம்வணங்கிநறைசிந்துங்
கொந்தார்வனத்திலுறைகோலமயிலென்ன
நந்தாவிளக்கமெனநண்ணியெதிர்நின்றாள். (கஉ)

நின்றாளைநோக்கியவணெஞ்சுகளிகூர
நன்றாயிருந்தனைகொலுளிதுவரைக்கு
மென்றானின்னன்புளவெனக்கினிதின்வைகுங்
குன்றாதவாழ்வரிதுகொல்லெனவுரைத்தே. (கங)

நிறந்திகழுமன்பினொடுநீயெனைநினைக்கச்
சிறந்தனனெனத்தெரிவைசெப்புமுனமோகன்
புறந்தனிலிருக்கினுமொர்போதுமெனுளத்தே
மறந்திலனினைப்பதெங்ஙன்வஞ்சியுனையென்றே. (கச)

கடிமேவுகஞ்சநிகர்கைத்தளிர்பிடித்துத்
துடிமேவுசிற்றிடைதுணைத்தனமழுந்த
மடிமேலிருத்திமணிவாயிதழ்சுவைத்தோர்
கொடிமேவுகின்றதொருகோடெனவணைத்தான். (௧௫)

மதுரித்தமென்சொலிளமானேயிந்நாள்யான்
முதிருற்றழுப்பினுமுருக்கணையநின்வா
யதரத்தெள்ளாரமுதருந்தியபின்மீட்டு
மெதிருற்றதாலிளமையின்பமெனக்கென்றான். (௧௬)

மருந்தாரும்வெண்ணகையம்மோகன்மொழிகேளா
வருந்தாரணிக்குளுனதாகமிதனூடே
பொருந்தாதகொங்கைகள்புடைத்தெனதுமார்பத்
திருந்தாலுமங்கதுகொடென்னபயனென்றாள். (௧௭)

அவ்வாறுரைத்தவளழைத்தபணியென்னே
யிவ்வாறெனப்புகலுமெல்லையில்விவேகன்
மெய்வாணிதன்மகளிடத்தின்விடுதூதாய்ச்
செவ்வாயொர்சத்துவசிரத்தைசெலலுற்றாள். (௧௮)

அன்னளைநின்னெதிரியான்பொதுமாதென்
றிந்நானிலத்தவரிசைப்பதுவுமுண்டாற்
பின்னுமலர்க்குழல்பிடித்தொருகணத்தம்
மின்னளைவெஞ்சமணின்விட்டிடுதியென்றான். (௧௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அந்தமொழிகேட்டனுமேயனையசிரத்தையைக்கொணர்வதரிதோமற்றுன், சிந்தனையினினைத்தபடிதிரி புவனத்தினும்புகுந்த தெவ்வரென்போர், தந்தமனைவியர்தமை யுந்தருகவிங் கென்றுரைத்தாலுந்தந்துவந்து, முந்தடிமைத்தொழில்புரியாதொழிவேனேலென்னுமென்முயற்சியென்றாள். (௨௦)

சுகத்தோடொப்புரைக்குமென்சொற்றேகைநல்லாளனையமொழிசொன்னவாயை, முகத்தோடுமுகம்பொருத்திமுத்தமிட்டுக்கொண்டுநெடுமோகவேந்தன், மிகத்தோடுபொருவிழியாயன்னவளைநீகொணர்ந்தால்விறல்விவேக, னகத்தோடுவளர்சுமதியவட்குமிடரிழைத்ததுவாகுமென்றான். (௨௧

அப்பொழுதிற்பொருக்கெனவாங்கவன்மடிவிட்டெழுந்து பெடையன்னமன்னள், கைப்படதுமமலர்முகிழ்த்துக்காவலனை விடைகொண்டுகடிதினேகிச், செப்பரியபுத்தனுங்காபாலிகனுஞ் சமணனுமுன்செல்லாநின்ற,வொப்பருமன்னெறிபுகுந்தப்புனிதை மகடனைக்கவர்தற்குற்றான்மன்னோ. (௨௨)

மித்தியாதிட்டிச்சருக்கம் முற்றிற்று.

ஆகவிருத்தம் - கூகூ௩.

---

## கசு - வது, சிரத்தைபோக்கிடையூற்றுச்சருக்கம்.

---)⁘(---

### கலிவிருத்தம்.

நேருலவுவஞ்சருமன்நீலவிழியாளும்
பாருலவுபூசைபலபைங்கிளியதொன்றைச்
சாரும்வகையென்னமலர்வாணிமகடன்பாற்
சேருநெறியிற்புகுசிரத்தையைவளைத்தார். (௧)

முற்றும்வினையிக்கணமுடித்துமெனவுன்னிச்
சுற்றுறவடர்த்தினியதோகையனையாளைப்
பற்றுவமெனப்பகர்வர்பாய்வரெதிரேவந்
தெற்றுவமெனக்கடிதெழுந்தனர்தொடர்ந்தார். (௨)

மோகன்வரவிட்டவர்முருக்கும்வினைதன்னை
லேகுநெறியிற்றளரிலங்கிழைநெடுங்கான்
மாகடலினுற்றலைமரக்கலமுமானு
ணுகமடரக்குழையுநாண்மதியுமொத்தாள். (௩)

நுண்கொடிமருங்கொசியநூபுரமொடுந்தாட்
கிண்கிணியரற்றிடவகீர்த்திமகளென்னு
மெண்கொடியபாதகியிலங்கிழைசிரத்தைப்
பெண்கொடிமலர்க்குழல்பிடிக்கவரலோடும். (௪)

பத்தியெனும்யோகினிகள்பார்வையருளாலு
மத்திறலுடைத்துணையறத்தின்வலியாலுஞ்
சுத்தைமகளக்கொடியவஞ்சகிதொடாமு
னெத்தியலும்யோகியருளத்திடையொளித்தாள். (௫)

குழையாவன்னெஞ்சியவள் கூந்தறெடுமுன்னே
யுழையாதரிப்பவருளத்தினிடையுற்றுள்
பிழையாமியற்கையர்பிடிக்கினுமுறுதா
ரழையாமலும்புகுவரன்புடையர் தம்பால். (சா)

மையுறுநெடுங்கனவின் மாநிதியைநோக்கிக்
கையுறவரும்பொழுதுகண்டுயிறுறந்தோர்
நையுறுமியற்கையெனநற்கொடிவிலங்கப்
பொய்யுறுமடக்கொடிபுலம்பியவணின்றுள். (எ)

தீயவர்தனித்தனிசிரத்தையவடன்மேற்
பாயவெகுளூற்றனர்பனிப்புயலின்மின்போன்
மேயமயிலக்கணம்விலங்கியதுநோக்கா
மாயமிதுயாவர்செய்தவஞ்சனைகொலென்றே. (அ)

நாடியவளெங்ஙனநடந்திடினுமங்கே
கூடியொர்கணத்திடைகொணர்ந்திடுவமென்று
வோடுவரொருத்தரையொருத்தருணராமற்
றேடுவர்மயங்குவர்தியங்குவர்திகைப்பார். (கூ)

புத்தனொருதிக்கிடைபுகத்திகழ்கபாலக்
கைத்தலனுமோர்புடைகலக்கவொருபக்கத்
தொத்தசமணன்செலவகீர்த்திமகளோர்பாற்
சுத்தைமகளைத்தனிதொடர்ந்திடுமவ்வேலை. (கo)

அங்கனையர்கைவசமதாயினள்சிரத்தைப்
பைங்கொடியெனத்தகையள்பாஷண்டர்தம்பால்
வெங்கணெடுமோகன்விடமேவினளெனப்பா
ரெங்கணுமிடம்பன்மகனெய்தவுரைசெய்தான். (கக)

அவ்வுரைபடர்ந்துலகனைத்துமெழலோடு
மெவ்வயினிருந்தவருமிவ்வுரைமெய்யென்றே
செவ்வியகுணத்தவர்செவிக்குளூநுழைத்தார்
வெவ்வழலினுற்றசுடர்வேனுழைவதென்ன. (கஉ)

வேதக்கடும்பகைஞர்மெல்லியலைவவ்விப்
போதக்கடுந்துயர்புகுத்தினர்களென்பார்
நாதச்சிலம்புபுனைநங்கையவள்செம்பொற்
பாதத்தினுந்தளைபடுத்தினர்களென்பார். (கங)

செல்லாதபெண்கொலைசெயச்சிறிதுமஞ்சா
ரெல்லாரும்வன்கணரிரக்கமிலரென்பார்
நல்லாண்முனைக்கவரிநாணுடையளன்றே
கொல்லாமுனுருயிர்கொடுத்திடுவளென்பார். (கச)

சாற்றுமவடன்னொடொருதாயர்தம்வயிற்றிற்
றோற்றுதருமன்றனெடுசொல்லுவர்கொலென்பார்
மாற்றமதுகேட்கிலினிமற்றவனுமங்தோ
வாற்றருமிடர்க்கடலுளாழ்ந்திடுவனென்பார். (கரு)

கன்னேருநெஞ்சினர்கடுந்துயரிழைக்கப்
பொன்னேயுனக்கிதுபொறித்ததுகொலென்பார்
தன்னேரிலாதமகள்சாந்தியிதறிந்தா
லென்னேபிழைப்பவளிறந்தொழியுமென்பார். (கசு)

துவர்வாய்மடந்தைபடுதுன்பமிதறிந்தா
லவடாயெனும்புனிதையாற்றுவள்கொலென்பார்
தவளாரவிந்தைமகடன்னைநம்விவேகற்
கெவடேதுசென்றினியிணக்குமவளென்பார். (கஎ)

கண்டவணிருந்தெனையர்வந்தவர்கடும்போர்
விண்டவர்சொல்பொய்யலதுமெய்யிதலவென்பார்
பண்டையரிபத்தியருள்பார்வைதுணையுண்டா
லண்டவெளிதோவொருவரங்கவளையென்பார். (கஅ)

இலக்குவனிருப்பவனுமேகவயனீக்கிக்
குலச்சனகியர்க்கும்வருகோளிலைகொலென்பார்
மலர்க்குழலிவட்கனையவாறுவரிலீரைந்
தலைக்கொடியர்பேறவர்தமக்கும்வருமென்பார். (கசூ)

சிரத்தைபோக்கிடையூற்றுச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம்- கூஅ௨.

---

## கஎ – வது, சாந்திச்சருக்கம்.



### கலி விருத்தம்.

இந்தவகைபற்பலரியாவருமிரங்கிச்
சிந்தைதடுமாறவுரைசெய்துவருபோழ்தி
னந்தமில்பெருங்கருணையானுறையுமன்னுள்
சந்ததியெனத்தகையசாந்தியதுகேட்டாள். (க)

ஆயமொழிவெங்கனலினுருயிர்வெதும்பித்
தூயவள்விழுந்துணர்வயர்த்தனடுடித்தாள்
காயமுநடுங்கினள்கலங்கினண்மலங்கிப்
போயவுயிர்வந்திவைபுலம்பலுறுகின்றாள். (௨)

வேறு.

அன்னையேயோங்குமறத்தின்பெருந்துணையே
பொன்னையேயார்க்கும்பொருத்தும்புனமயிலே
தன்னையேயன்றித்தனக்குவமைவேறில்லா
வுன்னையேயான்பிரிந்திங்கோர்பொழுதுமுய்வேனோ. (௩)

நானமுணராக்குறவர்நாற்றமுடைக்குடிலிற்
போனதொருநாவியெனப்புல்லியர்தங்கைவசமாய்க்
கானவர்தஞ்சீறூரிற்கட்டுப்படுமானு
மீனர்மனைவாய்க்கபிலையிற்றுவும்போன்றனையே. (௪)

முன்னுமயனேமுதலாயவானவர்க்கு
நன்னான்மறையோர்க்குஞானியர்க்குந்தாபதர்க்கு
நின்னுன்முடித்தலின்றிநீங்கியவர்நீணியமம்
பொன்னல்வனையாதபூடணமொப்பாக்கினையே. (௫)

தீயோடுவமையொப்பார்தீண்டிச்சிறையில்வைக்க
நீயோபொறுப்பாயுன்னெஞ்சோதுயருழக்குந்
தூயோர்கடாமுமுனைத்தோற்றனரோவன்னேய
மாயோகியர்தம்மனத்தைவிட்டுநீங்கினையோ. (௬)

தங்குதிருத்தெய்வத்தலத்துந்தருவனத்தும்
பொங்குபுனற்றடத்தும்புண்ணியதீர்த்தப்புறத்து
மங்குறவழ்தண்ணூர்மலையிடத்தும்வைகியிவை
யெங்குமுலாவிவரவின்னமுனைக்காண்பேனோ. (௭)

என்றுபலபன்னியிளவீற்றுப்பிணிப்புறவே
கன்றயருமாபோற்கலங்கியந்தக்கள்வர்தம்பாற்
சென்றவொருதாயுமுய்யாடீயினிடையேயானும்
பொன்றியவட்காண்பனங்குப்போயென்றிவைபுகன்றாள்.

அவ்வுரைசெய்தாள்பாலடுத்திருந்தநற்கருணை
மைவிழியினீர்துடைத்துமார்பூடுறவணைத்து
வெவ்வியபொன்மேனிவெதுப்பில்வரும்வேர்வகற்றி
யிவ்வுரைசெய்தன்னுளிதயமுறத்தேற்றினளால். (௯)

ஷை வேறு.

அடர்ந்தவன் றுயர்வரிலரியநற்குறி
தொடர்ந்துனக்கெய்துமோதோளுநீள்விழி
யுடன் றிருப்புருவமுமுனக்குமட்டல
விடந்துடிக்கின்றதீங்கெனக்கும்பார்த்தியால். (கo)

ஆதலாலரிவைநின்னன்னைக்காங்கொரு
தீதிலாதிருப்பதுதிண்ணமன்றெனிற்
கோதிலாதவட்கொருகோளிழைத்திட
வேதிலார்நினைக்கினுமெய்தலாகுமோ. (கக)

தாயினுமினியவர்தமக்குந்தீங்குசொல்
வாயினர்நம்மையிவ்வருத்தங்கண்ணுறத்
தீயினும்வெவ்வுரைசெப்பிலவ்வுரை
நீயினுமெய்யெனநெஞ்சிற்கோடியோ. (கஉ)

திருந்துணர்வின் றிமுன்சேர்ந்தவவ்வுருப்
பொருந்துவெண்பளிங்கன்னபுந்திப்பேதைநீ
கருந்திரள்விடத்தினுங்கடுஞ்சொற்கூறிவீ
ணிருந்துயருழந்திடவெனையுங்காண்டியோ. (கங)

தூயவர்வைகிடந்தோறுஞ்சென் றுநின்
றுயவளிலளெனிற்றறுகட்பாஷண்ட
ராயவரிடத்தும்போயயலொளித்தன்னார்
வாயிடைப்பல்கிடுமாற்றங்கேட்டுமால். (கச)

அவ்வவர்மொழியினின்னன்னையாங்கவர்
கைவசமானதுங்கையுறுதலுந்
தெவ்வருக்கஞ்சியேசென் றுவைகின
ளிவ்விடத்தென்பதும்யாவுந்தேறலாம். (கரு)

ஏகுதுமவ்விடமெவற்றுமென் றுரைத்
தாகுலந்தவிர்த்தனளனையள்வாய்மையாற்
கோகுலஞ்சிறிதிடர்குறைந்தெழுந்துபின்
போகுதுமவ்வயினென் றுபோயினார். (கசு)

கருணையுஞ்சாந்தியுங்கலந்துபற்பல
திருநதித்துறைகளுந்தேவதானமுந்
தருவனச்சூழலுந்தவஞ்செய்வோருறை
யருவரைச்சாரலுமணுகிநோக்கினார். (கஎ)

அவ்விடந்தோறுந்தன்னன்னையின்மையால்
வெவ்விடர்க்கடறனின்மீட்டும்வீழ்ந்தவள்
செவ்வியகருணையுந்தேற்றத்தேர்வுரு
திவ்வணம்பின்னருமிரங்கிச்சோருவாள். (கஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருமம்புரிவோரிடத்துஞ்சதுர்வேதியர்தம்பாலுந்
திருமந்திரங்கண்முதலாஞ்செபஞ்செய்வோர்தந்திறத்தும்
விரதம்புரிவோரயலும்வேள்விமுதலாகியபல்
கருமம்புரிவோர்கண்ணுங்காணுதொழியுங்கலங்கும். (கசு)

தன்னேரில்லாப்பிரமந்தன்னைத்தாமென்றுணர்வோர்
முன்னேபுகுநன்னெறிசேர்முனிவோரகத்துஞ்செல்லு
மென்னேயுன்னைக்காணேனெங்குற்றனையோவென்னுங்
கன்னேர்வன்னெஞ்சினர்தங்கைபுக்காயோவென்னும். (உ0)

இவ்வாறயர்வாடன்பாலிரங்கிக்கருணையென்னு
மைவாள்விழியாள்கண்ணீர்மலர்க்கையாரத்துடைத்துச்
செவ்வாய்மழலைக்கிளியேசிந்தைசிறிதுந்தெளியா
தொவ்வாவெஞ்சொற்புகல்வதொழிவாயென்னமொழிவாள். ()

துன்னார்வலிகைம்மிகலாற்றோற்றுதொளித்துச்சுருப
நன்னுமகள்பக்கலினோநவில்பத்திகளென்றருள்கூர்
மின்னாரவர்தம்பாலோமேலோரெவர்தம்மிடனோ
வன்னாள்புகுதாநின்றாளதுபின்னறிதற்காமால். (உஉ)

சாருவாகன்புத்தன்சமணன்காபாலிகனென்
றோருந்தீயவினையோருறுழைநம்முருவமொளித்துப்
பேருவோமேலனையார்பேசுமொழியாற்சிரத்தை
சேருமிடனீதென்றேதேறலாகுமென்றாள். (உங)

இத்தன்மையினிற்றேற்றியிளங்கொம்பனையாளுடனே
மெய்த்தன்னுருவங்கரந்துமேலப்புறஞ்செல்வேலைப்
பித்தன்கொல்லோமற்றோர்பேயேகொல்லோவென்னக்
கைத்தநெறியூடொருவன்கண்ணிற்காணநின்றான். (உச)

அங்கம்படருந்தீராவழுக்குஞ்சிக்குநாசிப்
பங்கம்புகுவெள்வாயும்பறிக்குங்கேசப்பண்புந்
தங்குநிருவாணமுமோர்தடக்கைப்பிரம்பும்பீலித்
தொங்கல்பிடித்தகரமுந்தொல்லைப்பாசிப்பல்லும். (உரு)

படிமேன்மெல்லவைக்கும்பதமும்பாழாநுதலு
நெடியதிண்கூருகிருநீலக்கரிபோனிறமுந்
துடிமெல்லிடையாளுக்கித்துணுக்கிட்டஞ்சிநரகோ
ருடல்கொண்டதுவேயனையானிவனுரென்னவோடும். (உசு)

மானேசாந்திகேளாய்மாமோகன்றனேவ
ருனேபுரியுங்கொடியசமணனென்பான்கண்டாய்
நீநேரிவன்வாய்மொழியாற்செய்கைதேர்துமென்னு
வானேர்கருணையவளோடப்பானின்ருளிப்பால். (உஎ)

சாந்திச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - எ0௯.

---

## க௮ - வது, சமணனுதியர் சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அத்தகைச்சமணனென்பானடியிணைபரவித்தன்பாற்
சித்தமொத்தன்புகூருஞ்சீடர்தம்முகத்தைநோக்கிச்
சத்தவாரிதிசூழ்வைப்பிற்றகுதிகம்பரசித்தாந்தத்
தொத்தமர்மதத்துநீதியுணர்த்துவானினையசொன்னுன். (க)

அவிசொரிந்தனலில்வேள்வியாற்றுதுமெனவூனுண்ணப்
புவிமிசைப்பசுவைக்கொன்றுபுன்றெழிலியற்றுந்தீயோ
ரெவரையுமிகந்துகாணிலிருவிழிபுதைத்துத்தீங்கு
நவின்மறைநுழைவுருமனுஞ்செவிசேமஞ்செய்தும். (உ)

திகிரியுஞ்சூலவேலுஞ்செங்கையிலேந்திக்கொல்லுந்
தகைபுரிதெய்வதங்கடங்களையிகந்துபின்னும்
வகிர்சடைமுடித்துளோரைமற்றுநீறணிவோர்தம்மைப்
புகலுறுமக்கமாலைபுனைகுவோர்தம்மைநீத்தும். (௩)

அலமரலெவைக்குஞ்செய்யாவயிஞ்சையேபரமதன்ம
மிலகுமெத்தலத்துமென்னுவெண்ணருஞ்சீவகோடி
யுலகிலுள்ளவையெல்லாநம்முயிரொப்பவுன்னியாவுங்
கொலைசெயாநியமஞ்செய்யுங்கொள்கைமேற்கொண்டுபின்னும்.

மெய்யுறமாசுற்றாலுமென்புனறனின்மூழ்காமற்
கையுறமயிரொவ்வொன்ருக்களைந்துறிக்காலின்வைகி
மையுருவறம்போதிக்கும் வாமனூல்வழாதுநம்போற்
செய்யுமாறுடையாற்கென்னேசித்தியாதுலகிலென்ருன். (௫)

அவனதுசொல்லச்சிடனங்கவன்றன்னைநோக்கித்
தவமவரவர்க்குத்தக்கதக்கதென்றுணர்வுறுமற்
புவனியிலெவரும்போற்றிப்புகழும்வைதிகத்தைவாளா
விவணிகழ்ந்துரைத்தனன்றேவிணையிலாவடிகட்கென்றான். (சு)

என்றலுஞ்சீற்றமெய்தியிவன்றனைக்கவர்ந்துபற்ற
வன்றிறற்சிரத்தையிங்ஙன்வருகெனச்சொல்லலோடு
நின்றநற்கருணையஞ்சிநெஞ்சகம்புலர்ந்தாளீன்ற
தன்றிருத்தாய்கொலென்னச்சாந்தியுந்துணுக்கமுற்றாள். (எ)

ஆயிடைவிகடவேடமாய்க்கருந்துகின்மேற்போர்த்து
வாயிடைப்பிறையெயிற்றாள்வந்தனண்மறுவில்சாந்தி
தாயிவளல்லளென்னத்தாமதச்சிரத்தையேயென்
றேயுறுங்கருணைகூறவுளத்துறுமையந்தீர்ந்தே. (அ)

கரும்பெனுஞ்சாந்திநோக்கிக்கருணையைக்கனகந்தானு
மிரும்பும்பொன்னென்றல்போலவினியவென்றாய்க்குமிந்தப்
பெரும்பிறையெயிற்றுப்பேழ்வாய்ப்பெண்ணுக்குஞ்சிரத்தை
யென்ன,வரும்பெயரன்றோநம்மைமயங்குறச்செய்ததென்றாள்.()

தாமதச்சிரத்தையன்னான்றனைச்சென்றுதழுவலோடுங்
காமமங்கவள்பாலெய்திக்கடுஞ்சமணினிதென்றந்த
மாமதத்தவனுமெய்தமற்றநற்சாந்தியோடு
மாமெழிற்கருணையப்பாலவரைவிட்டகன்றவேலை. (க0)

கலி நிலைத்துறை.

தங்கால்பேர்த்துத்தாலபலம்போற்றலைமுண்டித்
தங்காயத்தேமென்றுவராடையதுபோர்த்துப்
பங்காமோர்கைப்புத்தகமேந்திப்பலிநல்காய்
நங்காய்நங்காயெனமனைதோறுநவில்வுற்றே. (கக)

வருவானைக்கண்டிங்கிவனேரோமயில்போலுங்
கருணையென்றேசாந்திவினவக்கடுமோக
னருள்சூடும்போர்ப்புத்தனிவன்றன்னருகேயா
மிருவோரும்பிற்செய்கைதெரிப்பாமெனநின்றார். (கஉ)

அக்காலத்திற்றன்னயலேவந்தடிதாழத்
தக்கார்சூழச்சவுகதநூலின்றகைசொல்லப்
புக்கான்மோகன்புன்றொழிலென்னப்புகல்செந்தீக்
கெக்காலத்தும்பெய்திடுநெய்போலிவைசொன்னான். (கங)

புத்தியினெய்துமெய்பொருளுந்தண்புனலோட்டத்
தத்திறமுந்தீபச்சுடரும்போன் றவைதோன்றி
நித்தியமின்றியடிக்கடிமாயுநெறிதப்பா
தொத்திடும்யாவும்புந்தியல்லால்வேறுருவுண்டோ. (௧௪)

ஒளியுறுபுந்தியகத்துளவாயினுமுருவம்போல்
வெளியுறுமங்கதனிற்பொருள்யாவும்வெளிப்பட்டே
தெளிவுறுபற்பலவாசனையாலிவைதேருங்கா
லளவுறுபற்பலவாயதலான்மற்றவையன்றே. (௧௫)

பற்பலவாசனையும்விடையத்தின்பண்பும்போ
யற்புதமாகியபுந்தியொழுங்கயலலையின்றி
நிற்பதொர்தீபமெனத்தலைநிறுவுதனிகரில்லா
முற்படுசவுகதசித்தாந்தப்பொருண்முடிவென்றான். (௧௬)

இவ்வகையன்னோதியசொற்கேட்டெதிர்நின்றோ
ரவ்வவர்யாருமவ்வகைநன்றென்றப்புத்தன்
செவ்வடிபேணச்செல்வுழியங்கேதிகழ்கோலக்
கைவருபீலிக்குண்டனவன்றன்கண்ணுற்றான். (௧௭)

முன்னேவந்தப்புத்தனையன்னான்முகநோக்கி
யென்னேர்வாராயொன்றுவினவற்கெனலோடுந்
தன்னேரில்லாச்சவுகதன்வெங்கட்சமண்மூடா
வுன்னேர்யானேவெய்துவனென்றேயுரைசெய்தான். (௧௮)

முனிவுற்றிவ்வாறோதியவன்றன்முன்வந்துன்
சினம்விட்டிங்குச்செப்புகநின்சாத்திரநீதி
வினவற்குண்டேனுத்தரமென்னாமெய்க்குண்டன்
றனையப்புத்தனவ்வுரையென்னேசாற்றென்றான். (௧௯)

இவ்வாறிவ்வாறிவ்விருவோருமெதிரிட்டே
யொவ்வாவொவ்வாவெஞ்சொலுரைத்தங்குறைபோழ்திற்
பெய்வானத்தூடொள்ளொளிமின்போற்பிறழ்வீரக்
கைவாள்கொண்டோர்தீவிடமன்னான்கண்ணுற்றான். (௨௦)

செத்தவரென்பணிமாலைபுனைந்துசிரத்தூடே
மத்தமெருக்குவனைந்தெரிபொங்குமயானத்தே
மொய்த்திடுவெண்பொடிபூசிநெடுந்தலைமுடையோடோர்
கைத்தலமேந்திவருந்தகைபற்பலர்கண்டஞ்ச. (௨௧)

குண்டலமேல்வளையென்பிலணிந்துகொடுந்தேற
லுண்டகளிப்பின்மயக்கின்மயங்கியுளஞ்சோரக்
கண்டலமந்துசிவப்பநடப்புறுகாலோடும்
விண்டசொலுந்தடுமாறிடவங்ஙனமேவுற்ருன். (உஉ)

அங்கவனவ்வயினெய்துழிநோக்கினரையுற்றே
யிங்கிவன்வெய்யகபாலிகனென்பவனேயென்னுத்
தங்களுளத்திலுணர்ந்தெதிர்சென்றயல்சார்ந்தேயவ்
வெங்கணனைச்சமணன்னிதுமுந்திவினவுற்ருன். (உ௩)

கரதலமுற்றகபாலவென்வாய்மொழிகாதுட்கொண்
டுரைசெயவல்லையெனிற்புகலீமமுருப்பெற்றே
வருவதெனப்புனைவேடமுமிங்கிதன்வருபேறுந்
தருமமுமுத்தியுமெவ்வகையவ்வகைசாற்றென்ருன். (உச)

அவ்வுரைசெய்தவனுக்கெதிர்மாற்றமவன்சொல்வா
னிவ்விரதங்காபாலிகமென்பதெனக்கன்பாம்
வெவ்வயிரவனுயர்தெய்வதமத்தகைமேலோர்க்கே
செவ்வயினர்ப்பிதமாகவியைந்திவைசெய்வேமால். (உ௫)

என்பொடுவெண்டலையோடுதரித்தழலிடுகாட்டின்
வன்பொடிபூசியதற்குளிருந்துபவாசஞ்செய்
தன்பொடுமாபயிரவமெனுமோமமமைத்தாங்கே
முன்பலியிட்டொருநரனைவிலாவூன்முறைவாங்கி. (உ௬)

மாமதுவாலபிசாரமமைத்ததைவன்றீவா
யோமமுகத்திடையாகுதியிந்துபினுதரத்தீ
யாமதனுக்குமதுப்பெய்துவெண்டலையகலோட்டி
னேமுறவுண்டுகளிப்பதுபாரணமெனலாமால். (உ௭)

இங்கிதுவன்றியுமோர்மணிதன்றனையிகல்வாளா
னங்கடவுட்கெதிர்கண்டமறுத்தொலிநாதிக்கச்
செங்குருதித்தசைகொண்டுயர்பூசனைசெய்கிற்கு
மங்கதுவயிரவமாவிரதத்தியலாமென்ருன். (உ௮)

இம்மொழியைக்காபாலியியம்புமுன்னிருகையாற்
றம்மிருகாதைச்சமணனுமப்புத்தன்றனுஞ்
செம்மியடிக்கடிதங்குருநாமஞ்சிந்தித்தே
கைம்மிகுகோரக்கண்டகனுக்கிதுகழறுற்ருர். (உ௯)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஈதொருவிரதமென்றியாவனேவன்மையாலிப்
பாதகநின்னுற்செய்யப்பணித்தனனந்தப்பாவி
போதனையுட்கொண்டென்னேபுரிந்தனைகொடுமையென்று
வோதினன்சமணன்புத்தனன்னவையொக்குமென்றான். (௩0)

என்றலுங்கரகபாலனெரிவிழித்தெம்பிரானைக்
குன்றவில்லியைச்செஞ்சோதிக்கொழுந்தைமுச்சுடர்க்கண்ணனை
நன்றறிவிக்குமெங்கோன்ஞானதேசிகனைப்பொல்லா
வன்றிறற்பாவியென்றல்வழக்கன்றென்றினையசொன்னான். (௩௧

நங்குருநாதனின்பநயக்குமவ்விரதஞ்செய்யு
மிங்கெனக்கியன்றிடாதவெவ்வுலகத்துமுண்டோ
சங்கரனொடுமெத்தேவர்தமையுமீண்டழைப்பன்வானிற்
றிங்கள்செங்கதிர்மீன்செல்லுஞ்செலவையுந்தடைசெய்வேனல்.

நீரினுலகம்யாவுநிரப்புவனன்னநீரை
யோரிறைப்பொழுதிலுண்பனுலகெலாஞ்சென்றுமீள்வன்
பாரைவிண்ணாக்கிவிண்ணைப்பாராக்குவிப்பனல்லாற்
பேரதிசயம்பல்கோடிபின்னரும்புரிவனென்றான். (௩௩)

சாற்றுமங்கவன்சொற்கேட்டசமணன்மற்றெவனோநின்பான்
மாற்றருமாயைசெய்துவஞ்சித்திவ்விந்த்ரசாலந்
தோற்றுவித்தனனென்றின்னசொற்றனன்சொற்றலோடுஞ்
சீற்றமுற்றழன்றுகண்கள்சிவப்புறவவனைநோக்கி. (௩௪)

ஈறிலாவெம்பிரான்கொலிந்திரசாலஞ்செய்வான்
மாறிலாச்சிவத்துரோகிமலபங்கதாமற்றின்ன
கூறும்வாய்க்குருதிசோரக்கொய்தியான்பயிரவிக்கே
பாறுசூழ்மயானத்துன்னைப்பலிகொடுத்திடுவனென்றே. (௩௫)

கைத்துடிமுழங்கப்பூதகணங்கள்கொக்கரிக்கமேகக்
கொத்திடியிடித்ததேபோற்குமுறிவாளுருவியாங்கே
தத்தடிபெயர்த்துவந்துசார்ந்தனன்சமணனஞ்சிப்
புத்தனைநடுக்கத்தோடும்பொருக்கெனத்தழுவிக்கொண்டான். ()

அன்னவன்றன்னைப்புல்லியயிஞ்சையேபரமதன்ம
மென்னுமச்சமணன்றன்னையெதிருறுகபாலியீசன்
றன்னைநிந்தித்தநின்னைச்சடுதியிற்புகுந்திவ்வாளாற்
சின்னபின்னங்களாகச்சிதைப்பதேதருமமென்றான். (௩௭)

அனையசொற்கேட்டபுத்தனையநின்விரதநீதி
வினவுமித்தவத்தோன்யாதுவிளம்பினுமுளம்பொருமற்
சினமிகுந்தனையனுவிதிர்ப்பதுதருமங்கொல்லோ
வெனவிவையுரைத்தலோடுமெடுத்தவாளுறையிலிட்டான். (௩அ

வாளுறைபுகுத்தலோடுமருட்கபாலிகன்றன்சீடர்
மூளுநின்கோபந்தாழ்த்துமுத்திநம்மதத்துக்கெய்தல்
கேளெனவுரைத்தல்வேண்டுமெமக்கென்றுரனையர்கேட்பக்
காளவெவ்விடமேயன்னகாபாலியினையசொன்னான். (௩௯)

அக்கணிபுனைந்துவெண்ணீறணிந்தெருக்கலருஞ்சூடிக்
கைக்கபாலருமாய்வேடங்கங்காளர்தமைப்போற்பெற்று
மெய்க்கவுரியைப்போலங்கோர்மின்னானரின்பந்துய்க்கத்
தக்கதேமுத்தியீதுசங்கரன்மொழிந்ததென்றான். (௪0)

விண்டசொற்கேட்டவன்னார்விரத்தராயினவர்க்கல்லாற்
கெண்டையங்கண்ணாரோடுகெழுமியின்புறப்பெற்றோருக்
குண்டெனின்முத்தியாரேயுண்மையாய்க்கொள்வரிந்த
மண்டலத்தோரிலென்னுவன்கபாலிகன்முன்சொன்னார். (௪௧)

உரைத்தவர்வாய்மைகேளாவுண்மையிங்கின்னநம்பால்
வரத்திலையிவர்க்கென்றுன்னிமன்னுகைக்கபாலனாங்கே
சிரத்தையையவருகவென்றானெனலுந்தன்றிருத்தாயைக்கொல்
கரைத்ததென்றெண்ணிச்சாந்திகருணையோடலக்கணுற்றாள். ()

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மாண்டமாந்தரென்பினோடுவார்புனைந்தகொங்கையு
நீண்டசேயரித்தடங்கணீலமுங்கபாலமும்
பூண்டசூலமுஞ்சிலைப்புரூரமுங்குரூரமாய்த்
தீண்டுருவிராசதச்சிரத்தையெய்தினளரோ. (௪௩)

அச்சிரத்தையெய்தலும்மடுத்தசாந்திகருணையா
மொய்ச்சிருக்கும்வண்டினங்கண்மூசுமோதிமாதரா
ரிச்சிரத்தைராசதன்னியற்சிரத்தையாகுநம்
மெய்ச்சிரத்தையல்லவென்றுவீங்குதுன்பநீங்கினார். (௪௪)

அத்தகைச்சிரத்தைவந்தவன்கழற்றொழாமுனம்
பொய்த்தசீடரைப்புணர்ந்துகோடியென்றபோழ்தின்வாய்க்
கைத்தலத்தவஞ்சிமெய்கலந்தணைக்கவேயன்னார்
சித்தநெக்குடம்பயர்ந்தோர்மாற்றமின்னசெப்பினார். (௪௫

வேசைமாதரினுமனேகவிதவைமாதரினும்விலைத்
தாசிமாதரினுமனேகர்யாங்கண்முன்றழீஇயபேர்
தேசுலாவுமனையர்கொங்கைசேரினுஞ்சிரத்தைநீ
யேசுறுதணத்தல்போலுமின்பமெங்குமில்லையால். (௪௬)

என்றுபின்னருங்கபாலிதன்பதத்திறைஞ்சியே
நன்றுநம்மதத்தின்பநன்றெனநயந்துவீண்
புன்றொழில்செய்கின்றதின்றுபோக்குகின்றனம்மென
நின்றுமற்றவர்க்கிவ்வாய்மைபின்னருந்நிகழ்த்தினர். (௪௭)

திருவருள்செய்தெங்கடிமைதீர்க்கவேண்டுமின்னமென்
றுருகியுட்கனிந்துபோற்றியோதினரவ்வாய்மைகேட்
டருள்புரிந்துமந்திரித்தொரங்கையோட்டையேந்திவான்
மருவுமாமதுப்பெய்வித்துவாயில்வைத்தருந்தியே. (௪அ)

பருகுதேறன்மிச்சிலைக்கபாலமோடுபார்த்திரீ
தொருவருக்குமெய்துறுதலும்பருக்குமாழிவாய்
வருவதன்றுபாசபந்தமரணமூப்புமாற்றுநம்
மிருவருக்குமன்புவைத்தியாமளித்ததெனவுமே. (௪௯)

திண்கபாலமதுவினைச்சிரத்தைமுந்திவாங்கியே
பண்கள்போலுமின்சொலோதுபவளவாய்மடுத்தியா
னுண்களீதைநுகர்திரென்றளிக்கவாங்கியுற்றதங்
கண்களோடுளங்களிக்கமாந்திபின்னகழறினர். (௫0)

பண்டனேகவேசைமார்தர்பருகுதேறன்மிச்சில்யா
முண்டதாயினுஞ்சிரத்தையுதவுமிந்தமதுவெனக்
கண்டதோவதன்றுவாரிகடையவந்தவ்முதைவா
னண்டர்தாமுமுண்டபோதிலாலகாலமென்பரால். (௫௧)

எதிருமிச்சிரத்தைபின்சொலிரதமெய்தியோகொல்செவ்
வதரமுற்றவாசியேகொலதனியற்கையேகொன்மா
மதுரமுற்றிம்மதுவின்வாசம்வகுளவாசம்வீசியே
பதரியுற்றகனியையும்பழித்ததென்றுபன்னியே. (௫௨)

பருகுகின்றநறவின்மேனிபரபரத்துளங்களித்
துருகியின்பநலமிகுத்துரோமமுஞ்சிலிர்க்கவே
யிருகரங்கள்கொட்டிமற்றிதென்னவற்புதம்மென
வருகிருந்தபேர்நகைக்கவங்கொராடலாடினர். (௫௩)

விழிசிவத்துவாய்வெளுத்துவிண்டசொல்லுமங்ஙனே
தழுதழுத்தயர்த்துமேனிதலைசுழன்றுகிறுகிறுத்
தழலெழப்புன்னகைநகைத்தகங்களித்துமுகம்வெயர்த்
தெழுவர்தட்டிவிழுவர்கெட்டவியல்பர்நட்டமிடுவரால். (௫௪)

தியங்குதம்முனிவைதொன்றுசொல்வதொன்றுசெய்வதொன்
றியங்குகின்றநெறியராகியாவருந்நகைக்கவே
மயங்குகின்றவிருவரும்மதத்துமெய்ம்மறந்துவீழ்
கயங்கள்போலமண்ணின்வீழ்ந்துகண்ணுறக்கமெய்தினர்.(௫௫)

கண்டுயின்றவனையர்தன்மைகண்டவெங்கபாலிநந்
தொண்டரிங்குடம்பயர்ந்துசோரும்லீலைபாரெனுத்
திண்டிறற்சிரத்தையோடுசெப்பும்வேலைவெறிதெளிந்
தெண்டுளங்கவிருவரும்மெழுந்துவந்திறைஞ்சியே. (௫௬)

ஐயவிம்மதத்திலின்பமமரருக்குமிலையெனச்
செய்யவாய்மலர்ந்ததின்றுசித்தியாயதெங்கள்பான்
மையல்கூரமதுராமூறுமதுநினைக்குமுன்னநின்
கையதூடுவந்ததென்னகல்வியென்றுகழறினர். (௫௭)

அத்திறங்கொணறவளைப்பகருமையேகொலட்டமா
சித்தியும்பலிக்குநந்திறத்திலும்பர்மாதரோ
டெத்திறங்கொண்மாதரும்மிமைப்பிலுன்னிலெய்துவார்
முத்திறங்கொளுலகினம்முயற்சியாவுமுற்றுமால். (௫௮)

என்றுசீடருக்கவன்னிசைத்தல்கேட்டசமணர்கோன்
வன்றிறல்கொண்மோகமன்னன்வாய்மைமேலியாமெலாஞ்
சென்றடுத்தகருமமின்றுதீரநற்சிரத்தைமே
லூன்றெழில்செய்தவளையிங்குறச்செயென்றிதோதினன். (௫௯)

அன்னவாய்மையவன்விளம்பவக்கபாலியவளைநின்
முன்னதாகவிட்டுநம்முயற்சியும்முடிப்பனு
லின்னதானமனையள்புக்கிருந்ததானமென்றுதேர்ந்
துன்னதானகணிதநூலினோதிலென்னவுரைசெய்தான். (௬O)

இலகுகுண்டனிக்கணத்தியற்சிரத்தைவைகிட
மலகில்சோதிடத்திலெண்ணியாய்ந்துரைப்பன்யாமெனா
பலவராடிகைத்திரள்பரப்பிநின்றவேலைவாய்
நிலவுமானனறனையங்ஙனேடிவந்துகூடினன். (௬௧)

அந்தமானனெய்தலோடுமனையகுண்டனிங்குநீ
வந்தவாறுபுகலெனுமுன் மன்னன்மோகனுணையாற்
றந்ததூதன்வினைபுரிந்ததருமனைக்கவர்ந்துதாட்
பந்தமானதளையிடப்பணித்தல்வந்துபன்னினன். (கூஉ)

ஆதலிற்கடற்புறத்துமப்புறத்துமறிஞர்சூழ்
மாதலத்துமெய்தியான்வளைத்தபோதுமங்கவன்
போதலுற்றிருந்தவெப்புறத்திலென்றுணர்ந்திலேன்
சோதிடத்துணர்த்தல்வேண்டுநீயிதென்றுதுதிசெய்தான். (கூங)

கருமமிங்கிதெனவுமன்னகணிதனன்றுநன்றியற்
றருமனும்புகுந்துவைகுதானமுஞ்சொல்வேனெனு
மருவுகோளிராசிநாள்வராடிகைக்குளெண்ணியவ்
விருவருங்கரந்திருக்குமிடமிதென்றுநாடினன். (கூச)

அக்கபாலிவதனநோக்கியனையவன்சிரத்தைபோய்ப்
புக்கவாறுகேட்டிமால்புராரிபத்திகாப்பினாற்
றக்கயோகர்தம்முளத்தலத்தவென்றுபின்னருந்
தொக்கமானனுடுகின்றவறனியற்கைசொல்லுவான். (கூரு)

தன்னுடன்பிறந்துவந்ததங்கைநங்கையுற்றதாய்
முன்னிடம்பன்மகனுரைத்தமொழிவினவியன்னவன்
பொன்னுடம்புமுள்ளமும்புழுங்கியேயழுங்கியம்
மின்னுடங்குமிடையினளைவிரைவினாடுதுருவியே. (கூகூ)

புண்ணியத்தலங்கடெய்வநதிகண்மிக்கபுனிதர்சூழ்
திண்ணியற்கிரித்தடங்கள்செழுவனங்கண்மறைவலோ
ரெண்ணியற்றுபதிகண்மற்றுமினையவாயவிடமெலா
நண்ணியச்சிரத்தைதன்னைநாடியங்கம்வாடினன். (கூஎ)

பின்னருஞ்செல்கின்றபோதுபெரியயோகர்தம்முளந்
தன்னினங்கிருந்தவஞ்சிதன்னைவந்துகண்ணுறுத்
துன்னுசஞ்சலந்தவிர்ந்துசொன்னதங்கைதன்னொடு
மன்னிவைகினன்விளைந்தவாறிதென்றுகூறினன். (கூஅ)

## கலிவிருத்தம்.

தீமனச்சமனனிம்மாற்றஞ்செப்பலுந்
தூமதிச்சாந்தியுங்கருணைத்தோகையு
மேமநன்னிதியமுன்னிழந்தவெய்தினு
ராமெனத்தம்முளத்தையநீங்கினர். (கூகூ)

காதுறக்கேட்டவைகருதிச்சாந்தியா
மாதுமக்கருணையும்வலியசோதிடத்
தோதுநம்மையுமிவனுணர்ந்தென்றுன்னியே
போதுவமனையள்பாலென்றுபோயினர். (௭0)

அங்கதுநிற்கநல்லறனைநாடிமுன்
றங்கியமானனைச்சமணனுமியற்
பங்கனைப்புத்தனைப்பார்த்துக்கையுறும்
வெங்கபாலியுமிவைவிளம்பன்மேயினன். (௭௧)

யோகியருளத்தரிபத்தியோகினி
யாகியமடக்கொடியருளின்காவலிற்
சேகிலாத்தருமனுஞ்சிரத்தையோடுறி
லேகியாங்கவரைமற்றேவர்பற்றுவார். (௭௨)

ஆயினும்வயிரவியாமெனன்னையா
மாயியையுன்னியம்மந்திரத்தினற்
றூயயோகியர்மனந்துன்னினர்கண்மேற்
போயிவண்கொணர்ந்திடப்புணர்த்தல்செய்வனல். (௭௩)

எனவுரைத்தொருபுடையிருந்துசிந்தையு
ணினைவுழிக்கபாலமுநெடியசூலமு
மனுமிழ்கண்களுமட்டகாசமும்
வனையும்வெள்ளென்புமாய்வந்துதோன்றினள். (௭௪)

வந்தவடனக்குளமகிழப்பூசனை
தந்தடிவணங்கிமாதவஞ்செயோகியர்
சிந்தையுளறனையுஞ்சிரத்தைதன்னையு
முந்தியென்வயிற்கொணர்ந்துதவுவாயென்றான். (௭௫)

சமணனுதியர் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் ௭௮௪.

---

## ௧௧ – வது, வயிரவிவதைச்சருக்கம்.

——)஫(——

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னுமொழிந்தவுரைகொண்டுதாளிலிடுசெஞ்சிலம்பொலியெழ
துன்னார்நடுங்கநிமிர்செங்கையூடுதுடியுங்கறங்கவிடிபோன் [த்
மன்னுவெழுந்துவருகோபவேகம்வடவாமுகத்தழலொடே
முன்னுமெழுந்தவிடமுந்திரண்டுவருகின்றதென்னமுடுகா. (௧)

அயிறங்குசெங்கைவளைபொங்க வெங்கணனல்சிந்தவந்துகடை
வா,யெயிறங்கிரண்டுபிறைபோல்விளங்கவிருளங்கமெங்குமிலகப்
புயறங்குகுன்றும் வனமுந்தகர்ந்து பொடிமண்டமண்டும் விசை
கண்,டுயிர்தங்குகின்றவுடலங்கண்மங்கவுலகங்களெங்குமுலைய. ()

சூலங்கபாலம்வடிவாள்வில்லம்புதொடுபாசநீடுகதைவெவ் [டிக்
வேலங்குசம்பல் பலகைத்தலங்கண்மிசைகொண்டு செஞ்சடைமு
கோலந்துலங்கவறமொன்றிலாது கொல்லுங்கொலைத் தொழிலி
னுங், காலன்கணங்களொடுமஞ்சவிஞ்சுகதிருஞ்சுழன்றுதிரிய. ()

வெண்டாமவென்புபுனைமாதிவ்வாறுவிரைவிற்புகுந்தெவரும்
வந், தண்டாதயோகமுயல்வாருளத்திலரிபத்தியன்பு தொடரக்
கண்டாள்சிரத்தையறனோடிருத்தலிவரைக்கவர்ந்திடுவதற், குண்
டாமொர்விஞ்சை யெனவுன்னி யேதன்னுருமாறிமற்றிது செய்
தாள். (௪)

காயத்தினுற்றவுயிரைப்புகுந்துகவர்கின்றகாலனெனமா
மாயத்தியோகமுயல்வாருளத்தில்வளர்சுத்தைசந்திகளைத்
தாயற்றிருந்தசிறுபார்ப்பினங்கடமைவெம்பருந்துகொடுவிண்
போயுற்றதென்னவெதிர்பற்றியங்கொர்நொடியிற்புறப்படலுமே

அணியாயவஞ்சிகவரச்சிரத்தையறனோடுகைப்புகுமந்நாட்
டணியாயிருந்ததிறல்யோகர்சிந்தைதகுவேடர்பற்றுமிருபுண்
ணையாயிருந்தவொருசேக்கையாயுமதவேழமுண்டவிளவின்
கனியாயுமந்துகடிதுண்டுபோயகதிர்நெல்லுமாயினதரோ. (௬)

ஆகாதவன்கணதிமாயரூபியறனைக்கவர்ந்தொருபுறத்
தேகாதிறுக்கியொருபாலவன்றனிளவஞ்சியைத்தழுவுரு
மாகால்விசைத்துநெடுவானகத்தின்மதியோடுவெம்பருதியைக்
காகோதரங்கொண்டெழுகின்றதென்னவகல்கின்றகாலையிடையே

பேர்வாள்கரத்தினுழையுற்றபேதைபிழைமற்றிதென்னவினையெ
னோர்வாளழுங்கியுலைவாளயற்றனுடன்வந்தவற்கயருவாள் [ன்
போர்வாள்கடிந்தவிழியின்கண்மாரிபொழிவாள்கருத்துமழிவாள்
சோர்வாடுவண்டுவிழுவாள்கறங்குசுழல்கின்றதென்னவுழல்வாள்

மெய்யோவெதும்பமதியோமலங்கவெயர்வோமுகத்தினுறமா
மையோதிசோரமலரோகசங்கவளையோதகர்ந்துசிதறக்
கையோநடுங்கவிடைபோலவங்கமுழுதுங்கரைந்ததுயர்கண்
டையோவிவட்கிதுறுமோவெனப்பல்பலபேரரந்தையுறவே. (௯)

பொன்றங்குமேனிதளர்வுற்றிவ்வாறுபுலிவாயின்மானெனவற
றன்றங்கையுற்றதுயர்கண்டுவஞ்சிதளரேலெனப்பகர்வுருக் [ன்
குன்றங்கள்கொண்டம்மனையாடுகின்றகொடியாடடக்கைவழுவச்
சென்றங்குதைந்துபுறநின்ற நீலிசெலவைத்தகைந்தமர்செய்தே.

என்ருழ்தடக்கைபரிநாமவாளிலிவள்வன்மையீடுபடவே
வென்ருலகாலமெனவந்தவந்தவெகுருபிநெஞ்சகுலையக் [னே
குன்ருயகொங்கையொடுநாசிகொய்வனெனுமுட்குறிப்பினுட
நின்ருனவ்வெல்லையிடருற்றபேதைநிலையாவர்சொல்லுமவரே. ()

## வஞ்சி விருத்தம்.

காரார்விடமன்னவள்கைதவமு
நேராயொருவன்றனிநின்றமையுஞ்
சோராவரிபத்தியருட்டுணைபின்
வாராமையுமுன்னிமயங்கினளால்.　　　　　(கஉ)

மதியோடெமைவைத்துவளர்த்தவரே
முதியோர்குழுவேமுறையோவெனுமாற்
சதியோகினியும்புரியத்தகுமோ
விதியோவிதுவென்னெனவெய்துறுமால்.　　　　　(கங)

மாவாரணமன்ருெருவன்மடுவிற்
காவாயெனுமுன்னுயிர்காத்தமைதான்
பாவாயரிபத்தியெனுங்குயிலே
நீவாரலையென்னினிகழ்ந்திடுமோ.　　　　　(கச)

துன்மானிடனுலொர்துரௌபதையாம்
பொன்மானகணுணெடுபொற்கலையு
நின்மாண்பினினீபெறுவித்ததலாற்
சன்மானமதார்தருவித்தவரே.　　　　　(கரு)

கருவுற்றெழுபாலகன்மேற்கனகன்
செருவுற்றெழுநாணரசிங்கமெனுஞ்
சுருவத்தொடுதூணின்முராரியையும்
வருவித்ததுநின்னருள்வந்தலவோ.　　　　　(ககூ)

கைக்கோகனகங்குவியத்தமுடம்
பக்கோடுருகக்கணரும்பியநீர்
புக்கோடநிலத்திவைநீபுரிவித்
தெக்கோதிலர்புந்தியிலெய்தினையோ.　　　　　(கஎ)

பைதாழரவன்னவள்பற்றியெமைக்
கைதானெகிழாதுகடுந்துயரஞ்
செய்தாலுநின்னன்புதெரித்திடவந்
தெய்தாதிதுவென்னபராமுகமே. (கஅ)

என்னுவிவைபன்னியிரங்கியிடு
மின்னுளெதிர்வீறரிபத்தியெனு
மந்நாரியருள்சிறிதேபுரிதற்
குன்னுமுனெழுந்தொரொள்ளொளியே. (கசு)

ஒருபானிலவும்மொருபால்வெயிலு
மிருபார்வையினூடுமெழுந்தறனுந்
தருபான்மொழியுங்கடைவிட்டகலப்
பொருபாவியுடல்பொடிசெய்ததுவே. (உ௦)

அன்னுயிறெழத்தெறுமாரிருள்போல்
வன்னுகமெனத்திகழ்வைரவிதன்
சன்னுகமுகெட்டிடலுந்தருமன்
முன்னுகவிழுந்துமுடிந்தனவே. (உக)

பொல்லாதவர்நன்மைபொருந்துவது
நல்லார்மிகவன்றுயர்நண்ணுவதுந்
தொல்லார்வினையால்வரினுந்தொடர்பாய்
நில்லாதெனும்வாய்மொழிநிச்சயமே. (உஉ)

தெறுதற்கரியாளொடுதீமைசிதைந்
தறுதற்குறியொண்டிறன்மோகனெனும்
வறிதுற்றவன்வாழ்வெனுமாயமுமே
லிறுதற்குமொரேதுவதாயதுவே. (உங)

அப்போதுசிரத்தையுநல்லறனுங்
கைப்போதுறும்வன்றுயர்கண்டவிரா
விப்போதுவிடிந்ததெமக்கெனவே
யொப்போதருமுள்ளமுவந்தனரால். (உச)

வனவோதிமம்வந்தறணைத்தழுவி
னினவோடுறும்வன்றுயர்நித்திரையிற்
கனவோவெனவந்துகழிந்தமைதா
னனவோவலவோவெனநாடுவரால். (உரு)

கரிபற்றியழிந்தகராமெனவே
முரிபற்றிரளும்முகமுஞ்சினமு
மெரிபற்றியவஞ்சகிபிற்றதுநம்
மரிபத்தியினுமெனவுன்னுவரால். (உகூ)

தாயாமவடன்னருள்பெற்றநமக்
கோயாதொருவல்வினையுற்றிடினும்
வீயாதவிளக்கெதிர்விட்டிலெனத்
தீயாதுறுமோவெனல்செப்புவரால். (உள)

நாணுவிதமிவ்வகையெண்ணிநவின்
றாணுர்வடிவாளனுமொண்டொடியு
மேனுடியயோகினிபால்விரைவுற்
ருணுடியகன்றெனவண்மினரால். (உஅ)

வயிரவிவதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - அகஉ.

## உ0 - வது, சிரத்தைமீட்சிச்சருக்கம்.



### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பரிந்தரிபத்திசெய்யபாதபங்கயங்கள்போற்றித்
திருந்தியவுணர்வின்மிக்கதருமனுஞ்சிரத்தைதானும்
வருந்துமெம்மிடுக்கண்டீரவஞ்சிநின்கருணைப்பார்வை
புரிந்தனையாரேநின்னைப்போலிடர்தவிர்ப்பரென்றார். (க)

ஈதவருரைத்தல்கேளாவினியயோகினிகள்யாமே
மேதகுவிவேகனுர்க்கும்வியன்மணம்பொருத்திமோக
ணுதியர்தமையும்வேரோடகற்றியநிவிர்த்தியீன்ற
காதலன்றனக்குப்பின்னுங்கதிர்முடிபுனைவிப்பேமால். (உ)

என்றியற்சிரத்தைதன்னையிரங்கினணேக்கியஞ்சன்
மன்றலங்குழலியீண்டுவருந்தியவருத்தந்தன்னற்
சென்றநின்கருமந்தாழ்க்கச்சிந்தியேலதற்கும்யானே
பின்றுணையாவனென்றுபின்னருமினையசொன்னுள். (ஙூ)

இனியரைக்கணமுந்தாழாதிவ்வயினின்றுமேகிப்
புனிதநாமகட்குன்கோமான்புகன்றமைபுகன்றுமற்றவ்
வனிதைதன்னிலையுமீண்டப்பன்னனுக்குரைத்தவேதன்
றனியருட்டுநல்விருட்டுந்தாடப்பேவப்ந்திடச்சொல்லென்றே. (ச)

இத்திறத்துறுதிவாய்மையாவையும்புகன்றுமுன்னர்த்
தத்துறலகற்றிச்சேறிதையனீயென்னுவீரக்
கைத்திறலறனைமற்றுன்காவலிற்போதியென்றாண்
மெய்த்திறத்தனையர்தாழ்ந்துமெல்லியல்விடையுங்கொண்டார்.()

இருவரும்விடைகொண்டப்பாலேகுழிச்சாந்திவந்து
மருவுதன்றாயைமுந்திமறலிபாற்போனசீவன்
பொருவருமுடலின்மீட்டும்புகுந்தெனப்புல்லிக்கொண்டாள்
கருணையுந்தனதுதெய்வக்கணவனைத்தழுவினுளால். (சு)

மாமணிச்சாந்திபின்னர்மார்புறப்புல்லிமீட்டுந்
தூமனக்கருணைகேள்வன்றுணைவியைத்தழுவியாரு
மேமுறவின்பமெய்தியிருப்புழியியன்றதெல்லா
நாமவேற்றருமன்றேவிநவின்றனள்சிரத்தைக்கம்மா. (எ)

கேட்டனளுற்றதெல்லாங்கிளர்ந்தெழுமுயிர்ப்பினோடு
மீட்டுநற்சிரத்தையின்றமெல்லியறன்னைப்புல்லிச்
சூட்டலருச்சிமோந்துதுணைக்கணீர்க்கலசமாட்டி
வாட்டமுங்களிப்புமொன்றாய்மயங்குறவைகிப்பின்னும். (அ)

மன்னவனேவறன்னல்வைகுமத்தலத்திலெய்தத்
தன்னவன்றேவியோடுந்தமயனைச்செல்வதாக்கிப்
பின்னவளின்றபேதைப்பெண்ணொடும்வாணிதன்பான்
முன்னவன்பணித்ததூதுமொழிந்திடக்கடிதிற்சென்றாள். (கூ)

கண்டனள்கலைமான்றன்னைக்கைகுவித்திறைஞ்சியெங்க
ளொண்டிறல்விவேகவேந்தற்குமதுபகிடதையென்னும்
பெண்டனைத்தருதல்வேண்டுமென்றனள்பேசக்கேட்ட
முண்டகமலரோன்றேவிமுறுவலித்தினையசொன்னாள். (கய)

ஷை வேறு.

ஓசுமதியெனுமனைவியன்னவிவேகனுக்கிருந்துமோல்காதிங்கே பேசுமதிசம்மதியோபெண்டிருந்தும் பெண்கொடுக்கப்பெறுவாருண்டோ, கூசுமதியாங்கள்செய்யுங்கொள்கையோவல்லதுபெண்கொடுத்தோமேனு,மேசுமதிவிகடமெய்தாதிருவருமாங்கியைவர்கொல்லோவென்றுசொன்னாள். (கக)

அனையமொழிகேட்டலுமேசிரத்தைபின்னுமியற்சுமதியணங்குதன்பாற், றனையரெய்தாமையினுந்தன்கணவன்பகைவலியாற்றாழ்தலானும், வினையவதியெனக்காலமுன்றுமுணர் திறத்தாலும்

விறல்விவேகற்,கிணையமணம்புரிவதற்கவ்வேந்திழையுமியைந்தன ளாலென்றுபின்னும். (கஉ)

தன்பாகமுமைக்களித்தசங்கரன்கங்கையைத்தனதுதலைமேற் கொண்டு, மன்பாகியிருந்திலரோதிருமாதைமணிமார்பிலமைத் தமாயன், பின்பார்மங்கையைப்புணர்ந்தும்பேதமவர்க்குளதோ வெம்பெருமானுக்குன், மென்பாவைசுமதியினுமேம்படினுமுயி ர்க்குயிராய்விழைவரன்றே. (கங)

அன்னமொழியுண்மையெனவறைந்தமொழியின்புறக்கேட்ட லர்மேல்வாணி, தன்னகமுமகிழ்ந்துமுகத்தாமரையுமிகமலர்ந்து தனதுகேள்வற், கின்னதிறம்யாவுமுரைத்திலங்கிழைதன்மகட் குமிவையெல்லாமோதிப், பின்னரவரியைவுபெற்றுப்பெயர்த்து மிவைசிரத்தையொடுபேசினாளால். (கச)

ஆர்பெற்றநன்மகளுமென்மகளுக்கிணையலவென்னரிவைக்கேற் குஞ், சீர்பெற்றகொழுநனுமச் செம்மலல்லாலில்லையிது செய்து மென்னுத், தார்பெற்றகுழலாட்குத்தக்கமொழிபகர்ந்தினிநீதா ழாதேகிக், கூர்பெற்றநல்லறிஞர்கோமானையிங்குவரக்கொணர்தி யென்றாள். (கரு)

ஷை வேறு.

அன்னசொற்சிரமேற்கொண்டவணங்கனாள்புதல்வியோடுந்
தன்னகமகிழ்ச்சிசெய்யதாமரைமுகத்திற்றோன்ற
மன்னவன்றன்பான்மீண்டுவருநெறியூடுகண்டோர்
முன்னர்வந்திணையவாய்மைமுறைமுறைமொழிவதானார். (கசு)

வந்தனைகொல்லோவென்றுமகிழ்ந்தெதிர்தழுவிக்கொள்வா
ரிந்தநின்வரவுகாட்டுமித்தினஞ்சுதினமென்பார்
பந்தனமுன்னையன்னபாதகர்புரிந்தாரென்று
நொந்தனங்கேட்டுப்பட்டநோயின்றுதவிர்ந்தோமென்பார்.(கஎ)

புகலமுன்கேட்டவார்த்தைபொய்ம்மொழியாகுமென்பார்
திகழுமிவ்வஞ்சியாங்குச்சிறைப்பட்டுமீண்டதுண்டேற்
பகலினுமவிருஞ்சோதிப்பனிமதியுதயம்போல
முகமொளிதவழுமேகொன்மொய்க்குழலிவளுக்கென்பார். (கஅ)

எவ்விடத்தெதிர்ந்துகண்டாளிவளையச்சாந்தியென்பா
ரவ்விளங்கொடிநோய்தீர்ந்ததுவேபிங்கமையுமென்பார்
செவ்வியதன்னையின்றசிரத்தையைக்கண்டபின்பு
நவ்விபன்னவட்குப்பாரீர்நகைமுகமலர்ந்ததென்பார். (கக)

இவள்சிறைமீட்டுவந்தாரியாவரோபோயங்கென்பா
ரவளுடன்பிறந்தமுன்னோனறவீரனுகுமென்பார்
பவவினைகடியும்பார்வைப்பத்திபோகினிகொலென்பார்
தவமுயன்றுடையயோகர்தங்களாலியன்றதென்பார். (உ0)

உணர்வுடைவிவேகவேந்தனுபநிடமாதைச்சேர்ந்து
மணவினைபுரிதற்குண்டோமற்றினியையமென்பார்
புணர்முலைவரவுதானேபுகன்றதான்மலர்மேல்வாணி
கொணர்தியிங்கவனையென்னுங்கொள்கையுங்குறியுமென்பார்.()

அவரவர்க்கியன்றவார்த்தையனைவருமிவ்வாறோதி
யுவமையின்மகிழ்ச்சிகூருமளவையிலுண்கணீலப்
பவளவாய்ச்சுமதிநாதன்பக்கலிற்சிரத்தையென்னுஞ்
சுவைகனிந்தனையதீஞ்சொற்றோகைவந்திறைஞ்சினாளால். (உஉ)

நின்றவடன்னைநோக்கிநீயிவணகன்றுபோன
வன்றுதொட்டின்றுகாறுமங்ஙனநிகழ்ந்ததெல்லா
மொன்றுமிங்கொழிவுறுமலுரைத்தியென்றிறைவினவ
மென்றளிரியற்பைங்கோதையாவையும்விரித்துச்சொன்னாள்.()

ஆதியோடந்தமங்ஙனடுத்தவையாவுமன்னா
ளோதியவாய்மைகேளாவுவகையாலுளம்பூரித்து
நீதுயரிவ்வாறந்தோநெடிதுழந்தனைகொலென்னாத்
தூதியோடுரைத்துப்பின்னுமினையனசொல்வதானான். (உச)

அரிசிவபத்தியாகுமரிவையரருளைநம்பாற்
புரிதிருப்பார்வையுண்டுபுண்ணியமனையநீயுண்
டுரியநல்லறனுமுண்டாலுளத்துறுசுமதியோடுந்
தெரிவுறவியற்றுமிங்கென்செய்கையுமுற்றுதுண்டோ. (உரு)

எறிதிரைக்கடல்வாய்வங்கத்திடையுற்றவின்னலெல்லா
மறனுடைவலியானீங்கியருமணிபெற்றுமீண்டு
வறிஞருக்கதையீவார்போல்வருந்திநீவாணிசெல்வி
யுறவெனக்குதவுமற்றிவ்வுதவிக்கோருதவியுண்டோ. (உசு)

ஈதெனக்கியம்புநின்னுலிப்பெருமகிழ்ச்சியுற்றேன்
வேதனன்மகளையின்னம்வேட்டுமெய்ப்போதன்றன்னை
யாதரம்பெருகப்பெற்றவ்வதிமோகன்முதலாயுள்ள
போதகரும்பகையைமேலும்பொன்றுவித்திடுவனென்றான்.(உஎ)

என்றிவைபுனிதைசெல்விக்கியன்றநன்முகமன்யாவும்
வென்றியந்திறல்விவேகன்விளம்பிமெய்புளகமல்கக்
குன்றனதிரடோள்விம்மக்குளிர்முகமலர்ச்சிகூரா
நின்றனனனையவேலைநியாயன்வந்தடியிற்றாழ்ந்தான். (உஅ)

சிரத்தைமீட்சிச் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - அசO.

உக — வது,

## விவேகன்போதகரை வரவழைத்தசருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வந்தடிவணங்கிநின்றமைத்துனன்வதனநோக்கி
யந்தவொண்டிறன்மாமோகனதியரங்கங்குள்ளார்
தந்தமதியல்புந்தெய்வத்தலந்தொறுங்கரந்துநின்ற
நந்தமர்செயலும்யாவுநவிலெனநவிலலுற்றான். (க)

நிருபகன்முதலோர்சேனைநெடுந்திருத்தலங்கடோறுஞ்
சுருபமதொளித்துத்தந்தந்தொழின்முறையியற்றுந்தன்மை
யுருமெனத்தகையமோகனெற்றராலுணர்ந்துமுன்னர்
வருகலிதனக்குஞ்சாருவாகற்குமினையசொன்னான். (உ)

சஞ்சலன்றனைதன்னைத்தலந்தொறுங்கரந்துளாரை
நஞ்செனக்கவர்தியென்னநடத்தினன்பின்னுங்கற்ற
விஞ்சையைச்சாருவாகன்விளைத்திடவிடுத்துத்தானும்
வஞ்சனைமகிழ்நன்வைகும்வாரணசியில்வந்துற்றான். (ங)

சதுமுகன்மகள்பாற்றாதுசத்துவச்சிரத்தைசெய்ய
பதுமமெல்லடிகணேவைப்படர்ந்ததும்வினவித்தன்பாற்
பொதுமகண்மிச்சாதிட்டிபுத்தனேமுதலினோரைக்
கதுமெனவெழுந்துசென்றுகவர்ந்திடப்பணித்துப்பின்னும். (ச)

காமனைவஞ்சித்தப்பாற்கடந்தநந்தருமன்செய்தி
சோமநாதத்துவந்தோன்சொல்லினாலுணர்ந்துநீங்கிப்
போமவன்றன்னைப்பற்றிப்பொருக்கெனக்கொணரமானப்
பாமரன்றனக்குமீட்டும்பத்திரம்விடுத்தல்செய்தான். (ரு)

இவ்வகைபுரிந்துவைகுமெல்லைநற்றலங்கடோறுங்
கைவலிக்கலியனெய்திக்கரந்துறைநமரைத்தங்க
டெவ்வரிங்கிவரென்றெண்ணித்தெரிந்தெதிர்சீறும்வேலை
யவ்வயிற்பத்திமாதரவரவர்க்கருள்செய்தாரால். (சா)

ஆதலாற்கலியனஞ்சியரிசிவபத்தியாகு
மாதராரருளின்யாரும்வைகினரிீனயர்தம்மை
நோதலார்புரியவல்லாரென்பவைநொந்துமீண்டங்
கோதலாலுணர்ந்தமோகனெற்றர்க்கீதுரைப்பதானன். (எ)

பூங்கணைக்காமன்முன்னும்பொருபடைத்தலைவர்வைகு
மோங்குநற்பதிகடோறுமுற்றுநீரவரைநம்பா
லீங்கினிக்கொணர்திரென்னவேவினனனையரெய்தி
யாங்கவர்க்குரைத்தலோடுமனைவருமெழுந்துபோனர். (அ)

தருமன்மேற்றங்கைதன்மேற்சமணனாதியர்முன்சென்ற
கருமமிச்சிரத்தைசொல்லாற்கண்டனைசாருவாகன்
பெருமதமினிப்போயெங்கேபேசுவதையமற்றுன்
றிருமணமுடித்தற்குண்டோசிந்தனைபிறிதொன்றென்றான். (௯)

## கலி விருத்தம்.

சிரத்தைவாய்மொழித்தெள்ளமுதோடவ
னுரைத்தவாசகமுற்றசெந்தேனென
வரைத்தடம்புயன்வார்செவிபுக்கதா
லிரைத்தகாதலெழுந்தெழுந்தோங்கவே. (க0)

வேதன்மங்கையின்மணங்கைக்கொள்வான்
காதல்வெள்ளங்கருத்தையுமீக்கொளும்
போதவன்றன்பொலிமுகநோக்கியே
பாதபங்கயம்வந்துபணிந்தரோ. (கக)

அயலமர்ந்தவரெண்மரமைச்சரு
ணியமனென்பவனின்றுகைகூப்பியே
மயலகன்றிடமற்றதன்மேற்செயுஞ்
செயலுணர்ந்திவைசெப்புவதாயினன். (க௨)

முறுகுவெஞ்சினமோகனையாதியாஞ்
செறுநர்குன்றினர்தெய்வவசத்தினல்
விறன்மிகுந்துவெளிப்படவும்பெற்று
ரிறைவநந்தமரெத்தலந்தோறுமே. (க௩)

கொடியகாமனக்கோபனுலோபன்சீர்
மடிவின்மானன்மதன்மச்சரனெனுங்
கடியரேமுதலாயவக்கண்டகர்
நெடியதத்தநிலைவிட்டும்போயினர். (க௪)

வந்துமோகனைமற்றவர்கூடியே
யுந்துபோருக்கொருப்படுமுன்னமே
யிந்துவாண்முகத்தேந்திழையாளைநீ
முந்துவேள்விமுடித்திடவேண்டுமால். (கரு)

நேயமுற்றநிரூபகரேமுத
லாயமற்றைநம்மன்பினர்யாரையு
மேயவொற்றரையெத்தலந்தோறுமே
போயழைத்துவரும்பணிபூட்டியே. (கசு)

மற்றையோர்களும்வந்தபின்மாமண
முற்றவேண்டுமுயற்சியிதாமெனச்
சொற்றவாய்மைதுணைச்செவிக்காரமு
துற்றதாமெனவுள்ளத்துளுன்னினன். (கஎ)

நன்றுசூழ்ச்சியிதென்றுநயப்புறு
நின்றுமற்றநியமனையொற்றரா
லின்றழைத்தியால்யாவருஞ்வைகிடஞ்
சென்றுபுக்கெனச்செப்பியபோழ்தினே. (கஅ)

நியமன்வேந்தனிருபமுமொற்றரு
முயர்தலங்களினுற்றவரெய்திட
வயர்வுறுமலனைவர்க்கும்போக்கினன்
வயினதேயணைப்போன்றவர்வாவவே. (கசு)

சென்றவொற்றர்திருத்தலந்தோறுமே
நின்றதூயநிருபகனுதியோர்
முன்றொடர்ந்துகொடுத்தமுடங்கலை
யன்றுவாங்கியவர்முடிசூடினர். (உ0)

விரைவினும்மைவிவேகர்தங்கோமகன்
வரவழைத்தனனென்றவர்வாய்மையு
நிருபவாசகமுங்கொடுநெஞ்சினிற்
பரிவுமுன்செலப்பின்செலும்பாசத்தார். (உக)

பேதமற்றவன்றன்னைப்பிரிவுறும்
வேதனைப்பிணியன்றுவிலக்குவார்
போதலுற்றமையாலவர்புந்தியோ
காதலோமுற்கதிகொண்டதியாவையே. (உஉ)

போந்தகல்வழிப்போதனையுட்கொளு
மாந்தர்சிந்தைதவழித்துணையாய்வரத்
தாந்தமக்கண்மனைவியர்தம்மொடும்
வேந்தன்வைகிடம்யாவருமேவினர். (உ௩)

நிருபகன்பொறைநிச்சயன்சத்தியன்
றருமன்வீரன்சமன்றமன்சத்துவன்
பெருமையோரவிரோதன்பெருந்தவ
னருள்விராகன்சந்தோடனடக்கனே. (உ௪)

பின்னுமற்றுளபேர்களுமாதருந்
துன்னுநெஞ்சுமுகமுந்துணைக்கணும்
பொன்னுறுஞ்செங்கமலங்கள்பூத்தெதிர்
மன்னுசேவடிவந்துவணங்கினர். (உ௫)

வந்தடித்துணை தாழ்ந்துவணங்கினர்
தந்தமக்கெதிர்தக்கவரிசையா
லந்தமற்றவருள்புரிந்தப்புற
முந்தியுற்றமுகமனுஞ்சாற்றியே. (உ௬)

மனையுமக்களும்வாழ்வொடுதீதில
ரெனவினவுமிறைவனைக்கைதொழாப்
புனையுங்கல்விப்பொறைமுதலோர்கடந்
நினைவுணர்ந்தநிருபகன்கூறுவான். (உ௭)

ஆதியந்தமரிபத்தியோகினி
மாதுநீயும்வழங்கருட்பார்வையுண்
டோதுமின்பத்தொடுபெருவாழ்வுறு
மீதுபின்னரெமக்கரிதோவென. (உ௮)

முன்னர்வந்துநியாயன்மொழிந்தசொ
லன்னதுண்மையெனும்படிக்காங்கவ
ரின்னதாமொன்றியம்பினரம்மொழி
மன்னர்மன்னன்வினவிமகிழ்ந்துமே. (உ௯)

சிரத்தையங்ஙனஞ்சென்றதுமீட்டும்வந்
துரைத்ததும்மவணுற்றனயாவையுந்
தெரித்தடுத்ததிருமணச்சேதியு
மருத்திகூரவனைவர்க்குமோதினன். (௩0)

வந்துவைகுமரபினர்யாவரு
மந்தநன்மொழிகேட்டலுமன்புநுந்
தந்தமுள்ளந்தழைக்குழுவகையா
லிந்தவார்த்தையிறைவர்க்கியம்பினர். (நக)

ஆர்வமுற்றவனைவருமையநின்
சீர்வதித்ததிருமணக்கோலமெம்
பார்வையுற்றபயனெனக்காண்புறச்
சார்வதற்கினித்தாழ்ப்பதிங்கென்னென்றார். (ந௨)

என்றுமற்றவர்கூறவுமீறிலா
வென்றிவேந்தன்விவேகனுபநிட
மன்றலங்குழன்மாமணவேட்கையா
னன்றுசெய்வதற்காவனசெய்குவான். (நந)

விவேகன்போதகரைவரவழைத்தசருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம்- அஎந.

## ௨௨ - வது, உபநிடதைவேள்விச்சருக்கம்.



### கலிநிலைத்துறை.

சற்சங்கமெனும்பல்கலன்கடரித்தவ்வாச
நற்சந்தனமேனிதிமிர்ந்துநலங்கொண்மாயன்
முற்சங்கரனார்சரிதாமிர்தமுற்றுகேள்விச்
சொற்சங்கையிலாமணிக்குண்டலந்தூக்கிமன்னோ. (க)

நவமாமணிச்செஞ்சுடர்மார்பிடைநல்வியாச
னுவல்சூத்திரமாகியசெம்பொன்முன்னூலொடோங்கக்
கவிஞோரிதயங்களெனுங்களிவண்டுமல்கிக்
குவியாதலர்நல்லறிவாமலர்க்கோதைவேய்ந்து. (௨)

எறிவேலினுந்தீயவைதன்கணியார்செய்தாலுங்
குறியாமையைத்தாளிடும்பாதுகைக்கோலமாக்கிச்
சிறிதாயினுமேயொருகாற்பிறர்செய்தநன்றி
மறவாமையெனுங்கிரணச்சுடர்மவுலிசூடி. (ந)

வன்பென்பதகன்றடுதெவ்வரும்வந்துளாவி
தன்பங்கிலிரக்கினுமீந்துதகீசிபோல
வென்பும்பிறர்கேட்கினுமன்பினொடீதலென்னும்
பொன்பொங்கொளிக்கங்கணமுன்கையிற்பூட்டிமாதோ.

மன்னுங்கடுமோகனையாதியர்வன்மைநீக்கத்
துன்னுந்திறலாம்வலயந்திரடோளினேற்றிப்
பின்னும்புவியோர்க்கபயப்பிரதானமீவ
தென்னுஞ்சுடராழிகள்பல்விரற்கேற்பதாக்கி. (ரு)

கருமத்தியனித்தநைமித்தியங்கைவிடாது
பருவத்தின்முடிப்பதுவாநுதற்பட்டம்வீக்கிப்
பெருகுற்றதன்பேரியலானபிறங்குவெண்பட்
டரையிற்றிகழுத்தரியத்தொடுமாங்கணிந்து. (சா)

உன்னித்திருமால்சிவனாரருட்குண்ணெகிழ்ந்து
மன்னித்தரையிற்பிறர்நோவுமதித்துநெஞ்சந்
தன்னிற்றளர்ந்தன்பிடைமல்குதடங்கணீரா
மன்னித்திலமாலிகைமார்பிலணிந்துமாதோ. (எ)

கடுவேஙிகர்கண்டகராய்ப்பிறர்கைந்நடுங்க
வடுவேடரைப்போன்றெவைசெய்யினுமஞ்சுறுதார்
வடுவேறியவெம்பழிக்குந்தன்மனத்துளஞ்சி
நடுவேயுறுநாணெனும்பொன்னரைஞாணும்வீக்கி. (அ)

மாலாமிருடீர்த்துலகெங்கும்வயங்கியாரு
மேலாமதியோர்கருத்துக்குமெட்டாதுயர்ந்து
மேலாகிவிரிந்தொடுங்காதவியாபகந்தன்
பாலாமதியாகியவெண்குடைபாங்கிலோங்க. (கூ)

தண்சார்மொழிநித்தவநித்தவிசாரணைப்பெண்
வண்சாயன்மயிற்கிணைநற்கதிவாஞ்சைமாதோ
டெண்சார்வுறவோர்வுறுசாத்திரமென்னலாகும்
வெண்சாமரமங்கிருபாலுமெடுத்துவீச. (க0)

துகளற்றுயர்வேதநடத்துதுரங்கமாகப்
பகர்சத்தியனேயவைதூண்டுறுபாகனாகப்
புகலுற்றிடுமெவ்வுலகத்தினும்பொங்குசோதித்
திகழ்தத்துவமாகியசெஞ்சுடர்த்தேரினேறி. (கக)

பத்திக்குலமங்கையர்பார்வையெப்பாலுமெய்தச்
சுத்திக்குயிரன்னவண்முன்புதொடர்ந்துசெல்ல
முத்திக்குறுகாதலுமங்கொர்முகத்தினேக
வெத்திக்குநிரூபகனாதியினத்தர்சுற்ற. (கஉ)

இயமன்முதலாகியயோகரோரெண்மருந்தன்
னயல்வந்துநெருங்கவாசாரனெடுத்துவைத
னுயருஞ்சுசீலன் றருமன்முதலோர்கள்சூழ
வியனங்கொருதிங்களைச்சூழ்பலமீன்களென்ன. (கங)

கதியுற்றநிவிர்த்திபெருங்கருணைக்கரும்பு
முதிதைப்பெணுபேட்சைம்பித்திரிமுற்றுநீதி
மதியொத்தமுகத்துமடந்தையர்மற்றையோரும்
விதியிற்றொடர்நன்னெறியூடுமிடைந்துசெல்ல. (கச)

இத்தன்மையதாகியபல்சிறப்பெய்திவேத
வித்தன்னவிவேகனெழுந்தருண்மேன்மையுன்னி
யத்தன்மைமகிழ்ந்தயனேதவுள்ளன்புகூர்ந்து
மெய்த்தன்மகளுக்கலர்வாணிசெய்வீறுசொல்வாம். (கரு)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தாரகமேதிருமுகமதாயொளிருநாதந்தார்க்குழலாய்ச்சுருதிக ளேதாழ்ந்தவள்ளைக்குழையாய்,நேரிலகும்விதிமணிகொணுசியர் த்தவாதநீதியாயுகளுமிருநீலவரிவிழியாய்ப்,*பார்மிகுசற்குணமு நிர்க்குண முமிருகரமாய்ப்பகர் சீவபரங்களேபணைத்தபயோதர மா, யாருமறிவரிதாய வாக்கியஞ்சிற்றிடை யாயணையபிரகரணம லரடியிணையாயுடையாள். (கசு)

அஞ்சுகோசங்களுமேயைந்துபிராய்ச்சச்சிதானந்தமுபபத்தி யகமுஞ்சிவனுமாய், விஞ்சுமுபக்கிரமமுபசங்காரநடையாய்மீமா ஞ்சைமாவாக்யமென்சொலுங்கண்டமுமா,யெஞ்சுறுவகரமுதலா கியவைம்பத் தோரெழுத்துமற்றையவயவங்களென்னலாய்த்த வளச்,செஞ்சொலாளின்றெடுத்தசெல்வியுபநிடதச்சேபிழைக்கு ப்பேருவகைத்தெண்டிரைநீராட்டி. (கஎ)

பதமென்னும்பட்டாடையுடுத்திமழையளகபந்தியிற்செந்தொ டர்மொழியாம்பனிமலர்த்தார்சூட்டிச், சிதைவினறுந்துவர்வரு ணமெனுங்களபந்திமிர்ந்துதிருமேனிக்கலங்காரத்திருப்பணியுந் திருத்தி, மதர்விழிக்கும்பிரமாணமாகியமையெழுதிமதிநுதற்கு விந்துவெனுமணித்திலகந்தீட்டி, யிதமுறுநற்சத்தியும் பூருவமு மென்னுமெழிலொளியைக்கீதையினுலிலங்கிடச்செய்தாளால்.

---

* பாரமிகுச்குணமு - என்றிருத்தனேர்.

## கலி விருத்தம்.

ஈதவடன்மகட்கியற்றுமெல்லையில்
வேதனுமுணர்வுடைவேந்தனெய்திட
மாதவருள்ளமாம்வனசக்கோயிலு
ளாதரமாகுமெல்லணையமைத்துமே. (கக)

கற்றுணர்கல்வியாங்கலைவிதானமுஞ்
சொற்றொடர்நறுமலர்த்தொடையுமேற்புனைந்
துற்றதண்ணளியெனவோங்கும்பன்மணி
யெற்றிகழ்விளக்கமிட்டெழிலியற்றியே. (உ0)

இத்திறம்பல்சிறப்பெய்துவித்துழி
யுத்தமர்கோன்வரவொல்லையெய்தியே
மெய்த்தலத்தயனடிவிரைவிற்றாழ்ந்துயர்
சத்துவன்றிருமகள்சாற்றினளரோ. (உக)

முன்புகுந்தவள்பகர்மொழிவினவலு
மின்புறமனங்களித்தெண்கண்வேதியன்
றன்புடையணையணைத்தருதியென்றுதன்
னன்பினையெதிர்கொளவவர்முன்போக்கினன். (உஉ)

எதிர்வரவாங்கவனேவுமன்பொடு
மதியுடைமன்னவன்மருங்குசூழ்வரு
முதிருறுநிருபகன்முதலினோரொடும்
விதியுடைமாநகர்விரைவினெய்தினன். (உங)

ஏறியவிரதம்விட்டிழிந்துசிந்தையுட்
டேறியதுணைவருந்தானுஞ்சென்றுபுக்
காறியன்முனிவரோடாசிகூறிட
மாறினன்முகன்மலர்ச்சரண்வணங்கினன். (உச)

வந்தடிவணங்கியமதிவிவேகனுக்
கந்தணன்முகமனோடாசியும்பகர்ந்
துந்துபேரன்பினரோடுஞ்சீரியர்
சிந்தையங்கோயிலிற்சென்றுற்றனரோ. (உரு)

திருமணமண்டபச்சிறப்புநோக்கியே
நிருமலவிரத்தியுநெடுவிராகனுந்
தருமனுங்கருணையுஞ்சமனுஞ்சாந்தியும்
பொருவினற்சிரத்தையும்புனிதைகேள்வனும். (உசா)

யமநியமாதனப்பிராணயாமநீள்
கமையுறுபிரத்தியாகாரதாரண
சமனிலைத்தியானசமாதியென்றுசொல்
லமைவில்பல்கிளைகொளட்டாங்கயோகரும். (உஎ)

ஒண்டருவிவேகனுமுடன்பிறந்தவப்
பண்டருகிளவியர்பலருந்தாயரு
மெண்டருதவனுமற்றெவருமாங்கதிற்
கண்டசித்திரம்பலகருத்துளுன்னினர். (உஅ)

நிருமலமாயருணெடியதற்பரம்
பொருளெனுமொருபரிபூரணத்துரு
வருவமதாகியுமரியயன்சிவ
னுருவமதாகிமூவுருவுகொண்டதும். (உகூ)

முகமொருநான்கொடுமுளரிப்பீடமே
லகமுறுமிராசதகுணத்தொடண்மியே
தகவுறுபல்லுயிர்ச்சராசரங்களாம்
பகுதிகள்யாவையும்படைத்துவிட்டதும். (ரு0)

சங்குசக்கரத்தொடுஞ்சத்துவத்தியற்
பங்கமில்குணத்தொடும்பரவுபாற்கட
லங்கதின்வைகியவ்வயன்படைப்புறத்
தங்குபல்லுயிரெலாந்தான்புரந்ததும். (ருக)

மருவுமுள்ளன்பர்தம்பிறவிமாற்றவு
மருளியறெரிக்கவுமறநிறுத்தவும்
பெருகுமவ்வரியுருப்பின்னுமீரைந்து
திருவவதாரமாய்ச்செனித்துவந்ததும். (ருஉ)

இப்பிறப்பியன்முடிவின்னவண்ணமென்
றெப்புறவிசையனுக்கோதியவ்வுரை
யப்புறத்தையுறுமனையனஞ்சவே
மெய்ப்புறக்காட்டியவிசுவரூபமும். (ருரு)

அம்பரீடன்றனக்கருள்புரிந்தது
மிம்பரோர்பஞ்சவரிடுக்கண்டீர்த்ததும்
வெம்புவாளவுணரைவிலக்கிவேலைவா
யும்பரானவர்க்கமுதுணப்பகுந்ததும். (ருச)

ஆலமேனிகர்கராவடர்க்குமந்தநா
ணீலமேனிக்கரியொன் றந்நீரிடைத்
தாலமேயணையகைந்நீட்டித்தற்பர
மூலமேவாவெனமுன்னம்வந்ததும். (௩௫)

இவ்வகைபுரிந்தமையெண்ணில்கோடியா
மவ்வரிசரித்திரமனைத்துமாங்கவர்
கைவருநெல்லியின்கனியிற்கண்ணுறச்
செவ்வியகரங்கடஞ்சிரத்திற்சூடினார். (௩௬)

மற்றொருவடிவுமான்மழுவுஞ்சூலமு
நெற்றியிற்கண்ணுமோர்நீலகண்டமும்
பெற்றியற்றமதப்பெருங்குணத்தொடுங்
கற்றடங்கயிலையங்கடவுளாயதும். (௩௭)

அண்டர்தங்குறைதவிர்த்தாழிவெவ்விட
முண்டதுங்காலனையுதைத்துமற்றோர்மார்க்
கண்டனைப்புரந்ததுங்காமனைக்கடிந்
தொண்டவர்க்கறிவுபதேசஞ்செய்ததும். (௩௮)

முத்தமிழ்முதலியர்மூவர்தங்கட்கும்
வத்துவைத்தொழுந்திருவாதவூரர்க்கும்
பத்தராமோரறுபத்துமூவர்க்கு
மெய்த்ததாட்டுணைமலர்வீடளித்ததும். (௩௯)

பின்னருமிவ்வகைப்பேறளித்தமை
யென்னலாஞ்சரித்திரரெண்ணிலோரென
வன்னவன்றிருவிளையாடல்யாவையு
முன்னவர்கண்டுதம்முடியிறைஞ்சினார். (௪0)

புகன்மறையாகமபுராணசாத்திரந்
திகழிதிகாசமித்திறத்திற்பின்னரும்
பகர்வுறுமவையெலாம்படிவங்கொண்டவ
ணிகழ்வுறுநிலையமாய்நின்றதன்மையும். (௪௧)

வான்றொடருலகத்துமற்றையண்டத்துஞ்
சான்றவரவரவர்தங்கண்மேன்மையு
மூன்றுயர்காலத்துமுடியுஞ்செய்கையுந்
தோன்றுறவியந்தனரதனுட்டுன்னினார். (௪௨)

மருவியாங்கவர்கடாம்வைகியவ்வுழிப்
பொருவருமொருபரம்பொருளையுன்னுமுன்
னருமறையறிவருமகண்டபூரணன்
றிருவுளமுணர்ந்தருள்சிறிதுசெய்ததால். (சங)

ஆயதோர்திருவருளவயவத்தொடு
மேயசற்குருவெனவெளிப்பட்டாங்குறு
தூயவரெழுந்தடிதொழுதிறைஞ்சவந்
நாயகக்கோயிலுட்புகுந்துநண்ணியே. (சச)

திருந்தடிவணங்குமத்திசைமுகன்றரு
மருந்தமனியத்திருத்தவிசிலாங்கன
மிருந்தனைவோரையுமிருத்திரென்றருள்
பொருந்துநல்லாசியும்பலபுகன்றரோ. (சரு)

உணர்வுடைவேந்தையுமொருபுறத்தினி
லணைவுறவிருத்தியவ்வயனைநோக்கிமா
மணவினைக்கேற்பவையோடவ்வஞ்சியைக்
கொணர்தியாலிவ்வயினென்றுகூறினான். (சசு)

வேதியனப்பணிகொண்டுவேட்பவைக்
கோதியபல்பொருளுடனமைத்தயற்
கீதையைநோக்கியக்கிளியின்மென்மொழி
மாதையென்வயிற்றருகெனவழுத்தினான். (சஎ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கீதையங்கதுசிரத்தினிற்கொடிருகெண்டையங்கணொருதொண்டைவாய், மாதையங்குவரவோதலும்பெருமகிழ்ச்சிகூர்திருமனத்துளே, யாதரம்பெருகுமஞ்சொல்வாணியெனுமன்னையுந்துணைகொள்பின்னையும், வேதமங்கையர்கள்சாத்திரங்களெனுமின்னாரொடயறுன்னவே. (சஅ)

செஞ்சிலம்புபுனைபஞ்சின்மெல்லினியல்சீறடித்துணைகணுறுபூங் கஞ்சமுங்கவினழிந்தொதுங்கநறைகாலுநொய்யமலர் மேலுமேயஞ்சியஞ்சிநடையன்னவன்னமென வல்லவல்லவென் மெல்லவோர், வஞ்சியங்கொடியெழுந்துவந்ததெனமாவியன்சபையின் மேவினாள். (சகூ)

வந்துமுந்திமணிமண்டபத்திடைவதிந்தசற்குருமலர்ச்சரண்
சிந்தையன்புகொடிறைஞ்சிநாணொடுதிகழ்ந்திடுந்திருமுகங்கவிழ்ந்
தந்தணம்புயமலர்ச்செழுந்தவிசிலயலிருந்துநெடிதன்புறுந் [யே.
தந்தைதன்புடையில்வைகினாணெடியதடமலர்க்கணுபநிடதை

மன்றலங்குழலியளவிலின்பமொருவடிவுகொண்டதெனவந்
தயற், சென்றயன்புடையிருந்தகோலமிருதீர்த்தராயுமெதிர்பார்
த்துளார், நின்றுகண்களுமுகிழ்ப்பதன்றியொர்நினைப்புமின்றிமி
கநெஞ்சழிந், தொன்றுமங்குணராதிருந்தனர்களோவியத்தினி
யலொப்பவே. (ருக)

மாநிவிர்த்திமுதலாயமங்கையரும்வஞ்சிவிஞ்சுதிருவடிவெனுந்
தேனிலுற்றசிறைவண்டெனும்படிதியங்கினரெனின்மயங்குறு
ரானமற்றவரியாவரேபுருடரவணைம்புணருமறிவுடைக்
கோனிகழ்ச்சிபிறிதென்படாததுகுலிக்கியாவர்பிறர்கூறுவார்.

தானலாதுபிறிதில்லையென்னுமதுகண்ணுளேயறிவுறுத்துதற்
கானபேதையவளன்றியில்லையெனவெல்லவருக்கும்வெளியாகவே
மானனுருமவனுற்றமைந்தருமனோனம்பெறவதிர்ந்திடுந்
தேனனுளையயல்வராமைழைத்தனைய தேசிகன்னினையசீர்செய்தான்

ஆதனத்துயர்விவேகனுற்றிடவமைத்துநீர்கொடயனவன்ம
லர்ப், பாதசுத்திசெய்துநானைநல்குதல்பணித்துநல்வினைகள்பல
வுமா, யோதுநெற்பொரிநெய்சமிதைஞானமெனுமோமவெங்க
னலினூட்டியக், காதலிக்கொர்திருநாணணிந்தனையள்கைகொடு
க்குநெறிகாட்டினன். (ருச)

கைகொடுத்ததுபிடித்தபின்னுமவள்கால்பிடித்துவெளிகண்
டவன், மெய்கொடுத்தெதா*ரிலக்கணைத்திரயமிளிர்சுமங்கலியமி
ன்னொடு, மைகொடுத்தவிழிமகளிர்சோபனமுமறைமுழக்கொலி
யுமல்கவே, நெய்கொடுத்தசுடரனையவன்சரணிறைந்தகாதலொ
டிறைஞ்சினன். (ருரு)

வானுளோர்கண்மலர்மாரி தூவினர்நன்முனிவராசிகள்வழுத்தி
னர்,கானகந்திருவர்யாழினேழிசைகள்கடலினரமுதெனப்பெய்
தார், தானவாதியர்செருக்கொடுங்கிவலிதாழ்ந்தொதுங்கினர்த
டாரியு, மேனைவாச்சியமுமமரதுந்துமியொடெங்கணுந்தொனி
யெழுந்ததே. (ருசா)

அன்னவேலைநெடிதாசிகூறியவனன்பெனும்பொருளளித்தல்
கொண், டுன்னுதேசிகனகன்றபின்னர்மலரோனும்வாணியுமுவ
ப்பவே, மன்னுதாள்களில்வணங்கியங்கனையர்மக்களைப்பெறுதிர்
வாழ்திரென், றின்னவாய்மொழியியம்பல்கொண்டுபினெழுந்து
தாய்தனையிறைஞ்சினன். (ருஎ)

---

* இலக்கணத்திரயம் எனவும்பாடம்.

தனைவணங்குதிருமகளுடன்மருகிதன்னையும்பெற்றகுதயவுட
னையளங்ஙனமெடுத்தணைத்துமிகவாசிகூறியினியறிவிலார்
வினைகடிந்துமிகவாழ்திரென்றுசிவவிண்டுபத்திவிழியருளினா
லினியநீரயினிமுன்புசுற்றியவிர்காப்பும்வாணுதலினேற்றினாள்.

மருவுமங்கணுனுமாதர்மக்கள்பிறர்மற்றுளோருமவ ரவர்தமக்
குரிய செய்வினை செயப்புரிந்தபி னொருமுறையு ளெய்திமலரணையி
ன்மே, னிருப னுங்குலவு தர்க்க வாள்விழியு நீருநீருறுநியாயமா
யிருவரங்கமுமுடன்கலந்துருகியேகருபமெனலாயினார். (ருகூ)

ஞானபோகமிருவருநயந்தினியநண்புகூர்தருமநாளிலன்
பானயோகர்முதலாயினோரொடுமடுத்துவாணியையுமயனையுந்
தானுலாவுபதிசெப்புதற்குவிடைதருகெனத்தொழுதுசாருமுன்
னானசீதனமதாகவன்பினையளித்துவேதன்விடையருளினான்(சூ0)

மோகனாதியர்களமங்கொலைத்துவினைமுற்றவாசிகண்மொ
ழிந்துமே, லேகநான்முகன்விடுக்குமெல்லையுபநிடதவஞ்சியுமி
றைஞ்சியே,போகநானும்விடைதருகெனாமுனன்செய்நாகினை
யொடுபோகெனா, வேதகையாகிவிடையுதவினார்கள்கலையுருவ
மானுயலரோனுமே. (சூக)

மற்றையோரும்விடைகொண்டுமன்னனைவணங்கிமுன்செ
லமருங்கிடைத், துற்றஞானமதயானைசேனைகடுரங்கராசிகளொ
ருங்கமைக், கற்றைவார்குழலினார்கரும்புடைகலந்துசூழவுப
நிடதையைப், பெற்றதாயரொடுதந்தையாதியர்கள்சிந்தையாவு
மவர்பின்செல. (சூஉ)

பொருவிறத்துவமதானதேரினியல்பொலியுஞானவரியா
னையின்மேன், மருவுநற்சுமதியொருபுறத்துமலர்வாணிபேதை
யொர்மருங்குமா, யிருபுறத்தினுமிரண்டுதேவியருமின்பமுற்று
வரவெதிரிலா, நிருபனுத்தமன்விவேகன்முக்குணமுநீக்கிநின்ற
நெறிநோக்கினான். (சூங)

சேலைவென்றவிழிமாதொடங்ஙனொருதேரின்மன்னன்வரு
திருமணக், கோலமும்பெருமகிழ்ச்சியுந்தம்விழிகொண்டுகண்டு
களிகூர்வுறச், சாலவுஞ்சரணபங்கயந்தொழுததமரையன்பினொ
டுதழுவியே, பாலுடன்கனிகடேனியைந்தெனவவரவர்க்கினிய
பன்னினான். (சூச)

முன்புவந்துபுடைசூழ்விராகர்பதிமுதலினோர்களொடுமுறைமை
பின்புவந்த நிருபகனையாதிபலபேரொடுங்குலவுபார்புகுந் [யாற்
றன்புவந்தபெருவெள்ளமுள்ளமுறவனையர்வைகுமிடமணுகியே
வன்புவந்தளவளாவிபங்கினிதின்வைகினன்சுமதிமகிழ்நனே(௬௫)

உபநிடதை வேள்விச்சருக்கம் முற்றிற்று.

ஆகவிருத்தம் - ௬௩௮.

---

## ௨௩-வது, சக்கரதீர்த்தச்சருக்கம்,

—.—:*:——

### கலி நிலைத்துறை.

அன்னகாலையிற்பக்கல்சூழ்ந்திருக்குநராருந்
துன்னவாங்கனம்வைகியவுபநிடத்தோகை
மன்னுகாதலன்மலரடித்தாமரைவணங்கி
முன்னமேவியநிருபகனினையனமொழிந்தான். (௧)

சிற்றிளம்பிறைநாடொறுமோரொருசீராய்
முற்றுகின்றதுபோன்றதானின்றி றன்மோகன்
பெற்றவெண்மதிபின்னுறத்தேய்ந்திடும்பிறையாய்
வற்றுகின்றதாலவரவர்க்குறும்விதிவசத்தால். (௨)

தறுகண்மோகனுமிருளுறுமானிடச்சகோரப்
பறவைகட்குநின்ஞானமாந்தெண்ணிலாப்பரப்பி
யுறுதுயர்ப்பசிதெறமுழுத்திங்கள்போன்றுதித்தும்
வறுமையுற்றவைவருந்தநாமிருப்பதும்வழக்கோ. (௩)

முழுத்தவல்வினைக்கோடையான்முறுகியமனுவின்
குழுத்தளர்ந்திடநோக்கியுமுபநிடக்கொம்பிற்
பழுத்துநின்றமெய்ஞ்ஞானமாம்பழத்தைநீபடைத்து
மழுத்துமன்பிகந்தருள்செயாதிருப்பதோவறமே. (௪)

பருவநோக்கிவான்மழைபொழிந்திடுவதும்பகலோ
னிருடிரப்பதுந்தண்புனனதிகண்மற்றெவையும்
பெருகுகிற்பதுமொப்பிலாநற்குணப்பெரியோ
ரருள்சுரப்பதுந்தமக்கொருபொருள்குறித்தன்றே. (௫)

இனையவாதலினிக்கணத்தெம்மொடுமினிநீ
யனையர்வைகியகாசிமாநகரினூடடுத்து
வினையெலாமறவேரொடுங்கெடுத்துநல்வெற்றி
புனையலாமியற்பருவமீதென்றிவைபுகன்றான். (௬)

ஈதவன்பகரெல்லையில்வல்விரைந்தெழுந்தே
நீதியங்குணர்வேந்தனைத்தொழுதியனியமன்
போதரும்பகைதுரந்திடப்பருவமிப்புறமென்
றோதுகின்றவையொக்குமென்றினையனவுரைத்தான். (எ)

கலிவிருத்தம்.

இடரினின்சிந்தனையின்றுகாறுமே
தடைபிறிதின்மையாய்முடிந்ததன்மையான்
மிடையுநின்படையினிமேலுந்தெவ்வரைக்
கடைமுறைவெஞ்சமர்கடத்தறிண்ணமால். (அ)

கற்றடம்பயிலுமிக்காடுவிட்டினி
யுற்றநம்படையெலாமொருங்கெழுந்துநம்
பற்றலருறையுமப்பதிபுகாமலே
மற்றொருபுண்ணியதலத்தின்வைகியே. (கூ)

பண்டையோர்சுயோதனன்பாண்டுமைந்தரை
மண்டுகான்புகுத்தியுமாலைத்தூதுவிட்
டண்டுபேருரிமைகேட்டவன்மறுத்தபின்
விண்டுபாரதச்சமர்விளைத்தநீதிபோல். (கo)

தூதுவனொருவனைத்தொடரப்போக்கியப்
பாதகமோகனைப்பாரெலாமெமக்
கீதியென்றுரிமைகேட்டில்லையென்றிடின்
மோதிவெஞ்சமர்பொரன்முறைமையாமென்றான். (கக)

இவ்வகையவன்சொலவியல்பிதாமென
வவ்வயினிருந்தவராருங்கூறவே
செவ்வியசெங்கையுஞ்சிரமுங்கம்பியா
மெய்வருங்கொற்றவனிதுவிளம்பினன். (கஉ)

சிலமும்வெஞ்சமர்செய்யுஞ்சூழ்ச்சியு
மேலிதுவலதிலைவிளைவுமீதென்று
காலமொர்மூன்றையுங்கருதுங்காவல
னூலுணர்மியாயனையருளினோக்கியே. (கங)

எண்ணியற்படையொடுமெழுந்தியாமெலா
நண்ணியுற்றிடத்திருநாட்டிலீட்டிய
மண்ணியற்றலங்களில்வய்ங்குமாங்கொரு
புண்ணியத்திருத்தலம்புகறியாலென்றான். (கச)

அங்கவாசகஞ்சொலுமவனைப்போற்றியே
கங்கைமாநதிபயில்கவுடதேயத்திற்
றங்குராடாபுரத்தலத்திலுள்ளதோர்
செங்கண்மால்சக்கரதீர்த்தமென்பதே. (கரு)

பங்கயனாட்டினும்பைம்பொனாட்டினும்
பொங்குமத்தலத்துளபுனிதமில்லையா
லங்கதன்பாங்கரினளவினம்படைச்
சங்கமுமெழுந்துபோய்த்தரிக்கலாமென்றான். (கசா)

என்றவனியம்பலுமியன்றகானம்விட்
டன்றுதன்மனைவியராயினோரொடு
மொன்றுபல்படையொடுமுயர்விவேகர்கோன்
சென்றனன்றத்துவத்தேரின்மீதரோ. (கஎ)

நீள்கொடைமன்னவனெடும்பொற்றேர்மணித்
தாள்கிளர்ந்தெழலுமத்தரியலார்க்குந்தங்
கேள்கிளர்மாதர்க்குங்கிடைப்பதென்கொலோ
தோள்களுங்கண்களுமிடந்துடித்தவே. (கஅ)

தீநிகர்வெம்பிணிதீர்க்குமூலிகை
கானிடையிருந்துதங்கைவந்தாலென
மானிடர்பவங்களைமாற்றுதற்குமெய்ஞ்
ஞானநாயகன்படைநாட்டில்வந்ததால். (ககூ)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இனையபல்வளநாடெலாமியன்றிடவேகியுமதிநாத
னனையதெய்வமாங்கவுடராடாபுரத்தகன்றசக்கரதீர்த்தந்
தனையடுத்தயற்சார்ந்தநற்படையொடுந்தானுமங்ஙனம்வைகி
நினைவிலுற்றமையிவைபுகன்றனனயனீதிகேள்வனைநோக்கி. (உ௦

ஈதுகாலமீதிடமிதுநந்திறலிதுபகைவலியீது
நீதியீதுநற்றருமமுமீதுநன்னினைவிதுநெறியீதென் [மற்
றோதியோர்ந்துணர்கல்வியிற்சொல்பகையொன்னலர்க்கஞ்சா
றாதுபோயுரைசெய்பவர்நீயலாற்சொல்பவர்பிறர்யாரே. (உக)

விரைவினெய்திமாமோகனையடுத்துநம்வியன்வரவெடுத்தோதி
யுரிமையாகுமிவ்வுலகினைக்கேட்டியாலுரைத்ததற்கிசைந்தானே
லரிதலஞ்சிவதலமறையோர்பதியருந்தவநறைசூழற்
றிருநதிந்நுறைபுண்ணியநறையுளித்திறமெலாம்விடுத்தேகி. ()

துருக்கர்பப்பரரெயினர்கீழினத்தவர்சோனகரிணையோர்தா
மிருக்குமத்தலமெத்தலைமவ்விடமெங்கணும்புகுந்தாங்கே,செரு
க்கிவாழ்தியென்றுரைத்தியாலவ்வகைசெய்வதற்கியையானேல்
வருக்கமோடுவெம்போர் பொரநாளையேவரச்சொலென்றிவை
சொன்னான். (௨௩)

நீதிநாயகனப்பணிதலைக்கொடுநிவிர்த்திபாலனைப்போற்றிப்
போதன்மேயினன்வாரணாசியினிடைப்புண்ணியசரிதத்தோன்
காதல்கூருபநிடதைமாமணமுதற்கழறினங்கடுமோகன் [வாம்.
றாதுபோயினர்படைஞருக்குரைத்தமைதொடுத்தினியுரைசெய்

சக்கரதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம்-௩௩௨.

## ௨௪-வது, காமனாதியர்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மருவு காசியில் வைகிய மோகமா மன்னவன் விடுதூதர் [ற
பொருவிறேயங்களெவற்றினும்விரைவினிற்போயினர்புகுந்துற்
கரும மாங்கவ ரவர்க்குரைத் தழைக்குமுன்காமனாதியர்வேந்த
னிருபம் வாங்கினர் சிரங்களிற் சூடினர் நிமிர்ந்தெழுந்தனர்மா
தோ. (௧)

மடிவில்காமன்வெங்கோபனுலோபன்மாமச்சரன்சங்கற்பன்
கடியதாமதன்மதனிராசதன்கொடுங்கலகனச்சந்தேக
னடல்விகற்பன தன்மனக்ரமன்றுக்கனனருகனவமானன்
விடயசங்கனுள்வயிரனாசன்றிறல்வெகுமுகனிவர்யாரும். (௨)

இருள்பரந்ததோவிடமெலாமிகத்திரண்டெழுந்தவோநெ
டும்பார்மே, லருளில்வெவ்வினையாவுமாங்கொருபுடையடர்ந்த
வோபலநோயு, முருவுகொண்டுமற்றோர்புறத்துற்றவோவென்
றரவோரஞ்ச, மருளுறும்படையோடும்வந்தடுத்தனர்வாரணா
சியின்மன்னோ. (௩)

கடியபாவங்கள்யாவையுந்தீர்த்திடுங்காசிமாநகர்தன்னி
னெடியகண்டகர்யாவருமவ்வயினெருக்கிநின்றமையாற்றன்
முடியயர்ந்திடுமரவினுக்கரசனுமுதுகுளுக்கியபாரப்
படிமடந்தையுமகமகிழ்ந்தனர்தங்கள்பாரநீங்கிடுமென்றே. (௪)

இனையரவ்வயினிவ்வணமெய்தியவெவ்லையிலதிமோகன்
கனைகழற்றொழுதெய்தியத்தூதுவர்காமனாதியர்யாரு
மனையுமக்களும்வன்படையுங்கொடுமன்னநின்பணியேவல்
புனையுஞ்சென்னியர்வந்தனரென்னுமுன்புகுத்துதிரீங்கென்றான்

மாரனாதியர்க்கவ்வுரைபுகலுமுன்வந்துகண்களிகூர்ந்து
சாருவாகன்வெங்கலியகங்காரனசத்தியனவன்றாதை
பேருலாவியகுதர்க்கன்மற்றோரொடும்பேதையர்குழுவோடு [ர்.
நேருலாவியாங்கிருப்பவன்றான்மிசைநிபிடமிட்டெதிர்தாழ்ந்தா

வணங்கினின்றவர்யாரையுமருங்குறவரிசையிற்கைந்நீட்டி,'பிணங்குமன்பினோடிருத்திவான் முகந்தொறுமிணைவிழியருணோக்கி யணங்கனாரொடுமக்களுநன்றுகொலவரவர்திறன்மேன்மைக்,குணங்குந் தீங்குமற்றுண்டு கொலென் றிவைபன் முறையுரைசெய் தான். (௭)

நிறைந்தவெவ்விடமன்னவனவ்வுரைநிகழ்த்தலுமனைவோருஞ்
சிறந்தமூவுலகத்தினுமரியயன்சிவன்முதலோருள்ளு
முறைறந்தநாயகவெங்ஙனமிருக்கினுமுன்னையங்கொருபோழ்து
மறந்ததின்றியேவைகியவெமக்குநல்வாழ்வரிதோவென்றார்.(௮)

பரவியாங்ஙனமவரவரிவ்வுரைபகர்கின்றவிடையேதன்
கரமமைத்தனைவோரையும்வேந்தனைக்கைதொழுதடற்காமன்
விரவுமஞ்ஞைமாபுரம்விடுத்திங்ஙனமேவிமற்றெமையெல்லாம்
வரவழைத்திடுங்காரணம்யாதுகொன்மன்னநீபுகலென்றான்.(௯)

கலி நிலைத்துறை.

அங்கவனஃதுரைசெய்யநகைத்தவகங்காரன்
றங்கியவீரரியாவரையும்மெதிர்தானோக்கிக்
கொங்குறைதார்முடிமன்னவன்முன்புரைகூசாதே
பொங்கியநெஞ்சுபொறாமையினாலிவைபுகலுற்றான். (௧௦)

பங்கமில்செய்கைவிவேகனுரைத்தபடிக்கெய்தி
நங்கருதார்நிருபகன்முதலோரினநாட்டின்கட்
டங்கள்சுரூபமறைத்துமரோடுதழீஇயங்கே
யுங்கடலங்கடொறும்புகலுற்றமையுணரீரோ. (௧௧)

வந்துபுகுந்தவர்கைதவமாகவதிந்தப்பாற்
றந்தமியற்கைபயிற்றியபோதுதவந்தானஞ்
செந்தழல்வேள்விசெபங்கண்முதற்பல்செயல்யாவு
மந்தணரேமுதலோர்கடொடங்கியதறியீரோ. (௧௨)

அன்னவையொற்றருணர்த்தவுணர்ந்திறையவன்வைகு
நன்னகர்விட்டிவணின்னகருற்றதுநாடீரோ
சொன்னதலங்கடொறும்பினொளித்துறைதுன்னார்மேன்
மன்னவனேவலின்வெங்கலிசென்றதுமதியீரோ. (௧௩)

தட்டியறைந்ததெனும்படியுங்கடலங்தோறு
மட்டியல்வார்குழல்யோகினியென்றுரைமடவார்பா
லொட்டியதெவ்வரையின்னவரென்னவுணர்ந்தங்கே
கிட்டியவெங்கலிபட்டகொடுந்துயர்கேளீரோ. (கச)

பரந்தவிழிச்சிவபத்தியியோகினிபண்பாலே
துரந்துவிடுத்தபின்வெங்கலியைப்பலதுன்னூர்தாம்
புரந்தொறுமின்னவருக்கிவரென்றுபுகப்பெற்றோர்
கரந்துறைகின்றமைபோய்வெளிநின்றமைகாணீரோ. (கரு)

பஞ்சடியுச்சியில்வைக்கவிசைந்தியல்பண்போலு
நஞ்சனகண்ணியரின்பமுயங்கநரர்க்கெல்லாந்
தஞ்சமிதன்றிமறித்திலையென்றொருசார்வாகன்
விஞ்சையையெங்கும்விளம்பினனென்றல்வினவீரோ. (கசு)

மட்டியலம்புயன்மகளைமணஞ்செயமதிநாதன்
விட்டிடுகின்றசிரத்தையைவவ்வவிரைந்தங்கே
யொட்டியபுத்தனும்வெய்யகபாலனுமோர்மிச்சா
திட்டியுமெய்தியதின்னமுநீரதுதேரீரோ. (கஎ)

நெய்தவழ்வேள்விபுரிந்தொருதன்னெடுநேசம்போற்
கைதவமன்றுபுரிந்தகல்கின்றகடுந்தன்மன்
மெய்தளரும்படிவவ்வுமதற்கொருவிறன்மான
னெய்தியதின்னமிவ்வேளறியாமலிருந்தானே. (கஅ)

இங்ஙனம்வந்துவினவியதென்னைநும்மியனன்றாட்
டங்ஙனமின்னவையாவுமியங்கவுமறிவின்றி
மங்கையர்கொங்கைமுயக்கிலுணர்ச்சிமறந்தீரோ
துங்கமலர்ச்சயனத்திடைகண்கடுயின்றீரோ. (கக)

என்றிவையோர்மமதக்கொருதாதையியம்பாமு
னன்றிதுவென்றுதுளக்கிமுடித்தலைநகைசற்றே
மென்றுவர்வாயிலரும்பநகைத்தடல்விற்காமன்
வன்றிறன்மன்னவையூடெதிரின்னனவகைசொல்வான். (உ௦)

ஒன்னலர்தம்முருமாறிநம்மூருளொளித்தாரா
மன்னவர்சிற்சிலருக்கியன்மேன்மையறைந்தாராந்
சொன்னவர்சொற்கொடுபூசுரர்வேள்விதொடுத்தாரா
மன்னவரம்மொழிகேட்டவரிந்நகர்வந்தாராம். (உக)

சித்தசனுகியும்யானறியாதவர்சிலருண்டாம்
பித்தரெனுங்கலியானவர்கண்டுபிடித்தாராம்
பத்தியராமியல்யோகினியாரருள்பார்த்தாரா
மத்திறலோரையிவர்க்கவரஞ்சியடைந்தாராம். (உஉ)

அன்னவர்தம்மையடுக்கவுமஞ்சியகன்றிங்கே
மன்னவனுக்கதுமைத்துனனார்சொல்வந்தாரா
மென்னையடுத்தறன்முத்தியுமுண்டெனவேகுங்காற்
சொன்னதுகேட்டவர்பெண்டிர்நலங்கடிறந்தாராம். (உங)

நஞ்சினுமிக்ககொடும்பகையோர்முனலங்குன்றிப்
பஞ்சினுமெல்லியலாரையடைந்தவர்பயமுற்றே
ருஞ்சிடுதற்கெதிர்தம்*முருவிட்டவருருமாறி
யஞ்சினரிங்கிவர்தங்களொடுஞ்சமரார்செய்வார். (உச)

பதுமன்மகட்கவர்தூதெனவேவுமொர்பைங்கோதைப்
பொதுமகளுக்கொருபொதுமகள்விட்டதுபோதாதே
யெதிருறுபுத்தனடற்சமணன்பிறரினையோருங்
கதுமெனவேகவிடுத்ததுநல்லகணக்கன்றே. (உரு)

ஒன்னலர்வந்தெதிரோங்கினுமாங்கவரூடேயிங்
கென்னையாரையழைத்திவைநீக்குதிரென்றேவித்
தன்னகரின்கணிருந்தரசாள்வதுதனைவிட்டித்
தொன்னகரின்கணம்மன்னவனெய்துதறேழிலாமோ. (உசா)

இடையுறுதன்றிருநாடும்விடுத்திறையெதிரேவந்
துடையவினத்திலுயர்ந்தவராய்மதியுடையோராய்த்
தடையுறுசெய்வினைதக்கதிதின்னதகாதென்றே
புடையிலிருந்திவர்புத்தியுரைத்ததுபோதாதோ. (உஎ)

என்னவெடுத்திவைசொல்லியகாமனையிகன்மன்னன்
றன்னதுகைகொடமைத்தெவர்நிற்பர்தளஞ்சிங்க
மன்னநும்வீரம்வெளிப்படிலென்றுமகங்காரன்
சொன்னவைதன்னியலென்றுமறித்திவைசொல்லுற்றான். (உஅ)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பெண்டிரைத்துணையாய்க்கொண்டுபெருஞ்சமர்கடக்கும்வீரர்
திண்டிறனன்றுமென்றேசெப்பியசெருவிற்காமா
பண்டொருமயிடன்றன்னைத்தாருகப்பதகன்றன்னை
யொண்டிறன்மாதரன்றேசமர்புரிந்துயிருண்டாரே. (உகூ)

---

* முதுகிட்டவர்என்றும்பாடம்,

ஆதலிற்சம்புபத்தியரிபத்தியென்பார்தம்மை
மாதரென்றிகழ்வதன்றுன்மற்றவர்கருணைகூரப்
போதுவரென்னில்வெல்லும்புயவலியில்லாரேனுந்
தீதுறும்பகைஞர்போரிற்சிங்கமொத்தடுவரன்றே. (ருo)

அடுத்தநம்பகைஞர்தம்பாலன்னயோகினிகடாமே
யெடுத்தபேரன்புசெய்தகெத்தலத்துள்ளுமுண்டாற்
கடுத்தினியவர்மேல்யாருங்கலந்துடனெழுந்திப்போது
மடுத்திலமென்றாற்பின்னைமுடிப்பதுவன்மையன்றே. (ருக)

என்பதனுலும்யாவரெய்தினுமிவ்வூர்முத்தி
வன்பதநல்குமென்னும்வழக்கதொன்றுண்மையானு
மென்பகைபுகுதாமுன்னேமேவியிந்நகரில்யானே
பின்பனைவோருமிங்குவரச்செய்தபெற்றியாமால். (ருஉ)

சிரத்தையைப்பிடிக்கச்சென்றசேயிழைமிச்சாதிட்டி
கரத்துறுகபாலன்புத்தன்கடுந்திறற்சமணனின்னோர்
வரத்ததுதாழ்த்ததென்னேதெரிகிலன்மானன்றன்ம
னுரத்திறங்கவரச்சென்றேனுற்றதுமுணர்ந்திலேனல். (ருரு)

போதியநெறியிற்புக்குப்புத்தனேமுதலோர்கண்டு
நீதிமுன்பிறந்தோன்றர்க்கநீலவாள்விழிபாலேவுந்
தூதியைக்கவர்ந்ததாகச்சொற்றனனிடம்பன்மைந்த
னோதியவனையன்வார்த்தையுண்மையாயாவர்கொள்வார். (ருச)

அன்னவளிவருக்கஞ்சியாரிடைக்கரந்துற்றுளோ
வின்னமுமினையர்தேடியெவ்வழிப்படர்கின்றாரோ
பின்னவிர்கூந்தலாளைப்பிடித்திங்குவருகின்றாரோ
முன்னநங்கலியைக்காய்ந்தோர்முனிவிஞலென்னுற்றாரோ. (ருரு)

ஆதலாலறியகிற்பாரிவரவுடன்னைப்பற்றிற்
காதலாமியல்விவேகன்கடிமணந்தாழ்க்குமன்றே
மோதலாம்பகையையாவுமுடிக்கலாநமக்குப்பின்ன
ரீதலாலுறுதிமற்றொன்றில்லையென்றியம்புமெல்லே. (ருசா)

வயிரவிதன்னையேவிவரும்வழிபார்த்துநின்ற
செயிருறுங்கரகபாலன்சிரத்தையோடறனையின்னங்
கயிரவமனையசெவ்வாய்க்காரிகைகொணர்ந்திடாம
லயர்வுறுகின்றதென்னென்றையுறுமுளத்தனானன். (ருஎ)

குண்டலைநோக்கியெண்ணிக்குணிக்குநின் கணிதநூலால்
விண்டுரைசெய்தியன்றுண்மேவியவிளைவென்றோத
வொண்டிறலவனுமவ்வாறோர்ந்துதன்னுள்ளத்தூடு
கண்டனன்விளைந்தவெல்லாங்காபாலிதனக்குச்சொன்னான்.(௩௮

அன்னசொற்கேட்டலோடுமாங்கவன்றுணுக்கிட்டஞ்சி
யென்னுடைத்தெய்வமானாளிவ்வணமிறந்தாளென்னிற்
பின்னைமற்றெவரேயந்தப்பெண்கொடியன்புபூண்ட [றே.
வொன்னலர்க்கெதிர்போய்வெம்போருடற்றிவெல்பவர்களென்

இனியிறைதாழ்ப்பதன்றாலிங்ஙனமெழுந்துபோயா
மனைவருமதிமாமோகனடித்துணைதொழுதுவந்த
வினையிவையாவுமாங்கேவிளம்புதுமென்றுபோனார்
கனல்விழிக்கபாலனோடுகண்டகர்பிறருமாதோ. (௪௦)

புழுங்குவெங்கபாலன்குண்டன்புத்தர்கோன்மிச்சாதிட்டி
செழுங்கவினழிந்தமானனனைவருந்திறனழிந்து
மழுங்கிவெம்பகலிற்றோன்றுமதிநிகர்முகத்தராகி
யழுங்கியசிந்தையோடுமவ்வயின்வரவுகண்டான். (௪௧)

அன்னவர்வரவுதானேயரசனோடாங்குளார்க்குச்
சொன்னதுபின்னர்விண்டுசொல்வதற்குற்றதென்ன
மன்னவன்சரணம்வந்துவணங்கினர்நின்றகாலைக்
கன்னவிறிரடோள்வெய்யகாபாலனினையசொன்னான். (௪௨)

ஐயநின்னேவல்சூடியணங்கன்னமிச்சாதிட்டித்
தையறன்னோடியாங்கடனித்தனிநெறியினெய்தித்
துய்யவன்றாதிதன்னைத்தொடர்ந்தனங்கண்ணுற்றெங்கள்
கையுறநின்றவெல்லைக்கரந்தவள்போயினாளால். (௪௩)

ஆனவடன்னைப்பின்னுமனைவருநாடும்போது
மானனுமறனைநாடிவந்தனனவன்றனோடுங்
கானவிர்குழலினாளைக்கணிதமோர்ந்தமணன்சொல்ல
ஞானயோகியர்தஞ்சிந்தைநண்ணுறத்தெரிந்துமன்னோ. (௪௪)

மந்திரசித்தியென்றாய்வயிரவிதன்னையாங்கே
யுந்தினனவளுமவ்வாறுற்றிருவரையும்வவ்வி
யந்தரத்துற்றவேலையரிபத்திவெகுளிதாக்க
விந்திரசித்தின்பாசமிற்றதொத்திறந்துவிழ்ந்தாள். (௪௫)

அவ்வரியினம்போலுய்யுமறநெடுஞ்சிரத்தைசெல்லுஞ்
செவ்வழிப்படர்ந்தாளன்னசெயலெலாமுணர்ந்துபின்ன
ருய்வழிபிறிதொன்றின்றியுற்றவாறன்பாலோதற்
கிவ்வழிபுகுந்தோம்யாங்களென்செயத்தக்கதென்றான். (சசு)

அதுபுகன்றவன்சொற்கேட்டவரசனுந்துணுக்கிட்டஞ்சி
மதுநுகர்கபாலன்றன்னைவான்முகமெடுத்துநோக்கிக்
கதுமெனநின்பானின்றகடுந்திறலணங்கைமற்றோர்
பொதுமகடனக்காயேவிப்போக்கினைகொல்லோவென்றான். ( )

அலங்கலம்புயவிவேகற்கரிசிவபத்திபோலக்
குலங்களோடிங்குக்காக்குங்கோற்றொடியனுமன்றன்று
விலங்கைமாகாளிமுன்னுளேகியதென்னநம்மை
விலங்கினள்கொல்லோவென்றுவிறற்கமடேசன்சொன்னான். ( )

பின்னருமற்றுளோரும்பெருநிதியிழந்தோரென்ன
வன்னவட்கிரங்கிநிற்குமளவையிலதிமாமோக
மன்னவன்வதனநோக்கிவயங்குபப்படைகட்கெல்லா
முன்னவன்காமராசனினையனமொழிவதானான். (சகூ)

வாயுவின்றிறலான்மேனாள்வையகந்தாங்குமேரு
வாயிரமுடிப்பின்மற்றென்றகன்றிடவதனின்வன்மை
போயினதாகுங்கொல்லோவக்கதைபோற்கபாலி
யேயினளிறத்தறன்னனம்வலிக்கிறென்றுண்டோ. (ரு௦)

அடியனேனிருக்கவண்டரண்டங்கண்முழுதும்வெல்லுங்
கொடியவன்கலகனோடுகோபனுமிருக்கப்பின்னு
மடிவிலாங்காரனுந்தன்மகனுலோபனுமிருக்கக்
கடியமாமதன்மானன்சங்கற்பனுமிருக்கமாதோ. (ருக)

மச்சரன்முதலோர்பின்னுமன்னநீபணிக்குமேவ
லச்சரவேகம்போற்சென்றரிபிரமாதியோரும்
பிச்சரதியற்கைசெய்யப்பிடித்ததுமுடிக்கவல்ல
விச்சையரிருக்கநின்னைவெல்பவருலகில்யாரே. (ருஉ)

இருடிரண்டனையமற்றுனெண்ணிலாப்படைஞர்தம்மு
ளொருவரேபோதாதோதானுலகொருமூன்றும்வென்று
வருவதற்கனையர்நிற்கமற்றெறிபேனையேனுந்
திருவருள்புரிபினின்றேராந்தைநீபோய்வருமுன்சென்றே. (ருங)

ஓங்கியவிவேகனுர்க்கவ்வுபநிடத்தொருத்திவேட்கை
யாங்குருவண்ணமாற்றியரிசிவபத்தியன்பு
நீங்குறவிலக்கிமற்றைநீலவாள்விழியார்வேட்கை
பூங்கணையொன்றேயேவிப்புந்தியிற்புணர்ப்பனன்றே. (ருச)

விடைதருகென்றுநின்றவீரவிற்காமன்றன்னைப்
படைஞர்மற்றுள்ளோரோடும்படர்ந்திவைசெய்தியென்னுக்
கொடைகெழுமோகவேந்தன்கூறினன்விடுக்குமெல்லைத்
தடையறப்புகுந்துதாழ்ந்தோர்சாரன்வந்திணையசொன்னான். ()

இன்றினிச்செல்வதென்னையேகியசிரத்தைமீண்டு
நன்றறிவிவேகவேந்தைநான்முகன்மகள்பாலுய்க்கத்
துன்றுமாமணமுமுற்றிச்சூழ்படையோடுமன்னன்
பொன்றிகழ்கவுடராடாபுரத்துவந்திறுத்தானென்றான். (ருசு)

கலி விருத்தம்.

இவ்வுரையியம்பலுமிருந்தமோகனே
டவ்வயினின்றவராருந்துண்ணென
வெவ்விடிமேலிடிவிளையக்கேட்டவெம்
பைவருமரவினப்பண்பொத்தாரரோ. (ருஎ)

அறைபறைகேட்டதோரசுணமாநிக
ரிறையவன்மிக்கதோரச்சமெய்தியே
முறைமுறைவிடைதருகென்றுமொய்த்தவர்
துறைதொறுமுகமெடுத்திணையசொல்லினன். (ருஅ)

அத்திறலறிஞர்பாலடுத்துமால்சிவ
பத்தியர்புரியருட்பார்வைதீர்த்திலஞ்
சுத்திதன்றிருமகடுதுசெல்வுழிப்
பொத்தியாங்கவளையும்போய்க்கவர்ந்திலேம். (ருகூ)

உணர்வுடைமன்னவனுபநிடத்தைச்சேர்
மணவினைநாளினுமாற்றுகின்றிலங்
கணமுறுமியாமெலாங்கழிந்தநீர்க்கிடு
மணையெனவினிமுயன்றுவதென்கொலோ. (சூ0)

நெடியநம்மொன்னலார்நினைவின்வண்ணமே
முடிவுறப்பெருகினமுயன்றசெய்தொழில்
படிவுறுநந்தொழில்பரந்தநீர்நதி
வடிவுறுந்தன்மைபோல்வாடிவந்ததால். (சூக)

என்றினையனபலவியம்புமன்னனை
நின்றுகைகூப்பிவெண்ணிலவெழுங்குடைத்
தென்றலந்தேரினன்சிந்தைதேற்றுவா
னென்றலவாசகமினையவோதினன். (சூஉ)

கடிக்கமலாசனன்கன்னிகைம்மலர்
பிடிக்கினுமென்னவன்பிறழென்பூங்கணை
வடிக்கின்முன்னிற்பனோமழைக்கலாற்குடை
யிடிக்கெதிர்பிடிப்பவர்யாவரேகொலாம். (சூங)

முற்றியமணங்கொடுமோகநம்படை
வெற்றியுந்தாழ்க்குமோமேவலார்க்கொரு
வற்றியமாந்தளிர்வாங்கிற்கானெலா
முற்றவெவ்வழல்சுடாதொழியுமோவென்றான். (சூச)

அன்னவனீதுரைசெய்யவவ்வயின்
மன்னவன்வனத்துறம்வலிக்கொதுங்கிய
வொன்னலரஞ்சுறுதூர்புக்காரெனி
லின்னமுங்கேட்பவையிவைகொலோவென. (சூரு)

காரியமோர்ந்துதங்கருத்துட்கொண்டினிச்
சீரியவண்ணம்யான்செய்வனின்றெனப்
பேரியற்றலைவர்கணிற்கப்பின்னுளார்
நீரிதுசெய்திரென்றிவைநிகழ்த்தினன். (சூசூ)

இடம்பனையழைத்திவ்வூரெங்குமேயுனக்
குடன்படுமிடாம்பிகரோடும்புக்குநீ
விடம்பரந்ததுவெனவிவேகனெய்திய
கடம்பயினெறியெலாங்காத்திபோவென்றான். (சூஎ)

மருகனாகியவனுசாரன்வாவென
வருகழைத்தறிவுடையனையர்சேனையவ்
விருநதித்துறைதொறுமெய்துறுவகை
கருதியாங்கவரைநீகவர்தியாலென்றான். (சூஅ)

ஞானநீர்மையுந்தவநலமும்பாழ்பட
மீனநீருகளுநாடகன்றுமீட்டுமக்
கானநீடிசைதொறுங்காப்பதற்கவ
மானநீயாங்கவர்வழியிற்போவென்றான். (சூகூ)

காமனுதியர் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கoஙக.



### கலி விருத்தம்.

ஓதிவ்வாசகஞ்சிலர்க்குரைத்துமன்னவன்
போதிராலென்றவண்விடுக்கப்போயபி
னீதிகேள்வனுமதிநிருபனேவலால்
வீதிவாய்மடங்கல்போல்விரைவினெய்தினான். (க)

### கலிநிலைத்துறை.

அன்னானெய்தக்கண்டனர்கண்டாரதிமோகன்
முன்னாகச்சென்றுற்றுநியாயன்முதிர்கோபப்
பன்னாகத்திற்பாய்கலுழன்போற்பகையஞ்சா
திந்நாளிவ்வூர்வந்தனனென்றிங்கிதுசொன்னார். (உ)

அனையானிவ்வூரெய்தியதென்னென்றம்மோக
னினையாமுன்னன்னீதிமணாளனெடிதெய்தி
மனைவாசற்றிண்காவலர்நீரென்வரவோதீர்
புனைவாசத்தார்மார்பனொடென்னப்புகல்கின்றார். (ங)

மன்னாநின்பால்வந்தனனிங்கோர்மதிநாதன்
றன்னாலேவத்தக்கநியாயன்றனியேயென்
றன்னாரோதிச்சொற்பணிகைக்கொண்டவர்மீண்டப்
பொன்னார்தோளானைக்கடிதங்கேபுகுவித்தார். (ச)

காவலன்முன்போய்க்கைதொழுதானைக்கைகூப்பி
யேவலர்தம்மாலாதனமொன்றிட்டெதிர்வைகப்
பாவனைசெய்தென்பக்கலினீயிப்பதியூடே
மேவியதென்னேசொல்லுதியென்னாவினவுற்றான். (ரு)

கொற்றவனச்சொற்கூறவனத்திற்குலவுற்றான்
சிற்றவைநல்குஞ்செல்வரியாருந்தீதின்றி
யுற்றனரோங்குமிராடநகர்க்கணுன்பின்னோன்
சொற்றவைநின்பாற்சொல்லியவந்தேன்றாதென்றான். (சா)

அங்கதுவென்னேசொல்லுதிநீயென்றவனோதப்
பங்கமில்காமன்கோபனுலோபன்பலர்பின்னுந்
தங்கவையுள்ளோருள்ளமதிக்கத்தகுமோகற்
கிங்கிவைகேளென்றுற்றதுரைப்பானிவைசொன்னான். (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வையகமுழுதுநின்பால்வழங்கிமானதனெங்கோவைக்
கையறவிகந்தகாலைக்கருத்தருள்சிறிதுமின்றி
நெய்யழலுற்றாலென்னநீயுமங்கவனைக்காய்ந்து
மெய்யயர்ந்துலையும்வண்ணம்வெவ்வனம்புகுவித்தாயால். (அ)

அன்னவன்றன்னையல்லாலன்னையாநிவிர்த்தியோடுந்
தன்னருங்கிளைஞரானோர்தம்மையுங்குலையத்தாக்கிப்
பின்னருமெண்ணில்கோடிபிழைபுரிந்தகலநீக்கி
யின்னல்செய்வித்தநின்போலேவரேயிரக்கமில்லார். (கூ)

அத்துயருழந்தானேனுமரிசிவபத்திமாதர்
வைத்துளகருணைதன்னான்மலரயன்மகளைவேட்டு
மொய்த்துறுகிளைஞரோடுமாறுடைப்படைஞர்சூழ
வித்தினங்கௌடதேயத்திராடமாநகர்[illegible]ற்றான். (க0)

அந்நகர்வந்தகோமானறிஞராற்புகழ்விவேக
மன்னவனுதலாலெவ்வருத்தநீயியற்றினாலும்
பின்னருங்கருணைகூர்ந்துபிழைசெயக்கருதாதுன்பா
லென்னையின்றேவவந்தேனென்றுபின்னினையசொன்னான். (கக)

இனவளைக்கடல்சூழ்வையமெவற்றையுமின்றுகாறுந்
தனமெனப்பெற்றசெல்வந்தனையினிவிடுத்துநீங்கி
நினதுயிருய்யவேண்டினின்னருங்கிளைஞரோடு
மனகநல்விவேகவேந்தனருட்பணிசிரத்திற்சூடி. (கஉ)

கானகவேடர்கள்வர்கடற்கரையுறையுந்தீயோர்
சோனகர்மிலேச்சராகுந்துருக்கர்பப்பரர்கள்சாதி
யீனரென்றிணையர்வைகுமிடங்களிலினங்களோடு
நீநயந்துறைதியென்றுநிகழ்த்தினன்பின்னுஞ்சொல்வான். (கங)

தம்பியர்தமக்குவையந்தயரதராமனும்பி
னிம்பர்வீடுமனுநல்கியிருந்தவாறுணர்ந்திலாயோ
வெம்பியபடைஞர்சூழமேவியிந்நாட்டினுற்ற
வும்பியர்தமக்குநீயுமுதவுதன்முறைமையாமால். (கச)

இன்னவைசெய்தியாகிலெவருக்குமூத்தோனென்று
முன்னரும்புகழினோங்கியுறவொடுஞ்செல்வத்தோடுந்
துன்னுபல்கிளையுஞ்சுற்றத்துன்மதியினத்தோர்போற்ற
நின்னிகர்யாருமின்றிநீணிலத்திருக்கலாமால். (கரு)

நீயிதுமறுத்தியாகினெடும்புகழ்வாலிமைந்தன்
வாயுரைமறுத்தபத்துமவுலியான்போலுமாயன்
போயுரைத்தமையுட்கொள்ளாப்புயங்ககேதனனைப்போலு
மேயவுன்சுற்றத்தோடும்விளிவதுசரதமென்றான். (கசு)

என்றவனுரைத்தலோடுமிருந்தமாமோகவேந்தன்
மின்றிரிந்தென்னநக்குவியன்முடிதுளக்கிச்சால
நன்றிதுநன்றிதென்னநவின்றுநன்னீதிகேள்வன்
றன்றிருவதனநோக்கித்தானிதுபுகல்வதானான். (கஎ)

முன்னைநாளரசுதந்துமூன்றுலகினுக்குமெந்தை
யென்னைமாமவலிசூட்டியிகந்தனன்விவேகனோடு
மன்னையாமவளையென்பதறிந்திருந்துரிமைகேட்ட
நின்னையாநீதிகேள்வனியாயனென்றுரைப்பதம்மா. (கஅ)

தாதையங்கவருக்கோர்பாற்றரிக்கவுமிடங்கொடாமன்
மோதிவிட்டிடுதியென்றுமொழிந்தசொற்கேட்டுங்கானிற்
போதவிட்டிருந்தவென்பாற்புகுந்துதன்னுரிமைகேட்கத்
தூதுவிட்டவரோநீரோதுணிந்தவர்நும்மில்யாரே. (கக)

கலிமுதலோர்க்குத்தப்பிக்கைபுகாதுயர்ந்தாரென்று
நலிவுறாதுபநிடப்பெண்ணன்மணம்பெற்றாரென்று
மொலிகடலுலகமெல்லாமும்பியர்க்கீதியென்றும்
வலிமையும்வழக்குநின்போன்மற்றினியாவர்சொல்வார். (உ0)

நேயமுமுறவுமாற்றிநிவிர்த்தியென்றுரைக்கப்பெற்ற
தாயொடுதனையுமேனுட்டாரமுஞ்சுதனுமன்றென்
றாயவென்றாதைநீக்கியனையனைத்துறந்தானென்றா
லேயவப்பிதுர்த்துரோகியெனக்கெவ்வாறெம்பியாவான். (உக)

மேதகுமிராமனோடுவீடுமன்றானுமேனாட்
பூதலமுழுதுநல்கிப்புறத்தவர்போயதன்மை
காதலிற்பொருந்துந்தத்தங்காந்தையர்க்கன்புகூருந்
தாதையர்பொருட்டினாலோதம்பியர்க்கிரங்கியேயோ. (உஉ)

இன்னிலந்தனக்கேயாகவினர்நாடெனக்குநல்கும்
பின்னவனியற்கைநன்றாற்பிழையிதுபொறுத்துமீட்டு
மன்னவற்கினியீந்தாலுமடவியான்கொடுப்பதல்லாற்
கன்னலங்கழனிநாடுகனவிலுங்கொடுப்பதுண்டோ. (உங)

மாலுயர்சம்புபத்திமடந்தையருளுண்டென்று
மேலயன்பெற்றமாதைவேட்டிடப்பெற்றேமென்றுஞ்
சேலுகணாட்டிலெய்திச்செப்பியவண்மையாவு
மூலமோடொருங்குமன்றேமோகன்பான்முனிவிலென்றான். ( )

அவனஃதுரைத்தலோடுமடுத்தவக்குதர்க்கனைய
சிவனயனிந்திராதிதேவர்க்குநின்றொற்றத்தந்
தவநிலையழிந்ததென்றாற்றானெதிர்நிற்கவல்லா
னிவனொருவிவேகன்கொல்லாவென்றெதிரிலங்கநக்கான். (உரு)

பின்னருநியாயன்றன்னைநோக்கினன்பிணைமானென்று
முன்னொருகலைமான்சென்னிமுளைத்தெழுங்கோடுகண்டே
வன்னெடும்புலிமுன்போயும்வனமகற்கிதியென்றுஞ்
சொன்னதுகடுக்குநீயும்வந்திங்குத்தோற்றதென்றான். (உசா)

ஈதவனுரைத்தலோடுமிறைமுகமுலோபனோக்கிப்
பூதலவைப்பிலோரெட்புதையுஞ்சிற்றிடந்தானேனு
நீதரற்கணையர்தம்பானிணக்கினுநிவிர்த்திபோலத்
தாதைமானதனுக்கீங்குன்றாயுமின்றாவளென்றான். (உஎ)

அன்னையைவெறுத்தகாலையறிவுடைவிவேகன்போல
நின்னையுமெங்களோடுநிந்தைசெய்தப்பாற்றள்ளிப்
பின்னருநும்மால்வந்தபெயர்வுறுச்சோகந்தன்னான்
மன்னனுந்தாதைதானுமாய்வனென்றறியச்சொன்னான். (உஅ)

இனையனபிறருந்தத்தமெண்ணினுக்கியைந்தயாவு
மனையமன்னவையிற்சொல்லுமளவிலக்ரமனங்கெய்திக்
கனைகழற்காலநீலக்கலிமகனதன்மனோடு
முனையயிற்செங்கைமோகன்முன்புநின்றினையசொன்னான். (உகூ)

பைத்தலைப்பணிகண்முன்னர்ப்பயமுறுதெலிரென்றென்ன
வத்தலையோர்கள்வாய்மையறைந்திடநம்பால்வந்த
பித்தனைப்பிடித்துத்தாளிற்பெருந்தளைப்படுத்தாதின்ன
மித்தனைபேருந்தாழ்த்திங்கிருக்கின்றதென்னேயென்றான். (௩0)

அன்னவனருகினின்றவதன்மன்மன்னவனைப்பார்த்துன்
பின்னவளகீர்த்தியென்றும்பேதையேன்மருகனென்று
நின்னருகிடைவிடாமனிற்றலானியாயனென்பான்
றன்னையெவ்வகைசெய்தாலுந்தக்கதேயாகுமென்றான். (௩க)

வெங்கலிமகனிவ்வார்த்தைவிளம்பலுநீதிகேள்வன்
சங்கரன்புரத்தைமேனுட்டழலெழநகைத்தாலென்ன
விங்கெனைக்கவரவல்லாரேவரேயிவனுளாரென்
றங்கைகளொன்றினேடொன்றதிர்வுறத்தாக்கிநக்கான். (௩௨)

வீரனுநியாயன்பின்னும்விறற்கலிமகனைநோக்கி
யோரொருபேராய்நீரிங்குறுதிரோவொருங்கேயுள்ள
பேரனைவீரும்வந்துபிடித்திரோகபாலிதன்னைச்
சீறனுதைந்தாலென்னச்சினந்நியான்சேறற்கென்றான். (௩௩

அவனதுபுகலலோடுமகங்கொதிகொதிப்பவாயிற்
றுவரிதழ்துடிப்பப்பரிசைசுறுக்கொளவுயிர்ப்புவீங்க
நுவலருஞ்செந்நீர்சிந்தநோக்கியத்தூதன்றன்னை
யிவனுயிருண்பனென்றெழுந்நேர்பவனையசொன்னான். (௩௪)

மிகுந்தருமனைமுன்காத்தமென்கொடியருளுண்டென்னு
மகந்தையோடுனைக்கோறற்கிவ்வக்ரமன்போதாதோதான்
றகுந்திறலெம்பாலீங்குத்தரியலார்விடுக்கத்தூது
புகுந்தனையாவியுய்ந்தாய்பெயர்கியாற்போதியென்றான். (௩௫)

என்றவனுரைத்தலோடுமெழுந்தனனியாயனிப்பா
னின்றவணிருந்தோர்பார்த்தெதிர்ப்புகுந்தூறென்னப்
பொன்றுதலுறுமிவ்வேழைபுறஞ்செல்வார்போமினென்று
வன்றவன்புகன்றுமீளவறிஞர்கோன்மருங்கிற்சென்றான். (௩௬)

அவனெழுந்தகன்றபின்னரரசனையுலோபனோக்கிச்
சவையில்வந்திங்குளோரைச்சங்கியாதகன்றதூதைக்
கவருதற்கொருவரேனுங்கண்டிலமென்றானம்பி
லெவரினிவிவேகன்வந்தாலிகல்பொரவல்லாரென்றான். (௩௭)

மானன்மன்னவனைநோக்கிமாதுரியோர்தனுதி
யானவர்தம்பாற்சென்றுமைவர்க்கொன்றளித்ததுண்டோ
மேனலந்தருவரேனுமேவலர்நண்பராகித்
தானதையுட்கொளாததனிமையேபிணிமையென்றான். (௩௮)

நியாயன்றூதுச் சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௧௦௪௬.

## ௨௬-வது, காமனாதியர் வீரலாபச்சருக்கம்.

——:*:——

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னவனினையகூறவாங்குறையதிமாமோக
மன்னவனருகினின்றமாரனாதியரைநோக்கி
யொன்னலர்திறலுமன்னூக்கமுஞ்செருக்கும்வண்ணா
மின்னதன்மையினாலென்பதியம்புதிரெவருமென்றான். (௧)

என்பவைசொல்லக்கேட்டவிரதிநாயகனம்மோகன்
றன்பதம்வணங்கிநம்முன்சத்துருவாகியுள்ளார்
வன்பதுநிற்பதெங்கேவல்லிருளஞ்சுங்கொல்லோ
மின்பலமின்னினாலுமென்றிவைவிளம்பினானால். (௨)

ஷை வேறு.

தாதவிழ்பூங்குழற்கனிவாய்த்தத்தைமொழிமுத்துநகைத்தை யலார்மேற்,காதலுறப்புரிசெயலேயென்வடிவாயவரவர்தங்கருத் துட்டோன்றி,யேதம்விளைவிக்குமென்னாலிரதியாலெனதுசின்ன த்தியல்பாலென்று, மாதரவுற்றின்பமென்னுமவ்வலையிலெவ்வுல கோரகப்படாரே. (௩)

ஒத்தேதுமுருவமில்லாப்பிரமமொன்றுமேயொழியவுருவமு ள்ளா, ரெத்தேவராயினுமோர்பூங்கணையாற்றம்போதமெல்லா நீங்கி, மத்தேறியுடைதயிர்போன்மனஞ்சுழன்றுசெயன்மறந்து மடவாராசைப், பித்தேறியிதமுரைத்தப்பேதையர்க்கும்பேதை யராய்ப்பின்செல்வாரால். (௪)

அலையேறும்வாரிதிசூழம்புவியிலென்னைவெல்வாராரேசெந்தீ யுலையேறுமெழுகெனமுத்தேவரும் பூங்கணைக்காற்றாதுருகி வெ ள்ளி, மலையேறினானொருவன் கடலேறினானொருவன் மறைந்து விண்ணின், றலையேறினானொருவனாயினும்போயின்னமங்குந்த விர்ந்தார்கொல்லோ. (௫)

வேதாவுமுகம்வெளுத்துவிண்டுவுமார்பகஞ்சிவந்துவிடைவல் லோனும், பாதாதிகேசாந்தம்பாதியுடல்கறுந்துவச்ரபாணிவே ந்தும்,போதாமன்முகத்திருகண்புறத்துமோராயிரங்கண்புகுதப் பெற்ற, தேதாலென்கணைதுரக்கிலீடுபடாரெவரெவரேயிலக்கா காரே. (௬)

வேதமுதலாகியவெண்ணெண்கலையும்வெண்கலைமான்வியந்து கேட்க, வோதியுணர்ந்தும்பிறருக்குரைந்துமுயர்பெரியோர்க்கு முளவிவேகங், காதளவுமடர்ந்துகுழைகடந்து குமிழ்மறிந்து

பொருங்கயலேச்சீறும், பேதையர்கட்கணே பாயுமவ்வளவேயல்லாதுபின்னுமுண்டோ. (எ)

செங்குமுதவாயதரச்சேயிழையார்நேயமெவர்திறம்பலாவாரங்கவர்தம்பார்வையினுலார்க்குமனங்கரைந்துருகாததுவுமன்றியிங்கெனதுபேர்ஞாலத் தெவ்வளவுண்டவ்வளவுமெவரேமாயக்கங்குல்விடிந் திருள்கழித்துக் கண்ணும்விழித்துணர்விதென்றுகாணவல்லார். (அ)

கலி விருத்தம்.

வள்ளமாமுலேமினர்வாள்விழிப்பார்வையைத்
தள்ளுவார்போனெடுஞ்சபையில்வந்தேறியே
கள்ளமோடுரைசெய்வார்கல்வியூடலதுதம்
முள்ளமூடவரைவிட்டொழிவுளார்யாவரே. (கூ)

மஞ்சுநேர்யானேதேர்வாசிகாலாளினம்
பஞ்சுபோன்மாளவோர்படுகனற்பொறியெனத்
தஞ்சம்வேறின்றியேதாவுபோர்வீரரு
மஞ்சுபூவாகுமென்னம்பினுன்மாய்வரே. (கo)

உந்தழற்றேவியைச்சண்டனன்றுண்டதுஞ்
சந்திரன்றன்குருத்தாரமோடுற்றது
மிந்திரன்மைந்தனுக்கிருகணென்றுன.தும்
வந்துபண்டைவரோர்மனேவியைக்கொண்டதும். (கக)

புக்கடர்த்திரவியோர்கன்னியைப்புணர்வுறத்
தொக்கடுத்தருள்கொடைச்சுதனேமுன்பெற்றது
மைக்கடற்கிறைவனுமருவுமித்திரனுமே
மெய்க்கடத்தூடுதம்வீரியம்விட்டதும். (கஉ)

இவைகொலோவினேயவாயெண்ணரும்விழைவினு
னவையுறுவியல்பருந்நகையுறுந்தகையராய்ச்
சவையுளோர்நகைசெயுந்தன்மைசெய்துடையர்மற்
றவையெலாமடியனேனுண்மையாலல்லவோ. (கங)

விரகநோய்புரியுமெம்வீரமேமேம்படக்
கரதலாமலகமாய்க்கலவியைக்காட்டியே
சுரதமோருருவமாய்த்தோன்றுமென்றுணேவியா
மிரதிலீலாவிதம்யாவரேசாற்றுவார். (கச)

காதுகாளத்தினுங்காயமோர்தேரினுந்
தீதில்கண்குடையினுஞ்செய்யநாவில்லினும்
போதுநேர்நாசியம்பினுமொரைம்புலனுமுள்
ளாதலாலெனதுசின்னங்களேயமையுமால்.　　(கரு)

மேவுமென்னுதவியாம்வீணையுமேடையுங்
காவுநன்னதிகளுங்கலவையும்புதுமணற்
பாவுதண்குன்றமும்பஞ்சவாசமுநறும்
பூவுமுள்ளளவுமார்போதமுள்ளார்களே.　　(கசு)

பண்டைநாண்மாயனைப்பகர்விருந்தைக்குமால்
கொண்டுதானுசுரக்கோலமாயவண்மூலைப்
புண்டரீகத்தடம்புணருவித்தவனுமென்
விண்டதார்மதலையாம்விடயவானந்தனே.　　(கள)

என்றுமற்றிவையெலாமிரதிநாதன்சொலா
நின்றவப்பொழுதின்வாய்நெடியமாமோகன்முன்
சென்றடுத்தென்பெருந்திறலினிக்கேளெனக்
குன்றெனத்தகையவெங்கோபனீதோதினன்.　　(கஅ)

சாற்றுமுள்ளூறும்விருப்பந்தடைப்படிலெழுஞ்
சீற்றமேயுருவமாமெனையுமென்சிந்தைநோய்
மாற்றுமோர்கொலையெனுமாதையுங்கலகனு
மாற்றல்சேர்மகனையுமார்கொல்வெல்வார்களே.　　(கசு)

நீர்தரிக்குஞ்சடைக்கடவுணன்னியமம்யான்
பேர்தல்செய்வித்ததும்பின்னுமென்றேவியா
லார்தனக்கெதிரெனுவவறையுமிக்காமன்மெய்
தீர்தல்செய்வித்ததுந்தேர்வுறார்யாவரே.　　(உ0)

எதிருறத்துடி துடித்தெரிவிழித்துணைசிவத்
ததிர்கொள்சொற்படபடத்தங்கமும்பதைபதைத்
துதிரமெய்க்குலைகுலைத்துட்கொதித்தெழுசினக்
கொதிபொறுப்பவர்களெக்குவலயத்தவர்களே.　　(உக)

தெருளறக்கலையினிற்றிறனறச்சிந்தையூ
டருளறப்பெரிதலைத்தறிஞராமவரையுங்
குருடெனச்செவிடெனக்கொடியர்மற்றிவரெனப்
பொருடெரித்தழலெழப்புகலுவித்திடுவனால்.　　(உஉ)

தூயசிந்தையுமறத்துணிவுமுண்டாயினுங்
காயும்வெஞ்சினம்வரிற்கற்றுணர்ந்தோர்களுந்
தாயர்தந்தையர்பெருந்தம்முனூற்றூர்தமக்
கேயநண்புடையரென்றெண்ணவுங்கூடுமோ. (உங)

கோபமெய்க்கொடியன்யானெய்திலார்குலைவுறார்
தீபமொத்தொளிர்தபோதனர்களுஞ்சினமெனும்
பாபமுற்றயலுளோர்பதைபதைத்துயிரிறச்
சாபமிட்டனையர்தந்தவமும்விட்டிடுவரே. (உச)

மாவசிட்டன்றனன்மக்களைக்காதிசே
யேவலிற்செல்கிலீரெயினராகுதிரெனக்
காய்வுறச்செய்துமுற்சகரரைக்கபிலனு
லாவிசெற்றவனுமென்னிஞ்சையாமரிவையே. (உரு)

அரனிடத்தெய்திமற்றனையனேபின்னுமுப்
புரமெரித்தெதிர்மதப்போதகந்தனையுரித்
துரனெரித்தடலிராவணனையோதிமனையோர்
சிரமறச்செய்ததார்தேர்வுறுதார்களே. (உசு)

தடமலர்க்கண்ணனுந்தரணிமேலிரணியன்
குடர்பறித்தவுணரைக்கொன்றுநீணிருதரைப்
படமலைத்தொருவனைப்பத்துமாமுடிதகர்த்
திடருறுத்தினனுமென்னிஞ்சையாம்வஞ்சியே. (உஎ)

பரவுமன்னவர்குலப்பகைபிராமன்கையாற்
பெருகுமுள்ளன்புடைப்பெற்றதாய்தன்னையும்
வெருவவிண்ணரசனுல்விசுவரூபன்னெனுங்
குருவையுங்கொன்றதக்கோதைதன்கொள்கையே. (உஅ)

பாரதாதியினெடும்பச்சைமாலைக்கொடே
போரதாகும்படிக்கிசைவுசெய்புதல்வன்மேற்
பேரதாகுந்தவப்பெரியமாதவர்களா
நாரதாதியரில்யார்நண்புறுதார்களே. (உகூ)

பொறையுமாமதிநலம்புணர்விவேகனுமிசைந்
துறையுமோரிடனும்வெந்தொழிவுறும்படியெரித்
திறையுமோகனையலாலெங்கும்வேறிலையெனும்
பறையுமோதுவனெனப்படபடத்தோதினன். (நடப)

அனையவன் பகரும்வாசகமகிழ்ந்தரசர்கோன்
வினையையென்றவர்கள்போன்மிளிருமவ்வேலையிற்
றனையகன்றவரியார்தவமுயன்றவருமென்
றினையமாலோபன்வந்திறைவனோடுரைசெய்தான். (௩௧)

ஷை வேறு.

உற்றபொருள்பற்றியுதவாமையுருவாமென்
வெற்றியுமுறுதபொருள்வேட்கைவடிவாகு
மற்றெனதுதேவியெனும்வாஞ்சையுமலைந்தாற்
கற்றறிவுளாரெனினும்யாரவைகடப்பார். (௩௨)

நம்பகைவிவேகன்முதனண்ணலருநண்ணற்
கும்பருறுபோகமதையுன்னிவிரதஞ்செய்
தைம்புலனொடுக்கிமகமாதிபிறவுந்தா
மிம்பரினியற்றுவதெனிச்சைசெயலன்றோ. (௩௩)

மேவுபிரசேனனெனும்வேந்தனையடுத்தே
தேவகிகுமாரனொர்சமந்தகவிரத்நந்
தாவெனவுரைத்துமணிதானருள்செய்யாதே
போவெனமொழிந்தமொழியார்கொல்புகல்வித்தார். (௩௪

தூதுமுனடந்தொருசுயோதனனையவர்க்
கீதியவர்தம்முரிமையென்றெதிரியம்பு
மாதவனொடெள்ளளவுமண்ணிதுகொடேனென்
றோதியதென்னேவலினுரைத்தமொழியன்றோ. (௩௫)

பூவிலயனும்மெனதுபொற்கொடிபொருட்டா
லாவலுறுதன்கிளையொடையமதுப்க்கா
னேவுமவளாற்பலியவ்வீசனுமெடுத்தான்
மாவலியைமூவடிமண்மாயனுமிரந்தான். (௩௬)

தங்குபுவிமாந்தரெவர்தாமுமுணர்வின்றிப்
பொங்கிரவுநண்பகலொர்போதுமொழியாதே
யங்கடவிநாடுமலையாழ்கடலிவற்றோ
டெங்குமுலைகின்றதுமெனிச்சையியலன்றோ. (௩௭)

கும்பமதயானையெதிர்கோட்டிபலகொண்டுங்
கம்பமிசையேறியொர்கயிற்றிடைநடித்தும்
வெம்பணிபிடித்துமிவைபோலும்வினைமற்று
மம்புவியுளோர்செயலனைத்துமவள்பண்பால். (௩௮)

மாதுயரமுற்றெனினும்வஞ்சனைசெய்தேனு
மோதுபொருள்பெற்றதுகொடுள்ளதைமகிழ்ந்தே
யேதமுறுமென்மனைவியிச்சையிவடன்னாற்
போதுமிவையென்னுமவர்பூமிசையில்யாரே. (௩௯)

அன்னவள்பெருங்கடலுமற்பமெனவோங்கித்
துன்னுமளவின்கண்மிகுதூயவர்தமக்கு
மின்னவர்நமக்கினியரென்பவரிடத்தும்
பின்னருள்கருத்திடைபிறக்கவும்வராதே. (௪0)

எண்டலமதற்குளுளவிந்தனமதெல்லா
முண்டுமழலிற்கொழிவுறாதபசியொப்ப
வண்டபகிரண்டமுமகட்டினிடையேயுட்
கொண்டுமொழியாதெனதுகோதையவட்கென்றான். (௪௧)

அந்தமொழிலோபனுரையாடவவனல்கு
மைந்தனெனலாகியவிடம்பனும்வணங்கிச்
சிந்தைநெடுமோகன்மகிழத்திரள்விடம்போன்
முந்தியதன்வல்லபமொழிந்திடுவதானான். (௪௨)

தனக்கியலொழுக்கமறுமைக்கதொருசார்பாய்
மனக்கொளலறப்பிறர்மதிப்பதுபொருட்டாம்
வினைப்படிவமாகுமெனையவ்வினைமறைத்தற்
கினித்தவௗென்வஞ்சனையைபாவர்கொலிகந்தார். (௪௩)

எடுத்தபொருள்யாவர்கொல்கொடாதவர்களென்பே
ரடுத்தவர்தமக்கதளுடுத்தவரனுக்கே
கடுத்தருமொர்பாற்கடல்கவுத்துவவிரத்நங்
கொடுத்ததுபொன்னுடைபுனைகொண்டல்பெறமன்னே. ()

வாசவனையாதிமிசைவானவர்தம்முள்ளுங்
காசினியின்மானிடர்கணத்தினுமிடம்பம்
பேசவருவேடமெவர்பெற்றிலர்பெறாதா
ரேசவருபித்தரிவரேழையெனலாவார். (௪௫)

வஞ்சனையும்யானுமுடன்வந்தெதிர்மலைந்தா
லெஞ்சலில்சோரனுயிரீடுபடுமட்டோ
பஞ்சுகனலிக்கெதிர்படும்படிபடாதோ
வஞ்சலில்சுசீலனவ்வண்டொழிலுமம்மா. (௪௬)

உன்னருமென்னுண்மைபிதனைப்பெதுகொல்பின்னு
மென்னரியபாலகனசத்தியனெனும்பேர்ச்
சின்னவயதுப்பயலொர்சில்விடமதொப்பா
னன்னவன்மயக்கினையகன்றவர்கள்யாரே. (சஎ)

அன்றொருவனுக்கொர்பதினறுவயதீசன்
முன்றருவழக்ககலமொய்வலிமைதன்னுற்
கொன்றுநமனைப்பொயுரைகூறினைகொலென்பார்க்
கென்றுமதளித்தனனியானெனவுரைத்தான். (சஅ)

நாதன்முடிகண்டதுளனெனவுமோதிக்
கேதகையையுங்கொடுகிளத்துதல்பணித்த
வேதனுமங்நாண்மலரும்வெள்ளிமலையோனுற்
போதவருசாபமொருபொய்ம்மொழிகொடன்றே. (சகூ)

வித்தகவிவேகமொடுவீறுமழியப்போ
யுத்தமர்குணத்தையுமுலேக்குமவனுலே
யத்தருமபுத்திரனுமன்றொருபொய்சொன்ன
வித்தரையிலார்பொயிசையாதவர்களென்றான். (ருo)

அம்மொழியிடம்பனுரையாமுனடன்மோகன்
செம்மலர்முகத்தினெதிர்சென்றுகைகுவித்தே
யெம்மதம்விலக்குமவர்யாருலகிலென்ன
வெம்மதனிவ்வாசகம்விளம்பிடுவதானன். (ருக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நெடியசெல்வமுடைமைகொண்டுநெஞ்சிடைக்களிப்பதே
வடிவமாகும்யானுமம்மயக்கையேவளர்ப்பதாங்
கடியதேவிமறதியுங்கலந்தபோதில்யாவரே
படியில்வானில்வெற்றியம்பதாகைநாட்டவல்லரே. (ருஉ)

அஞ்சுசென்னியுண்மையாலரற்கியானுமொப்பென
நெஞ்சினுன்னிமெய்ம்மதத்தநீர்மையைக்கொடல்லவோ
கஞ்சமன்னகண்ணனுபியுட்பிறந்தகடவுடா
னஞ்சமுண்டகண்டனுலொர்நான்முகத்தனனதே. (ருரு)

ஆசுறுதசெல்வமோடடுத்தவச்சிராயுதன்
வாசநாறலங்கலைத்துர்வாசனல்கவாங்கிமுன்
வீசுறுவெறிந்ததேறும்வேழமாமதங்கொலோ
வேசுறுததன்மதங்கொலெம்மதங்கொலென்பதே. (ருச)

நிகரிலற்பர்சிந்தையூடுநின்று தூயர்நெறியையு
மிகழுவிப்பனென்னொடேயிறந்துபோமிவ்வுலகெனப்
புகலுவிப்பனெவரொடும்புகுந்துபோர்செய்விப்பனிவ்
வகலிடத்தைமேருவோடொரணுவுமாக்குவிப்பனே.(ருரு)

வந்தடர்த்தொர்சேதிராசன்மாலையன்றுவைதது
மந்தவத்துவைச்சுயோதனுதியோரிகழ்ந்தது
நந்தியைப்பழித்திலங்கைநாயகன்னவின்றது
முந்துசத்தமுனிவர்தம்மைநகுடனன்றுதைந்ததும். (ருசு)

அன்றுவேலைபெற்றிமாலைபடுசமர்க்கழைத்துநேர்
கன்றுபோரிரந்துகாளகண்டன்வெற்பலைத்துமேற்
சென்றுவாலிதன்னொடுஞ்செருத்திறம்புரிந்துசீர்
துன்றுகாயமன்றுமாய்தறுந்துமிக்கும்வந்ததும். (ருஎ)

பின்னுமின்னதன்மைசெய்தபேரனந்தகோடியான்
மன்னுமிந்தமண்ணகத்தும்வானகத்துமவையெலா
மென்னையன்றியாவரேயியற்றினோரிதன்றியென்
பன்னியென்னுமறதிமேன்மையெவருணர்ந்துபகர்வரே.()

அறிவுகற்றகல்விவாய்மையன்புமுன்படுத்தநல்
லுறவுநட்பொழுக்கமேன்மையொருவர்செய்தவுதவிசீர்
பிறவுமின்னசெய்கைமற்றதெவையுநெஞ்சுபேர்வென
மறதியுற்றபோதியாவர்மனிதர்தேவர்மதியுளார். (ருகூ)

பிரகலாதன்மாயனோடுபின்புபோர்புரிந்ததுஞ்
சரதவாழ்வுசுக்கிரீவர்தாமியைந்திராமர்பால்
வரவுதாமதித்ததுந்துரோணர்நட்பும்வாய்மையுந்
துருபதேயன்மாற்றிவந்தபோதிகழ்ந்துசொன்னதும்.(சுo

மகிழ்ந்தணைத்துநாளைநின்கண்வருதுமென்றவாய்மையைச்
சகுந்தலைக்குமகிணனர்தவிர்ந்தயர்த்ததன்மையும்
புகுந்ததெத்திறத்திலென்னோர்பூவையாலுளந்திகைத் [ல்.
திகந்தபுத்தியோரையின்னமெண்ணிலெண்ணிலோர்களா

மதுவினுள்ளுமவினியாதியானபன்மருந்தினுங்
கதுவுபுல்லர்வாழ்வினுங்கலந்துவைகியுலகெலாம்
பொதுவினின்வசத்தினிற்பொருத்துமெம்மையாவரே
யெதிர்புகுந்துவெல்லவல்லரென்றிவ்வாறியம்பினன்.(சுஉ

## கலிவிருத்தம்.

மதனிவையுரைத்தலுமெழுந்துமன்னவன்
பதமலர்வணங்கியிப்பாரில்வானிலென்
னெதிருறுந்தகையர்மற்றியாவரேயெனுக்
கதுமெனமச்சரன்கழறன்மேயினன். (௩௩)

அன்னியற்கறிவுருவாக்கங்கண்டுகே
டென்னியுட்பொருமையாமுருவினேனுடன்
றன்னிலுட்புழுங்குமத்தன்மையேவடி
வென்னுமென்னசூயையையாவர்வெல்வரே. (௩௪)

மூன்றரைக்கோடியாண்டொருவன்முக்கணன்
றூன்றரப்பெற்றநாட்டடுத்துப்பின்னரு
மேன்றரைக்கோடிபோயின்னங்கேளென
வான்றரையளந்ததாண்மாயன்சொற்றதும். (௩௫)

தெரியநற்கலையுணர்திலீபமன்னவ
னுரியமாமகந்தொண்ணூற்றொன்பதுஞ்செய்தே
புரியுமற்றொன்றினிற்புகுந்தவ்வேள்விவாம்
பரியினைப்புரந்தரன்பற்றிக்கொண்டதும். (௩௬)

பொருவினித்தியத்துவம்பொருந்தற்குன்னியே
வருதிநான்முகனெனமாதவஞ்செயு
நிருதனைவாணியானித்திரத்துவந்
தருதியென்றிமையவர்சாற்றுவித்ததும். (௩௭)

கூனிசொற்கொடுமையாற்கோளிழைத்துவெங்
கானிடையிராமனைக்கடத்திவிட்டது
மானியுற்றிடுஞ்சுயோதனன்பண்டவரை
மானிலத்தினிற்பலவஞ்சஞ்செய்ததும். (௩௮)

மூவடிமண்டருகென்றுமூர்த்தியான்
மாவலிநீரொடுவழங்கவந்தநாட்
டாவில்சுக்கிரன்றடுத்ததுவுமற்றுமென்
னேவலினன்றிவேறெவர்செய்வித்ததே. (௩௯)

எச்சரங்களுந்தமக்கெதிர்ந்துளோர்கண்மேற்
றச்சரந்தையையவர்தமக்குநல்குமாற்
பிச்சரங்கவரெனப்பிறருந்தூற்றவே
மச்சரன்பாண்டுநந்தவரைமாய்ப்பனே. (௪௦)

அந்தரத்தடரிலவனிமாந்தரிற்
றந்தவப்பயன வரவர்க்குத்தக்கது
வந்தடுத்ததுவென மனங்கொளாதுளே
வெந்தவப்பொருமையையாவர்வெல்வரே. (எக)

யானுமென்ன சூயையாமினியதேவியும்
வானுமண்ணுலகுமேவவ்வியாரையு
மூனுமுள்ளுயிருமுப்புறையும்பாண்டம்போற்
றூனுகச்செயிலெவ்வாறுறுஞ்சந்தோடமே. (எஉ)

உயிரிறுமெதிரியா*லென்றுன்னுமலே
செயிருறுமனத்தராய்த்தீபமேற்செலும்
வியனுறுவிட்டில்போல்வீழ்ந்தென்மாமகன்
வயிரனுலியாவரேமடிவுறுர்களே. (எங)

சென்றுமாயோனரசிங்கரூபமாய்க்
கொன்றுமேலிரணியன்குடர்புனைந்ததும்
வென்றிவாளவுணரும்விண்ணுளோர்களு
மின்றுமாறுதெதிர்ந்திகல்செய்கின்றதும். (எச)

பரவுமன்னவர்கிளைமுழுதும்பற்றறப்
பொருதடன்மழுவினுன்றெலைத்தும்பொன்றினர்
குருதியின்மூழ்கியக்குருதியாற்றனக்
கொருதனித்தாதையார்க்குரிமைசெய்ததும். (எரு)

தன்றிறல்கொண்டுதுச்சாதனன்றனைக்
கொன்றுமேயனையன்மெய்க்குருதிமாந்திடச்
சென்றதும்வீமனத்திறமுணர்ந்துதன்
மன்றலங்கருங்குழன்மான்முடித்ததும். (எசு)

இன்னனபிறவும்யானீன்றகான்முளை
தன்னியலாமவன்றனையனக்ரமன்
றுன்னலர்செயலெலாஞ்சுடுஞ்செந்தீயனுன்
பன்னருங்கொடுமையார்பகரற்பாலரே. (எஎ)

சூலிமாதவர்மினர்தூயகற்பெனும்
வேலியையழித்ததும்விண்டுமோகினி
போலியைந்தருந்தவர்போதமாய்த்ததும்
வாலியையிராகவன்மறைந்தன்றெய்ததும். (எஅ)

---

* என்பதுன்னியும் எனவும்பாடம்.

மானிலம்போற்றுகன்மாடபாதனைத்
தானுயர்வசிட்டன்முன்சாபமிட்டது
மானதேசிகனையவ்வரசனுஞ்சபித்
தீனமாக்குவனெனப்புனலெடுத்ததும். (எகூ)

வனத்தின்முன்விருந்திடும்வசிட்டன்றேனுவை
யெனக்குநீதந்தருளென்றுகோசிகன்
கனத்தெழுஞ்சேனைகள்சூழக்கைம்மிகுஞ்
சினத்தொடும்வெய்யபோர்பண்டுசெய்ததும். (அ0)

ஊருவிலடித்திடனுசிதமன்றென
வீரர்சொல்கதையமர்விளைக்கும்வேளையிற்
போர்மிகுசுயோதனன்பொற்குறங்கினெஞ்
சீரமில்வீமனன்றெதிர்ந்தடித்ததும். (அக)

குறுமுனியாற்கடல்குடிப்பித்தக்கட
லுறுமொருவிருத்திரனியோகத்தஞ்சலி
நிறுவியகைக்கொடுநிற்கும்வேலையிற்
றெறுமகவானவன்சிரஞ்சிதைத்ததும். (அஉ)

சுவறவெம்பகையைநின்சுதன்வென்றானல
னிவறலில்பேடியேயெனவிராடனுங்
கவறுபெய்யுழக்கினுற்கங்கபட்டனுந்
தவறிலாவறன்மகன்றனையெறிந்ததும். (அங)

நீண்டமண்பாரமுனிக்கவந்தமால்
பாண்டுவின்மைந்தராற்பற்றலார்க்கெதி
ராண்டுசெய்வினையுமென்பேரனக்ரமன்
பூண்டுசெய்தவையலாலெவர்கொல்பூண்பித்தார். (அச)

ஆதலான்மகிழ்ச்சியையருஞ்சந்தோடனைக்
காதலாமியலவிரோதக்காளையை
நீதிநாயகனொடுநீறுசெய்துநின்
பாதமீதெவரையும்பணிவிப்பேனென்றான். (அரு)

அவனஃதுரைத்தலுமரசன்றடொழு
துவமையின்மானனென்றுரைக்கும்பேரினன்
புவனியில்விசும்பினிற்பொன்னினாட்டினி
லெவரெனக்கெதிரெனவிவையியம்பினான். (அகூ)

## தரவுகோச்சகக்கலிப்பா.

வணங்குவதெத்தகையோர்க்குமாற்றுவதேயொருவடிவா
யிணங்குமெனக்குமியன்றதெத்தொழிலேனுமியற்றா
துணங்குவனோவென்றானேயோர்வடிவாமென்னிலச்சை
யணங்குதனக்குமெதிர்ப்பாராருளருய்ந்தவராவார். (௮௭)

மானமிகுந்ததினன்றேவந்தவடந்தைமகத்திற்
றானவனெண்ணிலனென்றேசத்தியுமாவிதளர்ந்தா
ளானவனிந்தைபொறாதேயத்தனுமாமனையந்நா
ளூனறவன்றலைகொய்தானும்பரையுந்துயர்செய்தான். (௮௮)

போதளையிற்சிறுபேடும்போயெதிர்கொண்டழையாதேன்
மீதயலுற்றிடுஞெண்டுமெய்யுயிர்நீங்குமிலங்கூ
டோதருநற்கவரிக்கேயோர்மயிர்சிக்கினுமுய்யா
தாதலின்மற்றதுகண்டாராரெனைவிட்டுளராவார். (௮௯)

தண்புனன்மாமடுமூழ்கித்தாழ்துரியோதனன்வீமன்
புண்படவேயிகழ்சொல்லாற்பொங்கியெழுந்துயிர்போனா
னண்பொடுதாரைவிலக்குநன்மொழியுங்குறியானோர்
வண்பகைவைதல்பொறாதேவாலியும்வந்துமடிந்தான். (௯௰)

மூவரிடத்தினுமல்லான்மூன்றொருமுப்பதுகோடி
தேவர்முதற்பிறருள்ளுந்திண்புவியோர்கடிறத்து
மேவரெவர்க்கெதுசெய்கையேற்பதவ்விங்கிதமேபோ
லாவதுதாழ்க்கினுமன்றேவாங்கதுவேயவமானம். (௯௧)

யானுமிலச்சையுமைந்தனென்னுமுச்சாகனெனப்பேர்
தானுறுகாளையுமெய்திற்றந்தியொடுந்தமன்முன்னா
மேனுவலும்பகையெல்லாம்வென்றுனடித்துணைமீதே
வானுமிம்மண்ணும்வணங்கவாகைமிலைச்சுவனென்றான். (௯௨)

## கலி நிலைத்துறை.

மாமானனிவ்வாறுரைசெய்யமுன்வந்துதங்கள்
கோமானைவணங்கிநெடுந்திறல்கொண்டுவெல்வார்
தாமார்கொன்மற்றென்னையெனப்பலர்தம்முனோங்கு
மேமாசலமன்னசங்கற்பனுமின்னசொன்னான். (௯௩)

மாவாரணமேல்வருவாசவன்மற்றுமுள்ள
தேவாசுரர்சந்திரர்சூரியர்திக்குப்பால
ராவார்பிறருக்குமென்னேவலையன்றியாது
மோவாததமக்குறுசெய்வினையுள்ளதன்றே. (௯௪)

பதுமன்புவனந்திருமிக்கவும்பச்சைமாய
னதுபின்புபுரக்கவுமீசனழிக்கவுந்தம்
மிதயங்களிலெய்தியயான்புகலேவல்செய்யும்
விதமின்னமுமவ்வொருமூவரும்விட்டிலாரே (௯௫)

சங்கற்பமியான்முயல்வித்ததைத்தாரமாமென்
வெங்கற்பனையன்றியும்யாவர்செய்விக்கவல்லா
ரங்கப்பணியைப்பல்விகற்பமதாக்குவிக்குந்
துங்கப்புதல்வன்றிறனுக்கொர்தொகுப்புமுண்டோ. (௯௬)

என்பாலன்விகற்பனும்யோசனையென்னுமன்னன்
றன்பாரியுஞ்சேய்வெகுமாமுகன்றானுமாகி
நின்பாதம்வணங்கியடர்த்திடினிருவிகற்ப
னென்பான்முதலோரெதிர்நிற்பர்கொலென்முனென்றான்.

விண்ணுடரில்வேதனுமாந்தரில்வேந்தரென்ன
மண்ணுள்பவரும்மெனதேவன்மறுதுசெய்தா
லெண்ணுதெனதாணைகடப்பவர்யாவரென்று
வுண்ணுடியிராசதனிவ்வுரையோதினனால். (௯௮)

மன்னர்க்கெதிர்தாமதன்வந்துவணங்கியாரே
யென்னைத்தவிர்ந்தாருலகேழினொடேழினுள்ளு
முன்னத்தனுமென்பணிகொண்டுயிர்முற்றுமாய்க்கச்
சன்னத்தனனலெவர்வந்துசமர்க்கெதிர்ப்பார். (௯௯)

சீராமர்தருப்பையிலேழ்தினஞ்சேர்ந்திருந்துஞ்
சாராமையினாலவரேவழற்சாயகந்தன்
னேராமளவும்வருணன்னெடுநீர்மையெய்தி
வாராமலிருந்திடர்யார்கொல்வரச்செய்தாரே. (௧௦௦)

இளமைத்தமயந்தியைக்கங்குலிலெய்துகானி
னளனைப்பிரிவித்தனளிவ்வகைநானிலத்திற்
றளர்வுற்றிடவென்மகணித்திரைத்தையலாற்றம்
வளமற்றிடுமாந்தர்தமக்கொர்வரம்புமுண்டோ. (௧௦௧)

தீம்பாலுநற்றெள்ளமுதும்பசுந்தேனுமைய
லாம்பாவையர்போகமுமற்றுமடுத்தபோதும்
வேம்பாகவெறுத்தென்மகட்குவிருப்புறுதார்
தாம்பாருலகத்தெவரேயெனச்சாற்றினனே. (௧௦௨)

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பேருலகசத்தோசத்தோபிரமமொன்றோவிரண்டோ
வோருறினரகசொற்கமுள்ளதோவில்லதேயோ
வாருணர்ந்தவர்தாமென்றேயலைக்குஞ்சந்தேகனென்மு
னேருறினிற்பானந்தநிச்சயன்கொல்லோவென்றான். (௧௦௩)

மாறுபாடாகப்பேறுமறுமையிற்பெறுதுமென்ன
வேறுவேறாகக்கூறும்விதண்டவாதிகளையெல்லா
மூறிலாச்சாருவாகனொண்டொடிமாதர்போக
மீறிலாக்கதியென்றோதியீடுறப்புரிவனென்றான். (௧௦௪)

உருவம்வேதனைகுறிப்புப்பாவனையுயர்விஞ்ஞானம்
வருமுறைகெட்டுக்கெட்டுமாய்வதுபந்தமுற்ற
வெருவுறக்கெடுதலின்பவீடெனச்சொல்லிமாற்றார்
பொருசமர்தொலைப்பனென்னப்புத்தன்வந்தினையசொன்னான்.

நீந்தருங்கடலேபோலநிறைந்ததொல்வினைகளெல்லா
மாந்துதல்செய்துசெய்துமற்றவைதொலைந்தபின்னர்ப் [றே
போந்துபொன்னெயில்வட்டத்துப்பொருந்துதன்முத்தியென்
காந்தியொன்னலரைப்போரிற்கடிவனென்றருகன்சொன்னான்.

ஞாலம்பாவினையுங்காக்குநளனடிவிளக்கும்போது
சீலமோர்தினையின்பாதிசிதைந்ததேதீதாய்க்கொண்டு
சாலநீள்வனத்திற்போகத்தள்ளினேனென்னிலென்னைப்
போலெவர்புரிவரென்னப்புழுங்குவெங்கலிசொன்னானால். (௧௦௭

கெடாதுலகினையாணீதிகிளரரிச்சந்திரற்கீ
தடாதெனவறிந்தும்பண்டோரனகனுற்புலைச்சிமாதர்
படாமுலைத்தடத்திலின்றேபடியெனப்பகர்வித்தேனால்
விடாமுரட்குதர்க்கனென்னைமௌனனேவெல்வனென்றான். ()

## கலிநிலைத்துறை.

தக்கந்திறனும்பெருமேன்மையுஞ்சாருவாகன்
புத்தன்சமணன்கொடிதாகியபோர்க்கபால
னித்தன்மையரும்பிறருந்தம்மினத்தொடாங்கே
மொய்த்தங்கரசற்கெதிர்வந்துமொழிந்தவேலை. (௧௦௯)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மன்னவனதிமாமோகன் மருங்கொராதனத்தினோர்பா
லன்னவன்படைஞர்க்கெல்லாமதிகனையுறையாங்கார
னுன்னருமீன்கள்யாவுமுதித்தபினுதிக்குந்திங்க
ளென்னவங்கவன்றன்மேன்மையியம்புவானினையசொன்னான்.

தேகாபிமானம்பற்றியானெனுஞ்செருக்குத்தானே
போகாதசுரூபமாகுமென்னனும்பொருளையீட்டி
மாகாதலவைமேல்வைத்தீதெனதென்றல்வடிவாயார்க்கு
மேகாவென்னகந்தையாலுமெவர்கொலேமாப்புறாரே. (௧௧௧)

பேரினும்பெரியன்மிக்கபிறப்பினும்பெரியன்செல்வச்
சீரினும்பெரியன்கல்வித்திறத்தினும்பெரியன்றெவ்வர்
போரினும்பெரியன்மற்றெப்பொருளினும்பெரியன்யானே
யாரினும்பெரியனென்னுமென்னையாரடர்க்கற்பாலார். (௧௧௨)

வாசநாண்மலருளோனுமாயனுந்தம்மைத்தாமே
பேசினர்பெருமையென்னைப்பிஞ்ஞகனடக்குவான்போ
லாசறுமென்பாற்காண்டிரடிமுடியார்க்குமியானே
யீசனென்றுரைத்தானென்னிலேவரென்னியல்புறுநார். (௧௧௩)

ஈசனென்றொருவர்யாரேயெம்மையல்லாமலென்ற
வாசவரைவரன்றேவந்துபாரிடத்தின்மேனா
ளாசறுதருமன்வீமனருச்சுனனகுலன்பின்னும்
பேசுசாதேவனென்னப்பிழையுறுமைவரம்மா. (௧௧௪)

உருவுறுந்தாரகத்தினுட்பொருள்யாதுசொல்லென்
றருகில்வேதாவையுந்தனங்கையாற்சிரத்திற்றாக்கிக்
குருவெனுந்தாதையார்க்குங்குருவெனக்குமரவேளாற்
றிருவுபதேசம்யாரேசிவனுக்குஞ்செய்வித்தாரே. (௧௧௫)

கவுசிகமுனிவன்றன்னாற்கமலநான்முகனேயாதி
புவனமன்னுயிர்கள்யாவும்புகுத்தியான்படைப்பனென்றே
யவமதித்தனுடமுன்னைமைந்துநாட்டென்பாற்றிக்கி
னவையறப்பபில்வித்தோநானலதொருவன்யாரே. (௧௧௬)

ஆனநல்லருந்தவஞ்செய்தயன்முதற்றேவர்தம்மா
லூனமில்வரமுங்கொண்டெவ்வுலகமுந்தான்பெற்றீசன்
யானலதெவன்கொலென்றவிரணியனிராவணாதி
தானவர்தமைச்சொல்வித்ததன்மையென்வன்மையாமே. (௧௧௭)

அமைவுறுதெழுந்துபொங்கியாரினுங்கீழோரேனுந்
தமைமிகத்தாமேபேணிச்சங்கியாதெவர்முன்னேயு
மெமதியாமெமக்கொப்போவவ்வீசனுமென்றென்றேவி
மமதையாலென்னல்யாரேமாநிலத்துரைசெய்யாரே. (ககஅ)

ஏந்திழைமமதைதானுமியானும்வந்தெய்திலென்முன்
சாந்தியுஞ்சமனுநிற்குந்தரத்தரோநறுகண்வேங்கை
பாய்ந்திடினுய்யுங்கொல்லோபசுவும்போர்விடையுமெங்கு
மாந்திறனக்கேயாக்கியறிவெலாந்தவிர்ப்பனென்றான். (கககூ)

இவ்வகையெவருந்தத்தமிகல்வலியெடுத்துக்கூறு
மவ்வயின்மோகவேந்தனகமொடுமுடல்பூரித்தே
தெவ்வலிபடைஞர்தம்மாற்செகுப்பனென்றுயர்விவேகன்
மெய்வலிதனையென்றுமல்வியப்புடனிருந்தவேலை. (கஉ0)

காமனுதியர்வீரலாபச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம்-ககஅகூ.

---

## உக - வது, நிருபகாதியர் வீரலாபச்சருக்கம்.

———)※(———

கலி விருத்தம்.

நெறியெலாமொருநொடியினீதிநாயகன்முடுகி
யறிஞர்கோனடிபரவுமளவிலங்கவனினைவி
னுறுதியாததுபுகனம்முரிமையோதனதுயிர்கொ
றறுகணனினிதினைவைதருவதாயினனெனவே. (க)

வள்ளலங்கதுவினவமண்டுதண்டனையிலல
தெள்ளுமென்கழையுமதியினருந்தருபயன
துள்ளதென்றெவர்புகல்வரோதுமின்சொலினனையர்
கள்ளநெஞ்சொருசிறிதுகனிவுறுந்தகைவருமோ. (உ)

ஏதுநானினிமொழிவதியல்பிலாதுயிர்தொலைய
மோதினல்லதுமுரண்முடிவுறுதவைகருதி
யாதிநாயகவெழுதியமரதேயறுதியென
நீதிநாயகனெனுநியாயனீதுரைசெயவே. (ங)

நன்றுநன்றெனவினவிநகையுமேசிறிதுவர
மன்றலம்புயகிமிரவனசமாமுகமலர
நின்றதன்புடைபிறைறநிருபகாதியர்களொடு
மின்றுசென்றமர்புரிவனென்றுளம்பதறியெழ. (ச)

எழுகநம்படைஞரெனுமிறையவன்சரணமலர்
தொழுதுநின்றருகிலுறைதூயபோர்வலரெவரு
முழுவதும்பகைவலியைமுடிவுசெய்யுனதடியர்
குழுவிருந்திடவுமெழல்குணமதன்றெனமொழிய. (ரு)

உரைசெய்தாருரைவினவியுயர்விவேகனுமனைய
விரைசெய்தாரவர்கடமைநோக்கியேவேறுபட
வருபதாகினிகளொடுமாரணுதியரவரை
நிருபகாதியர்புகன்மினீரெவ்வாறிகல்விரென. (சு)

நிருபனங்கிவைபுகலநிருபகன்றெழுதுருவ
மருவுகொண்டவனலருமம்புகொண்டெனையடர
வருவனிங்கெனினுமெதிர்மலைவதங்கவனையொரு
பொருளதன்றெனநெடிதுபுகலுகின்றனனிவையே. (எ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விழைவுறத்தகும்பொருட்குளிழிவெலாம்விரித்ததன்
பிழைதெரித்தலேசொரூபமானவென்பெலத்தொடும்
வழுவதற்குருமலென்கண்வாய்த்தயுத்திமாதொடு
மெழுகடற்புவிக்குளார்கொலிகலிவெல்லுமியல்பரே. (அ)

காமனுக்குவன்மைமாதரன்றிவேறுகண்டதுண்
டாமெனச்சொல்வாரியாவரனையர்பெண்மையறிவிலாப்
பாமரர்க்கலாதுணர்ந்துபார்க்குமெம்மனோர்க்குமே
மாமயக்குமெந்தவாறுமதிபுகுத்தும்வண்ணமே. (கூ)

எழுகுறும்பிபெருகுகாதைவள்ளையென்பரிகழ்கரும்
புழுவடர்ந்தகுழலிருண்டபுயலதென்பர்பூளைநீ
ரொழுகுகண்கள்குவளையென்பர்தரளமென்பருபிரொடும்
பழுதுறும்பல்லென்னையின்னபகர்வதென்னபாவமே.(க0

எச்சிறங்குவாய்விளிம்புபவளமென்பரெழுமிரண்
டச்சிலந்திகொங்கையானையாகுமென்பரதுபெருங்
கச்சிலங்கிருந்துமாவிகவருகின்றதென்பராற்
பிச்சிலங்கவர்க்குநேர்பிராந்தர்யாவர்பேசிலே. (கக)

நாசியூறல்கோழையெச்சிறுறுமாமுகத்தையே
மாசுறுதபூர்ணசந்த்ரவட்டமென்பரொட்டுவைத்
தேசுறுநரம்பினைக்கொடென்புகட்டமைத்ததோள்
வீசவீசநெஞ்சழிந்துவேணுவென்பர்காணுமே. (கஉ)

குடர்நரம்புதசைவழும்புகுருதியென்புசுக்கில
முடைகிடந்தபொந்தின்மேலொர்தோல்விரித்துமூடியே
யடர்வுறும்பஃறுளைகடோறுமருவருப்பறுமலம்
படர்தல்கண்டுமதனையேகொன்மகளிரென்றுபகர்வதே. ()

## கலி விருத்தம்.

கூராரும்வேல்விழியார்கோலாகலங்களெல்லாந்
தேராதசிந்தையரைச்சிங்கிகொள்ளுமல்லாம
னேராயுணிற்குநிலையுணர்ந்துநற்கரும
மாராய்பவருக்கருவருப்பதாய்விடுமே. (கச)

வாலவயதின்மயக்குமடந்தையருங்
காலமகன்றதற்பின்கண்டெவருமேயிகழ
நீலநறுங்குழலுநீடழகுநீங்கியவர்
கோலதொருகையூன்றிக்கொக்குப்போலாயினரே. (கரு)

கிட்டாதகன்மின்கிடப்பதிதிற்பொல்லாங்கென்
றிட்டாரலரேலிலங்கிழையார்தம்முடம்பிற்
பட்டாடைமேல்விரித்துப்பாதாதிகேசாந்த
மட்டாய்மறைத்துவருமார்க்கமதுவென்கொண்டோ. (கசு

வீசியதுர்க்கந்தம்வெளிப்படுந்தம்மெய்யிலெனக்
கூசிமறைப்பதன்றேற்கோற்றொடியாரங்கமெங்கு
நாசிமணக்கநறுங்குங்குமசுகந்தம்
பூசிமுடித்தல்பசிபோக்கும்பொருட்டேயோ. (கஎ)

மாற்றரியதம்மூத்தைவாய்திறக்குமுன்னமெழு
நாற்றமறைக்கவன்றேனுவழித்துப்பல்விளக்கிக்
கோற்றொடியார்நன்னீருங்கொப்புளித்துப்பாகுசுரு
டீற்றுவதுமென்குதலைதீர்க்குமருந்தென்றேயோ. (கஅ)

பட்டாடைசாத்திப்பணிமேகலைதிருத்தி
மட்டாயவயவங்கண்மற்றவைக்குமேற்கும்வண்ணங்
கட்டாணிமுத்துங்கனகமணிப்பூடணங்க
ளிட்டாலலதவருக்கென்னேவியலழகே. (கக)

சனகர்முதலோர்பிருங்கிதத்தாத்திரேய
ரனுமர்சுகர்நாரதனுரான துருவாசர்
புனிதசடபரதர்போதாயனரென்
றினையர்தமைமாதரெழினலமென்செய்ததுவே. (உ0)

வீடுமரைப்பண்டோர்வியன்மடந்தைதன்முலையிற்
கூடும்வகைக்குத்தங்குருவாலுரைசெய்வித்தும்
பாடுமிகப்பட்டபரசுடையானைக்கொடம
ராடுதல்செய்வித்துமுண்டோவங்கசனூர்வென்றதுவே. (உக

ஒருமனையாளென்னுத்தியெனுமொண்ணுதலாள்
பாருலகிற்பைம்மறிக்கும்பார்வையினாலுண்ணேக்கிற்
றீருமடவாருடலிச்சேயிழையாரைச்செருக்கிற்
போருடனுங்காமனெங்கேபொன்றுதிருக்கவல்லான். (உஉ

ஏசவருவேளையிரதியொடுயான்றலைத்து
யோசனையைக்கற்பனையையுத்தியினாற்போர்மாய்த்து
மாசுறுஞ்சந்தேகனையென்மைந்தனெனுநிச்சயனா
னாசமுறச்செய்வனினிநானென்றிவையுரைத்தான். (உங).

ஷ வேறு.

நிருபகனிவ்வுரைநிகழ்த்துமெல்லையில்
வருபொறையெழுந்துநன்மதிமணாளனைக்
குரைகழல்வணங்கிவெங்கோபனாருயிர்
பருகுவனென்றிவைபகர்தன்மேயினான். (உச)

பிறர்வெகுண்டியற்றுமெய்ப்பிழையுமுட்கொளாப்
பொறைவடிவாகியவெனக்குமென்பொறைத்
திறனைவற்புறுத்தலேதேகமாயென்பா
லுறைமரியாதைக்குமொருவரொப்பரோ. (உரு)

வைதவர்தம்மையும்வாழ்த்தித்தம்வயிற்
கைதவம்புரிந்தறக்கடியதானவை
செய்தவர்செயலையுந்தேர்வுறாதவென்
மெய்தருமேன்மைபோன்மேன்மைவேறுண்டோ. (உசு

பொதுவதுவாம்பரம்பொருளின்செய்கைபோ
லெதுவெதுவெவரெவர்க்கியன்றதென்றுதேர்ந்
ததுவதுவவரவர்க்காயிருக்குமச்
சதுரதுபோலெதுதருவதின்பமே. (உஎ)

காய்தறுகண்ணராங்கயவர்கைம்மிகத்
தீதுறும்வாசகஞ்செப்பினாலெதிர்
வாய்திறவாமையாமௌனமன்றிவே
றேதனைவெல்வதற்கியன்றசெய்கையே. (உஅ)

முனிவெனுங்கொடுந்தழன்மூண்டபோததிற்
பனிவருந்தண்புனல்பரவினாலென
நனிமுகமலர்ந்துமாநகைபுரிந்துநல்
லினியசொல்லவர்க்கெதிரியம்பல்செய்வனே. (௨௯)

கோதினல்லின்சொல்யான்கூறும்போழ்தினுந்
தீதெனும்வடிவினர்சினம்வந்தென்வயின்
மோதினுமவர்க்கெதிர்முனிதன்மாற்றியே
யீதெனதனுபவமென்றுகொள்வனே. (௩0)

ஓதருமலசலமுச்சிட்டாதியில்
வேதனைசெய்துதன்மெய்யிற்புண்பட
நோதல்செய்தகழ்ந்ததுநோக்கியெங்ஙனம்
பூதலமுனிந்ததிப்புவனத்தோரையே. (௩௧)

தன்னபிமானமாந்தையல்கோவென
மன்னவையூடவள்வனைந்தபூந்துகி
லுன்னிடுஞ்சுயோதனனுரியநோக்கியு
மன்னதற்கென்செய்தானறத்தின்பாலனே. (௩௨)

நன்னகைநகைமுகமலர்ச்சிநன்மொழி
மன்னகமகிழ்ச்சியிவ்வகையயாவையு
மென்னதுசின்னமாயிருத்தலாலவை
யன்னவெவ்வெகுளியையழிக்கற்பாலதே. (௩௩)

வந்தவர்வாழ்த்தினும்வசையுரைக்கினுஞ்
சந்தனம்பூசினுந்தசையைக்கொய்யினு
முந்துறுவினையினான்மூண்டதாமெனச்
சிந்தையினுன்னியான்சினத்தைவெல்வனே. (௩௪)

ஒருமையுளாமைபோலொடுக்குமைம்பொறிப்
பெருமைநல்லறிஞர்பாற்பெறவுநல்கிமேல்
வருமதன்செருக்கையுமடிக்கவல்லனா
லருமைசெய்குணத்தனென்மகனடக்கனே. (௩௫)

கனவிலும்வருமவமானன்கண்ணுரு
வனருகனவமதியாயினோரையு
நினையுமுன்செகுப்பனிந்நிலத்தெல்லோருந்தம்
மனமகிழ்மற்றுமோர்மகன்சன்மானனே. (௩௬)

உவமையின்மேன்மையெவ்வுயிர்க்குநாடொறு
நவநவமாய்மிகநல்கிநண்ணலா
லவமரியாதையையழிக்குமாலருந்
தவமரியாதையாமென்னந்தாரமே. (௩எ)

என்றிவைபொறையெடுத்தியம்புமெல்லையில்
வன்றிறன்மன்னனைவணங்கிமுன்புற
நின்றடல்விராகனந்நெடியலோபனை
வென்றிகொளுந்திறம்விளம்பன்மேயினான். (௩அ)

ஷ வேறு.

எப்பொருளையாயினுமிகந்துவிடலேயோர்
மெய்ப்படிவமாமெனையுமப்பொருளின்வேட்கை
தப்புறவிடுத்தலொருதன்னுருவமாமென்
னொப்பரும்விரத்தியையும்யாருலகில்வெல்வார். (௩௯)

ஷ வேறு.

பயிறீக்கொடுங்கள்ளர்பயமுண்டுபொருளோர்க்
கயில்வாய்த்தபகையச்சமரசாள்பவர்க்குண்
டுயிர்வேட்டவர்க்குண்டுறுங்காலபயநம்
வயிராக்கியர்க்கேதில்வருமங்கொர்பயமே. (௪0)

பேராசையாலீனர்பின்சென்றுழன்றுந்
தீராதமிடியாளர்சிலர்பாரினுண்டே
நேரர்கவரில்வாழ்வுநினையாமல்வருமால்
வாராததார்தாம்வருந்தினும்வராதே. (௪க)

அடுத்தானிறும்போதிலார்ச்சித்தபொன்பூண்
வடுத்தானிலாவாழ்வுமனைமற்றுமெங்கே
யெடுத்தான்விழுந்தால்விழாதேயிருக்கத்
தடுத்தாலுமங்கோர்தலைச்சுமையிராதே. (௪உ)

புன்பாவிவாணாள்புலர்ந்தாலுமெய்வெள்
ளென்பாயுகுந்தாலுமில்லாமையென்னும்
வன்பாடுநல்லோர்கள்வாய்விண்டுதன்மே
லன்பாளர்தம்பாலுமறியச்சொலாரே. (௪௩)

அண்டாதபேராவல்மையாததென்னே
விண்டாவுமலைபோலவேண்டுங்கொல்வெண்சோ
றுண்டாலும்வயிறுள்ளதொருசாணிதற்கோ
கண்டார்கள்பின்சென்றுகையேற்குமாறே. (௪௪)

கனிகாய்கிழங்குண்டுகானத்தினன்னீர்
நனிமாநதியிலுண்டுநாமுண்டுவைகத்
தனியானமுழையுண்டுதவஞானநெறியுண்
டினிதாகியெப்போதுமெம்போதுபோமே. (சரு)

அடலோபனென்பானடுஞ்செய்கையென்பாற்
றொடராதிவ்வண்ணந்துலேந்தென்விரத்தித்
திடமானமனையாடிறங்கொண்டுசுற்றத்
துடன்மேவுபந்தங்களொழியச்செய்வேனல். (சசு)

புக்கவழியூடொருவர்புக்குமிலர்போம்போ
தொக்கவருவாருமிலருற்றுநடுவின்கட்
டக்கதொருதாயர்கிளைதந்தையுடன்வந்தோர்
மக்கண்மனைசுற்றமெனவந்தவிவர்தாமே. (சஎ)

அன்புற்றுமாதாபிதாவென்னுமவர்தா
முன்பெற்றசென்மங்கண்முடிவில்லையவைதோ
றின்புற்றதாய்தந்தையெங்கேயதன்றே
பின்பெற்றபேரும்பெறத்தக்கபேறே. (சஅ)

பூமேலவர்க்குளபொருட்குரியரானோர்
நாமேயெனுந்தமர்நயந்தெவர்பகுந்தார்
நோமேயுடம்பின்கணேயையதனலே
தாமேயல்லாதெவர்தமக்குரியர்தாமே. (சகூ)

சடமீதுகிருமிப்பைதானென்றன்மலமோ
டிடர்மேவுபுண்ணேடெழக்கண்டதுண்டே
யுடன்மீதிவ்வுடல்போலுதிக்கின்றபுழுவைத்
திடமானமகவென்றுசீராடலென்னே. (ருo)

ஊறுதுயருஞ்சுகமுமுற்றனுபவிக்கும்
பேறுபெறுதன்னுடலுமாவிபிரியுங்காற்
கூறுசிறுபுள்ளெழுகுடம்பையெனவப்பால்
வேறுபடுமென்னிலினிமெய்யுறவுபாதே. (ருக)

துறவிற்சுகம்போலொர்சுகமில்லையென்றே
பெறலுற்றவாழ்வைப்பிறர்க்குக்கொடுத்தப்
புறமுற்றகானிற்புகுந்தின்பமுற்று
ரறமுற்றபார்வேந்தரளவற்றபேரால். (ருஉ)

காதிக்குமகமன்னர்வாழ்விற்கொல்கற்றோர்
சாதிக்குநெறியிற்கொறகுமின்பமென்றே
வாதித்துமேனாள்வசிட்டர்க்குமுன்போய்ச்
சோதித்ததன்றோசுகப்பேறுதானே. (ருந)

அம்மாலயன்றிங்களணிவேணிமுக்கட்
பெம்மானளிக்கின்றபெருவாழ்வுமுற்று
மெம்மால்வரப்பெற்றவின்பத்தையொப்பாய்ச்
செம்மாநிலத்திற்சிறப்புற்றதன்றே. (ருச)

உடலோடிறக்கின்றலோபன்றனக்கோர்
மிடலோவெம்மோடிங்குவெம்போர்விளைத்தற்
கிடரோசுகத்தோடெதிர்க்கின்றதெறிநீர்க்
கடலோடுகிணறோகதித்தார்ப்பதென்றான். (ருரு)

அவ்வாறவன்சொல்லுமளவின்கணரசன்
செவ்வாய்மொழிந்தன்னசெங்கட்குறிப்பா
லெவ்வாறுநின்செய்கையெனலோடுமெவரு
மொவ்வாதசந்தோடனுரைசெய்வதானான். (ருசு)

ஷை வேறு.

வந்தாலுமொர்பொருள்கைப்புகவாராவிடினுஞ்சீர்
நந்தாதமனப்பூரணம்வடிவாகியநானு
முந்தாதரவாற்பெற்றமைகொண்டின்புறலுருவாங்
கொந்தார்குழலென்றேவியும்வரிலார்விறல்கொள்வார். (ருஎ)

நன்றுந்தியநெஞ்சத்திடைநாடித்தெளிவுற்றே
யென்றுந்தனிநிலைபெற்றிடுமின்பப்பொருளுடையார்
துன்றும்பெருவெள்ளத்திடைதோன்றுங்குமிழியைப்போற்
பொன்றும்பொருளையுமேயொருபொருளாய்நினைவாரோ. (ருஅ)

துன்பத்திணையின்பத்தினுஞ்சுகமாமெனமகிழு
மென்பக்கலினடன்மச்சரனிகல்செய்குவதெவ்வா
றன்புற்றிடுகடல்வாயமுதவ்வானவருண்ண
வன்புற்றிடுவிடமுண்டவர்க்கிடரார்செயவல்லார். (ருக)

மழுவும்பிணையொடுபாந்தளுமதயானையும்புலியுஞ்
செழுவெங்கனலிடையேவரமுயலுஞ்சில்முனிவோர்
வழுவங்கறவவன்மேற்செலவருவித்தவையன்றே
தழுவும்படிமகிழ்ந்தேற்றதுந்தான்பூண்டுடுத்ததுமே. (சுO)

முந்தோர்மணிமுடிசூடமுயன்றெய்தியபொழுதும்
வந்தோனதுதவிர்ந்தேசடைமகுடம்புனைபோது
மந்தோதிருமுகமோவியத்தலர்தாமரைபோலுஞ்
சந்தோடவிராமன்செயருளென்செயலன்றோ. (சுக)

பிறர்செல்வமுநம்பேறெனப்பிடிப்புள்ளவெம்மிடத்து
நெறியல்லதுபுரிமச்சரனிற்குந்திறனுளனோ
வுறுசெங்கதிரெதிரேயிருளுடன்றெய்துவதுண்டோ
சிறுகுஞ்சரம்யாளிக்கெதிர்சென்றேறுவதன்றே. (சுஉ)

யானேயினியிகன்மச்சரனென்பானுயிர்தொலைத்துத்
தீநேரவனசுயைக்குமென்றிருத்தேவினைச்செலுத்தி
யானேயருள்பொழியற்புதயனைக்கொண்டும்வல்லமரிற்
றானேகொலைசெய்விப்பனத்தலைநாசனையென்றான். (சுங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னவனிணையசொல்லுமளவையிலருள்விவேக
மன்னவனருகிலெய்திமானனையிலச்சையோடுந்
தன்னதுமேன்மையாவுந்தகர்த்துயிருண்பனென்று
வுன்னருந்தாந்திகேள்வன்றமனிவையுரைப்பதானான். (சுச)

பொங்கியபாலில்வார்த்தபுனலுமும்மதமும்பாய
வங்கெழுமத்தமாவையடக்குமங்குசமும்போலத்
தங்கியகருத்துள்விம்மித்தானிமிர்ந்தெழுந்தமானன்
மங்குறச்செய்யுமிங்கென்வன்மைபோன்மற்றொன்றுண்டோ. ()

மதுரையிற்பரமன்பண்டுவைவையைமண்சுமந்துமாற
னதிர்வுறப்பிரம்பாற்றுக்குமடிபட்டும்வளையல்விற்று
மெதிரிலாப்பாணற்காகவிந்தனஞ்சுமந்துமானன்
சதுரழிந்திடமுன்செய்ததன்மையென்வன்மையாமே. (சுரு)

சோரமாய்வெண்ணெயுண்டுமத்தடிபட்டுச்சோர்ந்து
மூரிலானிரையைமேய்த்துமுரலிடைக்கட்டுப்பட்டுஞ்
சாரதியாகிப்பார்த்தன்றனதுதேர்விடுத்துங்கண்ணன்
பேரபிமானந்தீர்ந்தபெற்றியென்பெற்றியன்றோ. (சுசா)

உடலொருசுமையாயுன்னியுயர்வத்துநோக்குமேலோ
ரிடரிதுவென்றுமானமிதுவென்றுமீனமென்றுந்
தொடர்புறிலஞ்சுவாரோதுன்னுகற்பாறைமேற்பந்
தடைவுறத்தாக்கிற்பாறையதனுக்கோர்சிதைவுண்டாமோ. (சுஅ)

இலச்சையைத்தாந்திதன்னுலீடழித்தியல்பின்மானன்
புலைச்செயல்யானேமாய்த்தென்புதல்வனுல்விடயானந்த
னிலைச்செயறவிர்ப்பனென்னுநிகழ்த்தினனன்னவேலைத்
தலைச்செயல்வணக்கமாக்கிச்சமனிவையுரைப்பதானுன். (சுகூ)

## கலி நிலைத்துறை.

அறிவாமென்னுநல்லவமைச்சாலகமென்னுந்
திறலாமன்னன்றீவழியின்கட்செல்லாமே
பொறிவாயைந்தும்பொத்தியடக்கிப்புகுதுந்நன்
னெறிவாயேகச்செய்குவதிங்கென்னெறியாமால். (எ0)

உடல்வாய்கண்மூக்குச்செவியைந்தானுயர்வேழ
மடைவாகுஞ்சேல்விட்டிலொடேவண்டசுணம்போற்
கெடவாதிக்குந்தெவ்வருமுண்டேகெவுடேசன்
றெடராமற்றன்னுண்மைசெருக்குந்தொழிலோர்க்கே. (எக)

புந்தியதாகுமெய்க்கருவூலப்பொருளைச்சென்
றிந்தியமாமைங்கள்வர்கள்கொள்ளாதெதிர்பேணித்
தந்திடமாகுஞ்சேமமதற்குட்டாபிப்போ
ருந்தியஞானச்செல்வநிலைக்கீறுளதாமோ. (எஉ)

ஓங்காமற்றம்முட்புலனைந்துமுள்ளூடே
வாங்காநிற்போர்க்கெத்தனைசெல்வம்வந்தானு
நீங்காவாலப்பக்குவமென்னுநெறிநில்லா
வாங்காரப்பேயெங்குளதாமோவறியேமால். (எங)

எமதுறுசெல்வமெம்பொருளென்றேயேமாக்கு
மமதையகங்காரற்கினியாடன்வலியெல்லாங்
கமையுறுமென்கட்சாந்திதிருக்கட்கடைநோக்க
மமைவுறுமுன்னேயல்லதுபின்மற்றவையுண்டோ. (எச)

முகமுகமுன்னேயென்மகனுகுமுழுஞானத்
தகமுகன்வீரஞ்சொல்லுவதோவாளரியோடோர்
புகர்முகவேழம்போர்செயவந்தும்புகுமோவவ்
வெகுமுகனென்பானேவெதிர்நிற்கும்விறல்வல்லான். (எரு)

ஆங்காரன்றன்னுற்றலையின்றேயமரூடே
வாங்காநிற்குஞ்செய்கைவினைத்திம்மருவன்றாலந்
தூங்காநிற்குந்துன்னிருண்மாய்க்குஞ்சுடர்போலத்
தீங்காறச்செய்விப்பனிதேயென்றிறமென்றுன். (எசு)

## கலி விருத்தம்.

இத்தகையவன்சொலவியற்சுமதிநாதன்
சித்தமகிழத்தனதுசெங்கைமலர்கூப்பிச்
சுத்தியெனுமோர்மனைவிதோயுமணிமார்பன்
சத்துவனெடுத்திணையதான்மொழிவதானுன். (எஎ)

வேற்றுயிர்கள்யாவினுளுமேயுறினுமொன்றுய்த்
தோற்றியழிவின்றியொளிர்சோதிதனைநாளு
மாற்றும்வகையின்றியறிகின்றவகையாயே
சாற்றுவதியாவததுதானெனதுஞானம். (எஅ)

மேதகுபலஞ்சிறிதும்வேட்டுமுயலாதே
யோதியவிருப்பினெடுமோர்வெறுப்புருதே
மூதுலகில்யாவினுளுமுற்றியபற்றில்லா
வேதமறும்யாவததுவென்கருமமாமால். (எகூ)

ஒவறுமகந்தையொடுமோர்விருப்புமற்றே
தாவறுமசித்திசித்திதம்மிலலையாதே
மேவியமுயற்சியொடுமிக்கதிடமுற்றேன்
யாவனவனேபுவியில்யான்மகிழ்கருத்தா. (அo)

ஆதிவருகாரியமகாரியமிவற்று
ளோதுபிரவிர்த்தியொழிவோடபயமச்ச
மோதுமொருபந்தமொடுமோட்சமறிவிக்கும்
யாதுளதுநாளுமதுவென்மதியதாமால். (அக)

ஒத்தமனமிந்திரியமோதியபிராண
னத்தகையவானதொழிலத்தனையுநன்றுய்
வித்தகநல்யோகமதில்வேறுதரிப்பிக்கு
மித்தகையயாவததுவென்றிருதியாமால். (அஉ)

முன்சொலுமிடத்திலதுமுற்றும்விடமொத்தே
பின்சொலுமிடத்திலதுபேரமுதமாகி
வன்சுருபமற்றவன்மதித்தெளிவிலுண்டா
மென்சுகமதாகுமெனவித்தகையசொன்னன். (அங)

தாமதனிராசதனெனுந்தகையர்தந்தந்
நாமமுமகற்றிமுழுஞானியருளத்தே
யேமுறவிருப்புடனிருப்பனெளியேனென்
மாமனைவிநற்பெருமையாரறியவல்லார். (அச)

அந்தணர்பதந்துளவமான்கிடையுயர்ந்தோர்
புந்திநதிதீரமிகுபுண்ணியதலஞ்சீர்ச்
செந்தழலிவற்றிடைசெறிந்துகொடுமோகன்
றெந்தவினையங்கதுதுறந்திடவல்லாளே. (அரு)

மூவர்பிரமாதியருமுப்பதின்முக்கோடி
தேவருமருந்தவருமற்றுமுளசீரோ
ரேவருமியற்புனிதையெங்குறைவளங்கே
யாவர்குடியென்னிலினியாரவளைவெல்வார். (அசு)

துங்கமயிடாசுரனுடற்குருதிசோரச்
சிங்கமிசையேறினள்செகுத்தகதையேபோ
லங்கவளகீர்த்திபெறசுத்தனெனலாவான்
பங்கமறவேயுயிர்பறித்திடவல்லாளே. (அஎ)

அல்லறவெழும்பரிதியென்னவறிவில்லார்
சொல்லறவுமேயெதிர்துரந்தெனருமைந்த
னல்லறனதன்மனையதோகதிநடுங்கக்
கொல்லறனியற்கையெனில்யாவரதுகொள்ளார். (அஅ)

வேறு.

என்றினையனபலவெடுத்துச்சத்துவ
னின்றியம்பலுமதிநிருபன்கேட்புறக்
கன்றியகலகனைக்கடியும்போர்வலித்
தன்றிறமியற்சமாதானன்சாற்றினன். (அகூ)

திமிரவெங்களிற்றினுஞ்சிற்றெறும்பினு
மமர்பவனொருவனென்றணுவுமேருவுஞ்
சமமெனக்குறிக்குமென்றன்றனடார்கொலோ
வுமிழ்சினப்பகைஞராயுறும்விரோதரே. (கூ0)

என்பவையவன்பகர்ந்தேதகுமெல்லையி
லன்பருக்கருள்செயுமறிஞர்தம்பிரான்
மென்பதம்வணங்கிநல்விருத்திநாயகி
தன்பெருங்கேள்வனுந்தவனிதோதினன். (கூக)

வாணியாரிறைக்குமோர்மலர்ச்செந்தாமரைக்
காணியாள்கேள்வர்க்குங்கங்கைசூடிய
வேணியார்தமக்குமேல்வீட்டுக்கென்னிய
லேணியாலலதவர்க்கேறற்பாலதோ. (கூஉ)

காவல்காட்டுதல்துடைத்தழித்தல்கற்றுடை
மூவரான்முனிவரர்முத்தரானதுஞ்
சாவருமானுடர்சதமகாதியாந்
தேவரானதுவுமென்செயல்கொண்டல்லவோ. (கூ௩)

தொன்மையாமருந்தவந்தொடங்கியாங்கதி
னன்மையாலுறுபயனனுகலின்றியே
யின்மையாமியலறமியற்றித்தம்புய
வன்மையாலியார்கொலோவாழ்ந்துளார்களே. (கூ௪)

சொல்லருந்தவத்தியல்சொலலற்பாலதோ
செல்லருந்தீதுரைசெய்தபோதினு
நல்லருமிவ்வுரைநன்றுநன்றெனப்
புல்லரும்படைத்தனர்பொருளும்வாழ்வுமே. (கூ௫)

மாதவத்தோருளமதிக்கிற்கற்பக
மோதுமைக்கடலமுதும்பர்மாதர்வான்
மீதினிற்குரகதம்வெள்ளிபத்தொடிப்
பூதலத்தினும்வருஞ்சுவர்க்கபோகமே. (கூ௬)

பாலகனொருவனென்பரோபகாரனைப்
போலருளவர்செய்வார்புரிந்தமாதவத்
தாலவன்பெறுபயனன்றியாவியுஞ்
சாலவிந்நிலத்தெவர்தமக்குமீவனால். (கூ௭)

வன்புறவொன்றினுக்காகவாளினு
லென்புறத்தசையரிந்தீந்துபின்றலை
முன்புறவிருந்தவன்முயற்சியென்மக
னன்புறுந்திறத்தலதார்கொல்செய்துளார். (கூ௮)

மண்ணியவுலகினின்மற்றையண்டத்துந்
திண்ணியவெனதொருசிறுவனில்லையேற்
புண்ணியமெனப்பெறும்பொருளுஞ்செல்வமு
மெண்ணியமேன்மையுமெவர்க்குமில்லையால். (கூகூ)

பரத்துரோகனையருட்படைகொண்டென்மக
னுரத்தினல்வதைத்துவேளொடுதன்றேவியு
மரற்றவேயவர்விடயானநந்தன்றனைக்
கரத்துவாள்விதிர்த்துயிர்களைவன்யானென்றான். (க00)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆனிறந்ததொருகன்றினுக்குமணிவந்தனைத்தபொழுதருமகன்
றானிறந்திடல்புரிந்தமாமனுவையாதிமன்னர்நெறிநன்னில்வாழ்
பானிறந்தருமென்மனைவிநீதியொடியானுமெய்த்தியதியவியா
நீனிறந்திகழுமக்ரமன்றனுயிர்கொள்வனென்றனனியாயனே. ()

நேயமென்கணுடைமாமயித்திரிதன்னீர்மையைக்கொடறநெ
றியிலாத், தீயவெங்கபடியாவியுண்டமிர்தரிலமாமெனதுசெய்
கையா, லாயவஞ்சகிமணளனைப்பொருதிடம்பனைக்கொல்வனடு
த்தெனுத், தூயவன்சரண்வணங்கிமுன்னமிதுசொற்றனன்றிகழ்
சுசீலனே. (க0உ)

அகமுருக்கமுறமயிர்சிலிர்ப்பவிழிநீரரும்பிவரவனுகுவேற்
கிகலிநிற்பவளநீதியோவெனவியம்பிநற்கருணையேகினண், மகி
ழ்வுளத்தினுறவதனமுங்குளிரமதுரமென்சொலொடுமருவுமென்
முகமெதிர்ப்படவும்வல்லடைவினை கொலென்றுரைத்தனனன்மு
திதையே. (க0ரு)

நிருபனுக்கெதிரமைச்சரெண்மரெனும்யோகருந்தமதுநீர்மை
யால், வெருவமெய்ப்பகைஞரவரவர்க்குரியர்விறல்செகுத்திடவி
ளம்பின,ரருகுநிற்குமவர்பிறருமங்கவரவர்க்குறும்பகையுமாண்
மையும், வரிசையிற்புகலவினவியுள்ளமிகமதிமனுளனுமகிழ்ந்த
ரோ. (க0ச)

*நிரூபகாதியர்வீரலாபச்சருக்கம் முற்றிற்று.*

*ஆ விருத்தம்-கஉகரு.*

---

## உஅ - வது, விவேகன் காசிபுகுசருக்கம்.

———)✕(———

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மோகன்வெம்படையுமவனதாவியுமுடிந்ததாலினியெறுமொ
ழிந், தேகநம்படைஞர்வாரணசிபுகவென்னவேலையொலியென்
னவே, யோககுஞ்சரமும்வேதவான்பரியுமுற்றதந்துவமெய்யிர
தமுஞ், சோகமாறியமெய்ஞ்ஞானவீரரொடொலித்தெழுந்ததெ
வர்சொல்வரே. (க)

ஏகநாயகனைமானதன்பிரவிருத்தியானுதவுமீனரா
மோகனுதியர்பிணித்தவெம்பிணிவிடுப்பதற்கெழுமுயற்சியோர்
நாகபாசவிசிகத்தைவிட்டசுரனல்லறப்படையைநலியுநாள்
வேகமார்கனுழுனுத்தியோகமெனவெத்திசாமுகமும்விரவினர்.

ஞானமாம்வலவனுனடத்துவனவேதவாசியினடக்குமோர்
தானலாதுயர்வுவேறிலாதனமருட்படைத்தொகுதிசாடியே
யானவைதிகநல்வீதிபோவனவனந்தகோடிரவியாமெனச்
சேனையூடிலகுசோதிசேர்வனதிரண்டெழுந்தபலதேர்களே.(௩)

காமமென்கதலிசாய்த்துவெஞ்சினவனத்தைவேரொடுகளைந்
தெறிந்,தேழுறுங்கடியலோபவோடையையிறைத்துழக்கியுலகிய
லெனு,மாமதஞ்சிறிதுதன்முன்னுறினுமனம்பொறுதெதிர்மலைப்
பதாய்க், கோமகன்பணியின்முன்புசென்றுபடர்ஞானயானை
பலகோடியே. (௪)

சினைதவின்மேலவர்கருத்துணர்ந்தனையர்செல்லவிட்டநெறி
சென்றுரைந், கதிவிடாதெவையுமாயநூறிமுழுஞானவாயினு
னைகக்கிவந், தெதிரும்வாதியரைவாயடக்கிமறையேழிசைக்குர
லெழக்கலித், ததிரும்வாசிகளெழுந்துசென்றனவனந்தகோடி
யெனலாகுமால். (௫)

ஆனவாழ்வினுமதற்றபோதினுமடுத்துயிர்க்கிறுதியாயினு
ஞானதீரம்வழுவாதவீரமுநவிற்றுமின்சொலுநவின்றிடா [சியும்
மோனவாளுமெனவையெவரெவர்க்கியையுமவையியற்றுறுமுயற்
வானளாவவருமதிசயத்திறலரெண்ணில்கோடியுளர்வயவரே.()

இனையதன்மையுறுநால்வகைப்படையுமேகும்வேலைதனிலிளை
யதன், மனைவியாகுமுபநிடதைமாதை வளர்கீதையோடுமவண்
வைத்துமேற், றனையடர்ந்துநிருபகனையாதியர்கள் சூழநற்சுமதி
தன்னொடும், வினையகன்றறிவொர்வடிவமாமிரத மீதிலேறினன்
விவேகனே. (௭)

## கலி விருத்தம்.

ஆயதோர்வேலைவாயறிஞர்கோன்வலியிலத்
தீயமாமோகனுதியர்படைத்திறமெலா
மோயுமாலினியெனுவுவகையாலுலறியே
தூயமாதவரும்யோகியருமுன்றுள்ளினர். (௮)

இகழும்வஞ்சகர்வினைக்கங்குல்வாயிதழ்குவித்
தகமொடுங்கியதகன்றிரதமேலறிவுடைப்
பகலவன்பகைதெறப்புகுதலும்பதுமமா
முகமலர்ந்தனளராமுடியில்வாழ்முதல்வியே. (௯)

நற்புலப்படைஞர்தாணடைபெயர்த்தெழுதலா
லுற்பவித்துடலழிந்துலையுமிவ்வுலகர்வா
ழற்புதப்பொய்யைமெய்யாமெனக்கண்டுளார்
புற்புதக்கண்டொறும்பூழிசென்றுற்றதே. (க0)

நன்னிமித்தத்தொடுநாதகீதத்தொடும்
பன்னுமெய்ச்சுருதியின்பல்லியத்தொலியொடுஞ்
சென்னெறிப்புக்கதச்செழுமதிக்கணவனா
ருன்னுநற்றத்துவத்துணர்வுடைத்தேரரோ. (கக)

கூசிமாமோகனார்குலநெடுங்கானுறப்
பாசிநீரோடொதுங்கியதெனப்பாறவே
வாசிதேர்யானைமாவயவரோடரசனக்
காசிமாநகரிடைக்கடிதின்வந்தெய்தினான். (கஉ)

இரதமேறியதிழிந்தெண்ணரும்படைஞராம்
விரதமாதவரொடும்வீடுகண்டாலெனச்
சரதமாமறிவுடைத்தலைவனந்நகரிடைப்
பருதிபோலொளியெழும்பண்பெலாநோக்கினான். (கங)

என்றுமாறுதசெல்கதிகொள்வானிரவியுந்
துன்றுதாபக்கொடுந்துயர்தனக்கெய்துமே
னின்றுபோதற்கிதாமிலையெனக்கருதுறச்
சென்றுவானுற்றபொற்கோபுரச்சிகரமும். (கச)

கையெடுத்திலகுநற்காசிமாநகரெனுந்
தையன்முத்தித்திருத்தன்னுள்வைகினளெனா
வையகத்தேவரையும்வரவழைத்திடுதல்போற்
றுய்யநற்கொடிநுடங்கியமதிற்சூழலும். (கரு)

விள்ளரும்பரமனும்விண்டுவுங்குடிபுகுந்
தள்ளருங்கயிலையஞ்சயிலமுந்தாழ்கடற்
பள்ளமுந்தமதருட்பத்தராயினர்கடம்
முள்ளமும்பொருவுருவுபயநற்கோயிலும். (கசு)

கண்டுகண்டனைவருங்கண்களித்தங்கையா
முண்டகந்தந்தமாமுடியினுச்சியின்முகிழ்த்
தண்டருந்தெரிவுருவம்பிகாபதியருள்
கொண்டுவைகியதிருக்கோயிலுட்போயினார். (கஎ)

ஆயபொற்கோயில்புக்கத்தனேடன்னையைச்
சேயவர்க்காயினர்தெரிசனம்பெற்றருட்
டாயரைக்கண்டதன்குழவியுந்தருகொடைத்
தூயரைக்கண்டவாதுலருமாயினர்களால். (கஅ)

இன்புறத்தமதுரோமஞ்சிலிர்த்தெதிர்புகுந்
தன்புறக்கண்கணீரருவிநேர்பெருகுவார்
முன்புறப்படியின்மேன்முடியுறப்பணிகுவார்
வன்புறக்கோயில்சூழ்மதில்வலஞ்சூழுவார். (கக)

சூடுவார்சென்னியிற்றாயதாடொழுதெழுந்
தாடுவார்திருவெழுத்தைந்தையுந்தம்முளே
நாடுவார்சிந்தையுநயனமுங்களிகொளப்
பாடுவார்பண்ணுடைப்பரமஞானியர்களே. (உ0)

அன்னதோர்வேலைவாயறிஞர்தங்கோமகன்
றன்னதாருயிரனர்தம்முன்வந்தெய்தியங்
கென்னையாளுடையவன்றாள்பணிந்திருகரஞ்
சென்னிமீதிற்குவித்திணையசொற்செப்பினன். (உக)

கலிவிருத்தம்.

ஏவாதகல்லாலெறிந்தாலுமெம்மினத்தோர்க்
காவாபெருகவருள்சுரந்தநின்கடைக்கண்
பூவாலெறிந்தான்பொடியாகப்பார்த்ததென்னிற்
றேவாவெவருன்றிருவுளத்தைத்தேர்வாரே. (உஉ)

சூழப்பணிந்ததிருத்தொண்டர்தமைமேலாக்கி
வாழப்பணித்தமலர்ப்பாதமாமுடியி
லாழப்பருப்பதத்தோடள்ளிச்சுமந்தானைத்
தாழப்பணித்ததெவர்தாமுணரவல்லாரே. (உங)

வைதிடினுமெம்மினத்தோர்வாய்வாழ்த்தினுமவருக்
கெய்தரியபேறளிக்குமின்பச்சிறுமூர
னுய்தலறமூவரைமூன்றாரோடுநீறுபடச்
செய்ததெனின்மற்றுன்றிருவிளையாட்டாரறிவார். (உச)

நாதாவிக்காசிநகர்நாடிவந்துடைய
மேதாவியர்க்கலதுவீடுபெறற்கெவ்வுயிர்க்கு
மாதாரகப்பிரமமந்திரத்தைநமாய்ந்திடும்போ
தோதாதொழியிலுனக்குப்பயமாமோ. (உரு)

நீதரிக்குமிந்நகர்க்குணீடுலகிலெவ்வுயிர்க்குஞ்
சாதல்வரப்பெற்றெவையுந்தன்மயமாகப்பெறுமேல்
வேதனெனச்சென்மம்விதிப்பவர்க்குமாவிகொள்ளும்
பாதகர்க்குமென்ஞேபணிக்கும்பணிவிடையே. (உசு)

என்றுபலவாசகங்களிவ்வாறெடுத்துரைத்து
நின்றுருகுங்கோமானைநீலகண்டத்தெம்பெருமான்
பொன்றிகழுங்கொங்கையன்னபூரணியோடும்மகிழ்ந்து
துன்றுதிருநேயஞ்சுரந்ததிருக்கண்சாத்தி. (உஎ)

மோகன்முதலானோர்முருங்கப்பொருதடக்கி
யேகமுதனுதனிருஞ்சிறைதீர்க்கும்படிக்கும்
பாகனையசொல்லிசிவபத்தியையுங்காப்பாக்கிப்
போகவிடைநல்கும்பொழுதிறைஞ்சிப்போற்றியே. (உஅ)

மன்னுபடைசூழவிந்துமாதவனையும்பணிந்து
தன்னுளமுமெய்யுந்தழலின்மெழுகாயுருகிப்
பன்னுவனதோத்திரங்கள்பண்ணியரிபத்தியொடும்
பொன்னுலவுசெய்யபதம்போற்றிவிடைகொண்டகன்ருன். ()

கங்காநதியின்கரை * யறிஞன்சென்றணுகி
மங்காதஞானவயப்படைஞர்தற்சூழப்
பொங்காழியோதம்புடைபரந்தாற்போன்மோக
சங்காரஞ்செய்வோனத்தானத்துறைவேலே. (௩०)

விவேகன் காசிபுகு சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் கங உங.

---

## உக - வது, படையெழுச்சிச்சருக்கம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னவர்வரவுதன்பாலடுத்தவர்புகலக்கேட்டு
மன்னவனெடுமாமோகன்மனங்கொதிகொதிப்பவீரக்
கன்னவிறிரடோள்விம்மக்கட்டுணைசிவப்பக்காந்தித்
தன்னருகிருந்ததானைத்தலைவரோடிதனைச்சொன்னுன். (க)

---

* ஒருபால் எனவும்பாடம்.

காடுபோய்மறைந்நரும்மாற்கலங்கியவிவேகன்பட்ட
பாடுபோயஞ்சிநின்றபயமும்போய்ப்படைகொண்டாங்கோர்
நாடுபோய்வைகிமீண்டிந்நகரினும்புகுதக்கேட்டு
மூடுபோயடரேமெங்ஙனெநுங்கிப்போயுறைதுமம்மா. (உ)

அடர்ந்திலமனையர்வைகுமவ்வனத்தினுமிந்நாட்டிற்
படர்ந்துவந்திறுத்தாரென்றல்பகர்ந்திடக்கேட்டுமாங்கே
தொடர்ந்திலநம்முன்வந்துதூதுசொற்றவன்பின்னேயு
நடந்திலமென்றுலிங்ஙனண்ணுவார்க்கச்சமுண்டோ. (ங)

என்பனபலவுங்கூறியிகல்பொரற்கினியென்மோக
வன்படையெவையுஞ்செல்லமதமெனுமத்தமாவிற்
புன்பழிப்பறைநின்றேங்கப்புடைத்திரென்றுரைத்துமீட்டுந்
தன்பெரும்விடயத்தேரைத்தருதிரால்விரைவிலென்முன். (ச)

என்றவனுரைத்தலோடுமெழுந்தடற்காமனையா
வுன்றனியாண்மைகாண்பாருலகின்மற்றெவரேயப்பா
னின்றமர்க்களத்தினெய்திநிருபகன்முதலோர்மாளச்
சென்றடியேங்கள்செய்யுஞ்சேவகந்தெரித்தியென்முன். (ரு)

## கலி விருத்தம்.

ஈதவனுரைத்துடனெழும்பொழுதுவல்லே
யோதியபழிப்பறைமுழக்கினெலிகேளாத்
தீதுறுமருட்படைசிவன்பருகுமுன்னே
யோதவிடமுற்றதெனவோங்கியதுமாதோ. (சு)

செம்பொன்மணிநூபுரமெனும்பறைசிலம்பத்
தம்புருவவில்லொடுதடங்கணிணையம்போ
டம்பொன்முலைமாகளிறுடல்குலிரதத்தோ
டிம்பரினெழுந்ததுமுன்னிரதிபதிதானை. (எ)

சீற்றமதயானைகுடிலப்பரிதிறற்றேர்
சாற்றதிர்மொழிப்பறைபுரூரகிமிர்சாப
மேற்றழல்விழிக்கணைகள்யாவுமெதிர்கொண்டே
யாற்றலொடெழுந்தததிகோபனதனீகம். (அ)

வாயிதழ்துடித்தலுமடித்தெயிறதுக்கித்
தீயெனவிழிக்கடைசிவத்தலுமடுத்துப்
பாய்புலியெனப்படபடத்தலுமிவ்வாறே
யாயகொடுமைப்படையடர்ந்தனவனந்தம். (கூ)

இரப்பொலிகொண்மாமுழவொடேழ்கடல்வளாகப்
பரப்பினுமடர்ந்துபடர்பாய்பரியொடேந்துங்
கரப்பலியுள்வாளொடுகலித்தடலுலோப
னுரப்படையெழுந்ததறிஞோர்கணமொதுங்க. (கo)

ஈட்டுபொருள்யார்வரினுமில்லையெனும்வன்சொற்
காட்டுவதுமற்றொருவர்கைப்பொருள்பெறக்கைந்
நீட்டுவதுமிவ்வகைநிரந்தரமுமேபா
ராட்டுவதுமாயபடைசென்றனவனேகம். (கக)

செந்திருவுள்ளாரெதிர்செயிர்த்துடையபார்வைக்
குந்தமுமகத்ததுபொறுதகொலைவாளு
நிந்தைபிறரைப்பகர்நெடுங்கணையுமேந்தி
வந்ததிகன்மச்சரன்வயப்படையுமாதோ. (கஉ)

நன்குணர்வினனெனுமொர்பாசமுடனல்லோர்
முன்குவிவுறுதகைமுரட்கவிகைதன்னோ
டென்கருமமெய்தினுமெவர்க்கும்வணங்காமெய்
வன்கதையொடோங்கியதுமானனிமிர்தானை. (கங)

துய்யர்தொழலுந்தொழுதல்சோர்ந்தனையர்மேற்கண்
பையெனவிழித்துடன்முகிழ்த்துமொழிபல்காற்
செய்யவொர்சிரஞ்சிறிதசைத்தனையசெய்யு
மெய்யவினையப்படையெழுந்ததொரு * வேலாய். (கச)

யாமெமதெனப்பகர்கவண்கலுமியாவுந்
தாமுணர்குலப்பவுரிடத்தரெனல்சாற்றுந்
தீமழுவுமுற்கொடுநடந்ததுதிரண்டோர்
மாமமதைதந்தையவன்வன்படையுமன்னோ. (கரு)

இத்தகையபின்னருமெழும்படைகள்யாவு
மொய்த்துமுனெழுந்துசெலமோகநெடுமன்னன்
சித்தசன்முதற்றலைவர்சூழவொருதேர்மேற்
கைத்தழலுமுள்ளுறுகடுப்புடனெதிர்ந்தான். (கசு)

ஆயபொழுதங்ஙனமடுத்தகுறியொன்றே
வாய்புனல்வறந்தனர்வயப்படைஞர்திண்டேர்ப்
பாய்பரிகடுங்கினபதாகைமிசையேறிப்
பேய்கணடமாடினகுறைக்கொளிபிடித்தே. (கஎ)

* வெள்ளம் எனவும் பாடம்.

செம்பனையசோரிமழைபெய்ததுசெழுங்கார்
பைம்பொனெடுமால்வரைசலித்ததுபகற்போ
தும்பர்பலமீனினமுகுத்ததுமிகப்பூ
கம்பம்வரலுற்றதுகலங்கியதுவேலை. (கஅ)

மின்னறவிடித்திரளிடித்ததுவிண்மேல்பா
னன்னதிகளிற்புனனடந்தததிமோகன்
மன்னுபுயமாலிகைபுலால்கமழமற்றோர்
துன்னுபுருவத்தொடுதுடித்ததுவிடத்தோள். (கசு)

இத்தகையதுற்குறிகளெண்ணில்பலவெய்தப்
பித்தரின்மயங்கியவைகண்டுமதிபேணு
துத்தமவிவேகனுயிருண்பனெனவுன்னிச்
சித்தமருடானையொடுதேர்மிசைநடந்தான். (௨௦)

வன்பொடிரவிற்பொழுதுமல்கிருளோடோங்கி
நன்பகலினைப்பொரநடப்பதெனவன்னோன்
றன்படைகொடெய்தியதுணர்ந்தறிஞர்தாமு
மன்புடையதம்படைகொடாங்கெதிர்நடந்தார். (௨க)

கலிநிலைத்துறை.

விடயவன்பகைசிதைக்குமொள்வாளொடும்வெறுத்தெவ்
வுடலையுந்தெறுஞ்சினத்தொடுமடந்தைபரொருங்கே
கடவுகட்கணையுருக்கவசத்தொடுங்காமன்
றிடமயர்ந்திடச்சென்றதந்நிருபகன்சேனை. (௨௨)

சூரவென்றமெய்க்கவசமுமெதிரிலாமோன
வீரமும்பகரின்சொலாங்கூரியவேலு
மாரவந்தெதிர்வணங்குறுதனுவுங்கொண்டாங்கே
பாரவெஞ்சினத்தெதிர்புகுந்ததுபொறைப்படையே. (௨ங)

வன்மையாகியதயிரியத்திகிரியுமனப்பற்
றின்மையாம்விறற்றண்டமுமெவற்றையும்வேண்டா
நன்மையாமுனைக்குந்தமுமுலோபன்மேனடத்துந்
தன்மையாயெழுந்ததுவயிராக்கியத்தானை. (௨௪)

தாழ்ந்துமேன்மைகொள்பேரிகைவெற்றிவெண்சங்கும்
வாழ்ந்தபோதினுங்கடலெனவொடுங்குமுள்வலியு
மாழ்ந்தநல்லுணர்வாங்குலிசமுங்கொடம்மமதை
சூழ்ந்துகொண்டதாலடக்கர்கோன்பெரும்படைத்தொகுதி. ()

எனையர்வாழ்வையுந்தமதுபோன்மதிப்பதாமெழுவு
மனையர்பாலுறுமன்பெனும்பாசமுமலர்ந்த
வனசமாமுகக்கவிகையுந்தாங்கிமச்சரப்பேர்
தனையடர்ந்ததாலெழுந்துசந்தோடன்மாத்தானை.　　　(உசு)

புடையெழுந்துமெய்ப்புந்தியைம்புலனெறிபோகா
தடையவுள்ளுறவடைக்குநற்படைக்கலத்தடல்கொண்
டிடைபுகுந்தகங்காரமுமானமுமென்னும்
படையொதுங்கிடப்படர்ந்ததச்சமதமப்பதாதி.　　　(உஎ)

மற்றும்வேறுளமதியுடைப்படைஞருங்வலிந்து
பற்றலாரிவர்க்கிவரெனத்தகையபல்படையை
முற்றமோதுதுமென்றவரவர்க்கெதிர்முடுகிச்
சுற்றிஞரிணைத்தோள்புடைத்தார்த்தனர்தொடர்ந்தார்.　(உஅ)

வேதநாயகன்படையுமக்கொடுந்தொழில்வெய்யோன்
றீதருதவன்பதாதியுங்கடுஞ்சினந்திருகி
யோதவாரியும்வடவையுமொன்றொடொன்றுடன்று
மோதினுலென்த்தாக்கியதெதிரெதிர்முடுகி.　　　(உகூ)

இருதிறப்படையும்புகுந்திகலுறுமெல்லை
கருநிறப்புனல்வெண்ணிறப்பாலொடுங்கலந்தாங்
கொருதிறத்ததாய்த்தோன்றலாலடுபகையுணர்ந்து
பொருவதெத்திறமென்றிறைக்கன்பினர்புகன்றார்.　　　(௩०)

அன்னவாசகங்கேட்டனுமறிவுடையமலன்
முன்னதாயநம்படையுமம்மோகன்மாப்படையு
மின்னதாமெனப்பகுத்துணர்வுறுங்குறியினியான்
சொன்னவாய்மையிற்றொடர்திரென்றிணையனசொன்னான்.　(௩க

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பாலகன்வருடும்போதுபால்சுரந்துடையகொங்கை
மாலுறமுயங்குங்கேள்வன்வருடுங்கான்மயக்குநீரான்
மேலவர்தொழிலுங்கீழோர்செய்கையும்வேறன்றேனுஞ்
சாலவுமனத்தின்பான்மைவேறுறச்சாருமன்றே.　　　(௩உ)

அறிஞருமறிவிலாருமயலுளோரியற்றலாகு
முறுதுயருழப்பாரொத்துமொத்திலரொன்னலார்மேற்
பிறிதுறுமிடர்க்குநோவர்பெருமையோர்மற்றையோர்நம்
வறிதுறுமுடலிற்றுக்கும்வன்றுயர்க்கழிவர்மாதோ.　　(௩௩)

நெஞ்சகமுருகுந்தன்மைநீடறிவுடையார்க்கன்றி
வஞ்சகர்திறத்துமுண்டாமென்னினுமொவ்வார்மாத
ரஞ்சனவிழியானுள்ளமறிவிலார்குழைவரீசன்
றஞ்செனுமருட்கணோக்காற்றம்முளங்கரைவர்சான்றோர். (ங௪)

மாசற்றார்செய்யவேண்டுமாதவம்யாதுமில்லை
யாசுற்றார்செய்வதில்லையாதலாலினியசெய்கை
பேசுற்றபெரியோர்க்கில்லைபிறர்க்குமதில்லையென்றா
மோசைத்தெண்டிரைசூழ்பாரிலவர்க்கிவரொவ்வாரொவ்வார். ()

பொன்னும்பித்தளையுமொன்றேபோனிறம்பொலியுமேனு
முன்னும்பற்றுக்குங்கல்லுடுரைக்கும்போதுரைபொருமற்
றுன்னும்பற்றலர்தம்மீட்டந்தூயநம்மினமொத்தாலும்
பன்னும்பற்பலவாஞ்செய்கைப்பண்புவேறுகுமன்றே. (ங௬)

நீருற்றதகற்றிப்பால்கொளன்னத்தினீர்மைபோலப்
போருற்றபுல்லர்தானையெவற்றையும்புறத்திற்றள்ளிச்
சீருற்றநமதுஞானச்சேனையோடொருங்குசென்று
தாருற்றதும்பைசூடிச்சாடுமின்பகையையென்றான். (ங௭)

அவனஃதுரைத்தலோடுமறிவுடைப்படைஞரீட்ட
முவரிமீப்படர்ந்தாலென்னவோரிமையொடுங்காமுன்னந்
தவமுதற்படைகளேந்தித்தழலெழத்தாக்கித்தாக்கிப்
பவவிணைப்பதகர்தாணைபதைத்திடப்பாய்ந்ததன்றே. (ங௮)

சாடினரறிஞரன்னார்தகர்த்திடத்தறுகட்டீயோர்
வீடினர்சிலபேர்சாய்ந்துவிழுந்தனர்சிலபேர்பின்னிட்
டோடினர்சிலபேரஞ்சியொளித்தனர்சிலபேர்கெட்ட
கேடினர்தம்மையாரேகிளந்துதற்குரியரம்மா. (ங௯)

படையெழுச்சிச் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் கஙசுஉ.

---

## ங0 – வது, காமனுதியர் வதைச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சாய்ந்ததம்படையைநோக்கித்தழலெழவிழித்தகண்ணர்
காய்ந்தவெஞ்சினத்தர்காலன்கணத்தினுங்கொடியர்வெங்கட்
பாந்தணஞ்சனையர்மோகன்படைத்தலைவீரரென்ற
நாந்தகவுழவர்வந்தார்நானிலமருளமாதோ. (க)

காமன்சேய்விடயானந்தன்கலகன்வெவ்விகற்பனுசன்
மாமதன்பெறுமனத்தன்மச்சரன்மதலைமானப்
பாமரன்சுதனிடம்பன்பாலகன்கலியன்மைந்த
னுமொர்சஞ்சலன்மாதுக்கனக்ரமன்கலக்கனுவோன். (உ)

வெஞ்சினப்பரத்துரோகன்வெகுமுகன்விடயசங்க
னெஞ்சலிலனுசாரன்பேரெண்ணிலெண்ணிருவர்தீயோர்
வஞ்சனைத்தேருங்கோபவாசியுமதமாக்குன்று
மஞ்சுறநடத்தியோங்குமறிஞர்தங்குழுவைச்சூழ்ந்தார். (௩)

துற்குணவயிரவாளுஞ்சுடுசினக்கொடியவேலும்
வற்குணவலியதண்டும்வணங்குமுட்கபடவில்லு
மெற்குணத்தழல்வாயம்புமேந்திவந்தெழுந்துதாக்கிச்
சற்குணப்படைஞர்சாயத்தள்ளியேபுறத்துஞ்சார்ந்தார். (௪)

தேரினுந்தழல்போற்றீங்குசிறந்ததாயிடத்துஞ்செய்வோர்
போரினுண்ணறிவின்மிக்கோர்புகுந்தெதிர்பொருவரோதான்
காரினுங்கரியசிந்தைக்கடியவக்கயவர்வைகு
மூரினும்புகுதாரன்னோர்க்கொதுங்குவதருமையன்றே. (௫)

ஊக்கத்தினுயர்ந்தமேலோரொதுங்கிப்பின்வாங்குந்தன்மை
தாக்கற்குத்தகர்பின்வாங்குந்தகையெனக்குறிக்கொள்ளாமே
நாக்கித்தந்தமதுகோட்பானுனிக்கொம்பேறினரன்னோர்தம்
வீக்கத்தைத்திறல்விவேகன்வியன்படைத்தலைவர்கண்டார். (௬)

சுகனிருவிகற்பர்கோமான்சுசனன்சத்தியனியாய
னகமுகன்றவன்சன்மானனவிரோதன்பரோபகாரன்
றிகழ்சமாதானன்றன்மன்றீர்க்காயுவுளந்தெளிந்தோன்
றகவுறுமியமனற்புதயனொடீரெண்மர்சார்ந்தார். (௭)

வந்தனர்விவேகவேந்தைமலரடிவணங்கியைய
நந்தமர்நலியத்தாக்கிநடந்தவெம்பகையைமோதி
யந்தரம்புகுத்தற்கெம்பாலளித்தியால்விடையீண்டென்றார்
தந்தனம்போதிரென்றானவரதுதலைமேற்கொண்டார். (அ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரதமேன்மையானையாகவேதம்வாசியாகநீள்
சரதமாவிமானமாகஞானதத்துவங்களே
யிரதமாகவவரவர்க்கியைந்தவூர்தியேறினர்
வரதனானமதிவிவேகமன்னனேவும்வயவரே. (௯)

விண்டுநாமசம்புநாமவீரவாளுமெய்ப்புலத்
தண்டுமேல்விபூதிகோபிசந்தநாறுகவசமு
மண்டுகேண்மைநல்லொழுக்கமானசங்குமாழியுங்
கொண்டுநீயவஞ்சரைத்தொடர்ந்துவந்துகூடினர். (க0)

அன்னகாலைமோகனேவுமாலகாலமேயெனச்
சொன்னகாமன்மைந்தனுதியோர்மிகச்சுளித்தெழுந்
தின்னகாலவூழிகாலமென்னநல்லினத்தர்மேற்
பன்னகாதிபர்க்கெதிர்த்தபவனனென்னமோதினர். (கக)

நஞ்சிலங்குநாகமீதுகனுழனண்ணிணுலெனச்
செஞ்சரங்கள்குந்தம்வேல்கள்செல்லவீசிவீசியே
வஞ்சரங்கமூடுசோரிவாரிசோரவன்னவர்
நெஞ்சுரங்கழிந்துவீழநீதியோர்நெருக்கினர். (கஉ)

மீனகேதனன்சுதன்றவன்கைவாளில்வீடினன்
மானனுர்குமாரனேச்சன்மானனுவிவாங்கினு
னீனமானகலகன்வந்தெதிர்த்திறந்தனன்சமா
தானனுலொர்தீர்க்கவாயுநாசனுவிதள்ளினன். (கங)

துக்கன்மாளவேசுகன்றுணித்தனன்னியாயனு
லக்ரமன்றுணிந்தனன்னகந்தெளிந்தவறிஞனன்
மெய்க்கலக்கன்விந்தனன்விரோதமற்றவீரனன்
மைக்கறுப்பினுங்கறுத்தவபிரனுவிபோயினன். (கச)

பகர்பரத்துரோகனைப்பரோபகாரனீக்கினன்
புகல்சத்தியன்றனுவிபோக்கினன்மெய்வாக்கினன்
றகையனத்தன்வாழ்வைபற்புதயனடர்ந்துதாக்கினன்
வெகுமுகத்தனைத்தொடர்ந்தவ்வகமுகத்தன்வீட்டினன். ()

நிருவிகற்பன்வாளியொன்றினெடுவிகற்பனீங்கினு
னருகுடைச்சுசீலனுலசுத்தன்விண்ணையண்மினன்
றருமனெற்றிவவ்வினுனெர்சஞ்சலன்றனுயிரையே
பொருதவெற்றியியமனுலவ்விடயசங்கன்பொன்றினன். ()

இனையதன்மையவரவர்க்கியன்றதெவ்வர்தங்களா
லணையவஞ்சரங்கிறந்ததடல்கொள்காமனுதியாம்
புனையலங்கன்மார்பர்கண்டுபுதல்வர்பொன்றினுரெனும்
வினையுணர்ந்துநினைவயர்ந்துவேறுவேறுகூறினர். (கள)

## கலி விருத்தம்.

மின்னுப்டைக்காமன்விடயானந்தக்குமரன்
றன்னுயிர்வீந்தானெனவேகானிரதியோடயர்ந்தே
மன்னுயிரையெல்லாமயக்கிநின்னால்யான்வாழ்ந்தே
னென்னுயிரேதோற்றேனினிவாழேனீங்கென்றான். (௧௮)

கன்னேருங்கோபன்கலகனிறந்தானெனவே
பொன்னேயென்கண்மணியேயென்றரற்றிப்போயினநின்
பின்னேதொடர்ந்தேன்பிழையேன்பிழைத்தாலு
மென்னேயினியிங்கிருந்துபயன்யானென்றான். (௧௯)

பொய்யானமைந்தனுயிர்போனதெனவேபொருமி
நெய்யாரழலெனத்தன்னெஞ்சமிகக்காந்தி
யுய்யாளென்வஞ்சனையும்யானுமினியுய்யேனா
லையாவசத்தியனேயென்றிடம்பனல்லலுற்றான். (௨௦)

மைத்தடங்கட்டேவிமறதியொடுமாமதனு
மெய்த்தனையனுமனத்தனுசனொடும்வீந்தமையாற்
பித்தனையுந்தம்மைப்பெருவிலங்குதாளிலிட்டுக்
கைத்தனையுமிட்டதுபோனின்றுகண்ணீர்கான்றழுதான். (௨௧)

அஞ்சாவயிரன்மகனக்கிரமனக்களத்திற்
றஞ்சாமுனமசூயைத்தோகையொடுமச்சரன்றா
னஞ்சானதுகழன்றநாகமெனச்சோகமுற்று
மஞ்சாமகன்மகனேயென்னாமனந்தளர்ந்தான். (௨௨)

சங்கற்பனுந்தனதுதாரமெனவேயுடைய
வெங்கற்பனையும்விகற்பன்வெகுமுகனோ
டங்கப்படுகளத்திலாவிபிரிந்தானெனவே
துங்கப்பணையிழந்தநச்சுமரத்துண்டொத்தார். (௨௩)

கள்ளார்கபடக்கலிகாலன்சஞ்சலவென்
பிள்ளாயிறந்தெளியேன்பேரனெனுந்துக்கனொடு
முள்ளார்செறிவகன்றழுங்கிலெனவாக்கினையென்
றுள்ளாவிசோர்ந்தாங்குரைமறந்துவெய்துயிர்த்தான். (௨௪)

வீரசிங்கமன்னவிடயசங்கன்மாளவனா
சாரனங்ககீர்த்தியெனுந்தாரமொடுந்தானயர்ந்து
கூரழிந்தவேல்போற்குணமழிந்தவன்சிலைபோற்
சீரழிந்துநெஞ்சந்தியங்கிப்பரதவித்தான். (௨௫)

பாலகனுமங்கோர்பரத்துரோகன்கொடிய
காலன்வசமான தனற்காபாலியுட்கலங்கி
மூலமுறப்புச்சமுறிந்தகருந்தேள்போலச்
சாலவுமெய்வெம்பித்தரைமேற்புரண்டழுதான். (உசு)

இத்தகையபன்னிபெவருமியன் மாதரொடுந்
தத்தமகற்குத்தனித்தனியேதாமிரங்கு
மத்துயரமெல்லாமகங்காரனேக்கியவர்
சித்தமுறவாய்மொழியாற்றேற்றுவானீதுரைத்தான். (உஎ)

மக்கட்டுணையிழந்துவன்பினர்போல்யாமெவரும்
புக்கத்தலையிற்பொருதுபகைபோக்காமற்
பக்கத்தவர்நகைக்கப்பார்மேல்விழுந்தரற்றித்
துக்கத்தடங்கடலுட்சோருவதோவீரமென்றான். (உஅ)

ஆங்காரனீதுரைக்குமவ்வேலையைந்துகணைப்
பூங்காமன்முன்னும்பொருபடைஞரெல்லோரு
மேங்காமற்றுக்கனிறந்ததுண்மையாக்கியுயிர்
நீங்காதகோபனைத்தன்னெஞ்சகத்திற்கொண்டெழுந்தார். (உகு)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காய்ந்தழல்கொதிக்குங்கண்ணர்கனைகழற்காலர்மோக
வேந்தனையிறைஞ்சியீதிவிடையெமக்குரியமைந்தர்
சாந்தொழில்புரிந்தோர்முன்னுந்தரியலரெவருமின்னே
மாய்ந்திடப்பொருதுமற்றெம்மனச்சினமுடித்தற்கென்றார். (௩௦

என்றவரிவைசொலாமுன்னெதிரொருவிடயத்தேர்மே
னின்றவனிரங்கியந்தோநீர்பெற்றபுதல்வர்யாரும்
பொன்றினர்கொல்லோவென்னப்பொருமிநெட்டுயிர்ப்புவீங்க
வன்றிறற்படைஞர்தம்மைநோக்கியிம்மாற்றஞ்சொன்னன். ()

ஞானமெய்ப்படைஞர்தாக்கநமதுடைப்படைஞர்சாய்ந்து
போனவப்பொழுதுநீரேபுகுந்துபோர்புரியாதுங்கண்
மானவப்புதல்வர்தம்மைமடிவுறப்புகுத்திப்புத்தி
யீனர்மற்றிவரென்றேதுமியல்பிணைப்புதுக்கினீரால். (௩உ)

இனியவைபெண்ணியென்னேயிப்புறமேனுந்தெவ்வ
ரனைவருமாளத்தாக்கியடுசமர்க்களத்தில்வாகை
புனைவுறப்பெறுதிராகிற்புன்பழிதுடைத்துப்பின்னு
மனைவியர்தம்பாலெய்திமக்களும்பெறுதற்காமால். (௩௩)

என்பதுபுகன்றியாருமேகுமினின்னேயன்னார்
வன்பகைதெறுதற்கென்னுமன்னவன்விடுத்தலோடுந்
தன்பதம்வணங்கிக்காமன்றழல்விழிக்கோபன்முன்னும்
புன்புலப்படைஞராங்குப்பொருக்கெனவெழுந்துபோனார். (ஙச

ஷ வேறு.

தொட்டுமலரைங்கணைகருப்புவிலிடைப்பலசுருப்புநெடுநா
ணிட்டுநிறைகுங்குமநறுங்கவசம்வீக்கிமுதுகின்கண்விசிகப்
புட்டிலுமருங்கிலுடைவாளுமொருதாளிலிசைபொங்குகழலுங்
கட்டியரணைப்பொரவெழுந்துமுனடந்தமைகடுக்குமெனவே. ()

காரிருணெடுங்களிறெழக்குயிலெனுங்கொடியகாளமதிரப்
பேருமகரத்துவசமுன்புசெலமின்பொருவுபெண்படையொடே
வாரிமுரசோலிடமதிக்குடைநிழற்றமலையானிலமெனுந்
தேரின்மிசைமாரனினிதேறினன்வசந்தனொடுதேவியொடுமே. ()

வேள்விரைவினிவ்வணமெழுந்தமையுணர்ந்துநல்விசாரமெனலாம்
வாள்வலியொடும்மனைவியுத்தியொடுஞானகவசத்தொடுமின்னார்
கோள்வினைதெறுந்தயிரியப்படையொடும்விடயகோபமிகவே
நீள்விரதமாமிரதமேலெதிர்நடந்தனனிருபகனரோ. (ஙஎ)

மன்னுபுருவச்சிலைகுனித்துவிழிகக்குபொறிவார்கணைவடித்
துன்னுமதியுட்கொதிகொதித்தெயிறதுக்கலெனுமோர்முரசெழ
த், துன்னுவெயர்மெய்க்கவசமிட்டழன்மொழிச்சுரிகைதொட்டு
நெடுமூச், சென்னுமிரதத்தின்மிசையிஞ்சையொடுகோபனெதி
ரேறிவரவே. (ஙஅ)

கண்டவனெடும்பகையெனும்பொறையெனத்தகையகாளைம
வுனத், தண்டுமமுதூறுமொழியம்புமெய்வணக்கெனுமொர்சாப
முமுக, முண்டகமலர்ச்சியெனுமோர்குடையுமூரலெனுமொய்க்
கவசமுங், கொண்டுமரியாதையொடுமேறினன்மெய்ஞ்ஞானமத
குஞ்சரமரோ. (ஙகூ)

மொய்திகழிடம்பனெடுவஞ்சனையுமோர்புடையின்மொய்த்து
வரவே, மெய்தளரினுங்கதிகொடாள்வலியொடின்னுயிர்விடுக்கி
னும்விடாக், கைதிகழ்பொருட்கதையொடாவலமையாவிதயக
ட்கமொடுவந், தெய்தினன்முன்வாணிபவிமானமிசைலோபன
வனிச்சையொடுமே. (சo)

அன்ன திறல்வெம்பகைஞரெய்திய துணர்ந்தமிர் தசீலனுமவன்
றன்னருக சோரனுமடுக்கவயிராக்கிய மதாசலமிசைப், பன்னு
பொருள்யாவையும் வெறுக்கைமுனைவேல் விரதபாசமிவைகொ
ண்,டின்னகைவிரத்தியுநிராகனுமடர்த்தெதிரெழுந்தணுகினார்()

பூமிசைதனக்கெதிரியில்லையெனலாம்விருதுபொங்குலகரிச்
சாமரமிரட்ட மருண்மைக்குடை நிழற்றவெவர்தம்மொடுநெடுந்
தீமைசெய்செருக்கெனுமடற் படைகள்கைக் கொடொருதேவி
யெனலா, மாமறதியோடுமிறுமாப் பெனுமிபத்தின்மதன்வந்த
னனரோ. (௪௨)

விந்தகிரி யுங்கடலு மென்னமத வீரனெழும் வேலைமலையத், தந்
தணனெழுந்ததெனவன்பொறைபெறுந்திறலடக்கர் பெருமான்
முந்துணர்வும் வாய்மையு மொழுக்கமும்வணக்கமுமுரட்படைக
ளா,யுந்தவெதிரேறினனிறைந்தமுதுகல்வியெனுமோர்களிறரோ

உய்வழிவிடுத்தலெனும்வாம்பரியின்மச்சரனருமையுடனே
வெவ்வியலெனும்படை கொடெய்திய துணர்ந்தனையர்வெம்பகை
ஞராஞ்,செவ்வியமகிழ்ச்சியுமனுளனுமுள்ளன்புறுவல்செஞ்சொ
லுமென, வவ்வியமுனைப்படைகொடேறினர்களங்கமின்மனத்
துரகமே. (௪௩)

புந்திதெரி யாமையிப மாய்மமதை யுங்கவுட பூபதியுமே, ருந்தி
யெதி ரின்மைபுக லோகையெனு மாயுதமொடோங்கி யெதிரே
வந்திடுதல் கண்டுசம னுந்தனது சாந்தியு மதித் திகிரிகொண்
டிந்தியமெனுங்குவடிடிக்குமியலாகுமிபமேறினர்களால். (௪௫)

நித்திரைமிகுத்தலெனுமாமகளொர்பக்கம்வரநேயமிகுதன்
பத்தினியொர்சோம்பியொடுதாமதனெடுந்திசைபடர்ந்தடரவே
சித்தமகிழ்ராசதன்முயற்சியொடவன்பெறுசிரத்தையொடுநீள்
புத்திரனொடினர்மதியாமிரதமேலெதிர்புகுந்தணுகினார். (௪௬)

அன்னவரமர்க்கெதிரடுத்தமையுணர்ந்துமகனுக்குமறனு [யாங்
முன்னரியதேவியொடுளன்பெனுமிபத்தின்வரவொண்புனிதை
தன்னரிவைதன்புதல்வியாகியசிரத்தையொடுசத்துவபிரான்
மன்னுதவயோகியர்மனோரதமிசைக்கடிதின்வந்தனனரோ.(௪௭

எசவருகற்பனைமனுளனெரிதீயெனவெழுந்ததுணரா
விசவருதண்புனலெனக்கடுகினானிருவிகற்பர்பெருமான்
பூசலினெழுந்தொருசந்தேகன்வருகின்றமைபொருமலிபமேற்
கேசரியெழுந்ததெனநிச்சயன்வெருண்டெதிர்கிளர்ந்தணுகினான்

வெங்கலியனுங்கபடியுஞ்சுதன தன்மனும்விரைந்தெதிரவே
தங்கியசுசீலனுமபித்திரியுமோங்கிவளர் தன்மனுமிசைந்
தங்கெதிரெழுந்தனர்மெய்வேதநெறிநீக்குமுலகாயிதன்முதற்
பொங்குமதவாதியர்முன்வந்தனர்நம்வைதிகபுராதனருமே.(சகூ

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மண்டுபோர்வயவரிருதிறப்படையின் மற்றுளோருமெதிர்பற்
றியே,யண்டுமேவலர்களவரவர்க்கெதிரியாயினாரொடவரவரழன்
றெண்டராதலமொருக்குதற்குநிமிரூழிவெங்கனலுமுடனெழுஞ்
சண்ட மாருதமுமொன்றொடொன்றிகறருக்கினாலெனநெருக்கி
னார். (ருo)

ஞானசூரருமஞ்ஞானவீரருமின்னமுதுநஞ்சுமெனநண்ணியே
யானையோடுபொரவானையுந்தியுமவ்விரதமோடிரதமேவியுந், தா
னையோடிகல்செய்தானைமுட்டியுநல்லிவுளியோடிவுளிதாக்கியுஞ்
சோனைமாரியெனவம்பும்வேலுமெதிரெதிர்துரந்து மடுதொழில்
செய்தார். (ருக)

பண்டிராமகவிசேனைமேலடலிராவணன்றனதுபடைஞர்தாம்
விண்டுபோர் செய்ததுமறுமுகக்கடவுள் விபுதசேனையொடும்வெ
ய்யசூர், மண்டுபோரவுணரிகல்புரிந்ததுவுமற்றுளோர்சமர்மலைந்
தது, முண்டுபூருவமவ்வினைஞர்செய்தசெருவினையர்செய்தசெரு
வொக்குமோ. (ருஉ)

மோகன்வன்படைஞர்காமனாதியர்முனிந்தெழுந்துவிரகானலச்
சோகவன்படைமுதற்படைக்கலமியாவுமங்கெதிர்துரந்துமா
சாகசங்கள்பலசெய்துமப்படையவர்க்கிழைத்திலதளர்ச்சிவான்
மேகபந்திசொரிதாரைமாரிபெருவெற்பினுக்கிடர்விளைக்குமோ.

தூமதிப் படைஞர் கடவுயுத்தியெனு மம்புவந்துடறுளைத்துமே
பாமரப்படைஞர்வெருவலுற்றிலர்படைத்தவாழ்வொடுயிர்பற்ற
றப், பூமியிற்பலரிறந்துபட்டதெதிர்கண்டிருந்துமெவர்பொன்
றினுந், தாமிறப்பதிலராய்மதிப்பவர்தமக்குமச்சமதுசாருமோ.

அறிவிலன்படைஞரச்சமுற்றிலரருட்படைக்கெனினுமனையர்
தாம்,பெறுவதென்கொல்விறல்வாளரிக்குலமடுத்தபோதிலிடை
பேர்கிலா,முறுகுவெஞ்சினமதாசலம்பயம்விடுப்பினுந்தனதுமுர
ணழிந்,திறுவதின்றியிகல்வென்றதுண்டெனவிசைத்தல்காதையி
னுமில்லையால். (ருரு)

ஆயகாலேயில்விவேகனேவலினடுத்தபோர்வயவரணேவரு,நேய மாகிமணிமந்திரத்தினும் வசப்படாவரவைநேர்தொடர்ந், தேய காளவிடமூறுமுள்ளெயிறுகுத்துளாரெனவெழுந்துபோய்த்,தீய மேவலர்செருக்கழிந்திடநெருக்கிவெம்படைகள்சிந்தினர்.(ருசு)

வேதவாளுமுயர்விரதபாசமும்விழிப்பெருங்கருணேவேலுமெ ய்ப், போதநீள்கதையுமின்சொலம்புமகிழ்புந்தியாநெடியகுந்த மும், கோதிலாதவயிராக்கியத்திறல்கொள்குலிசமுங்கொடுயிர் குலேயவே, தீதிலாவயவர்வீசவீசமருள்சிந்தைவெம்படைஞர்சித றினர். (ருள)

உருவிலன்படைஞர்நிலேகுலேந்தனர்குரோதர்சாய்ந்தனருலோ பருஞ், செருவிகந்தனர்மதத்தர்மட்கினர்தியங்கிமச்சரர்மெய்சிந் தினர், மருவுறுங்கவுடர்வாய்புலர்ந்தனர்வெம்மானருந்திசைமல ங்கினர், பொருகளந்தனிலிராசதத்தரொடுதாமதத்தருயிர்பொ ன்றினர். (ருஅ)

போரிலிற்றவர்கள்போகமற்றவர்புறத்திலோடியதுமறிஞராம் வீரவித்தகர்தொடர்ந்துவந்தமையுநோக்கிநாணிணேயும்வீக்கியே மாரனிக்குவில்வளேத்தலர்க்கணேவடித்துமாமலேயமாருதத் தேரினேத்தருணமாதர்தானேயொடுதிமிரமாவொடுசெலுத்தியே.

போதகஞ்சுகர்தந்நெஞ்சகத்தினுமுரத்தினுந்திரள்புயத்தினுங் காதடர்ந்து பொருகணேக ளாயபலகணேதொடுத்துமெதிர் காம வேள், சூத பங்கயம சோகமுல்லேநறு நீல வாளிக டுரந்துமே மாதர்தங்களொடுதானுமங்கெதிர்மலேந்ததார்புகலவல்லரே (சு0

கற்றடங்கியமெய்ஞ்ஞானபோதனர்கள்காயமேன்மகளிர்கண் களாம், வெற்றியங்கணேகள்கோடிகோடியெதிர்விட்டபோதினு ம் விகாரமாம், பற்றடைந்தில தனங்கனேங்கணேகள் பாய்ந்த போதுமவைபாறைமே,லெற்றிடுந்தறியெனுமுறிந்ததிடர்செய்த தெள்ளளவுமில்லேயே. (சுக)

ஆய காலேநிரு பகனு முத்தியொ டடுத்த தேரிணே யராவெனக் காயுமாரனிரதத்தினுக்கெதிர்கடாவியேவுபலகடிமலர்த், தீயவா ளிகளெவற்றை யுந்தனதுசெங்கைவாள் கொடுசிதைத்துமுன் மேய மாமகரகேதனத்தையும்விழத்துணித்தனனவ்வேலேவாய்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கருகிருளிற்றனியிடத்திற்களவாகியிளநலமுங்கவினுமன்பு மருவுமயலான்மணிவி வலியவந்து சருவுதலாம்வாளியொன்றை

யிரதிபதி தொடுத்தவன்மே லேவினனக் கணையையவாவின்மை யென்னுஞ், சரமதொன்ருலகற்றியுத்திதன்கணவன்பின்னுமின் ன தன்மைசெய்தான். (சுரு)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நொய்யமாதருடல்பைம்மறித்தணையநோக்கமாகுமயிருக்கியே நையநூறுபொடியாக்கினனனைய தன்மைகண்டிரதிநாதனும்,வெ ய்யவாளிகளனந்த கோடியவன் மேலழன்றெதிர்விடத்தொடுத் தெய்யவேழவிலொடிந்தவெண்ணிலவையெண்ணிறந்தசதகோடி யே. (சுச)

செய்தவத்தொருவனைத்தொடர்ந்துபலதீங்கிழைக்குமொரு சிறியன்வாய், வைதினைத்தவெனவியனிருபகணைமாரனிக்குவில்வ ளைத்ததன்,கைதளர்ச்சியுறவிழிசிவப்பவழல் காந்துமெண்ணரிய கணைதொடுத், தெய்தினைத்துமிடர்செய்ததில்லையெனிலென்செய் வானவனெரேழையே. (சுரு)

இன்னதன்மையிகல்செய்திடும்பொழுதிமைக்குமுன்னமழலெ ழவிழித், துன்னருஞ்சிவனெரித்துவிட்டகுறையுள்ளதுங்கெடவு முத்தியாங், தன்னணங்கிரதிமாதைவெல்ல வெதிர்தானுமவ்விர திதலைவனைச்,சின்னபின்னமுறவாய்ந்துதேர்தலெனும்வாளியொ ன்றினுயிர்சிந்தினன். (சுசு)

பஞ்சபாணனுயிர்மாய்ந்தபின்னரடுகோபன்மெய்பதைபதை த்துநீ,டிஞ்சையாமவனைநெட்டுயிர்ப்பிரதமீண்டுநீகடிதுதூண்டெ னு, நஞ்சுபோன்மனமழன்றினிப்பொறையனுமமாய்ப்பனென நண்ணியே,வெஞ்சொலாகியகவண்கன்மாரியொருகோடிகோடி யெதிர் வீசினன். (சுஎ)

மோனமாகுமொருகேடகங்கொடவையாவுநீறு படமோதினு ன்,ஞானதீரனதுகண்டகோபனிருநாலுதிக்கையுநடுக்கியே,கூன ல்வார்புருவவிற்குனித்துவிழிகக்கனற்கணைகுளிர்ந்தபொன்,மே னியான்முன் விடுபோதவற்றையுமொரின்சொல்வாள்கொடுவில க்கினன். (சுஅ)

ஊக்கியேவியவிழிக்கனற்கணையுகுத்தபின்னுருமிடித்தெனத் தாக்கினனொரு தடக்கையா லதுசகித்தமெய்ப்பொறுமைதானு மே,காக்கொணுதசிறுமூரலென்றுபகர்கடியவேலெதிர்கடாவியே நீக்கினனெடியகோபனுவியையிழுந்ததங்கமுறிலத்தரோ. (சுகூ)

வெய்யமாமகிணனங்கிறந்தபடிநோக்கியிஞ்சையெனுமின்ன
ள, ஐயகோவெனவிழுந்தரற்றியவளாவிநீக்கினனிராகன்மே
னெய்ய லோபனவனுள்ளமாறு படநூக்குவன் னெனநுவன்று
தன், றையல்வாஞ்சைவிடுதேர்முடுக்கிமிருசாகசங்களிவைதான்
செய்தான். (எ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உறுபொருளொன்றின்மையனும்வறியனிவனென்பதுதன்
னுள்ளத்துன்னிச், சிறுவிலைநாளறுசுவையோடன்பிலனூட்டடி
சிலெனுந்தீயவேலை, முறுகியவெஞ்சினலோபன்விடுத்திதைநீதடு
த்தியெனமுடுக்கலோடு,மறுவிலனென்படினுமவ்வூண்மறுப்பெ
னுமோர்திறற்படையான்மாற்றிவீழ்த்தான். (எக)

இழிகுலத்தோர்கொடுந்தொழிலாலீட்டுபெரும்பொருளனை
த்துமினியநாளிற், பொழிதருமதானமென்னுங்கடுங்கணையொ
ன்றினைலோபன் போரிற்றுக்கி,யழிவுறச்செய்குவனிதினுன்னுவி
யெனவேவுதலுமதைவிராகன், விழுமியரென்னினுமவர்பாலிர
வாமைவிசிகமொன்றால்விளியச்செய்தான். (எஉ)

மூண்டாசைவரப்புகுத்துந்தன்மனையாள்விழைபொருளாமு
டிவில்வாளி, தூண்டாநின்றனன்விரைவினவற்றையுந்தன்னியற்
படையாற்றுணித்தியாவும், வேண்டாமையெனுஞ்சுடர்வேலொ
ன்றுவயிராக்கியர்கோன்விடுத்தலோடு, மாண்டானக்கடுலோப
னிச்சையுந்தன்மகிழ்நனொடுமடிந்துசாய்ந்தாள். (எங)

ஆங்காரன்றிறங்கெடுத்தான்சமன்சாந்தியகந்தையுயிரழித்தா
ளாவி, போங்காலமடக்கர்பிரான்மதன்மறதியிருவருக்கும்புகுத
ச்செய்தான், வாங்காதமச்சரனைமாய்வித்தான்சந்தோடன்மகிழ்
ச்சியென்னப், பாங்காகுமவன்றேவியசூயைதன்னையுயிர்பறித்து
ப்படியில்வீழ்த்தாள். (எச)

வஞ்சனையையாவியுண்டானத்தேயன்மிகத்தெளிந்தமதியோ
ன்றன்னு, னஞ்சனையதிறலிடம்பனுயிர்துறந்தானிலச்சையொடு
நடந்துமானன், றுஞ்சினன்றூந்தியுந்தமனுந்தொடர்ந்தமையாற்
சந்தேகன்சுழல்காற்றின்கட், பஞ்சனலிற்பாய்ந்ததெனநிச்சயனு
லசித்தியொடுபடியிற்சாய்ந்தான். (எரு)

கற்பனையையவள்புணர்சங்கற்பனையோர்நிருவிகற்பக்காளை
மாய்த்தான்,வெற்பனையராசதனுந்தாமதனுஞ்சத்துவனால்விளிந்

தாரன்று, னற்புதல்விசிரத்தைசென்றுநவிலிருவர்சிரத்தையர்தந் நாமந்தீர்த்தாள், சொற்பனஞ்சேர்சித்திரையைச்சோம்பியொடும் புனிதைசென்றுசோர்வித்தாளால். (எசு)

காரியனைவிரத்திகொன்றுளவள்கணவன்முயற்சியுயிர்கடிந்தான்சுத்த, வீரியனுனசுசீலன்கலியைவென்றுமயித்திரியாமின்னலன்னான், பாரியையுமுயிர் பறித்தான்றருமனலதன்மனுமேபட்டான்செங்கைக், கூரியதன்னியல்வாள் கொண்டடன்மோனன் பொருகளத்திற்குதர்க்கன்மாண்டான். (எஎ)

தீவினையையவிரோதன்றிருத்தேவிமுதிதைசென்றுசெகுத்தாள்வெம்போர், மாவினைசெய்விபரீதபாவனையுமோரசம்பாவனையுமென்னும், பாவியரைத்தாரணன்றியானநெடும்போய்வதைத்தான்பகரநீதி,தாவியெழுங்கருணைபொரத்தான்மடிந்தாடவன் பொரத்துற்சபதன்வீந்தான். (எஅ)

அப்பிரமன்விப்பிரமையாவிசெற்றனுத்திகனரங்கைவாளாற் செப்பரியமிச்சாதிட்டியுமிறந்தாளித்தகையதீயோர்யாருந், தப்பறவெஞ்சமர்க்களத்திற்சாய்ந்தவெல்லைவைதிகர்மேற்றழல்போற்காந்தி, வெப்புருவுகொண்டனையசார்வாகன்முதலோர்போர் விளைப்பதானர். (எகூ)

காமனுதியர்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கசசக.

## ௩க - வது, உலகாயிதன்வதைச்சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முறைகோடியுலகாளுமோகனடிப்பணிபுரியுமூர்க்கர்தம்முண் மறைகோடிபுகன்றனுமற்றவைக்குப்புறம்பாகுமதமேற்கொண்டு, பறைகோடிகலிப்பவிவேகன் படையுட்கொடும்புலிபோற்பாயாநின்ற, நிறைகோடியவருளுலகாயிதனென்றொருகொடியோனெறியொன்றில்லான். (க)

மின்னகத்தினைநீங்கி மேதினியில்வந்ததுபோல் விளங்குமாதர் பொன்னகத்திளமுலையின்போகநுகராதவமேபொழுதுபோக்கியென்னகத்தவமுயல்வீ ரேழைகாளெனவலகை யிகழுமாற்ற முன்னகப்பின்னடந்துவாத நெடுஞ்சமர்க்களந்தைமுனிவோடுற்றான். (உ)

உற்றுவிவேகன்படையையொருங்குடன்பார்த்தப்படையினூடுபுக்குச், சிற்றறிவாமதயானைதார்க்கிகர் கோனெதிர்நடத்தித் தெளிவொன்றில்லார், சொற்றருநூற்சிலைவளைத்துச்சுடுதொழிஞண்கொளுவிமைபற்சொல்லாம்வெய்ய,வற்றமில்வார்கணைதெரிந்துதொடுத்துவிடுத்தடுத்திகலியடுபோர்செய்வான். (ங)

விஞ்சுபலகலைதெரிந்துவேதமுடன்வேதாங்கமெய்ம்மைநாடிச் செஞ்சவுணர்தார்க்கிகர் கோன்றிண்புயம் பூரித்துயர்ந்தசெவ்வி நோக்கி, நெஞ்சுபறையறையினுநேர்நின்றுசமர்விளைப்பனெனநெறியிலாத, வஞ்சவினைபுரியுமவன்வெஞ்சினவஞ்சினமினையவகுத்தல்செய்வான். (ச)

தண்பட்டநதிவிடுத்துநீர்வேட்கைகானலினூற்றணிப்பார்போலப், பண்பட்டமொழிமடவார்நலந்துறந்துமாய்ந்துமுத்திப்பயன்கொண்மாந்தர், விண்பட்டவுருமனையவிதண்டாவாதிகளினல் வெதும்பிநாளும், புண்பட்டசெவிகுளிரமோகனுங்கேட்டகமகிழப்புகல்வதானூன். (ரு)

## கலி விருத்தம்.

மூண்டமனமாதியிருமூன்றுபொறியாலுங்
காண்டகையகாட்சிபிரமாணமதுவின்றி
யீண்டுமநுமானமுபமானமுதல்யாவும்
வேண்டுகிலம்வேண்டுமவர்மெய்யுணர்விலாரே. (சு)

அவ்வளவைகொண்டினிதளந்தறிவதார்க்குஞ்
செவ்விதினுரைப்பினெறிசேர்ந்துவருபூத
மெவ்வியல்பதென்றிடிலியற்கடினசீதம்
வெவ்வியல்புடன்சலனம்வேறுபெறுமாறே. (எ)

தந்தபெயராமவைதலம்புனல்கனல்கால்
கந்தமிரதம்முருவுகாண்டகையவூறு
வந்தகுணநித்தமிவைவாய்ந்திடுபுணர்ப்பு
மிந்தவுலகத்தினியற்கையெனலாமால். (அ)

அந்தமிலுருக்கள்பலவாமுறுபுணர்ப்பின்
மைந்துறுகடாதிபலமண்ணில்வருமாபோற்
புந்திகுணம்வண்பொறிபுலன்களுமவற்றி
னுந்தியெழும்வாரியினுறுங்குமிழியொத்தே. (கூ)

உற்றதினோர்பூதமொழியப்புலனொடுங்கு
மற்றுளசராசரமுமன்னுமவையேபோற்
கற்றவகலந்துசெறிகாரியமுலந்தா
லற்றமிலவாயவையுமாதியிலடங்கும். (க௦)

இன்னவகைபேசுசபதத்தினையிகழ்ந்தே
பின்னவகைசெய்பகைஞர்பேரணிநடுங்க
வன்னவனுள்ளுகமெனுமப்படைதொகுத்து
மன்னுமடல்வாகைகொளவாளமர்விளைப்பான். (கக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

யானித்தகையானுரைசெய்தவிச்சூளுறவுக்கெதிராக
வூனைத்தருமோர்வினையான்மாவூட்டுமிறைமற்றுண்டென்றல்
கானிற்பயிலுமுயற்கோட்டிற்கால்வைத்தேறிவந்திமகன்
வானத்தலர்ந்தவரவிந்தவாசநுகர்ந்தவகையாமால். (கஉ)

செய்தகருமஞ்செய்தோரைச்சென்றேதொடருமெனிலிங்கே
வெய்தினிறந்துவிடிற்றொடரும்விதமென்றாலவினைகெடினு
நொய்தினொடுங்கிச்சூக்கமுறுநுடங்கித்தீபமடங்கியிடி
னெய்துமொளிமற்றெங்குண்டாமிதற்குத்தரநீயிசைப்பாயே. ()

மாண்டுபின்னர்வயலிட்டவையுந்தழையும்பலிப்பதுபோ
லீண்டுகன்மங்கெட்டெய்துமெனிலிட்டிடத்திலெய்துவதா
மூண்டபசியின்வந்தோரைமுறையானுண்ணப்பண்ணுஞ்சோ
றுண்டுவயிற்றினிடையற்றுலங்கப்பலன்கொள்வதற்குற்றாய். ()

மதியுமுருவுமொவ்வாதவகைகன்மத்தாலெனில்விரல்க
ளதிகங்குறைவுதத்தம்முள்ளாதலெந்தக்கருமத்தால்
விதியுண்டென்னினுரைபூதமிகுதிக்குறைவேயதுதானுங்
கதியுண்டென்னுவிம்மைநலங்கைவிட்டவமேகழிகின்றாய். (க௫)

எண்ணந்தருமின்பொடுதுன்புமெய்தல்கன்மத்தாலென்னிற்
றண்ணம்புனல்சந்தனமாதிசாரச்சாரவழல்சார
நண்ணுஞ்சருமாதிகடீர்நணுகிச்சுருண்டுகுழைவெய்தப்
பண்ணுங்கன்மமெவையவையும்பகரிற்பொருளின்பண்பாமால்.

உடலின்குணமற்றல்லாமலுண்டோரான்மாவேறென்னிற்
குடலின்புரையுட்புக்கதுவோகூறாய்பொறியோராறுலுந்
தொடர்கிற்பதுவன்றென்பாயேற்றுறைசேராமைமயிரினுக்கு
மடர்வெங்கானின்முயல்வெங்கோடதற்குமளவோதுதலாமே.

அருவமிறைமற்றுமாகிலாகாயம்போலறிவின்று
முருவமென்னிற்பூதத்தினுற்றபுணர்ப்பினென்றுகு
மிருவேறியல்புமுளதென்னிலிமயப்பொருப்பையெடுத்தேந்தித்
தெருவில்விசும்புசென்றதெனச்செப்புமுரைமற்றெப்பாமே. ()

அன்னம்பூதத்தேயாகுமதனுலுடலம்புத்திமனம்
பின்னம்பின்னமாய்த்தோன்றும்பேதாயிந்தப்பெற்றியெல்லா
முன்னஞ்சுருதிமொழிந்திடவுமூர்க்கராகியுலகத்தோ
ரின்னந்தெளியாதலைகின்றரென்னேயென்னேயிதுவம்மா.(கக)

ஷ வேறு.

நறும்புனல்வெள்ளத்துற்றுநாவற்றிவழுவிநாவி
லுறும்புனலுண்ணவெண்ணுமுணர்விலார்போலவானின்
வெறும்பலன்பெறுவான்வேண்டிமின்னனார்தம்மாலீண்டுப்
பெறும்பயனிழந்துமாயும்பேயர்க்கார்பேசுவாரே. (உ0)

வல்லைநீவாமியின்றேவலக்கைதாவென்னுயிர்க்கு
நல்லமெய்த்துணைவனென்னஞாலத்துச்சிலர்நீதென்னு
மெல்லியலார்தம்போகம்வேரிவெங்கொலைகளாதி
யெல்லையில்லனசெய்தின்பமிம்மையேநுகர்கின்றுயே. (உக)

பாகத்திற்கலந்துநாவிற்பதித்துந்தன்குறங்கில்வைத்து
மாகத்திலணைத்துமன்றேவரனயன்வலாரிமாயன்
போகத்திற்பெரியரானூர்பொருந்தியவாறுநீரு
மேகத்தின்மின்னனாரைவிரும்பியேகூடிவாழ்மின். (உஉ)

அமைக்கொத்ததோளினூர்தாளலத்தகச்சுவடுதாங்கி
யிமைக்கிற்செய்புலவிநீக்கியிளமுலைப்போகங்கொள்ளா
ருமிக்குத்திக்கைநொந்தோயுமுணர்விலார்புகல்பொய்வேடந்
தமைப்பற்றிச்சிலர்மெய்வாடித்தரணிமேற்றிரிவரந்தோ. (உங)

கனத்திறுமாந்துவிம்முங்கதிர்முலைத்தடத்தின்மூழ்கிப்
புனக்கொடிமாதர்செவ்வாய்ப்புத்தமுதுண்டுகூந்த
லினக்கடிமலர்பெய்காவினின்னிழல்வதியார்வாளா
வனக்கிழங்குண்டுசில்லோர்மறுமைவேட்டழிவர்மன்னே.(உச)

மீதுலாமிந்துகாந்தமேடைமேலமளிமீதிற்
காதலாற்கலந்துகற்றகரணங்கள்பலவுஞ்செய்து
மாதரார்போகங்கொள்ளார்மன்னுயிர்தமக்குத்தாமே
யேதிலராகியின்பமிழப்பர்புன்சமயத்தோரே. (உரு)

ஊடியமகளிர்தம்மையுணர்த்துவதுற்றகல்வி
நாடியங்கவரைமேனிநலிவதேயருந்தவம்போய்த்
தேடிமென்முலையிற்றேய்ந்துதிளைப்பதுசிவன்முத்தி
கூடியிம்மதமேற்கொண்டார்குவலயந்தன்னின்முத்தர். (உசு)

உண்டொருமுத்தியென்றேயுடலம்வாட்டுவதிங்கென்னை
கண்டவர்கேட்டோர்மற்றுக்கரியுண்டேற்காட்டுகிற்பீர்
மண்டலத்தரசனாணைவழிநின்றுநிதியமீட்டித்
தொண்டையங்கனிவாய்நல்லார்தோணலந்துய்த்திடீரே. (உஎ)

யாழினுமினியசொல்லுமேந்திளமுலையுஞ்செய்ய
மாழையைவகுத்தாலன்னவடிவமும்பவளவாயுஞ்
சூழியின்மணமுந்துய்த்துத்தோகையர்போகங்கொள்ளாக்
கோழையரவரேயல்லாற்குணபம்வேறுலகத்துண்டோ. (உஅ)

திங்களுஞ்செல்வனில்லாச்செறியிருட்கங்குற்போதும்
பங்கயம்பொதுளல்செல்லாப்பாய்புனற்றடமும்வாசக்
குங்குமஞ்செறிந்தசந்தக்குழம்பிடைக்குளித்தகொங்கை
மங்கையரின்பங்கொள்ளார்வாழ்வுநேராகுமன்றே. (உகூ)

சாதியேமுதலாயுள்ளதருமங்களனைத்துநாடி
யோதுமாலிங்கனுதியுள்ளகங்களிப்பச்செய்தே
காதலாலங்கைநெல்லிக்கனியெனவிகத்தேதுய்க்கு
மாதரார்போகங்கொள்ளார்மக்களுட்பதடியாவார். (ஙo)

கற்பதுகாமநன்னூல்கற்றபினதனுக்கேற்ப
நிற்பதுகயலைவென்றுநீடயின்மருட்டுங்கண்ணார்
பொற்பமைதோளிற்றுஞ்சும்பொருட்டொருப் பட்டுத்தம்மை
விற்பதுசெய்தென்றாலும்விரகநோய்தீர்ப்பதென்றான். (ஙக)

என்றினையனசொற்கூறியிகலுலகாயிதன்போர்
வென்றவன்போனின்றார்க்கும்வேலையில்விவேகவேந்தன்
றன்றுணைச்சரணம்போற்றித்தார்க்கிகனடந்துசீறிச்
சென்றவன்செருக்கிப்போதேசெகுப்பனென்றினையசொன்னான்

கலிநிலைத்துறை.

இந்திரன்றனக்கொருவழிபோகத்தினிகழ்ச்சி
வந்துதோன்றலுமவன்புரோகிதன்றனமடுப்பான்
றந்ததோருரைகொண்டுநீசமர்க்களத்தேதகி
யுந்துவாயென்னையென்றவன்மதச்செருக்குடைப்பான். ()

கண்டதேயுள்ளதென்றனையுனைப்பெற்றகாலைச்
சண்டனாருயிருண்ணனுமாண்டநின்றாயை
யுண்டெனாவினாறுதெரிந்ததுகாட்சியோவுயர்ந்தோர்
கொண்டதாமநுமானமோயாதெனக்கூறாய். (௩௪)

திருந்துநீணதியகிலொடுதேக்கெறிந்தெங்கு
நிரந்துநீர்பரந்தொழுகுதல்கண்டவர்நெருநல்
விரைந்துதாரைகார்வெள்ளிவெண்கோலெனவெற்பிற்
சொரிந்ததாமெனத்தெரிந்ததுகாட்சியோசொல்லாய் (௩௫)

காட்சிமுன்னதுங்காட்சியேற்கலப்புறும்பூத
பூட்சியுள்ளெழும்போதரும்பொறிபுணர்புலனு
மாட்சியின்னுடல்பூதத்தின்புணர்ப்பெனுமாறு
மாட்சியின்னநுமானத்தானீயுங்கண்டதுவே. (௩௬)

ஒழிவிலாதுயரந்தணருள்ளுவந்தோதும்
பழையவேதநூல்வசனமும்வாய்மையேபாரில்
வழுவில்சோதிடமருத்துநூன்முன்னமேவகுத்து
மொழியுமாறுபின்பவ்வகைபலித்திடுமுறையால். (௩௭)

பூதநித்தியமென்றனையுருவுடன்பொருந்தி
யாதலற்றிடலுறுதலாலவற்றையும்படைப்போ
ரோதல்வேண்டுமான்மண்கொடுகடாதிகளுளுற்று
நீதியாளரைக்கண்டனநீணிலத்தன்றே. (௩௮)

நீரில்வந்தெழுபுற்புதம்வாயுவானிகழுஞ்
சாருமங்கதுமன்னதாம்பூதமாச்சனியா
தோரின்வேறுணர்வாயெழாநீறடையுடன்காய்
சேரின்வேறெழுஞ்சிவப்பெனிற்றீர்வதின்றாமால். (௩௯)

அன்னவாறுவெற்றுடம்பினுமறிவுறல்வேண்டும்
பின்னமாகியபுலன்குணமுடலின்கட்பிறவா
சொன்னநீறடைகாய்பிறன்றொகுத்திடல்போல
முன்னம்வேண்டுமாற்பூதமுற்றிடற்குமோர்முதல்வன். ()

உண்டியாதிநான்கைம்பொறியுலூதைபோலூனிற்
பண்டிலாதவைவருமெனில்வானினுற்பவித்தல்
கண்டதாகுமோரியல்புபூதங்களின்கலப்பேல்
விண்டுபேசுபெண்ணுணலியோனிவேற்றுமைக்கே. (௪௧)

ஐந்துநான்கொருமூன்றிரண்டொன்றெனவறிவும்
வந்திடாபொறிவன்னபன்மையுமின்மையாகுஞ்
சிந்தியாவியல்வன்னபேதங்குணஞ்செறிந்து
முந்துபூதங்களவற்றினுன்முளைத்திடாவன்றே. (சஉ)

அன்னதன்மைகள்வினையினுலென்றறியறிவு
சொன்னபூதமற்றெனிற்புறத்தறிந்திடாதொகுதி
தன்னிலென்றிடிற்சவமறியுஞ்சதாகதியின்
றென்னின்ஞானநித்திரையினிலெழாவகையென்னே (சங)

அறிவுடற்குணமெனிற்பெரியதுஞ்சிறியதுமா
யுறுமுடற்கணவ்வகையறிவுதித்திடல்வேண்டுங்
குறியுடல்பெரிதாய்ச்சிறிதாய்வருங்கொள்கை
நெறியெவற்றினுலெனத்தனிவைகியேநீயும். (சச)

ஏற்றமும்புணர்பூதத்தின்குறைவுமென்றியம்பி
னேற்றமானவைகுறைந்திடாகுறைந்தவையெவையு
மேற்றமாயிடாவெவ்வகையிருக்குமென்றிசைப்பி
னேற்றமேற்றமேகுறைகுறையேபிறிதிலையால். (சரு)

இயல்புகாணெனிற்பெண்ணொடாணெனவிருவகையாஞ்
செயல்கொளாதவர்செய்தியால்வருவதென்றெரிக்கின்
முயல்வதாமுடல்பூதத்தால்வரலின்றுமுன்னை
மயலதாம்வினைகொண்டொருவன்றரவருமே. (சகூ)

உற்றபூதமேகடமெனக்காரியவுடலைப்
பெற்றதாமெனனுடன்படேமவையுடன்பிணங்கி
நிற்றல்காண்டலினெருப்பியல்பாய்நெடுநீத்தம்
பற்றிநின்றதுகண்டனையேலின்றுபகரோ. (சஎ)

வெய்யதீயொடுஞ்சங்கொடுஞ்சாரநீர்வினையென்
செய்ததென்றனைசேருநீரிருதிறஞ்சேர்ந்தாங்
கையசெய்கையாலின்பொடுதுன்பமுமணையும்
பொய்யுடற்கிலையவையுஞ்சேதனனுக்கேபுகலின். (சஅ)

இன்பமுற்றுநீவினையிலையியல்பெனவியம்பிற்
றுன்பமுற்றிடுமாறென்னைசொல்லுசொல்கிலையேன்
முன்புசெய்வினையவ்வினைதன்னையுமுதல்வ
னன்பினலறிந்தப்பயனமைக்குமீதனுதி. (சகூ)

அனுதியாமெனினமைப்பதேனென்றிடிற்கரும
மனுதியாருயிர்செயலவையறிந்துடல்செய்யா
வனுதிகாரியமாமுடலசேதனமனைய
வனுதியாதியிலமைத்திடல்வேண்டுமாலன்றே. (ருo)

நோக்கொணுக்கரணங்களுக்குயிர்நோக்கொணுதே
வாக்குமாத்திரங்கண்டகண்ணினைக்கடமதித்துத்
தூக்குமோவதுபோற்கரணங்கள்சூழ்ந்தறிதற்
காக்கமின்றுயிரவற்றினையறியுமாலன்றே. (ருக)

எரியுமொன்றினைப்பற்றியல்லதுநிற்பதிசையா
துரியசீவனுமவ்வகையுடல்பற்றியுணருந்
திரியினுற்றயிலங்குடித்தெழுதருந்தீபம்
புரியுமோரிருவினைகளுமுயிருண்டுபோதும். (ருஉ)

உணர்வுதானுடலத்துவேறுயுதித்தொடுங்கி
னுணர்வுதானுணராதெதன்முன்புளதோதி
னுணர்வையோநனவைக்கனவதனிடையுதரத்
துணர்வுதான்கொலோவிதுமயக்குணர்வெனுவுணரே. ()

மாண்டவவ்வறிவேவருமெனல்வழக்கன்றே
வீண்டுறங்குழியறிவின்றியெழிலெழுமிதுதேர்
பூண்டவிவ்வுடல்போகவேறுடல்வரல்புகலின்
மூண்டெழுங்கனவதனின்வேறுடல்வருமுறையே. (ருச)

வாயில்வாயுமற்றடங்கவுமடங்கிவந்தெழல்போ
லோயுநாளினும்வாயில்கண்மாய்ந்துபின்னுதிக்குந்
தேயுநீள்கலைசெனிக்குமென்னுர்மதிக்குரைத்தாங்
கேயுமாருயிர்க்கிறப்பொடுபிறப்பையுமிசைப்பார். (ருரு)

பூதகாரியம்பொலிந்துநின்றழிந்திடுமதனு
னுதன்வேறுளனென்றறிமண்ணின்கண்ணுனு
பேதமாங்கடமாதிகள்வருமெனப்பேசிற்
றீதிலாவொருகுலாலனுல்வருமெனத்தேறே. (ருசு)

தோலிரத்தமூனரம்பென்புமச்சைசுக்கிலமே
கோலிவைத்திடு * குடம்பையல்லாற்குழைதாவிப்
பாலிடத்தருமணியெனக்கறுத்தரிபரந்து
வேலடர்த்தகண்மாதரார்யார்கொலாம்விளம்பே. (௫௭)

கொங்கைவீக்கமுங்கொழுங்கயற்றடங்கணுமல்குற்
பங்கயப்பரப்புங்குமிழ்நாசியும்பகுத்திட்
டங்கணங்கணேகிடந்துழிக்கண்புதைத்தஞ்சிச்
சிங்கலுற்றவர்க்கென்கொலாஞ்செறிந்துழித்திகைப்பே.()

கோழைதுன்னியவாய்விளிம்பூறலைக்கோதி
லாழியின்னமுதெனநுகர்ந்தகடெனுமுவர்நீர்த்
தாழியின்புழைதன்னிலோரின்பமுண்டென்னு
வேழைநீமருண்டின்பவீடிழந்தனையன்றே. (௫௯)

அழுக்குவேர்வை§சீயரலைவெண்பீளையூறசுத்த
மொழுக்குநீண்மயிருகிர்செறியொன்பதுவாயிற்
புழுக்குழாம்பயில்புன்புலாற்குடிலைமற்றென்னே
யிழுக்கின்மாதரென்றிளமுலைப்போகமாந்துவதே. (௬0)

கண்ணுமோதியும்புந்தியுங்கறுத்துவாய்மொழியு
நண்ணும்புன்மயிர்ப்புருவமுங்கோடிநற்செயலு
முண்ணடுக்குறுமருங்குலுஞ்சுருங்கியுள்ளவாவும்
வண்ணவல்குலுமகன்றவர்க்கென்கொலாமாண்பே. (௬௧)

வெய்யவேனிலிற்சீதநீரிதமெனவிழைந்துஞ்
செய்யவாரழன்மாரியினன்றெனச்சேர்ந்து
மையநீபெறுஞ்சுகஞ்சுகமோவழிவின்றித்
துய்யதாகியசச்சிதானந்தமேசுகமால். (௬௨)

ஆயத்தக்கதுவேதத்தினந்தமேயாய்ந்தா
லோயத்தக்கதுவேட்கையின்பெருக்கமேயொருவர்க்
கேயத்தக்கதுபரம்பரன்கருணையேயென்றுந்
தோயத்தக்கதானந்தவாரிதியிதுதுணிவே. (௬௩)

என்றுமேலநுமானமாதியும்வினையிரண்டு
மொன்றுசீவனுமிறையுமுண்டென்றுமொண்டொடியார்
துன்றுபோகம்வீடன்றென்றுமவன்வலிதொலைத்து
நின்றதார்க்கிகன்மேற்பொரப்புத்தர்போர்நேர்ந்தார்.(௬௪

உலகாயிதன் வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௫0௫.

---

* குப்பை எனவும்பாடம்.
§ சீழ் எனவும்பாடம்.

## ௩உ - வது, புத்தர்வதைச்சருக்கம்.

——(◡)——

### கலிநிலைத்துறை.

தாவிலாதிகல்சவுத்திராந்திகன்யோகாசார
னேவின்மாத்திமிகன்னெனவிகற்பங்களுரைக்கு
மூவரோடுவைபாடிகனிணையரின்மோக
னேவலான்முதற்சவுத்திராந்திகன்கனன்றெழுந்தான். (க)

வெய்யகூற்றினையறிவிலான்வெகுண்டமர்விளைப்பக்
கையினால்விளித்தாலெனவென்னொடுங்கடும்போர்
செய்யவல்லையேல்வருகெனவிளித்தவன்சிறுநூல்
வையமேற்கொடுதார்க்கிகர்கோனெதிர்வந்தான். (உ)

இடக்கணுடவுமெருவைமேன்மண்டிலமிடவுந்
தடக்கையாற்றலாலவையுநோக்கிலன்வந்துசார்ந்து
விடத்துமாரழலினுங்கொடிதாய்ச்செவிவெதுப்பப்
படைத்துவெஞ்சினவஞ்சினமின்னனபகர்ந்தான். (௩)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முற்றுணர்ந்துபுவிமீதுகொலைமுதலாகியதீமைமுனிந்துசாந்த
முற்றிருந்துகருணையினாற்பரதுக்கதுக்கனையும்பரோடு, கற்றுண
ர்ந்தமுனிவரருங்கண்டு தொழப்பிடக நூல்கனிவான் முன்னஞ்
சொற்றிருந்தவுரைத் தருளுந்தோன்ற லேகடவுளருட்டோன்ற
லாவான். (௪)

பிரமாணமதுகாட்சி யநுமானமிரண்டவற்றாற் பேணிக்காண
வருஞானஞேயமவைபொருளவையுங்கணத்திறுமவ்வகைப்பதா
ர்த்த, முருவோதினருவீடுவழக்கெனநான்காயவையு மொன்றிர
ண்டா, யிருநான்குவகையாகுமிவையெமது பிடகநன்னூலியல்ப
தாமே. (௫)

கெட்டுவளர்ந்திடல்கெட்டுத்தேய்ந்திடல்கெட்டொத்துநிற்றல்
கெட்டுக்கெட்டுப், பட்டுவிடலெனக்கணத்திற்பங்கமுறுந்திறநா
ன்காய்ப்பகராநிற்ப,ரொட்டியுணர்ந்திடுஞானஞேயத்தின்றிறமா
கவுரைத்தநான்கு, மெட்டுவகையாகுமெனவுரைத்தபரிசிப்பரி
சென்றினிச்சொல்வேமால். (௬)

உருவினியல்பூதமுடனுபாதானமெனவிரண்டாமுருவமல்லா
வருவினியல்சித்தமொடுகன்மமெனவிரண்டாகுமற்றும்வீட்டின்
மருவுமியல்குற்றமொடுகந்தமெனவிரண்டாகும்வழக்கிரண்டாய்

ப், பொருவுமியலுள்ளதுடனில்லதுமென்றிரண்டாகப்புகல்வர் மாதோ. (எ)

பூதநிலம்புனல்கனல்காற்றெனநான்கா முபாதானம்புகலிற்கந்த மேதமறுஞ்சுவையுருவம்பரிசமெனநான்காகுமிந்தவெட்டு [ங் மோதுமிடத்துடன்கூடியுண்டாகுமொருபொருளினுருவஞ்சித்த காதுமுதற்பொறியோடக்காண்பதிருவினைகருமங்கருதினன்றே.

விரியுமிராகாதிகளைவிடுதல்குற்றவீடுகந்தவீடுநாடி, னுருவுமுத லோரைந்தும்விடுத லிருவகைவழக்குமோதுங்காலை, மருவுதொ கைதொடர்ச்சிமிகுத்துரையென வொன்றொருமூன்றுவகைத்தா யாருந், தெரிவுறுமாறவ்வாறுமிவ்வாறுமெனவகுத்துச்செப்பக் கேண்மோ. (௯)

கந்தமைந்தின்செறிவொருவனென்பனபன்மரச்செறிவுகா டென்றாற்போன், மைந்தவென்றறொகையுள்வழக்கயலொருவன வையைந்துமடுப்பானென்ற, லெந்தையியம்பியதொகையில்வழ க்காகுங்காரணகாரியத்தாற்றோன்றி, யந்தமடைந்திடுவனென்ற றொடர்ச்சியுண்மைவழக்கெனநூலறையுமன்றே. (௧0)

மாண்டவழியேயுதிப்பனென்னுமலொருவனென்றும்வைகு வானென், நீண்டவுரைப்பதுதொடர்ச்சியில்வழக்காமுதித்தவெ ல்லாமிறக்குமென்றல், வேண்டுமிகுத்துரையுள்வழக்காம்விழிக் குப்போனதுபோல்வேறுமென்றல், பூண்டமிகுத்துரையில்வழக் காகுமின்னுமவற்றினியல்புகலக்கேண்மோ. (௧௧)

ஓதியிடினுள்வழக்கில்வழக்குண்மைசார்ந்தவுண்மையுண்மை சார்ந்த, வேதமுறுமில்வழக்கில்லதுசார்ந்தவுண்மையின்மைசார் ந்தவின்மை,பேதமிவையாறுமுள்வழக்குளதையுளதென்றுபேச லாகு, மூதுலகினில்வழக்குச்சொலின் முயற்கோடில்லையென மொழிவதாமால். (௧௨)

அறிவினைச்சார்ந்தறிவுதிக்குமென்பதுண்மைசார்ந்தவுண்மை யறிவைச்சார்ந்தே, யறிவுபின்னருதியாதென்றுரைப்பதுண்மை சார்ந்தவின்மையறிவில்லாம, லறிவுபின்னருதிக்குமென்பதில்ல துசாருண்மையின்மையதுசாரின்மை, யறிவினைக்கொண்டறிந்தி டலுள்ளங்கைமயிர்க்கயிறென்பதாகுமென்றான். (௧௩)

இத்திறஞ்சூளுறவுதொகுத்தெடுத்திரைத்துக்கைத்தலங்கொ ண்டிருதோள்கொட்டிக், கத்துமடற்புலிப்போத்திற்சவுத்திராந்

திகன்முழங்கித்தணியானுகிப், பொத்துநெடுஞ்சமர்க்களத்திற்
பொருந்தலர்போரணியுடைத்துப்பொருவானென்ணி, மத்தம
திகொடுபிடகநூனெறிவன்படையினணிவகுத்தல்செய்தான். ()

இன்னவகைபகர்ந்தவிவைநான்கல்லாற்பொருளிலவாயிருக்
கவான்மா, மன்னியவிண்காலந்திக்கிறையுமுளவெனச்சிலர்தாம்
வகுத்தலென்னே, யுன்னியிடின்மதுவுண்டோவுன்மத்தம்பிடித்
தேயோவுணர்கிலோமா, லன்னவையுமின்னவையாலகற்றுவன்
யான்காண்டிரெனதாண்மையென்முன். (கரு)

அறிவுயிரிற்குளதென்னிற்பொறிபுலனூலாலொன்றையறித
ல்வேண்டா, *வறிதஞெட்டுத்தீண்டியஃணந்தறியுமெனிலிருளினி
றமறியாதாகு, மறிவதிலேபொறியிலேயே லெனினுயிருக்கறிவிலே
யைம்பொறியும்பற்றி, யறியுமறிவுள தென்னிலந்தினுமோரறி
வாகவறிதல்வேண்டும். (கசு)

சார்ந்தறியுமொன்றையறிவெனினீயுமொருபுத்தன்ருனுமென்ப
தோர்ந்தறிதியதுகிடக்கஞானஞேயங்களன்றியுணருமான்மாத்[ற்
தேர்ந்தறியினறிவோமற்றறிவன்றேவன்ருகிற்செடமாமண்போ
கூர்ந்தறிவேற்பருப்படிசிற்கதுவேசிற்றுண்டியெனக்கூறலாமே.

உயிரதனையருவென்னினுருவதனைத்தாங்கியருவுற்றுநில்லா,து
யிரதனையுருவென்னினுடலினுக்குளுடலடங்கியொடுங்கமாட்டா
துயிரதனை யணுவென்னி னுடலிடத்துப் பலதுளையுண் டோடிப்
போமா, லுயிரதனிநித்தமென்னினுதயாத்த மனமறிவுக்குளவா
காவே. (கஅ)

எங்குநிற்குமென்னினுடறெறும்பேதப்படுகையினலெங்கு
மின்ருந், தங்குமுற்றவுடறேறுநிறைந்தென்னினுடலமதுசாயச்
சாயு, மங்கமுற்றேரிடத்துறையுமென்னிலடிமுடிகாறுமறிவின்
ருமாற், பங்கமுற்றுநிற்பதன்றியிப்படையைப்படைகொடுநீபடு
ப்பையன்றே. (ககூ)

தொழிற்குவராமையின்வானென்றென்றிலேயெப்பொருள்க
ளேயுஞ்சுமக்குமென்னில், விழிக்குவராநிரவயவமேற்கொண்டுசு
மப்பதெங்ஙன்வினவிஞேனைக்,கொழிப்பதிலாக்காரணமென்று
ரைத்தனேயேலதுபகரினுருவின்கூட்டங்,கழிப்பதிலாதெங்குநின்
றதெனிலெங்குமென்பதொன்றுகண்டதின்றே. (௨0)

* அறிவதொட்டி எனவும் பாடம்.

காலமென்பதென்னையெனிற்படைத்தளித்துப்போக்குவது காலொன்றுயேற், சிலமென்பதொருபொருளைச்சேர்ந்துளதால தன்பின்னர்ச்செறிவதின்றுந், தூலமென்பதுனதுமதிபொருளி யல்பாலவ்வினைகடுன்னுமிந்த, ஞாலமென்பதுன்மதிமற்றில்வழக்கேகாலமெனநவிற்றுங்காலே. (உக)

எனக்கொருவன்மேற்கிருந்தாலென்பாலைக்கிழக்கென்னவியம் பல்செய்வா, னெனக்கொருவன்கிழக்கிருந்தாலென்பாலைமேற் கென்னவியம்பாநிற்ப, னெனக்கொருவன்கூறியவாறியம்புதல் கூடாதிருவேறியற்கையான்மற், றெனக்கொருவனெதிராகத்திக்குளதென்றுரைப்பதெவ்வாறில்வழக்கே. (உஉ)

உலகதனையிறைபடைத்தானென்றனையேனுள்ளதையுண்டாக்கவேண்டா, வுலகதனையில்லதெனினுண்டாக்கக்கூடாதானுபாதானந்தா,னுலகதனுக்குளதிலதுகாரியமாமுருவனையவுருவமாக வுலகதனைப்படைத்தனனென்றனு முளதிலததற்குமுண்டாமன்றே. (உங)

உள்ளதனைக்கடம்போலப்படைத்தனனேலெவ்விடைநின்று ஞற்றல்செய்தான், வள்ளலவனுலகினுக்குமேலாகிநின்றுலகை வகுத்தானென்னில், விள்ளுமிடத்துலகுமுன்னேயுண்டானதா மெங்குமேவிநின்று, தள்ளரியவுலகதனைத்தந்தனனேலெங்குமுன்புதந்ததாமே. (உச)

இல்லதனைக்கருணையினாற்படைத்தனனேற்பாம்புபுலியாளியாதி,கொல்லுமவைபடைத்திடுதல்கூடாதுதன்வலியாற்குறித்த வெல்லாம், வல்லவகைபடைப்பனெனிற்பித்தனேபடைத்ததனால்வரும்பேறேதிற், புல்லும்விளையாட்டென்னிற்சிறுகுழவியிறைவனெனப்புகல்வரன்றே. (உரு)

கருமத்தாற்படைத்தனனேற்கருமமியற்றுநரைமுன்புகாணல் வேண்டு, மொருமைத்தாயறியுமிடத்துலகமெல்லாமனுதியதே யுண்மையாகும், பெருமைத்தாமுருவினனேலவ்வுருமுன்படைத்தானைப்பெறுதல்வேண்டு, மருமைத்தாமவ்வுருவுமிச்சையினாலெனிலுலகுமதனாலுண்டாம். (உகூ)

இச்சையிறைக்குலகினுக்குக்கருமமென்னிலுருவங்களெவை க்குங்கன்ம,நிச்சயமாமருவாமேல்வானமெனப்பவக்கடலினீக்க மாட்டான்,வைச்சநிழல்போன்றுளனே லறிவிறைவற்கின்றறிவு

வந்தோர்க்காகு, மெச்சுமறிவுளனென்னிலுருவேண்டுமின்றாகின்
மேவானன்றே. (உ௭)

எம்முடையவேதங்களனாதியாயிறைவனுண்டென்றியம்புமெ
ன்னின், லும்முடையவேதங்களுரைப்பவரையில்லாமலுரைத்தன
ன்றான், செம்மைபெறவிறைவனை நூலாலறிந்தோ நூலவனாற்றெ
ரிந்தோமென்னின், னம்மவிதுபுதுமையிவ்வாறுரைப்பதற்குநீயல்
லாலார்வல்லாரே. (உ௮)

மரமாதியுற்பீசமுயிரின்றிப்பூதவுருவாய்ந்துமல்கிக், குரமாதி
யெனத்தோன்றியண்டசமாதிக்குதவிகூர்ந்துமாயு, மொருகாலு
ங்கொலையாகா தூன்வேண்டிற்கொன்றதுகொண் டுண்ணலாகுந்
தரைமீதுமாண்டதெல்லா மண்ணினுக்குரிகரென்பர்தக்கோரன்
றே. (உ௯)

சீதநீர்வைத்தவருக்கறமதனையுண்டவர்க்குச்செறியாதவ்வா
றேதினூனுண்டவர்க்குப்பாவமின்றுகொன்றவருக்குறுவதாகு
மாதலாலூனருந்தவாசையுண்டேற்செத்ததுண்ணலாகுமிந்த
நீதியார்மறுத்துரைப்பாருனுக்கூனூட்டாதார்நினைவிலாரே.(௩௦

உருவம்வேதனைகுறிப்புப்பாவனைவிஞ்ஞானமெனவுரைத்த
வைந்து,மருவியேசந்தானத்தாற்கெடுதல்பந்ததுக்கமற்றவ்வைந்
தும், பொருவிலாவகைமுற்றக்கெடுதன்முத்தியின்பமுன்புகன்
றவைந்தின்,விரிவெலாந்தொகுத்துரைத்தமெய்ந்நூலிற்றெரித்தி
ரிவைமெய்ம்மையென்றான். (௩௧)

இன்னன * சாதனங்கள்பலதொடுத்துமடுத்தடுத்திகலியிரு
தோள்கொட்டித்,துன்னியபோர்த்தொழிற்கடுத்தசவுத்திராந்தி
கனெழுந்ததோற்றநோக்கி,யன்னவனையிக்களத்திலடுவெனெனத்
தார்க்கிகர்கோனழன்று சீறி,மன்னியபல் வகையுத்திவன்படை
கொண்டக்களத்தில்வாய்விட்டார்த்தான். (௩௨)

ஷை வேறு.

முழுதையுங்கண்டான்புத்தனென்றனைமுடிவின்றாமான்
முழுதையுங்காணமாட்டானென்றொன்றாய்முழுதுங்காணின்
முழுதையுமுடிவிலாதவென்றிடேன்முழுஞானத்தான்
முழுதையுங்காணின்ஞானமுடியுமோர்கணத்தினன்றே. (௩௩)

வீடுகண்டறங்கள்சொன்னனெனின்முற்றும்விளிந்தோன்மீண்டு
பாடுதல்சமனுந்தேனெய்பருகியோன்மாய்ந்துவந்து

---

* சாதகங்கள் எனவும் பாடம்.

நாடுமினிதுதீதாகுமென்பதாநலிவுபின்பே
லாடுநீரளவைகாணுனக்கரைக்கேற்றல்போலும். (௩௪)

பரதுக்கதுக்கனுகிற்பதிதனையிழந்தமாதர்
விரகத்தீத்தனக்குங்காட்டில்வேட்டமேற்கொண்டுளோர்க்குங்
கரவிற்கைப்பொருள்கொண்டேகுங்கள்வர்க்குங்கசிந்துசோர்த
றரையிற்றக்கதுமற்றன்றேதருமமீதழகிதாமால். (௩௫)

அங்கொருபொருளைத்தேடியதற்குரைதேடுமுன்ன
மங்குமுன்னறிவுநூலென்வழிவழிதோன்றுமாகி
லெங்குளதாகும்வேறுயிசைத்ததேயிசைப்பதின்றிப்
பங்கமுற்றெழும்வேறென்னிற்பாலருன்மத்தர்சொல்லே. (௩௬)

முதனடுவிறுதிதம்மின்முரணுவதின்றிப்பாரோர்க்
கிதமுறப்புகன்றநூலேயாவரும்பயிலுநூலாம்
புதன்மகன்போலப்பேசும்புத்தகேள்பொன்றிநாளு
விதவிதமாகுமுன்னூல்வீசுமுந்நூலாமன்றே. (௩௭)

முந்தையேயறங்களாற்றிமுற்றுணர்ந்தருளினுலே
யெந்தைநூலுரைத்தான்முத்தியாவருமெய்தவென்று
யுந்தைபேரறங்கள்செய்யவுரைத்தநூல்யாவன்சொற்ற
தந்தநூலவனைப்போல்வானென்னிலனவத்தையாமே. (௩௮)

ஆதலாலுனதுபாழியமர்ந்திடும்புத்தனுரென்
றேதுவாயிந்நூல்சொன்னேனுறைபவனென்னிலன்னே
னுதனுயிருந்தபுத்தனயந்ததெவ்விடமுனக்குப்
போதகனடைவுமின்றுபுகன்றநூலடைவுமின்றே. (௩௯)

உன்னிறைபொன்றக்கெட்டேயொழிந்தனனுகிலாரை
யென்னிடர்களைதியென்னுவிறைஞ்சுதியிறந்தோர்க்கீண்டுப்
பின்னவர்செய்தகன்மம்பேறுசெய்தவர்க்கீந்தாற்போ
னன்னலந்தருமாலென்றுநவில்வையேனவிலக்கேண்மோ. (௪0)

ஆருயிர்நித்தமாகுமாதலாற்பலிக்குங்கன்ம
நேர்தருபலத்தைநல்குநித்தனுமொருவனுண்டாற்
சீர்தருந்தீபம்பொன்றத்திரியுடனெய்யுங்கூட்டு
வோர்செயலுனதுசெய்கையுன்னறிவழகிதாமே. (௪௧)

பனுவல்கொண்டநுமானத்தாற்பகர்ந்தவன்றனைத்தேர்ந்தாற்
போற், பனுவல்கொண்டுரைத்தவெல்லாப்பதார்த்தமுமநுமான

த்தாற், பனுவல்கொண்டறிவதென்னிற்பரலோகபாதாளங்கள்
பனுவலொன்றுரைத்த*துண்டேற்பகருதிபகர்ந்ததின்றே.(சஉ)

பொருளெல்லாமனித்தமென்ருய்புகன்றதில்லதற்கோவன்றி
யுரைசெயுள்ளதற்கோவேருயுளதிலதானதற்கோ
தெருளினில்லதனுக்கின்மைசெப்புவதென்னைபின்னை
மருளினுள்ளதற்கென்ருயேன்மற்றதுமாய்ந்திடாதே. (சங)

உளதிலதானதற்கேனுளதிலதாகாதில்ல
துளதெனவுதிக்கமாட்டாதுறுவதிங்கெவற்றுக்கென்னி
னுளதிலதன்றித்தோன்றுமொருபொருளின்றுமாய்வ
துளதுமற்றிதனைநீயுமுணர்வினுணர்ந்துநோக்கே. (சச)

உடல்பூதமென்னிலொன்ருவொன்றொடொன்றிகலுமாற்ரு
னுடனுறுசுக்கிலத்தோடுதிரமேற்கல்லிற்றேரை
யுடலொடுவருமாறென்னேயுரைபிருவினைகாணென்னி
னுடல்வேறுவேருய்த்தோன்றும்பாதானமவையேபோல.(சரு)

அன்னமேனுண்ணவுண்ணவதிகமாய்வளருங்காய
முன்னுவாயுணர்வாமென்னினுணர்வருவுருவமாகித்
துன்னசேதனமாகாதாற்ரேன்றுமில்லதுமற்றென்னிற்
பன்னுவாய்ககனத்தூடுபங்கயமலருமென்றே. (சசு)

உருப்பூதவுபாதானங்களுறுஞ்சுத்தாட்டகமேற்காற்கு
நெருப்பொடுபுனல்பார்மன்னிநிலைபெறுமிரதங்கந்தம்
வரப்போவதில்லைதீக்குவளிநீர்மண்சுவைநாற்றந்தான்
றரப்போமேநீர்க்குவாயுத்தழல்பார்வாசனையுமின்றே. (சஎ)

புந்திசெய்பாரினுக்குப்புனல்கனல்வளியுமில்லை
யிந்தியவிடயமாகியியனுறுமாபூதங்கள்
வந்திடுமியல்புந்தோராய்வன்சொற்சேர்தேரநீயோ
ரந்தகன்கொல்லோசொல்லாயறிவின்கேடுனதாமன்றே. (சஅ)

அறிவழிந்தறிவையாக்கிலழிந்ததுண்டாக்காதான
வறிவினப்பொருள்கன்மங்களணைந்திடாவாக்கிப்போமே
லறிவிரண்டொருகாலத்தினவ்வகைநிற்கமாட்டா
தறிவறக்கெடாதேனித்தமனித்தமுமறிவிற்காமே. (சகூ)

அவ்வகையதனலென்றுமனித்தமென்பதுதானின்ருஞ் [ல்
செவ்விதிற்கெட்டுப்பின்னர்ச்செனிப்பிக்குமெருப்போலென்னி

---

* உண்டோ எனவும் பாடம்.

வெவ்விதிற்கெடாதுசத்திமேவுமால்வினைவும்வேறுங்
கவ்வையிற்கலங்கினுயேற்கலக்கந்தீர்ந்ததன்பின்சொல்லே. (ரு0)

அழிவுறுச்சந்தானத்தாலறிவுண்டாமெனிற்சந்தான
மழிவுறுநித்தமாகுமாற்றுநீர்போன்றழிந்தா
மழிவுறுதறிவொழுக்கேலாற்றிடும்பொருள்போமாபோ
லழிவுறுவுருவமாதியவ்வறிவுடன்போமன்றே. (ருக)

நின்றறிவுடனெய்தாவாநீத்தமுன்னெழுகிமாயா
தொன்றியேபெருகியோடுமுணர்வுமப்படிநிறைந்தே
சென்றிடல்வேண்டுந்தேராத்தேரநீதேர்ந்துபார்த்து
மன்றமற்றிதனுக்குண்டேன்மறுகணைவழங்குவாயே. (ருஉ)

உருவாதியைந்தின்கூட்டமொருவன்வேறில்லையென்னி
னுருவாதியுணர்ந்தோன்யாவனுணரும்விஞ்ஞானமென்னி
னுருவாதியுணர்விஞ்ஞானமுணர்பவனியாவன்றீப
முருவாதியுடனேதன்னையுணர்த்துமற்றதனையேபோல். (ருங)

உணர்வுணர்வினையுமற்றையுருவாதியவையுங்காட்டி
யணைதருமெனிற்றீபத்தோடதுகாட்டுமவையுங்காணுந்
தணவறுமுலோசனம்போற்றரும்பொருளுணர்வுகாணு
மிணையறுமொருவனுண்டாலேலழைநீயிதனைத்தேறே. (ருச)

உடல்பொறிமனநானென்றேயோதுவாயுறக்கந்தன்னி
னுடலுணராதுவாயினுணர்ந்திடாவொன்றையொன்று
முடலுறுவாயுவோராவொருகணத்தழியுமாற்று
னுடலமுக்காலச்செய்தியுணருமோமனமுற்றன்றே. (ருரு)

ஆதலாலறிவாய்க்காயமாதிமூன்றையுமறிந்து
பேதநானிவற்றுக்கென்னும்பெற்றியுமறிந்துள்ளத்தா
லேதமில்பொருளைநாடியிந்தியத்திசைத்துப்பின்ன
ரோதுகாயத்தாற்செய்தியுளுற்றுவதான்மாவாமே. (ருசு)

இறந்திடுமறிவேபின்னும்யானறிந்தேனென்றுன்னி
லறிந்ததவ்வறிவாமென்றாலன்றுரைத்ததுதானின்று
முறும்பரிசுரைத்ததென்றாலுரைத்ததுவாயோவேறுய்ப்
பெறுந்தகையுளனலந்தப்பெற்றிமற்றதுவேபோல. (ருஎ)

மனம்பொறியெல்லாங்கொண்டுமற்றுநானறிந்தேனென்னுங்
கனம்பெறுகின்றதான்மாக்காண்டிமுப்பொறியினுலு

முனம்பெறக்கருதிக்கூறிமுடித்திடுந்தொழில்களாற்றி
யினம்பெறுமுணர்வினுக்குமிசைவிடமாமற்றன்றே. (ருஅ)

விருப்பொடுவெறுப்புமற்றைவினையின்பதுன்பஞானம்
பரிப்பதான்மாவின்பண்புபண்டொருகனியையுண்டோன்
றிருப்பிவேறென்றுகண்டுதின்றதற்கினமீதென்று
வொருப்படப்பின்னுமுண்ணவுவப்பதவ்விருப்பமாமால். (ருகூ)

இன்னனபிறவுமாகுமிவற்றினைமுன்னும்பின்னு
முன்னுதலுறுதலாலேயொருவனிச்சயிப்போனுண்டாற்
பின்னநீயிதனுக்கென்னபேசுவைபெரியோரெல்லாம்
பன்னியவாறுமீதுன்படிற்றுரைபகர்ச்சியன்றே. (சூo)

வானியல்புழையாயாவும்வழங்கற்குவழியாய்மற்றுத்
தானிருள்வெளியுமன்றூற்சாற்றுமவ்விரண்டுஞ்சார
வூனமிலிடமாய்ச்சத்தமுறுங்குணமாய்க்காற்றூதி
யானவைதோன்றிமாயவடுத்தலால்விடுத்தலின்றே. (சூக)

காலமாண்டயனமற்றைக்காண்டகுபருவமாதி
சீலமாய்மூன்றாய்நன்மைதீமைசெய்திளமைமூப்பு
மேலுமாறியற்றலாலேயெய்துமாலென்றுகோடி
நூலைநூலங்கோதிநொடித்திடும்பவுத்தநீயே. (சூஉ)

கிழக்கொடுதெற்குமேற்குக்கிளர்ந்திடுவடக்குந்தானாய்
வழக்கினிற்றிரியாதாகிவண்பயன்கொடுக்குமாற்றா
விழப்பதெவ்வாறுதிக்குமீண்டுளதென்றுகோடி
மழைக்குரனுணநாளும்வாய்த்திமிலடிக்கவல்லாய். (சூங)

காரியமாகிவையங்காண்டலாற்கடாதியாக்குஞ்
சீரியன்போலவாக்கச்செகத்திற்குமொருவன்வேண்டு
நேரியதருமமாதிநீதியெல்லார்க்குமோதிக்
கூரியவறிவுசெய்திகொடுக்குநூல்கூறல்வேண்டும். (சூச)

வழிவழியறிஞரோதிவருதலாலந்நூன்முன்னே
மொழிபவன்றானும்யார்க்குமுன்னவனாகவேண்டு
மழிவறுகருமசாட்சியாகவுமொருவன்வேண்டு
மிழுதைகேளாதலாலேயீசனுமுளனுமன்றே. (சூரு)

மரமுயிரில்லதென்றாய்வாடலாற்றழைக்குமாற்றாற்
றிரமுயிருள்ளதேயாஞ்சிதநீர்பெறாதும்பெற்றும்

விரவுமாறவ்வாறென்னின்மெலிவொடுவீக்கமுணு
னுரைசெயல்சீவனுக்கேயுருததற்குலகிலின்றே. (சுசு)

ஒருமரக்கொம்புவாங்கியூன்றினலதுபோலோங்கி
வருமுயிர்பலவோவென்னின்மரக்கருவித்துக்கொம்பு
திருகுகண்கொடிகிழங்குசெறியும்வேரவற்றுட்சீவன்
புரிவொடுகலந்துகொள்ளும்புத்தநீபுந்திசெய்யே. (சுஎ)

தின்றிடிற்குற்றமில்லைசெகுத்ததையென்னும்புத்தா
கொன்றதுதின்பாயென்றுகுறித்தன்றேதின்னுதாருக்
கொன்றையுங்கொன்றாட்டாராலுன்பொருட்டவர்க்குப்பாவ
மன்றவந்துறுமூனுண்ணன்மறுத்துநீவெறுத்திடாயே. (சுஅ)

## கலி விருத்தம்.

ஐங்கந்தமுமுறையாற்கெடலறக்கெட்டிடல்பந்தந்
தங்குந்தனிவீடென்றவன்சபதஞ்சொலுநாவை
யிங்கைந்துமிறந்தாற்கெதியெவற்கென்றிடும்வாளாற்
பங்கம்படவரிந்தானுயர்பழமாமறைதெரிந்தான். (சுகூ)

நாவற்றிடப்பட்டுங்கதிநான்சொன்னவையைந்தின்
மேவுற்றவிஞ்ஞானத்தினுக்கெனப்புத்தன்விளம்பத்
தாவித்தநின்விஞ்ஞானமிருதேலதுதன்னே
டோய்வுற்றிடுபிறவும்முளவெனத்தார்க்கிகனுரைத்தான். (எ0)

உயிர்வானெடுகாலந்திசையுயரீசனுமுளவென்
றியல்வாதினின்றடற்புத்தரின்முன்னேன்றனையிகல்வென்
றயலோரினிவம்மின்னெனுந்தார்க்கீகன்முன்னடுத்தே
வெயிலோனெதிர்பனிசென்றெனப்பிறர்மூவரும்வெகுண்டார்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருக்கொடுமிணையவாறுசவுத்திராந்திகணைவென்று
செருச்செய்வார்வருதிரென்னுச்செப்புதார்க்கிகர்கோன்முன்னு
வுருக்கிளர்மூவருக்குளுருமெனயோகாசாரன் [ன்.
பொருக்கெனவிதண்டாவாதப்போர்த்தொழிறொடங்கியார்த்தா

போர்த்தொழிறொடங்கியார்த்துப்போதமேபொருளாய்த்தோ
பார்த்திடிற்போதமாகிப்படுபொருளெழலாற்போதகம் [ன்றும்
பேர்த்துவாதனையாற்கூடிப்பிணங்கலால்வடிவின்றுமா
லோர்த்திடிற்கனவுபோலுமுலகறிவுளதென்றேற்றுன். (எங)

ஏற்றவன்றன்னோடேற்றங்கியம்பியபோதமன்றி
வேற்றுவாதனையுஞ்சொன்னாய்வேறுவேறிரண்டுண்டென்னாய்
சாற்றுவாதனையும்போதந்தானெனச்சாற்றுவாயேன்
மாற்றுவனதனையென்னாமற்றொருவினையங்கொண்டான். (எச)

வாதனைவிடயத்தோடுமணந்தபினெழுங்கருத்தா
மோதியகனவுகண்டபொருளின்மேலுறுங்கருத்தா
மாதலாலுலகம்வேறேயறிவொடுகனவுமன்றாற்
பேதைநீயென்கொனின்றுபிதற்றுவைபோதியென்றான். (எரு)

பின்னையுமவனைநோக்கிப்பேருலகறிவேயாகி
லன்னியமன்றுமாகவகங்கடமென்னவேண்டு
மென்னநீயுலகந்தன்னையிதம்பிரவஞ்சமென்ப
துன்னுதிபளிங்கேபோலுமுலகமுமுணர்வுமென்றான். (எசு)

தாக்குதற்கமைந்தயோகாசாரன்மேற்சாற்றிப்போந்த
போக்கருமினையசெஞ்சொற்பொடிப்பரும்வயிரக்கல்லை
நாக்கவண்டூக்கிநாக்கநடுங்கினனடுங்கலோடும்
பூக்கமழ்வாகைவேய்ந்தபுயமலைமலிந்ததன்றே. (எஎ)

தடைபிறிதின்றியோகாசாரனைச்சமரின்வென்று
நெடுமொழிபலவுஞ்சொல்லிநிற்குந்தார்க்கிகன்மேலோங்கும்
விடையெனநடந்துபோந்துவெகுண்டுமாத்திமிகனுங்கோர்
புடையினின்றணுகியேற்றுப்போர்த்தொழில்புரிவதானான். (எஅ)

அங்கமேபொருளாய்த்தோன்றுமங்கவையழிந்தாற்பின்னை
யிங்குவேறில்லையாமாலிதுபொருளாகுமென்னத்
தங்குமாறில்லையாகத்தகும்பொருளறிவுமின்றாய்
மங்குமாலெனுஞ்சொல்வைவேன்மார்புறத்தூண்டினானே. (எகூ)

படங்கடமவையிரண்டின்பாங்குறுமவயவங்க
ளிடம்படவொன்றினொன்றங்கெய்துருவண்ணங்காத்துத்
திடம்படநிற்பதாகுமவயவிசேர்ந்திரண்டு
முடன்படப்பொருளுமுண்டாமுண்டாகவுணர்வுமுண்டே. (அ0)

பொறிமனமொழியுண்டாயும்பொருள்புணராமையாலே
யறிவுவந்துதிப்பதன்றுமதுவரவறிவுண்டாகிச்
செறிதருஞ்செறியவுண்டாந்திகழ்பொருள்பொருளுண்டாக
நெறிவருமறிவுமெங்ஙனீயெதிர்நிற்றியன்றே. (அக)

இத்திறம்பகரும்வன்சொலிலங்கொளிவாளால்வீசிப்
புத்தன்மார்பெறிந்தவைவேற்போர்ப்படைநுனிந்துவீழ்த்திக்
கொத்துலாம்வாகைசூடிக்கோட்புலியெனநின்றான்மேற்
பைத்தபாம்பென்னவேவைபாடிகன்சீறிவந்தான். (அஉ)

வந்துவைபாடிகன்றான்மஞ்சளுநீறுங்கூடச்
சிந்துரந்தோன்றுமாபோற்செகம்பொருளறிவுகூட
வுந்துமாதோன்றுமிவ்வாறுணர்ந்தவருறுவர்வீடென்
றந்தமிலாதபுன்சொலாசுகம்வீசியார்த்தான். (அங)

ஆசுகமதனையயனறிவகம்புறம்புளேயம்
பேசுமவ்விரண்டுங்கூடிப்பிறங்குதலின்றம்பின்னு
நீசொலுமறிவரூபளேயமுற்றுருவங்கூடா
சிசியென்னினைந்தாயென்றச்சிறுசொலாற்சின்னஞ்செய்தான்.()

பொங்குமாபோதந்தானேபொருளாய்த்தோன்றிடுமென்றானு
மங்கமேபொருளாய்த்தோன்றுமென்றானுமறிவுமற்றை
மங்குறுப்பொருளுங்கூடவருஞ்சகமென்றானும்போர்
தங்குறுதகற்றுந்தார்க்கிகனுக்கெதிர்சமணரேற்றார். (அரு)

புத்தர்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கரு௯௦.

## ௩௩ - வது, சமணர்வதைச் சருக்கம்.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நறைகெழுமசோகுபேணிமென்பீலிநயந்துபாயுடுத்துடைவிடுத்துக், கறைகெழுமுடைநாறுடலராய் நின்றாண்கையிலுண்டில்லறந்துறந்து, மறைநெறிதவறுஞ்சமணரினிகண்டவாதியாசீவகரென்னுந், திறலினரிருவரவரின்முன்புகன்றோன்சென்றுதார்க்கிகன்முன்னெதிர்ந்தான். (க)

எதிர்ந்துதார்க்கிகனுக்கெதிர்முகமாகியெலிப்பகைவாளராமுன்னின்,றதிர்ந்ததுபோலச்சிலசிலபிதற்றியாதியோடந்தம்வேறுகிப், பிதிர்ந்ததோர்பசுநாற்பேரணிவகுத்துப்பெருநிலம்பரவுநால்வேத,முதிர்ந்தநூலரணமிடிப்பனென்றன்றேன்மொப்பமரிவ்வணமுயன்றான். (உ)

கடையிலாஞானமுதலவெண்குணமுங்கலைமதிசீதமுற்றதுபோ
லுடையனாய் * ஞானவாணியமாதியோரிருநான்குகுற்றமுந்தீர்ந்
தடையுநானாவற்புதங் களும்பொருந்தியாய்மலரசோகின்கீழொ
ருமுக், குடையினீழலில்வானமரரேத்தெடுப்பக்குலவுமவ்வருக
னெங்கோவே. (௩)

பொறிவழிசெல்லுந்தொடக்கறுத்தொருமுப்பொழுதினுநிக
ழ்வதோர்கணத்தி, லறிவதுபுரிவோன்வழிபடுமவர்க்குமல்லவை
செய்குநர்தமக்கு, முறுவதுசமமேயாகியமனத்தோனென்பதிற்
றிரட்டியாயுள்ள, திறலுறுகுற்றமனைத்தையுந்தீர்ந்தசெல்வனெ
த்தேவுக்குந்தேவே. (௪)

பசித்தருகித்தல்பயஞ்செற்றமுவகைபழிக்குமால்சிந்தனைநரை
நோய், நசித்தல்வேர்விளைப்புமதமியாசித்தனயந்ததிசயித்தலுண்
பிறத்தன், முசிப்பிலாதுறங்கலினையமூவாறுமுனிந்துபொன்னெ
யில்வட்டமதன்கண், வசித்தகோனிகலன்வினவலுமொருசொன்
மற்றவன்மனங்கொளவகுத்தான். (௫)

அனையராஞ்சகலாத்தரையிகலாத்தரடுத்தொருசொற்கதம்ப
கவ, னெனவினவுதலுங் கடிப்பிடப்படகமிசைத்தெனவிராகம
தின்றிப், பனவராலங்குப்பிறந்ததாலொருசொற்பஞ்சாத்திமய
மெனவதனால், வினையிலான்சரணநான்குடனதிவேதமும்விரித்து
ரைத்தனனால். (௬)

ஆண்டவனேது நூல்களிற்பதார்த்தமையிரண்டுளவவையனாதி
காண்டகுகாலஞ்சீவன்றன்மாத்திகாயமோடதன்மாத்திகாயம்
வேண்டுவதானபுண்ணியம்பாவம்விசும்புபுற்கலம்பந்தம்வீடென்
றீண்டுதலுறுமாலின்னவைபடைப்பதின்றியேபியலுமற்றன்றே.

நின்றிடல் § பேர்தல்போதலென்றினையநிகழ்ச்சியன்வயவெதி
ரேக, மொன்றுதல்புரியுமவை யொருகணத்தினுற்றொழிவதுஞ்
செயுங்கால, மென்றறிசீவனுறவுதன்காயத்தெல்லையிற்கரும்பி
னிற்சுவைபோ, னன்றுடனாரும்வேறுநாலறிவுநண்ணுமாலெண்
ணுமாறன்றே. (௮)

---

* ஞானவரணியம் எனவும் பாடம்.

§ பெயர்தல் எனவும் பாடம்.

மிக்கதன்மாத்திகாயமுமதற்குவெதிரேககாயமும்பொருளைத்தொக்கொருகணத்திற்சலித்தலுநிலையுந்துன்னிவித்திடுதலைப்புரியுந், தக்கபுண்ணியநன்றினைத்தரும்பாவந்தருந்தீமைவான்பொருட்கிடமா, யொக்கநின்றிடுமாற்புற்கலப்பொருளினுண்மையாமோதுதுமினியே. (கூ)

எங்கணுமணுவாய்ப்பரம்பியெண்ணெய்திபிரும்புபொன்மரமுதலுருவாய்த், தங்கியபொருள்கள்புற்கலமிருமுத்தாவிலாத்தொழில்பந்தமாகு, மங்கவைகடிந்துதவவினைதொடங்கியமைத்தமுன்னையவினையனைத்து, மங்குதல்புரியும்பொருட்டனுபவித்துமாற்றல்வீடாகுவதென்றான். (கo)

என்றிவைபுகன்றநிகண்டவாதியைத்தன்னிகன்மொழிக்கடியவாள்வீசி, வென்றினிவாகைபுனைகுவனென்னுவெகுண்டழலெழவெதிர்விழித்துக், குன்றெனவெழுந்தகுஞ்சரமஞ்சக்கோளரியேறெழுந்ததுபோற், றன்றிறலறிஞர்தம்பிரான்வியப்பத்தார்க்கிகன்சமர்பெர்ரச்சமைந்தான். (கக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருகனுக்கனந்தஞானமாகியகுணங்கள்யாவு
மருவியபெற்றிசீதமதிக்கடைந்ததுபோலென்றாய்
பெருகியகுற்றமுண்மைபேசிலைசீவவர்க்கத்
தொருவன்மற்றவனலன்னோற்குகளமுமுளவாமன்றே. (கஉ)

அறம்புரிந்தனையகுற்றமகற்றினனருகனென்னி
லறம்புரிவித்தோன்வேறுமாற்றியவருகன்வேறாந்
திறந்தெரிந்தாலுமென்மேற்சென்றனவத்தாதோடம்
பிறந்திடுமெவன்கொலாநீபேணியவருகனன்றே. (கந)

இந்தியத்தொடக்குநீங்கியெவற்றையுமுணர்ந்தானென்னச்
சிந்தனைசெய்தாயன்னோன்றேகியேன்மனுதியுண்டா
மந்தவாறல்லனுகிலனைத்தையுமுணரமாட்டான்
வந்ததோர்கணத்திலெல்லாமதித்திடுமாறுமின்றே. (கச)

வழிபடுவார்க்குமாறிமாறுசெய்குநர்க்குநெஞ்சின்
விழைவொடுவெறுப்பின்றாகில்வெற்றுடம்பினனுமற்றும்
பழையபொன்னெயில்வட்டத்துப்பார்த்திபர்போலவையந்
தழைவுறப்புரப்பதின்றிச்சார்தற்கோர்பயனுமின்றே. (கரு)

மனமுதற்பொறிகளில்லான்வசனமொன்றிகலன்கேட்ப
முனமொழிந்திடுவதெங்ஙன்முன்னவனணையபின்னோன்
வினவுதல்செய்வதெங்ஙன்வினவலும்விடுத்தருளு
நினைவுறுமமர்தம்முணிகழ்த்தியதொக்குமன்றே. (கசு)

இன்பமாருலகில்வைகுமிகலாத்தர்வந்துநோக்கித்
துன்பமாருலகிலுள்ளதுயரறிந்துரைக்கமாட்டா
ரின்பமாருலகின்வைகியெவற்றையுமெய்திலங்குத்
துன்பமாருலகந்நேர்ந்துசொல்லுமாறில்லையன்றே. (கள)

உடலிடைநிறைந்துசிவனுறைந்ததேதலிருகூறுக
வுடலினைவகிர்ந்தபோதுமோரிருகூறதாகி
யுடலிடையுறைதல்வேண்டுமுயிரிருகூறாய்வீழ்ந்த
வுடலிடையுறைதலின்மையுணர்திநீயாதலாலே. (கஅ)

கன்னலுஞ்சுவையும்போலுங்காயமுமுயிருமென்னச்
சொன்னதிங்கிசையாதாகுந்தோயமுங்கடமும்போன்று
சின்னமங்குற்றபோதுசிவனுந்தேகத்தோடே
பின்னமங்குற்றுமாயும்பெற்றியாய்முடியுமன்றே. (ககூ)

ஒருபொருளதனைமேல்கீழுலாவிநின்றிடவோர்போதிற்
றருமிருகாயமென்னிற்சார்ந்திடாதிரண்டுதன்மை
விரிசிறைகால்வண்டிற்குமேற்செலவதியவுண்டேன்
மருவுவதின்றோர்போதின்மற்றவைதனக்குமன்றே. (உ௦)

எண்ணுமோர்கருத்தனுடியிசையுமாறிசைவியானேற்
புண்ணியபாவமென்னும்பொசிப்பினைநுகர்வாரில்லை
நண்ணியவாளிபோலநாடுமாலிலக்கையென்னிற்
றிண்ணமாயதற்குமங்கோர்சிலைவலான்வேண்டுமன்றே. (உக)

ஒருவலிபுற்கலத்திலுள்ளதேதுருவநாசம்
வருவுழிநாசமாகுமற்றவைவருதல்பூணக்
கருவெனப்பூதத்தெய்துங்கலப்புறுவகையாலென்னி
லருகநீநியாயவாதியாயினைபோலுமன்றே. (உஉ)

காரியமாறுமாறக்கட்டினையறுக்குஞ்சிலஞ்
சீரிதினெய்தினெய்துந்திரவியங்கொண்டும்விற்று
நேரினிற்புரியாதோர்க்குநிலவுதலூழாலென்னி
லோரினத்தொழில்களாறுமொழிதற்குமநுவாமன்றே. (உங)

மெய்வினைவருத்தவுண்டாம்வீட்டின்பமென்னினேயா
னையுநர்தமக்கும்வீடுநண்ணுதல்வேண்டுங்கண்டாய்
வையகமதனிலின்பம்வருந்தினர்க்குளதாமென்னிற்
கையதுகொண்டுன்னுசிகடிந்தின்பங்காண்டியன்றே. (உச)

முன்னையவினைகளெல்லாமுடிவுறநுகர்ந்தபின்னர்ப்
பொன்னெயில்புகுவானென்னிற்பொருகடன்மணலுமாற்று
தன்னவைநுகர்வதெவ்வாறலைகடல்வற்றப்பூசை
பின்னைமீனருந்தநின்றபெற்றியேயொக்குமன்றே. (உரு)

நெட்டிடையாழ்ந்தகூவனெடும்புனன்முகந்தபாண்ட
மெட்டியங்கெடுப்பாரின்றியேறியதன்மைத்தாகுங்
கட்டறுத்தின்பவீடுகாட்டுமோர்கருத்தாவின்றிப்
பட்டினிவிட்டுநீயேபரகதிசேர்தலன்றே. (உசு)

திருத்துநற்றவமேற்கொண்டுதேகத்தைநாளுநாளும்
வருத்துதியவமேயந்தோமற்றதையணுதியாமோர்
கருத்தனைநோக்கிச்செய்துகட்டறுத்தவனுலெய்து
மருத்திசேரின்பமுத்தியடைதிநீயடைவினென்றான். (உஎ)

அருகன்றேவல்லனென்றுமன்னவனுதிவேத
முரைசெயத்தகானுலென்றுமொருபதுபொருளிற்கால
மிருவிசும்பல்லாவெட்டினிலக்கணம்வழுவாமென்றுஞ்
செருவலிகடந்தோன்முன்னுசீவகன்செருக்கிநேர்ந்தான். (உஅ)

கலி விருத்தம்.

இன்னுயிர்போல்வனெவ்வுயிர்க்கும்யானெனத்
தன்னுயிர்வருந்தவேதலைபறித்துப்பார்
மன்னுயிர்யாவைக்கும்வருந்தவேயற
மன்னவன்புகன்றமராடன்மேயினன். (உகூ)

தும்பையந்தார்முடிசூடி * யாங்கணை
செம்பொருடேர்ந்ததார்க்கிகனைச்சீறியே
வம்புரையெனும்படைவழங்குவேனெனக்
கம்பமாகளிறுபோற்கலித்திட்டானரோ. (௩0)

* யாங்கவன் எனவும் பாடம்.

மலைப்பின் மற்கலியன்றேவனையன்வாய்மொழிக்
கலைத்திறனானவகதிரதாகுமா
னுலைப்பிலன்னவகதிருரைக்குமொண்பொரு
ளிலக்கநுண்ணணுக்களேந்தென்னலாகுமே. (ருக)

அன்னவைநிலம்புனலங்கிகாற்றுயிர்
துன்னுறுவலிகுளிர்சூடுலாவரன்
மன்னியபுணர்ச்சியாமற்றவைந்தினுக்
கின்னமுமுறுவனவியம்பக்கேட்டியால். (ருஉ)

பரம்புதல்கீழ்ப்படல்பாங்கின்மேற்பட
லுரம்பெறவிலங்கினேரோடல்கூடியே
நிரம்பிமற்றிவற்றுடனிற்கலுற்றதன்
வரம்பினிற்பதுமெனவகுக்கலாகுமே. (ருரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அறிதராவொன்றுகெட்டொன்றுயுறுவொன்றினென்று
செறிதராவணுக்கனுன்குசேர்தலுமுண்டுகாயத்
துறுதராப்புதுமைதொன்மையொழிதராவொருங்குசேரு
நெறிதராநிற்குமாறிநின்றுறுவொன்றுமன்றே. (ருச)

நீட்டிடல்குறுக்கல்பாங்கினிரந்திடல்விரித்தல்சேரக்
கூட்டிடலுதிர்த்தலூன்றல்குமைத்திடலுண்டல்தின்றன்
மீட்டிடலொண்ணுதோங்கும்வியாபியாயொருதன்மைத்தாய்
நாட்டிடலுடைத்தாயென்றுநலிவின்றிநிற்பதாகி. (ருரு)

கருமத்தாலுருவங்கொண்டுங்கண்ணினுற்காணவொண்ணு
வருமைத்தாய்நிலநீராதியணுக்களோடிசைந்துவாழும்
பெருமைத்தாய்த்தேவர்காணும்பெற்றியையுடையதாகி
யொருமைத்தாய்நிற்குமற்றேருயிரணுவுண்மையீதால். (ருசு)

ஒருவியொன்றதனைமூன்றுங்குற்றிடாவிரண்டைநீங்கி
மருவியங்கிரண்டுநில்லாமண்புனலனல்காலுன்குந்
தருகுணமொன்றினென்றுதாழ்ந்தொருநான்குமூன்று
புரிதருமிரண்டொன்றுகிப்புகன்றிடும்புனிதநூலே. (ருஎ)

வெண்ணிறம்பொன்மைசெம்மைமிகுவெண்மைநீலம்பச்சை
யொண்ணிறமிவையாறும்பொன்னெயிறனக்குயர்ந்தவெண்மை
நண்ணுறுமுருக்கட்காகுமற்றவைநாலோடொன்று
மெண்ணுயிரொட்டித்தீண்டிக்கலந்துணர்வெய்துமன்றே. (ருஅ)

செவ்விதிற்பெறலிழத்தல்சேர்ந்திடல்பிரிதலின்பம்
வெவ்விடருழத்தல்பின்னுமெலிந்திடன்மூத்தல்சாதல்
கவ்வையினிவ்வோரெட்டுங்கருவினுளமைத்தலாகு
மிவ்வகையூழால்வையமியாவையுமியலுமன்றே. (௩௯)

அறைந்திடுமணுக்களோரைந்தவற்றுடனறம்பாவங்கள்
செறிந்திடவணுவேழாகச்செப்பலுஞ்சீர்மைத்தாமா
னிறைந்திடுநெடியஞாலநெறியிவையென்னத்தேர்ந்தோர்
கறங்கெனச்சுழலாரின்பக்கதியடைந்திடுவரென்றான். (௪௦)

நுவலுமற்கலிதேவென்றுநுணங்குநூலணையன்சொற்ற
நவகதிரென்றுமந்நானவிலணுவைந்தாமென்று
மிவைபுகல்கின்றவாசீவகனெதிரெதிரிலாத
தவறில்வாய்மொழிவாளேந்தித்தார்க்கிகனழல்போல்வந்தான்.

## கலி விருத்தம்.

வீடுமீளாநெறியென்னின்மீண்டன்னவன்
பாடுமாறில்லைநூல்பாரிலவ்வுலகமுங்
கூடுமாறில்லைமுற்கூறுமைந்தணுவையு
நாடுமாறில்லைமுழுஞானமுமில்லையே. (௪௨)

மண்டலர்மாறில்செம்போதகர்மாகதி
கொண்டுளாரிருவருட்கூறுமுன்மண்டல
ரண்டுபேருலகில்வந்தறமுணர்த்திடுவதிங்
குண்டெனுமொழிதியேலோதுவன்கேட்டியால். (௪௩)

மீண்டுருவரகதிமேவியமண்டல
ரீண்டுபாருலகில்வந்தினிதுநூல்பகர்வரே
லாண்டுவாழ்வன்றிமற்றவனியோர்போலவே
பூண்டதோர்பிறவியம்புணரிவீழ்ந்தார்கொலாம். (௪௪)

தீண்டலாலொட்டலாற்சேர்கலப்புறுதலாற்
பூண்டதாலறிவுயிர்ப்பொருளதென்றதனையாம்
வேண்டிலோந்துயில்கொள்வோர்மிக்கபாலகரிவர்க்
காண்டமூன்றுமுண்டாகுமேயறிவதே. (௪௫)

கீழுமாய்மேலுமாய்க்கிளருமாலவயவ
மேழையாயணுவினுக்கெய்துறுதென்பதென்
ஊழினுள்ளதேலொழியுமாவில்லதேற்
சூழுமாறுள்ளதோதுளைபடுந்தகைமையே. (௪௬)

உள்ள துநாசமாயொழிவுறு தாதலாற்
கொள்ளுவதில்லையாற்கூடுமாறவயவ
மெள்ளுதியேற்கலந்திசைவுறுபலவுமோர்
தள்ளருந்தொகையுமாந்தன்மையுமில்லையால். (சஎ)

மிகுதியர்லணுவின்மேல்வேறுவேறுய்ப்பல
பகுதியாமெனிலவைபார்முதனென்கெனுந்
தகுதியாலிடையறுந்தன்மையாய்ப்பலவுமோர்
தொகுதியாகாவுடன்றுன்னிமற்றென்பவே. (சஅ)

மேலுடன்கீழுமாய்வினைவிகற்பித்தலா
லுமொன்றுய்நிலைநண்ணுமாறும்மில
கோல்செறிந்தாயிரங்கூடினுந்தூணடுங்
காலெனுந்தகையுறுகாணிநீகருதியே. (சகூ)

பொருந்துறுவணுவறிவின்மையாற்பொருத்துறு
திருந்துகாற்றன்னதுஞ்சேதனமன்மையாய்ப்
புரிந்தவூழ்பொருத்துமேற்புந்தியின்றுதலா
லிருந்துபார்சேர்ப்பதற்கிறைவனுண்டென்பதே. (ரு0)

மீது*சொன்மற்கலிமுதலினோர்மிக்கநூ
லோதலுமறிவுயிர்க்கொட்டித்தீண்டிக்கலந்
தாதலும்புணர்வுறுவழியுமெவ்வணுவுமென்
றேதவன்சமணைவென்றனனிகற்றர்க்கனே. (ருக)

சமணர்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கரூசக.

## ருச - வது, மோகன்வதைச் சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒருவனெடுமாமோகனெழியமற்றைக்காமன்முதலுள்ளோர் யாருஞ், செருவிலிறந்தழியவென்றுதிறல்வாகைபுனைந்ததங்கடி ருத்தோள்வீங்க, நிருபகனுதியர்கள்பஞ்ச கோசமெனுங்களத் தொருசார்நின்றஞானச், சுருதிமகண்மகிழ்நனைக்கைதொழுதன ரர்லெம்மருங்குஞ்சூழ்ந்துமாதோ. (க)

அன்னபொழுதெவரையுந்தன்னருட்கடைக்கண்ணேக்கியக ம்பூரித்து,மன்னவ்னங்கவர்க்கினியவாய்மொழியாலிகன்மலைந்த

* சேர் என்வும்பாடம்.

வருத்தமாற்றிச்; சொன்னபடிசூண்முடித்துவந்தடைந்ததுணை வரொடுஞ்சுமதியாகுங்,கன்னன்மொழியொடுங்கலந்துகளிப்பெ னும்வாரிதிபடிந்துகளிக்கும்வேலை. (௨)

## கலி விருத்தம்.

காமனேமுதலியகடியவீரியர்
தாமணிவருமடுசமர்க்களந்தனிற்
றாமதிப்படைஞராலிறந்துசோர்ந்தமை
மாமருட்டுன்மதிமகிழ்நனேக்கினன். (௩)

கண்டனன்மனஞ்சுழல்கறங்குபோன்றன
னுண்டவெங்கனலென்வுயிர்ப்புவீங்கினன்
மண்டனில்விழுந்துமெய்ம்மறந்துசோர்ந்தன்
னண்டுறுத்துயர்க்கடலகத்துமூழ்கினன். (௪)

ஆயிடைத்துன்மதியாகுந்தன்குலச்
சேயிழையன்னவன்சிந்தைதேற்றுவா
ணீயிடருழப்பதுநெறியன்றென்றுதன்
னுயகன்றனக்கிவைநவில்வதாயினள். (௫)

## கலி நிலைத்துறை.

பிறந்தமைந்தனும்பெருந்திறலஞ்ஞனும்பிழையாற்
சிறந்ததுன்மதியாகியயானுமெத்திறமு
மறிந்திலாரெனுநாமமுமழிவுறுதிருக்க
விறந்தநம்படைநம்வயின்மீட்டும்வந்தெழாதோ. (௬)

மாண்டொழிந்தனர்கிளைஞர்யாம்வலியிலமென்றே
யீண்டுவன்றுயருழப்பதெனிந்தனமெவையு
மூண்டசெந்தழன்மட்கியதென்றெதிர்முடுகின்
மீண்டெழுந்தவையணைத்தையுஞ்சுடாதிடைவிடுமோ. (௭)

இணைத்தடம்புயத்துன்னிகல்வலிக்கெவரெதிர்ப்பா
ரணைத்தபுன்கரைதெறும்புனல்போலயன்முதலோ
ருணர்ச்சியென்பனயாவையுமுலைத்தநீவிவேகன்
கணத்தையிக்கணம்வெல்வதற்கருமையோகருதில். (௮)

தேறியிவ்வயின்யான்விடவிடயமாத்தேர்மே
லேறிவன்பகையினித்தொலைத்திடுதியென்றினைய
கூறினளவள்சொற்றமைமகன்றெனக்கொண்டே
யாறிவன்றுயர்பின்னைமற்றிவைசெய்வானுனன். (௯)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வன்மனதிற்குடிலமெனுஞ்சிலையிலனுதரவெனுநாண்வரிந்து தீமை, புன்மைகளாம்பல்கணையும்புட்டிலுந்தன்புறத்தணைத்தெப்பொருளுநேராத், தன்மருளாமுடற்கவசந்தரித்தடுதீச்சொற்கழலுந்தாங்கியெண்ணில், சென்மமரு துழன்றுழன்றுவரப்புகுத்தும் வல்வினையாந்திகிரியேந்தி. (க௦)

ஒவிறுற்போதனையெனும்வேலெடுத்தயுத்தமெனுஞ்சுரிகையொருபால்வீக்கி, மாவிகடக்கச்சைகட்டிமடமையென்னுங்கேடகமும்வாங்கித்தீங்கு, மேவியதன்னியலெனும்பல்படைபிறவுந்தெரிந்துகடல்விடம்போலோங்கித், தேவியெனுந்துன்மதியாற்செலுத்தவருமொருவிடயத்தேர்மேற்கொண்டான். (கக)

அக்காலையறிஞர்பிரானக்கொடியோன்வரவதுகேட்டருளியாவி, யுக்காலல்லதுகயவர்க்குள்ளகுணமென்படினுமொழியாதென்று,மைக்காளவிடமனையான்வன்மையினிச்செகுப்பனெனமதித்துச்சூழ்ந்த, தக்கார்கண்டுளமகிழச்சமர்பொருவானெழுந்திணையதன்மைசெய்தான். (கஉ)

சிவபத்தியணங்குதந்தசிவகவசந்திருவுடலிற்றிருத்திமாமாறவபத்தியருடிருவெட்டெழுத்தெனுஞ்செஞ்சுடர்த்திகிரிதாங்கியாவு, முவமித்தற்கரியவன்னார் சரித்திரமாங்கச் சுமுடைவாளுமார்த்துப், பவமுற்றுந்தெறும்பிரமவுபதேசமெனும்வீரப்பட்டம்வீக்கி. (கஙு)

சங்கையிலாவொலிநாதப்பிரமமெனுங்கழல்வீக்கித்தன்னைக்காக்கு, மங்கநியாசங்கரநியாசமெனுங்கேடகமுமமைத்தெஞ்ஞான்றுந், துங்கநிலாமதிமுடித்தோன்றொல்லெழுத்தைந்தெனத்தகுமோர்சூலமேந்திப்,பொங்குபுராணங்கள்பதினெட்டெனுமாயுதங்களுந்தன்புடையிற்சேர்த்து. (கச)

தாரகமாந்தனிச்சாபந்தரித்ததிலாவிருத்தியெனத்தகுநாணேற்றி, யாரகவேணியன்றனக்குமச்சுதற்குமுளநாமமனைத்தும்வைகும்,பூரகமாந்தனதிதயப்பொருவருஞ்சாயகத்தூணிபொறுத்துத்தேர்ந்த,போரகலாத்தன்னியலாம்பொருபடைகள்பிறவுமொருபுறத்திலேந்தி. (கரு)

தத்துவமா கியவிரதந் தனிலேறிச் சுமதியெனுந் தைய லோடு மத்திறனல்லறிஞர்பிரா னடுகளத்திற் சமர்பொருவா னமைந்த வேலைச்,சித்தமருடன் மதியாங்தேவிசெலுத்தியதேர்மேற்றியங்கு மோகன்,பத்துமுடி யரக்கனன்னுட் டாசரதி மேலெழுந்த படி போல்வந்தான். (கசு)

கண்ணுற்றான்சுமதியெனுங்காரிகைதன்புறத்தொருபாற்களி க்கமேன்மை, நண்ணுற்றாராயநிருபகன்முதலோர்சூழவவர்நாப் பண்ஞான, மெண்ணுற்றார்புடைநெருங்கியினிதேதத்தத்துவ மாமிரதமீதில், விண்ணுற்றாரிடைப்பொலியுமகபதிபோலெதிரு றுமவ்விவேகவேந்தை. (கஎ)

தன்படைஞர்சாய்ந்தமையுஞ்சாய்ந்தவொன்னார்வென்றமை யுஞ்சமரினேக்கி, வன்படர்நெஞ்சகமயங்கித்துன்மதிதன்வாய் மையினன்மடமைமேற்கொண்,டின்புறுயுத்தாயுத்தமறியாமை யெனும்புருவமிரண்டுமேறத், துன்புபுரிகலக்கமெனுங்கண்சிவப் பவடர்ந்தினையதொழில்கள்செய்தான். (கஅ)

குடிலமெனுஞ்சிலைவளைத்துக்கொடுந்தொழிலாம்பகழிகள் பல்கோடிகோடி, நெடியநிருபகன்பொறையன்விராகன றன்சம ன்றமனியாயனென்போ, னுடல்கடொறுஞ்சுமதிபதியுரத்தினுந் தோளினும்பிறர்மற்றுள்ளோர்மேலுந், தொடரமலைக்குலங்க டொறுஞ்சோனைமழைபெய்வதுபோற்றாவியார்த்தான். (கசு)

அக்காலையறிஞர்பிரானன்புள தன்படைஞர்வெருண்டவன் மேற்றாக்கப்,புக்காரையிடைவிலக்கிப்புறத்திருந்துகாண்மினியா ன்பொரும்போரென்னக்,கைக்காயசிலைகுனித்தோர்கடும்பகழி தெரிந்தெடுத்துக்கடிதினேவி,மைக்காளவிடமனையான்வழங்கிய பல்கணையெவையுமாற்றிவீழ்த்தான். (உ0)

சத்தியமென்றருமறைசொல்யாகபலபோகமெனுஞ்சத்திதன் னல், வித்தகநல்லுணர்வழிப்பனெனக்கறுவித் திறன்மோகன் விடுத்தானந்த, வத்திரநுண்பொடியாகவெப்பதமுமசத்தியமெ ன்றகலத்தள்ளும், புத்தியெனுமுனைவடிவேலொன்றுதொகுத்தி கல்கடந்தான்புனிதர்கோமான். (உக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கோதுறுங்குதர்க்கமென்றெர்கோரவீரவாளியான்
மோதுவன்களத்தின்மாளவென்றுமோகன்முடுகினன்
றூதடர்ந்ததார்விவேகனதனைமிக்கதர்க்கமென்
றேதுகின்றபகழியுந்தியோர்கணத்தொருக்கினன். (உஉ)

காய்ந்தவஞ்சனன்னதன்மைகண்டுசௌகதம்மெனு
நாந்தகந்துரந்திதுன்னைநாசமாக்குமென்றுவெம்
பாந்தளென்னவீசினனதெய்தல்கண்டுபாறவே
யாய்ந்தகன்மகாண்டமென்னுமம்பினலகற்றினன். (உ௩)

இனையர்சீறியனையவாளியிவ்வணந்துரந்துபோர்
வினையராகியிகலனந்தவிதமலைந்தவேலைவா
யனையதேர்கடாவினுடன்னருகிருந்தமோகன்மா
மனைவியாகுமவள்செருக்கின்மற்றுமொன்றியற்றினள். (உச)

ஏனுருததிறலவிஞ்சையென்றுபேர்படைத்தகைச்
சூலமானதைச்சுளித்துசுமதிமீதுதூண்டினு
ளாலகாலமென்னவந்தவதனையவ்வணங்குதன்
மேனுருமல்விஞ்சையென்னும்வேலதொன்றில்வீழ்த்தியே.(உரு)

பாவிமோகனைப்புணர்ந்தவ்வஞ்ஞனைப்பயந்திடுந்
தேவிமேலவ்வஞ்சிதன்னொர்செவ்வொழுக்கமென்னும்வே
லேவினளதனையண்மார்பினிடைபுகுந்துருடையவே
யாவிபோயினள்விழுந்தனங்கமுந்துடித்தரோ. (உசு)

அந்தமாதமர்க்களத்தழிந்ததன்மைகண்டுதே
ருந்துவாளையன்றிவேறுசாவுநட்புமின்றியே
நொந்தபாவிவசமழிந்துசெயலயர்ந்துநுவலருங்
கந்துலாவும்யானையுண்டகனியினீர்மையாயினன். (உஎ)

சோகமுற்றவன்றனைத்தெருட்டிமுன்புதூண்டுதேர்ப்
பாகெனச்சொல்தேவிபுத்திப்பாகெனப்பயிற்றலான்
மோகமுற்றதன்னொர்வெம்படைக்கலம்முருக்கிவா
னேகுவிப்பனினிவிவேகனிவனையென்றதேவினள். (உஅ)

பிறந்தமாயவெம்படைக்கலந்துரந்தபெற்றியா
லிறந்தகாமனுதியோரியாருமங்கெழுந்துநல்
லறந்தவாதபடைஞர்பேரமர்க்குவம்மினெனவிளித்
துறுந்தமாயுதங்களோடிவ்வுலகமெங்குமோங்கினர். (உகூ)

மாதர்மக்களிரதம்யானைவாவுவாசிவயவரென்
றேதுமப்படைத்திறங்களோடுமக்களத்தின்முன்
சாதல்பெற்றுளோரெழுந்துசமர்பொரச்சமைந்தபோ
தேதமற்றபுந்தியோரொடிறைவனும்மயங்கினன். (௩௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தாயாமறிஞர்பெருமானுந்தன்னுண்மயங்கும்பொழுதவன்பாற்
போயாரமுதநிகரும்யுத்திபொல்லாமோகன்மயக்கிதனை
யாயாதழுங்கப்பெறுதிகொல்லோவரிதன்னுமசரக்குகையின்
மாயாதீதமெனுங்கணையொன்றிருந்துமெனவிவ்வகைசொன்னாள்

அவ்வாசகந்தன்செவிப்படுமுன்னுமாமெனக்கொண்டறிஞர்பிரா
மைவாரணம்பண்டழைத்தகண்ணன்மாயாதீதமெனுநாம [ன்
வெவ்வாசுகமொன்றேவாமுன்வெய்யோன்வஞ்சவினையனைத்துஞ்
செவ்வானிரவியுதிக்கநில்லாத்திமிரம்போலத்தீர்ந்தனவால். (ரு௨

உலகமயக்குமதிமோகமொழிக்குமுகுந்தன்றிருநாம, மில
கும்பகழிபின்னருமொன்றெய்தானவ்வம்பெழுந்தோடிக், கல
கம்விளைக்கும்புன்றொழிலோன்கன்னெஞ்சுருவிக்கங்கையிற்றோ
ய்ந், தலகில்விசைகொண்டடைந்ததையனம்பொற்சரதூணியி
லம்மா. (ருரு)

எண்ணில்வயிரத்திறன்மார்பையீர்ந்தவாளியெழுந்தோட
விண்ணிலெழுந்தகார்மேகமின்னியிடித்துவீழ்ந்ததுபோற்
கண்ணிலெழுந்தகனல்சிதறக்கனன்றார்ப்பரித்துமுகங்கவிழ்ந்து
மண்ணில்விழுந்தானடல்விடயத்தேர்மேனின்றமாமோகன். ()

மன்னன்மோகனிறந்திடுமந்நிலையேயவன்றன்மதித்தேவி
யென்னுமாதும்பெருங்கனலோடியைந்தபுகையுமிறுமாபோற்
பின்னமேதுமின்றிமுன்னந்தம்முள்விழைந்தபெருங்காத
றன்னதாகுமுயிரையுந்தத்தானுமிறந்துதரைப்பட்டாள். (ருரு)

ஷ வேறு.

அந்தரத்தமரர்துள்ளியலர்மழைபொழிந்தார்தேவ
துந்துமியதிர்ந்ததுண்மைச்சுருதிநான்மறைகளார்த்த
மந்திரமுனிவர்யாரும்வாழ்த்தினர்மயக்கநீக்கி
யிந்தியமடக்கும்யோகரிதயமுங்களித்தமாதோ. (ருசு)

தோகைநற்சுமதியென்னுஞ்சுரிகுழல்வஞ்சியோடும்
வாகையந்தாமஞ்சூடிவயங்குதேர்நடத்திமன்ன
னேகையங்கடலின்மூழ்கியுயர்நிருபகனேயாதி
யாகியகிளைஞர்சூழவரசியலிருக்கைசேர்ந்தான். (ருஎ)

மோகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கசுஎஅ.

## ௩௫-வது, மானதன்புலம்புறுசருக்கம்.

——(◡)——

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆயிடைமோகனுதியாகியமைந்தர்யாரு
மாயுமத்தன்மையாவுமானதனெனுந்தாதைக்குந்
தாயெனும்பிரவிர்த்திக்குஞ்சாற்றுவான்விரைவினுங்கே
போயினர்தூதர்சொல்லப்புகுந்தவாறியம்பலுற்றும். (௧)

தூதுவர்கடிதினெய்தித்தொழுதுமானதனையையா
நீதருகுமரரென்னுநெடுந்தகைமோகவேந்த
னுதியர்கிளைஞரோடுமறிஞர்கோன்படைஞர்தாக்கப்
போதலுற்றனரால்வீந்துபொருசமர்க்களத்திலென்றார். (௨)

அன்னவர்மாய்தல்கேட்டங்கழலெழக்காய்ந்தவைவே
றன்னிருசெவியுற்றென்னத்தவித்துமானதனும்வேந்தன்
மின்னகுமிடியேறுண்டவியன்மலைமுடியின்வைகும்
பன்னகம்போலவேங்கிப்பார்மிசைத்துடிப்பதானன். (௩)

பாதகரென்னேவந்துபகர்ந்தனரென்றானீன்ற
காதலரிறந்தாரென்னக்கனவுகொல்கண்டேனென்றான்
மேதகுவிவேகற்கன்னவிறலுண்டோவெல்லவென்று
னீதொருபொய்ம்மையாரோவியம்புவித்ததுவாமென்றான். (௪)

இவ்வகைபலவும்பன்னியெழுந்தினியானேயேகி
யவ்வகையுணர்வனென்னுவழலிடைநடப்பான்போலச்
செவ்வடிபெயர்த்துக்கண்ணுஞ்சிந்தையுங்கலங்கியன்னூர்
மெய்வலியிழந்துசாய்ந்தவெஞ்சமர்க்களத்திற்போனன். (௫)

நோக்கினன்புதல்வர்தம்மானுவலரும்புதல்வராவி
போக்கினர்பட்டவெம்போர்க்களந்தனைப்புணரிநஞ்சைத்
தேக்கினனென்னநெஞ்சந்தியங்கினன்மயங்கிப்பின்னும் [ன்.
வாக்கினற்குழறிச்சோர்ந்தான்மண்ணில்வீழ்ந்திணையசொன்ன (௬)

கலி விருத்தம்.

மேகநேர்வண்ணனையும்வேதனையும்வெற்பணங்கின்
பாகனேயென்னும்பரமனையும்வென்றுபின்னு
மேகனேயென்னுமிறைவனையும்பந்தனைசெய்
மோகனேயீங்கென்முகந்திரும்பிப்பாராயோ. (௭)

தாக்கியதோர்மெய்ஞ்ஞானத்தற்பரந்தானன்றெவையு
மாக்கினனியானென்னுமகங்காரயான்பெற்ற
பாக்கியமேயின்னமும்வெம்பாசத்தாற்பாட்டணைமுன்
வீக்கியநின்வாலவிளையாட்டுங்காண்பேனே. (அ)

நீங்கினையோவீரநிருபகனுக்கீடழிந்து
தூங்கினையோவுள்ளாவிதுஞ்சினையோகாமாநின்
தீங்கரும்பின்வில்லிற்சிறையளிநாண்பூட்டியைந்து
பூங்கணைகொண்டின்னம்புவனம்வெல்லக்காண்பேனே. (கூ)

அங்கோபமைந்தாவவனியும்விண்ணுங்குலையப்
பொங்கோதைவாக்கும்பொறிபறக்கும்பார்வையுநின்
வெங்கோரநெட்டுயிர்ப்புமெய்யொழியாவேர்வையுங்கொண்
டிங்கோர்பொழுதுமுனிவரிடத்தெய்துவையோ. (க0)

மாலோபமைந்தாவயிராக்கியன்விரத
வேலோடுசாய்ந்தோமிசைவிசைகொண்டெப்பொழுதும்
பூலோகமெங்கும்புகுந்துவிளையாடியநின்
காலோய்ந்துகொல்லோகளத்திற்றுயின்றாயே. (கக)

மாமதனேமச்சரனேமானனேராசதனே
தாமதனேசங்கற்பாசந்தேகனேயென்னுமென்
கோமகனேயுங்களுக்குங்கோதையர்க்குஞ்செல்வருக்குந்
தீமையிவ்வாறெய்தல்சிறிதுமறியேனே. (கஉ)

என்றுபலபுலம்பியேங்கிப்பரதவித்துக்
கன்றியகநொந்துகரைந்துருகிமானதனும்
புன்றொழிலோன்சோர்ந்தானப்போதுமக்கண்மாண்டமைகேட்
டொன்றுபிரவிர்த்தியென்னுமொண்டொடியுமங்குவந்தாள். ()

கண்டாணன்மக்களையுங்காதன்மருமக்களையும்
வண்டார்குழற்றன்மகளிரையும்பேரரையு
மண்டார்பொரமாய்ந்தமர்க்களத்திற்சாய்ந்தமையுட்
கொண்டாள்விழுந்தாளெழுந்தாள்குலைகுலைந்தாள். (கச)

எங்கினாள்விம்மியிருந்தாளிரங்கியிடர்
வீங்கினாளங்கம்வெதும்பினாள்கண்முகிழ்த்துத்
தூங்கினாள்போலுணர்வுசோர்ந்தாடுடித்தாள்த்
தீங்கினாள்பின்னுமினையசிலபகர்ந்தாள். (கரு)

மைந்தரேயான்வாழ்ந்தவாழ்வையெல்லாம்பொய்யாக்கிப்
பந்தர்சூழ்பாறும்படுகளத்திலெல்லீருஞ்
சிந்தினீர்கண்டுமின்னந்தீவினையேன்மாளாம
லுய்ந்துளேன்போலொருத்தியுண்டோவன்னெஞ்சியென்பாள்.

உங்கடிருமுதாதையாமவனையுங்கடந்தை
தங்குமுடற்பல்சிறைபிற்றுன்வைத்தமேனுளி
லங்கவனையெல்லீருமார்த்தநெடும்பேராற்றன்
மங்கியதோவங்கிவிர்த்திமக்கள்வலிக்கின்றென்பாள். (கள)

அன்றரனுமாலுமடங்கத்தனித்தனிபோய்
வென்றதுமதாற்றலெல்லாம்விண்டனையர்பத்திகடா
மென்றமடவார்திறங்கொண்டெய்தினர்திண்டோள்வலியாற்
பொன்றியதேனுற்றபுதுமையிதுநன்றென்பாள். (கஅ)

கத்துருவின்பாலகருக்கவ்வினதைகாதலன்றான்
சத்துருவாயுஞ்சிலரைத்தப்பவவன்விட்டிலனோ
வத்தகையுஞ்செய்யாதடங்கக்கிளையறுத்தோன்
புத்தியுடையோனும்பொறையுடையோனுமென்பாள். (கக)

கோசலைதன்மைந்தனைக்கைகேசிகொடுங்கான்புகுத்த
மாசிலவனங்கிலையேமாளாதிருந்தனளென்
றேசியயான்மாற்றுளியற்புதல்வராலென்மக்க
ளுசமுறக்கண்டுமின்னநானிருத்தனன்றென்பாள். (உo)

காவியங்கண்ணீராறுய்க்கரையவயிறலைத்துப்
பாவியங்குமீட்டும்பதைத்துப்படியிலயர்ந்
தோவியங்கொலென்னவுயிர்ப்படங்கியுள்ளுறையு
மாவியுங்கண்போலுமைந்தரன்பெனுங்கூற்றுக்களித்தாள். (உக

கலி நிலைத்துறை.

ஆயகாலையிலடுத்தமானதனியலறியப்
போயதூதுவர்வந்துநல்விவேகனைப்போற்றி
மேயதாய்ப்பிரவிர்த்திமாண்டமையுமெய்த்தாதை
யேயமைந்தர்பாலிரக்கமுற்றயர்ந்ததுமிசைத்தார். (உஉ)

அந்தவாசகங்கேட்டலுமறிஞர்கோனிரங்கி
முந்தமேவியநாமகடனைக்கரமுகிழ்த்து
மைந்தர்மாய்ந்தபேரிடர்பொறுதாங்குமெய்ம்மயங்கு
மெந்தையார்தமைத்தெருட்டுதற்கெழுந்தருளென்றான். (உங)

நன்றுநன்றெனநயந்துநற்கலைமகணடந்து
சென்றுவெஞ்சமர்க்களத்திடையாங்கொருசிறையிற்
புன்றொழிற்பிரவிருத்திமாண்டமையுமோர்புறத்திற்
கன்றிமானதன்றனைமறந்தயர்ந்ததுங்கண்டாள். (உச)

ஆங்கவன்றன்மேலன்பெனுமென்புனறெளித்தே
யோங்குமின்சொனன்மருந்தினாலாற்றலுமுயிர்ப்பும்
வீங்கவெங்கணும்விழிப்பமெய்துடிப்புறவிம்மி
யேங்கியுய்ந்தொருவண்ணமானதன்றெளிந்தெழுந்தான். (உரு)

அவ்விடத்துறைமாதைப்பார்த்தருங்கிளையடங்கத்
தெவ்வடர்த்தவிப்பாடுகண்டின்னமுந்தீரா
வெவ்வுடற்பொறைசுமந்துளேன்விழைபிரவிருத்தி
யெவ்விடத்துளாளிங்குவந்திலள்கொலோவென்றான். (உசு)

அனையவாய்மொழிகேட்டவளடுகளத்தடுத்த
மனைவிமாய்ந்தனள்புத்திரசோகமாம்வாளா
லெனமொழிந்தனளன்னசொற்கொடுந்துயரிறந்தார்
தனையரென்றபேரிடரையுந்துரந்ததாற்றாக்கி. (உஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மயில்பொரத்தளர்ந்தநாகம்வல்விசைக்கலுழன்றாக்க
வுயிர்பதைபதைத்தாலென்னவொண்டிறற்குமரர்வீந்த
துயரினுமனைவிமாய்ந்ததுன்பமீக்கொண்டுமாழ்கி
யயருமானதன்றான்பின்னுமீதுரைத்தரற்றினானல். (உஅ)

உண்ணுமாரமுதுமாய்மெய்யுறவுமாயுயிருமாகிக்
கண்ணுமாய்க்கருத்துமாய்ச்செய்கருமமாய்க்கருமந்தன்னா
னண்ணுமாநிதியுமாயநன்னிதிப்பயனுமாயெ
னெண்ணுமாமுன்னைநீங்கியானெவ்வாறுய்வேனென்னும். (உகூ

மோகமாய்மோகலீலைமுயக்குமாய்முடிவுறுச்சம்
போகமாயென்பான்மற்றைப்பொருளுமாய்ப்புணர்ந்தநீயே
காகமாமதனிரண்டுகண்ணுக்கோர்மணிபோலாவி
யேகமாயிருந்தநெஞ்சமெங்கயர்த்தனையோவென்னும். (௩௦)

யானுடலென்றுநீயேயிவ்வுடற்காவியென்றுந்
தானுரைசெய்தாயுன்சொற்றப்புரையன்றேமற்று
னானுடையுயிராம்யானிங்கிருக்கநல்லுடலாநீயவ்
வானிடையுற்றதென்னமாயமோவறியேனென்னும். (௩க)

வஞ்சிநுண்ணிடையாயுன்னைமறந்தொருபொழுதும்வாழேன்
றஞ்சியகனவினூடுந்துறந்திலேனிறந்தாயென்னி
லஞ்சினியிருப்பேன்கொல்லோவுன்னைப்போலேழையேன்வன்
னெஞ்சுளனல்லேன்வந்தேனினக்குமுன்யானுமென்னும்.(௩௨)

புத்திரரிறந்துமீன்றபுதல்வியர்மாண்டும்பேரர்
மித்திரரென்போர்யாரும்வீடியும்வீடாதுய்ந்தேன்
பத்தினிநீயும்வீந்தபாடுகேட்டறிந்துமாளா
தித்தரைதன்னிலின்னமிருப்பனோயுயிர்கொண்டென்னும்.(௩௩

இவ்வகைபலவும்பன்னியினியரைக்கணத்திலாவி
வெவ்வழறன்னின்மூழ்கிவிடுப்பனென்றொருப்பட்டானை
யவ்வயினடுத்தவாணியங்கையாலமைத்தின்சொல்லா
லுய்வகையுணர்வுமூட்டித்தேற்றுவாளுரைப்பதானாள். (௩௪)

மானதன்புலம்புறுசருக்கம் முற்றிற்று.
ஆக விருத்தம் - ௧௭௧௨.

## ௩௫ - வது, கலைமகள் தேற்றச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மன்னவமதியிலார்போன்மயங்குவதென்னோநல்லோர்
பன்னருங்கலைகள்யாவும்பகுத்துணர்ந்தவனீயன்றோ
வின்னலுற்றயரேற்றோற்றுமிவ்வுலகனைத்தும்வானின்
மின்னையொத்தழியுமென்னுமெய்ம்மொழிவினவிலாயோ. (௧)

மண்ணொடுதெண்ணீர்தேயுவாயுவானிவையோரைந்து
நண்ணுமன்னுயிர்கள்யாவுநயனமாயிரம்பெற்றோனு
மெண்ணில்வானவருமெல்லாமீன்றெடுத்தினிதுகண்ட
புண்ணியவேதன்றானும்பொன்றுமாறுணர்ந்திலாயோ. (௨)

எத்தனையென்றுசொல்கேனிப்படியனந்தகோடி
நித்தியமின்றித்தோன்றிநிமிடத்திலொழிந்தவென்றாற்
சத்தியம்யாதுசுற்றுசகடக்கால்பிறப்புஞ்சாவு
மித்தகையறிந்துமீங்கனிறந்தவர்க்கழுங்கலாமோ. (௩)

பூதங்களைந்துமொன்றாய்ப்புணர்ந்துநீர்ப்புற்புதம்போன்
றேதங்கொளுடல்களாகியெழுந்தவைபிறக்குங்காலைப்
பேதங்களாகித்தத்தநிலைபுகப்பெறுமாலென்னு
மீதங்கண்ஞாலத்தோர்ந்தோர்க்கிடரெங்ஙனெய்துமம்மா. (௪)

முற்பரம்பொருளதொன்றேமுதலிடையிறுதியின்றி
நிற்பதுமற்றியாவுநிலைபெறுத்தகைமையாகுங்
கற்பனையென்பதோர்ந்தகருத்துளோர்தம்பாற்சோகம்
பற்பலவரினுந்தீவாய்ப்பஞ்செனப்பாறுமன்றே. (௫)

நிந்தனையுடல்கடோறுநீசிறைவைத்தனான்றும்
பந்தனஞ்செய்துன்மக்கள்பலரிடரிழைத்தபோது
முந்தைசஞ்சலமாங்குற்றதுண்டுகொலனையனின்ற
மைந்தனீயயர்தனன்றேமயங்கலென்றினையசொன்னாள். (௬)

மாற்றமதுரைத்தல்கேட்டமானதன்வாணிநின்சொ
லூற்றுதண்புனலுமுற்றவுறுதுயருலைவாய்த்தீயி
லேற்றுமென்னெஞ்சமாம்வல்லிரும்புவெந்தெரியுஞ்சூட்டை
யாற்றிலதென்னிலெவ்வாறுருயிர்தரிப்பதென்றான். (௭)

மெய்க்கலைமகளவ்வார்த்தைவினவியவேந்தைநோக்கி
மக்களென்மனைவிசுற்ற * மென்னுமவ்வாஞ்சையாலித்
துக்கமெய்தியதாலன்னதொடர்ச்சியாநேசப்பாசச்
சிக்கினைத்தவிர்தியென்னத்தெரித்திவைபின்னுஞ்சொன்னாள். ()

முடையுடல்சனிக்குமுன்னுமுடிந்ததின்பின்னுமின்றி
யிடையிலெம்மக்கடாரமினமெனுஞ்சங்கத்தோடத்
தடையுறும்வலையில்வீழ்ந்துதம்முணர்வழிந்துசோக
மடையவெவ்விடரின்மூழ்குமறிவின்மைபிறிதுமுண்டோ. (௯)

இத்தகையாதலாற்பேரிடரினுக்கேதுவாகு
மத்தகைமயக்கைவேரோடகற்றுதியென்னவேத
வித்தகியுரைத்தாளன்னமெய்ம்மொழிகேட்டுமீட்டும்
புத்திரசோகமாறுப்புரவலனினையசொன்னான். (௧௦)

தாயுரைகொண்டுதந்தைதனைச்சிறைவைத்தேன்மக்க
ளாயபற்பலராற்பின்னுமனையனைப்பந்தஞ்செய்வித்
தேயவந்நிவிர்த்திமக்கட்கிடர்செய்வித்தனையர்தம்மான்
மாயவித்தனைபேருக்குமறலியைவருவித்தேனால். (௧௧)

மக்களைமக்களோடுமகளிரைமகிணரோடும்
புக்கபோரிடைமாய்வித்தேன்பொருவிலாப்பிரவிர்த்திக்குந்
துக்கவெங்கூற்றுலாவிசோர்வித்தேன்றுஞ்சாதின்ன
மெக்கருமஞ்செய்வித்தற்கிங்கியானிருக்கின்றேனே. (௧௨)

---

* என்னும் வீண்வாஞ்சை எனவும் பாடம்.

இனியொருபொழுதும்வாழேனெவருரைத்தாலுந்தேறே
னனிதுயருழக்கலாற்றேனுடகனலின்மூழ்கித்
தனியுயிர்விடுப்பனென்னுச்சாற்றினன்சாற்றலோடுங்
கனிமொழியணங்குபின்னுங்கருணைகூர்ந்தினையசொன்னாள். ()

ஓர்ந்தவருணர்வாரோதம்முயிர்க்கொலைபுரியவாளா
சோர்ந்தனைதெளிதிபொல்லாச்சுதரொடும்பெண்டிரோடுஞ்
சேர்ந்திருப்பதினுமன்னதீயரைத்தீர்தனன்றாற்
பேர்ந்துநோய்தம்மைநீங்கிற்பேதுறுவாருமுண்டோ. (௧௪)

துய்யபாற்கடலாநின்பாற்றோன்றுமாலாலமன்ன
வெய்யதீவினையோர்போகவியனமுதனையமக்க
டையலார்நிவிர்த்தியென்னுந்தலைவிபல்கிளைஞர்நின்று
ரையநீபெற்றசெல்வமதற்கொருகுறையீங்கென்னே. (௧௫)

விளங்குநின்மதியைமூடும்வெவ்வியதுயரென்றோதுங்
களங்கவன்புயலைத்தேறுமுணர்வெனுங்காற்றாற்றாக்கி
யிளங்கொடிமனையாடன்னையீங்கழைத்துறவுகூர்ந்துன்
னுளங்கனிந்தளவளாவுமுறுதிபோற்பிறிதொன்றுண்டோ. (௧௬

என்றிவைபலவுங்கூறியெழுந்துமுன்றலைமேற்கொண்ட
வன்றிறல்விடத்தைமீட்கமந்திரிப்பார்கள்போல
நன்றறிவாணிதேற்றநயந்தொருவண்ணந்தீராத்
தன்றுயர்சிறிதுதீர்ந்துதானிவைபுகல்வதானான். (௧௭)

முன்புணர்மனைவிநேயமுயங்குந்தம்மிளையாடன்மே
லன்புகொண்டயர்ப்பாரென்னுமவ்வுலகியலுமாற்றிப்
பின்பிருவரையுமென்னுட்பேதமில்லாமற்பார்ப்ப
தென்பதுந்தவிர்த்தேன்யான்பண்டியற்றியதிவைமட்டேயோ. ()

இளையவணிவிர்த்திதன்னையீன்றநன்மக்கடம்மைக்
கிளைஞரோடகற்றிமூத்தாள்கிளைஞராலனையர்க்கெல்லாம்
விளைதுயரிழைத்தபாவிவெள்காமலெவ்வாறன்னார்
முளைமறுத்தவிர்ந்ததிங்கண்முகந்தொறும்விழிப்பனென்றான். ()

நல்வழியன்பிற்கூறுநண்பினர்தமையுந்தீய
வல்வினைபகைமைசெய்யுமற்றதுதீருங்காலைக்
கல்விநுண்ணறிவுதேற்றக்களங்கமிலுறவுகூட்டிச்
செல்வமும்விளைக்குமீதெத்தெள்ளியரிடத்துமுண்டால். (௨௦)

தீத்தொழில்புரிந்துளோரைத்தீர்ந்துதேர்ந்துலகமெல்லா
மேத்துநல்லோரைச்சேர்ப்பார்க்கெய்துமோபழிதானென்ன
மூத்தவளிறந்துபின்னுமுளரியந்திருவேயென்ன
வாய்த்தவணிசெய்குற்றமதிப்பளோமனத்துளென்றாள். (உக)

இவ்வகைவாணிகூறவிருசெவிகுளிர்ந்துதீரா
வெவ்விடர்க்கடலின்வீழ்ந்துவீடுங்கான்மிதப்பொன்றாங்கே
கைவசமுற்றாலென்னக்கருணைசெய்துடையநின்னா
லுய்வகைபெற்றேனென்றுவுரைத்தசொற்சிரத்திற்கொண்டான்.

கலைமகள்தேற்றச் சருக்கம் முற்றிற்று.

ஆகூ விருத்தம் - களருச.

## ருஎ - வது, விவேகன்முடிசூடு சருக்கம்.



கலி நிலைத்துறை.

ஆயகாலையினுவகைபூத்துரைமகளடுத்த
நேயமானதமன்னவன்றனையவணிறுவி
யேயதேவியைமக்களைக்கொணர்வனீங்கென்றுப்
போயினுளன்னப்புள்ளரசுகைத்திமைப்பொழுதில். (க)

சென்றுகண்டனணிவிர்த்தியின்றெடுத்தநற்சேயை
நின்றுகைதொழுதன்னவணிகழ்ந்தமைவினவ
மன்றலங்குழலாதியோடந்தமும்வழாமற்
றன்றிறத்தினுரைத்தனண்மகிழ்ந்தனன்றக்கோன். (உ)

அந்தவாசகமனைவர்க்குந்தெரிவுறவறிவித்
தெந்தைபாலினிச்செல்வன்யானீவிரெல்லோரும்
வந்துசேர்மின்கள்பின்னரென்றினியசொல்வழங்கிச்
சிந்தையார்வமாம்பரிமிசைவிரைவினிற்சென்றான். (ங)

பண்ணுநான்மறைப்பஞ்சரப்பசுங்கிளிசெஞ்சூட்
டன்னவாகனமேற்கொண்டுமுன்செலவனையாள்
பின்னரேகியமன்னவன்பிரிந்ததன்பிதாவை
யின்னறீர்தரக்கண்டகண்களிப்புறவெதிர்ந்தான். (ச)

வந்துமண்மிசைமார்புறப்படிந்தனன்வணங்கிச்
சிந்தையன்புறுஞ்செல்வனைவல்விரைந்தெடுத்தே
யுந்துதன்னுடற்பொறைபிரிந்தெய்துநல்லுயிர்போ
லந்தமில்லகத்தார்வமோடிறுகுறவணைத்தான். (ரு)

தழுவிமைந்தனையுச்சிமோந்திணைவிழித்தடநீர்
முழுகுறும்படிமஞ்சனமாட்டியேமுடியா
வுழுவலன்பொடுதுன்பமுமிடையிடையுள்ளு
டெழுதொறும்பெருமூச்செழவிம்மினனிருந்தான். (௬)

அறிஞர்கோன்றனைமருங்குறவிருத்திநாணதனுற்
சிறிதுபோதுதன்முகங்கவிழ்ந்திருந்தனன்றேறி
மறுவிலன்பொடுநோக்கினனையநின்வாய்மை
யுறுதியுட்கொளாதேதமையேனுற்றநோயொன்றே. (௭)

தாங்கருந்துயருழந்தமைநீவரத்தழுவி
நீங்கினேனயம்பரிசனவேதியானெடுமாற்
றேங்குபொன்மயமுற்றெனமற்றினியுன்சொ
லீங்கியானுயிரிறக்கினுமறுத்திடேனென்றான். (௮)

ஈதவன்சொலவறிஞர்கோனவ்வனத்திந்நாண்
மாதவஞ்செயப்பெறுபயனுற்பின்னும்வந்து
தாதைநின்பதம்பணிந்திடர்தவிர்ந்தனன்றமியேற்
காதரம்பிறிதிலையுனையன்றியென்றறைந்தான். (௯)

இறைவிவேகனதியம்பினனிருந்தருளெல்லைப்
பொறையெனுஞ்சுதன்றன்னெடும்பின்செலப்பொருவி
னிறைகுணப்பெரும்புதல்வரையீன்றநன்னிவிர்த்தி
மறுவிறிங்கள்வாண்முகத்திணுண்மகிணன்முன்வந்தாள். (௧௦)

வந்துகண்டுகண்களிப்புறத்தொழுதியன்மகிணன்
சிந்தையம்பெருங்கோயிலுட்புகுந்தனள்சிறந்த
தந்தைசெஞ்சரண்பொறையனும்வணங்கினன்றயவோ
டந்தமானதனவனையுமகிழ்ந்தெடுத்தணைத்தான். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிருபகன்விராகர்கோமானெடுஞ்சமன்றமன்சந்தோடன்
றருசமாதானவீரன்சத்துவன்றவனுஞ்செல்வன்
மருவுமட்டாங்கயோகமந்திரத்தலைவரின்ன
பொருவரும்புதல்வர்யாரும்புகுந்துமானதனைத்தாழ்ந்தார். (௧௨

தாழ்ந்தவர் தம்மைத்தாதை தனித்தனியெடுத்துப்புல்லி
யாழ்ந்தபேரன்பிற்கண்ணீ ரருவியங்கலசமாட்டிச்
சூழ்ந்தவரவரெல்லோர்க்குஞ்சொல்வனமுகமன்சொல்லி
வாழ்ந்ததன் மருங்கிலோர்பால்வைகுவித்திருந்தவேலை. (கங)

தருமனிச்சயனடக்கன்சன்மானன்சுகனேர்மெய்ய
னருளியற்பரோபகாரனற்புதனவிரோதன்று
னிருவிகற்பன்மாமோனன்னிருலேபன்முதலாயுள்ள
பெருமைநற்பேரர்யாரும்பின்பிதாமகனைச்சேர்ந்தார். (கச)

அனையவர்வணங்குந்தோறுமவரவர்க்கருள்பாலித்து
வனைகழற்சுசிலனுதிமருகர்வந்திறைஞ்சினோர்க்கு
நினைவுறுமாசிகூறிநிகரினற்சிரத்தைசாந்தி
யெனுமவர்வரவுநோக்கியினிமையாங்கவர்க்குஞ்சொன்னான். ()

புதல்வியர்கருணைநீதிபுகன்மயித்திரியுபேட்சை
முதிதையென்றினையர்தாழ்ந்தார்முகந்தொறுமினிதுவாழ்த்தி
மதிமுகச்சுமதியுத்திமரியாதைவிரத்திதாந்தி
யெதிருறும்புனிதையாதியியன் மருகியர்மற்றோரும். (கசு)

வந்தடிவணங்குந்தோறும்வரன்முறையாசிகூறி
யந்தமிலார்வத்தோடுமகமெனுமம்பொற்கோயின்
முந்துறப்புகுத்திப்பின்னுமுதுமறைக்கிழத்திநின்று
னுய்ந்தனனடியேனென்னுவுரைத்துளமுவகைபூத்தான். (கஎ)

மானதவேந்தன்றன்பான்மருவியநிவிர்த்திவர்க்க
மானநற்கிளைஞர்யாருமளவளாயமர்ந்துதுன்னுத்
தேனவிழ்துழாய்மால்பத்திசிவபத்தியென்னுமின்சொன்
ஞானயோகினிகடாமுநயந்தவண்வரலுற்றால். (கஅ)

இடபவாகனத்தின்மேலுமிருஞ்சிறைவயினதேயன்
பிடரினுமன்னமாதர்பிறப்படியார்க்குத்தீர்க்கு
நடைபயில்சரண்வைத்தாங்கேநண்ணினர்நண்ணலோடுங்
கடலமர்ந்தனையநீராரனைவருங்கண்ணுற்றால். (கக)

கண்டனரெழுந்துதங்கள்கதிர்மணிமுடியிற்செங்கைப்
புண்டரீகங்கள்கூப்பிப்பொருக்கெனவெதிர்ந்துநாவிற்
பண்டருமறைகள்பாடிப்பரவினர்வரவுநோக்கி
யெண்டருமூர்திமாற்றியிருவருமவிரைவிற்சேர்ந்தார். (உ0)

திருந்துமானதனுங்கிட்டசிந்தையாமணிப்பொற்பீடத்
திருந்தனரருகேசிற்குமின்சொனுமகளைநோக்கிப்
பரிந்திவணிருத்தியென்னப்பணித்தனரருட்கணேக்கம்
புரிந்தனர்பின்னுஞ்சூழ்ந்தபுண்ணியர்பிறர்க்குமன்னே. (உக)

சொன்னயோகினிகடம்மைத்தொழுதுநன்னிவிர்த்திகேள்வ
னன்னையீர்நும்மையான்பண்டறிவுறுநவையுநீக்கி
மன்னுசீரொளிபெற்கிந்தமக்கடம்பொருட்டாலெய்தற்
கென்னமாதவமோசெய்ததென்னகக்குடிலதென்றான். (உஉ)

ஆயவரதுசொலாமுனவரருள்பெறுவிவேகன்
றாயருகணையக்கண்டகன்றெனச்சார்ந்துபோற்றித்
தீயவெவ்வினைகள்யாவுந்தீர்ந்திவரருளாலின்ப
மேயினனென்றுத்தாதைக்கவையெலாம்விரித்துச்சொன்னான்.

நன்றெனவியந்துகேட்டநாயகன்விவேகனென்னுந்
தன்றிருமகளைநோக்கித்தமியனைப்பிரிந்துநீ*தான்
சென்றபினினையயன்பாற்றிருமணஞ்செய்தேனென்ற
மன்றலங்கோதையிங்குவந்திலள்கொல்லோவென்றான். (உச)

திருந்துபதிட்டைதயாமத்தேவியைக்கீதையென்னு
மருந்திறுமினியபாங்கிதன்னொடும்வைத்தேன்யான்பண்
டருந்தவம்புரிந்தராடாபுரத்தினின்னருளினாலங்
கிருந்தனரன்னலாருமிவண்வரப்புரிவேனென்ன. (உரு)

சத்துவன்மகளைநோக்கித்தருதியீண்டவளையென்ன
வுத்தமர்பெருமான்கூறவுரைத்தசொற்சிரத்திலேந்தி
மெய்த்தலமதனிலெய்திவிளங்கிழையிருக்கைசார்ந்தப்
புத்தமுதனையாளாங்குநிகழ்ந்தமைபுகல்வதானாள். (உசா)

௸ வேறு.

மோகனுதியருமவன்கிளைஞரும்வெஞ்சமர்க்களத்தின்முருங்கப்போர்செய், சேதகநாயகனுநம்மிறைவனுமெய்த்துணைவருமற்றெவரும்வெற்றி, வாகைமாலிகைபுனைந்துமானதனுந்தாதையையுமருவிப்பத்தி, யோகநாரியர்துணைகொண்டுறைந்தனராற்சோபனமீதுற்றதம்மா. (உஎ)

மங்கையுனையின்றகலமகளுமவனுற்றனளுன் மாமன்காண்டற்,கங்குவரக்கொணருதியென்றரசனெனைப்பணித்தனனீதடுத்

* கான் எனவும் பாடம்.

ததென்னுப், பைங்கிளியப்புனிதைமகள்பகர்ந்தசொற்கேட்டனு முவகைப்பரவைதன்னுட், பொங்கியெழமுகமலரப்புண்டரிகன் மகளுடலம்பூரித்தாளால். (உ௮)

புனிதைமகட்கின்சொலெனுந்தெள்ளமுதூட்டியருட்பொற் பூண்பூட்டிக், கனியுமுளத்தன்பினெடுந்தழுவியுடனீழலெனக்க ணமுநீங்கா, வினியமொழிக்கிளையொடுமிறைவன்விடுந்தூதியொ டுமெழுந்துபன்னுட், டனியிருந்ததுயரகலத்தவத்தினர்நாவெனு ஞ்சிவிகைதன்னில்வந்தாள். (உ௯)

வருசிவிகையிழிந்தவையிலிருந்தவர்கண்களிகூரவந்துமூர்த்தி யிருதிறயோகினிகடமைவணங்கி மலர்வாணியையுமிறைஞ்சித்த ன்பாற், கருணைமிகுமாமனையுமுடிதாழ்ந்துமிவிர்த்திபதகமலஞ் சூடி, யொருதனிநாயகனையுந்தன்னுள்ளத்தாற்பணிந்தயல்வந்து ற்றுண்மன்னே. (௩௦)

அப்பொழுதுகண்டுகளித்தகமகிழுமானதஞமரசைநோக்கி யிப்புவனம்போற்றுசிவபத்தியரிபத்திநல்லாரினிநீயுன்றன், மெ ய்ப்புதல்வனுந்திறல்விவேகனைமாமுடி சூட்டிவிண்ணுமண்ணுஞ் செப்பருநல்லரசாட்சிச் செங்கோன்மைசெலுத்தும்வகைசெய்தி யென்றூர். (௩௧)

## கலி விருத்தம்.

கேட்டனுமவ்வுரைகிளருமானதன்
கோட்டமிலுவகைமீக்கொண்டுமுண்டகத்
தாட்டுணையோகினித்தையலார்தமை
மீட்டும்வந்திறைஞ்சினனிவைவிளம்பினன். (௩௨)

ஒருவர்க்குமிலையவனுள்ளன்பென்னலாம்
பெருமைத்தன்னியல்விடாப்பிரகலாதற்குந்
தருமத்தினின்றவீடணற்குந்தாழ்வுறுத்
துருவற்குமணிமுடிசூட்டுவித்ததும். (௩௩)

மெய்த்தவம்புரிந்துயர்மிருண்டுமாமுனி
புத்திரன்றனக்குமோர்புரவித்தாமற்கு
முத்தமத்தண்டியாதியர்க்குமொப்பிலா
நித்தியத்துவந்தந்தார்நீவிரேயன்றே. (௩௪)

ஆங்கவர்தமக்குமுன்னருள்புரிந்தவா
றீங்கெளியேன்பெறுமியல்விவேகற்கு
நீங்கணற்கருணையானிகரின்மாமுடி
தாங்குறப்பணித்ததென்றவத்தின்பேறரோ. (௩௫)

எனவிவைபகர்ந்துதன்னிதயமண்டபம்
புனிதவெண்சுதையினுற்புதுக்கிப்புண்ணிய
வினையெனும்படங்களான்மேல்விதானஞ்செய்
தனகனேன்பெனுமலரலங்கனுற்றியே. (௩௬)

தெரிதருகல்வியாஞ்செம்பொன்மாமணி
யரியணையதனடுவமைத்துத்தேற்றமா
மெரிசுடர்மணிவிளக்கேற்றியேற்பன
புரிதியென்றுழையராற்புரிவித்தானரோ. (௩௭)

அத்திருமண்டபத்தரியமால்சிவ
பத்தியர்நாமகளுடனோர்பாலுற
முத்திளநகைமதிமுகநிவிர்த்திதன்
புத்திரரினத்தொடோர்புடையிற்றுன்னவே. (௩௮)

கருணையுமுதிதையுமுபேட்சைக்காந்தையு
மருவுநன்னீதியுமயித்திரிச்செழுந்
திருவுமம்மடந்தையர்திருமணுளரு
மொருபுடைகண்களித்துவகைகூறவே. (௩௯)

மக்களுமகளிருமற்றுளோர்களுந்
தொக்கனரருகுறச்சுமதித்தோகையு
மிக்கநல்லுபநிடமின்னும்வேந்தனுந்
தக்கவரருட்கடறன்னின்மூழ்கியே. (௪0)

தந்தமக்குரியபூந்துகிலுஞ்சாந்தமுங்
கந்தநாறலங்கலுங்கதிரிமைத்தசீ
ரந்தமில்கலன்களுமணிந்துபாங்குற
வந்தனரரியணையதனின்வைகினர். (௪௧)

சதுமறைப்பேரிகைதடாரிதண்ணுமை
யதிர்குரற்படகமெம்மருங்குமார்ப்புற
விதிமுறையியன்றதோர்கொற்றவெண்குடை
யெதிரிலாநிருபகனினிதினேந்தவே. (௪௨)

மேதகுபொறையனும்விறல்விராகனுங்
காதலித்திருபுடைகவரிவீசிடத்
தாதவிழ்தாமணைத்தாதைமான தன்
மாதவராசியாமவுலிசூட்டினன். (சரு)

ஆர்த்தனசிவகதையரிதன்னுமசங்
கீர்த்தனமங்களகீதத்தோடுமே
போர்த்தனபுவியெலாம்புலவர்பூமழை
தூர்த்தனர்முனிவரரெழுந்துதுள்ளினர். (சச)

திருமுடிவிவேகர்கோன்சிரத்திற்சூட்டுவித்
தருளெனுந்தம்பொருளவனகத்தில்வைத்
தொருமலர்வாணியுமுயர்ந்தபத்திக
ளிருவருமவனிடத்தினிதின்வாழ்வுற்ருர். (சரு)

அந்தணரறுதொழிலவையுமாதியாய்
வந்தநல்லறங்களுமகத்தின்செய்கையுந்
தந்தருடானமுந்தவமும்யாவருஞ்
சிந்தையிற்பயன்குறியாமற்செய்கின்ருர். (சசு)

பண்டதிமோகனற்பார்விட்டோடிய
வெண்டிசைக்காவலர்முதலெத்தேவரு
மொண்டிறல்விவேகவேந்துரிமைமேவலான்
மண்டலத்தெய்திநல்வாழ்வின்வைகினர். (சஎ)

இருநிலந்தழையவெவ்வளமும்வாய்ப்பவான்
கருமுகில்பொழிந்தனகறவைபல்கின
பொருபகைதவிர்ந்தடுபுலிபுல்வாயொடு
மொருதுறைபுகுந்துநல்லுதகமுண்டதால். (சஅ)

படித்தலமகட்கதிபாரநீங்கிமெய்
தடித்தனவாதலிற்சற்பராசன்பன்
முடித்தலங்களுக்கலர்முடித்ததொத்தலாற்
பிடித்தபேர்பூவெனப்பிடித்ததின்றுமே. (சகூ)

பொறைவயிராக்கியன்புனிதன்சத்திய
னிறைசமன்றமன்றவனியாயனிச்சய
னிறைமரியாதைநல்லடக்கன்யாவரு
மறைகடலுலகெலாம்படர்ந்தளாவினர். (ரு௦)

அதிரும்வன் பகைதொலைத்தறிஞர்கோமகன்
கதிர்முடிபுனைந்தபின் கரியகோளரா
வெதிருறவிழுங்கியதிகழ்ந்துகான்றவெண்
மதியெனப்பொலிந்ததிவ்வையம்யாவுமே. (௫௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தாயெனுநிவிர்த்தியோடுந்தந்தைசேர்ந்துவகைகூர
மேயநற்சுமதிமேலும்வியனுபநிடதைமேலு
நேயமுற்றறிஞர்கோமானிருபகன்முதலோர்சூழத்
தூயசெங்கோனடாத்திதொல்லறம்புரக்குநாளில். (௫௨)

விவேகன் முடிசூடுசருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௧௭௮௬.

---

## ௩௮ - வது, மாயைச் சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரைந்தொருதூதனஞ்ஞன்வீற்றிருந்தினிதுவாழும்
புரந்தனிலணுகியன்னான்புனைகழற்பாதம்போற்றி
யுரந்தருநமரெல்லோருமொருங்கினர்சமரிலென்னா
வரந்தையோர்வடிவமாகுமவன்றனக்கறியச்சொன்னான். (௧)

அவ்வுரைவினவலோடுமசனியேறிடிப்பக்கேட்ட
வெவ்வரவென்னச்சோர்ந்துமெய்துணுக்கிட்டுவிம்மிக்
கவ்வையங்கடலுளாழ்ந்துகருத்தொருவண்ணந்தேறி
யெவ்வகையுற்றதாரேயிறந்தவர்புகறியென்றான். (௨)

சொன்னசொற்கேட்டதூதன்றுன்மதிகேள்வன்காசி
நன்னகரின்கணுற்றதாதியாய்நடந்தவெல்லா
மின்னவையென்றுவாருமிறந்தவைபிறுதியாக
மன்னவன்மருமான்கேட்பவகைவகையாகச்சொன்னான். (௩)

தாயருந்தன்னையீன்றதாதையுங்காமனாதி
யாயபல்கிளைஞர்தாமுமறிஞர்தம்படையான்மாண்டு
போயினரென்றதீச்சொற்செவியிடைப்போர்வேலென்னப்
பாயவுள்ளுடைந்துமீட்டும்படிமிசைப்பதைத்துவீழ்ந்தான். (௪)

இறந்தனன்றானுமென்னவேங்கினனுணர்வோடங்க
மறந்தனனுயிர்ப்புவீங்கிமயங்கினன்முகிழ்த்தநாட்டந்
திறந்தனன்கண்ணீர்வெள்ளந்தேக்கினன்றுயர்பொருமற்
பறந்தனன்மனமாமந்தப்பாட்டனெங்குளனேவென்றான். (௫)

என்றசொற்கேட்டதூதனிறைவகேளுன்முதாதை
நன்றறிநிவிர்த்தியோடுநயந்துநன்மக்கடம்பா
லொன்றினனன்னசெல்வருக்கபோர்க்களத்தூடேங்கிப்
பின்றுயர்பொருமல்வீழ்ந்தாள்பிரவிர்த்திமாதுமென்றான். (௬)

அந்தவெம்மொழிகேளாமுனரங்கினூடாட்டுவிக்கு
மெந்திரியிழந்தபாவையெனவுமீகாமன்மாற்றான்
றந்திரக்கலத்திற்பாயத்தனித்துழல்வங்கம்போன்றுஞ்
சிந்தைநொந்தயர்ந்துதேறியினையனசிந்தைசெய்தான். (எ)

மறந்தருமெனதுதிண்டோள்வலியுஞ்செய்வஞ்சந்தானுந்
திறந்தருமென்பாலென்றுந்திமிரம்போன்றிருப்பதுண்டா
லறந்தவிர்தாதைதமோகனுதியாயடுவெம்போரி
லிறந்தவர்தம்மையெல்லாமெழுப்புவன்யானேயென்னா. (அ)

அங்கவன்றன்னுட்டானேயடுபகைதொலைத்தற்குன்னிப்
பொங்கிடாப்புணரிநீந்தப்புணையொன்றுபெற்றுளான்போற்
றுங்கவன்மாயையுண்டாற்றுணையெனத்துணிவினோடுஞ்
சிங்கவெங்குருளைபோலுஞ்சேயவடிறத்திற்சென்றான். (௯)

தந்தையையீன்றதாதைதாயெனுமாயைதன்பால்
வந்தனன்கடுங்காருக்கமண்ணில்வீழ்மரம்போலன்னா
ளந்தளிரடியில்வீழ்ந்தானவளெடுத்தணைத்தேயாதுன்
சிந்தையிற்றுயரமென்றாளென்றறலுஞ்செப்பலுற்றான். (௧௦)

வரந்தருநின்சேய்பண்டுன்வாய்மையயானவத்துவார
புரந்தொறுந்தாதைதன்னைப்புன்சிறைசெய்துமாறு
வுரந்தருவிவேகன்மாற்றமுட்கொளாதகற்றியெந்தைக்
கரந்தையின்மௌலிவேய்ந்ததனைத்துநீயறிதியன்றே. (௧௧)

இவர்ந்தநல்விவேகன்பின்னையிளைஞருந்தாயுந்தானுந்
தவம்புரிகானத்தெய்தச்சகமெந்தையாளுங்காலை
யுவந்தயோகினிகடம்மாலுபநிடமாதைவேட்டு
நிவந்தபல்படைஞரோடுநெருங்கிவந்தமரினேற்றான். (௧௨)

வருமவர்தம்மோடெந்தைமாரனாதியரோடெய்திச்
செருமலைகின்றகாலைச்செறுநராமனையர்தம்மாற்
பெருவலியாவுங்குன்றிப்பிரவிர்த்திகிளையில்பானிங்
கொருவனேயொழியமாய்ந்தாருள்ளவரெவருமம்மா. (௧௩)

ஆண்டடுகளத்திலெய்தியனைவரையின்றுடானு
மாண்டனள்வாணியாலுன்மகனுநன்மக்கடம்பான்
மீண்டருள்விவேகனார்க்குவியன்முடிசூட்டிநேயம்
பூண்டனனீயேயன்றிப்புகலெனக்கினிவேறுண்டோ. (௧௪)

சோதிடமுணர்ந்தோர்பண்டேசொற்றனரனையதுண்மை
யாதலின்றெமரையெல்லாமறிஞர்கொன்றமையாற்கண்டேன்
மாதுபநிடதைபாலோர்மகனுமுற்பவிப்பன்யானுஞ்
சாதலங்கவனாற்றிண்ணமென்றதுந்தப்புறாதே. (௧௫)

அருட்கிளர்படைஞரீட்டமம்புவிமுழுதுமோங்கிப்
பொருக்கெனவடர்ந்தவித்யாபுரத்தையும்பொடிநீறாக
நெருக்கினரினியுன்கேள்வனெடும்பிணிப்பினையுநீங்கப்
பிரிக்குநராகிநின்றாருற்றதிப்பெற்றியென்றான். (௧௬)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அங்கவன்புகல்கின்றவாய்மையனைத்துமாயையணங்குதன்
றுங்கவன்செவியுட்புகாமுனுளஞ்சிநெஞ்சுதுணுக்கிடப்
பங்கயம்பனியுற்றதென்னமுகங்கரிந்துபதைத்துமெய்
யெங்கணுங்குலையக்குலைந்துவெதும்பிவிம்மியிரங்கியே. (௧௭)

அத்தகைத்துயரத்தினைத்தனகத்தடக்கியவ்வஞ்ஞானைக்
கைத்தலத்துறமீட்டுமார்பிலணைத்துநெஞ்சுகலங்கனீ
யெத்திறத்தினுமேவிவேகனிணங்கியவ்வுபநிடதைபாற்
புத்திரப்பொருளெய்திடாவகைபுரிவனென்றுபுகன்றரோ. (௧௮)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

செஞ்சொனாமகடுணைவேதச்சிறுவர்மீமாஞ்சன்றிறல்கூர்தர்க்கன், விஞ்சுசாங்கியனியோகனெனுமிவர்நால்வருஞ்சம்புவிண்டுபத்தி, யஞ்சொலாரீன்றசைவன்வயிணவனுமினையருந்தன்னருகினெய்த, மஞ்சுநேர்குழன்மாயைமதித்தனளப்பொழுதனையர்வந்துசார்ந்தார். (௧௯)

அன்னவரைநோக்கியவளடிநாளிலியான்முயன்றதறியீர்போலு, மென்னருமைமைந்தனெனுமானதனாலென்மகிழ்நனியல்பு

மாற்றிப், பின்னமுறவுடல்கடொறும்பிணித்ததெல்லாமியாமெ
வரும்பிழைக்கவன்றே, சொன்னபணிமுனமுடித்தசுதனுமென
துரைமறுத்தாற்சொல்வதென்னே. (உ௦)

மூத்தமனையாட்டிமுடிந்தமையாலென்மகனெனதுமொழியு
மாற்றிப், பூத்தமலர்த் திருவனைய நிவிர்த்தியெனுமிளையவடன்
போகந்துய்த்தா,னேத்துமவன் மதலைவிவேகனுக்குரியமூத்தவில்
லாளிருந்தும்வாளா, நாத்திறல்கொண் டுலகழிக்கு முபநிடதக்
கொடியவளைநயத்தனன்றே. (உக)

கலைமாதுதந்தவுபநிடதையையன்ஞன்முயன்றுகடிமணஞ்செய்
தலைநாளிலனைவீருமிதுதகாதென்றுரைத்துத்தடுத்தீரில்லை[ன்றே
மலையாமல்வருவதன்முன்காவாதார்வாழ்வனன்முன் வைத்தூற
வுலையாமலினியேனுமுய்யும்வகைகேண்மினெனவுரைப்பதானாள்.

அந்தவிவேகனையணுகியனைவீருமுபநிடதவணங்கனாள்பாற்
சிந்தைமகிழ்பிரபோதன்செனியாம லவள்போகந்திளைத்தன்மா
ற்றித், தந்திரவூகங்கள்பல சாதித்துநுமதியலிற்சாரும்வண்ண
மெந்தவகை யேனுமினி யியற்றுமென்றா ளவரதுகேட் டினைய
சொன்னார். (உங)

அன்னைநீபகர்ந்ததுண்மையிவையனைத்துமடிநாளிலறிந்திலே
ம்யா, மன்னனுமகண்மகள்பால்வைத்தவிருப்பினையினியார்மா
ற்றவல்லார், முன்னரேநீயுமிதுமொழிந்திலையித்திறமெம்மான்
முடியாதேனுஞ், சொன்னவாய்மொழிசிரத்திற்சூடினமென்றெ
ழுந்தனர்கைதொழுதுபோனார். (உச)

அத்தகையரறுவருடனஞ்ஞானுமங்கவள்பணியாலணுகிவாயில்
வித்தகர்நீ ருரைத்திரியல் வேந்தனுக்கெம் வரவென்று விளம்ப
லோடு, முத்தமர்கோன்றனக்கனையரவ்வாறுபுகன்றவன்சொனு
ரைமேற்கொண்டு, புத்தமுதமனையவன்பாற்போதிரென்றானன்
னவரும்புகுதல்செய்தார். (உரு)

சுமதியெழில்கண்டுகளித்துபநிடதைமதுரமொழிச்சுவைத்
தேன்மாந்தி, யமைதிபெறும்வேதாந்திபுகழ்நிருபகன்பொறை
யனடக்கன்மெய்யன், சமதமராதியர்சூழத்தனியரசுவீற்றிருந்த
தலைவன்றன்னை, யெமதுவிழிபெறும்பேறின்றெய்தியதென்றெ
திர்நோக்கியிறைஞ்சிச்சொல்வார். (உசா)

எப்பொருளுந்தெரிந்ததிறத்தறிஞர்பிரானீயுனக்கிங்கெம்ம ஞோர்கள், செப்புவதோர்பொருளுளதன்ருயினும்யாம்புகன்ற மொழிசிந்தையுட்கொண், டப்பரிசுபுரிவதுவேயரசியலென்ருர் புகன்மினவ்வாறென்று, வொப்பரியோன்வினவுதலுமனேவோ ரும்வணங்கியிவையுரைப்பதானுர். (உஎ)

கழையினெடுகழையுரிஞ்சப்பிறந்தகனல்கிளையடங்கக்காய்வ தேபோன், மழையளகவுபநிடதைவனமுலையுமுனதுதிருமணி ப்பொற்றோளும், விழையுநலத்தாலுதிப்பன்மெய்ப்புதல்வனப்பு தல்வன்மேவிலன்றே, பிழைபுரிவதுனக்குமட்டோகுலமுழுதுங் கால்சாயப்பெயர்ப்பனன்றே. (உஅ)

ஆதலா லவளிடத்தி லன்புறுநின் சிந்தனையை யகற்றி மிக்க காதலாமியற்சுமதி யொடுங்கலந்திங் கெமதுரைநின் கருத்துட் கோட,ஙீதியாமென்றிதனைநிகழ்த்திஞர்நிகழ்த்தலும்பின்னிருப ன்கேட்ப, வோதிஞன்மீமாஞ்சரிற்பட்டாசாரியனு மொருவன் ருனே. (உகூ)

ஷை வேறு.

இறையவனன்றிவேதமியம்பியவகையால்வேள்வி
நெறியுடன்புரிவராயினீடியசுவர்க்கமெய்தி
முறைபெறுபோகந்துய்த்துமுசிப்பின்றிவாழ்தல்வாழ்வென்
றறைசயிமினிநன்னூலினடைவிதென்றிணயசொன்னுன். (௩௦)

மாயைச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கஅகசு.

---

### ௩க - வது, மீமாஞ்சச்சருக்கம்.

———:(⌣):———

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உயர்வினையதிட்டத்தாருக்குபயகாரணத்தினுண்டாய்
வியன்விசும்பாதிவையம்வித்துமங்குரமும்போல்வாய்த்
தயர்வினீரொழுக்கமேபோலனுதியாய்த்தோன்றிவைகி
யியலுறவிறுமித்தன்மைக்கில்லையோரிறைவனன்றே. (க)

அந்தரத்தமரர்மற்றையபிதானம்பயன்கொடாமற்
றந்திரச்சுருதியோதுந்தனிப்பெயர்கொடுத்தலாலே
யிந்திரற்கென்பதாதியாய்மகத்தெடுத்துச்சொல்லு
மந்திரச்சொற்களல்லால்வானவரில்லைமாதோ. (உ)

காணுதல்கருதலொப்புக்கட்டுரைபொருளபாவ
மேனுறுபிரமாணங்களிவையாறேமறைகணித்தம்
வேணுவினிசைகாற்றின்றிவெளிப்படாததுபோல்வேதம்
பூணுறுதாலோட்டாதியின்மையேற்புலப்படாதே. (ங)

அடைந்திடுகாமமாதியறிவினைவிலக்கும்போதத்
திடந்தருமவைகளென்னிற்றிவ்வியவேதம்பொய்யாந்
தொடர்ந்திடுமறிவெவ்வேதந்தொகுக்குமச்சுருதியின்றேன்
மடந்தருமூங்கையோடுமழவும்போன்மண்ணையாமால். (ச)

புண்ணியமுனிவர்சித்தர்புராதனமறையையேனை
மண்ணவர்முதலாயுள்ளோர்வழிவழியோதாநிற்பர்
திண்ணிதிஞெருவராலுஞ்செப்பியதென்னவொண்ணு
தெண்ணருமறுமைதன்னையிசைத்திடுமாதலாலே. (ரு)

வழுவிருதுக்கண்மற்றைறவகுத்திடும்பிரத்யயங்கள்
பழுதிலதாம்பிராதிபதிகமாமுறுப்பும்பற்றி
மொழிவதுவேதமந்தமுறைமையாலதனையோதி
லழிவிலாதாகுஞ்சொர்க்கமடைவதுதிடமதாமே. (சு)

உரியவாமங்கமாறுமுபவேதமூன்றுந்தன்னுண்
மருவுமாறடக்கிவேறுமடுத்திடாவகைமைத்தாகிப்
புரிவதுதோற்றநாசம்பொருந்துவதின்றியென்றுந்
தெரியிலோரியல்பாயெங்குஞ்செல்வதாந்தெய்வவேதம். (எ)

மேவியசிட்சைகற்பம்வியாகரணந்நிருத்தந்
தாவில்சோதிடநூல்சந்தஞ்சாற்றுமவ்வாறுமங்க
நோவுறுவாயுள்வேதநோக்குடைத்தனுவின்வேத
மோவில்காந்தருவவேதமுபவேதமிவைமூன்றுமால். (அ)

மந்திரமனைத்துமோதும்வழுவிலாவிருக்குவேதந்
தந்திரமகங்கள்சொல்லுந்தனித்தயித்திரியவேத
மிந்தவோரிரண்டுஞ்சாற்றுமேழிசைச்சாமவேத
மந்தமில்வேந்தர்க்கேய்ந்ததர்வணவேதமாமால். (கூ)

ஆருயிர்நித்தமாகியறிவுடைத்தாய்நிறைந்தே
சீரிதிலநேகமாகித்தெருண்மருள்சேர்வதாகி
நேரியவருவமாகிநீள்வினைக்கேற்றகாய
மேருடனியைந்தியாவுமிந்தியத்தறிவதாமே. (௧௦)

தூலகன்மங்கள்கெட்டுச்சூக்குமவினையான்மாவை
யேனுமாறுற்றுநின்றேயின்பதுன்பங்கணல்கு
ஞாலமீதெருக்கள்கெட்டுநலங்கெழுவயலின்வைகி
மேலிடும்பைங்கூழ்தன்னைவிளைத்திடும்விதமேபோல. (௧௧)

பத்திமைச்செய்கையாவும்பகரினும்வயிராகத்தை
வித்தரித்துரைசெய்தாலும்மெய்ஞ்ஞானம்விளம்பினாலு
முத்தமப்பிரமத்துண்மையுணர்த்தினுஞ்சுருதியெல்லாஞ்
சுத்தநற்கருமஞ்செய்தற்கேதுவாய்ச்சொல்லுமன்றே. (௧௨)

நலத்தகுகருமநித்தநைமித்தங்காமியங்கள்
விலக்கொடுபிராயச்சித்தமெனவைந்துவினைகள்யாவு
மூலப்பருந்துன்பகோடியொழித்தொழியாதவின்பப்
பலத்தினைச்சிவகோடியனைத்துக்கும்பயக்குமன்றே. (௧௩)

இவற்றுணித்தியகன்மங்களிரும்புனலாடல்சந்தி
செவத்தொழிலோமந்தேவதற்பணம்வைச்வதேவ
மூவப்புறும்விருந்தாதானமிட்டியக்கினிட்டோமங்க
ணவப்பசுபந்தமுத்தீயாதியாய்நடப்பதாமே. (௧௪)

அயனங்கள்விசுக்கள்சங்கிராந்திகளுபராகங்கள்
பயன்மூந்துபுட்கலங்கள்பருவமர்த்தோதயங்க
ணயம்வந்தமகோதயங்கணண்ணுநாணன்னீராடல்
வியனுந்துதானமாதிவிழைதனைமித்தமாமே. (௧௫)

அயமேதமிராசசூயமடற்பவுண்டரிகமாதி
வியன்வேள்விசோமவாரவிரதாதியினையவெல்லா
முயர்காமியங்களாகுமுணர்வழிகளஞ்சமுண்ட
லியன்மேவுபிறனில்வேட்கையின்னனவிலக்கதாமே. (௧௬)

அனசனம்பராகஞ்சாந்திராயணங்கிருச்சிரந்தண்
புனலிடைக்கிடத்தல்வாயுப்பொசித்திடலுமித்தீநிற்றல்
சினகரம்விளக்கறாயதீர்த்தயாத்திரைகளாதி
யினையனபிராயச்சித்தமெனவெடுத்தியம்பலாலே. (கஎ)

நித்தநைமித்யஞ்சீவனின்றிடுமளவுஞ்செய்தாற்
றுய்த்திடும்பிராரத்தங்கடொலைந்திடுங்காமியத்தான்
மெய்த்திடுஞ்சுவர்க்கமேவும்விலக்கினைவிடிலாகாம்யத்
தத்தறும்பிராயச்சித்தஞ்சஞ்சிதந்தவிர்க்குமன்றே. (கஅ)

சஞ்சிதாதிகளாம்பந்தந்தன்னையைங்கருமத்தாலும்
பஞ்சுதீயுற்றதென்னப்பாறுவித்தெக்காலத்து
மெஞ்சுறாச்சுவர்க்கமெய்தியினிதுவீற்றிருத்தறானே
துஞ்சுறாமுத்தியீதேசுருதியின்முடிவாமென்றே. (ககூ)

கருமத்தாலுலகந்தோன்றுங்கடவுளென்றொருவனில்லை
சுருதிச்சொல்லொருவன்சொற்றதன்றுநற்சுவர்க்கமுத்தி
தெரிவுற்றால்வினையினாகுஞ்சிதைவுறாதெனுமீமாஞ்சற்
கொருமைத்தாயுணர்வேதாந்தியின்னனவுரைப்பதானுன். (உ௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காரணங்கள்சடமாதலா லொருகருத்த னின்றியவை கண்ணுறு
வாரநின்றுபிரதிட்ட மூட்டுமெனிலன்ன தற்குமறி வின்மையாற்
சேருமென்றுரைசெய்காரணங்க ளொடுசேர்ப்பதென்றிடுமதிட்
டமு, மோரிலொன்றுவதிலாமையாலிறைவனொருவனுளதிவ்
வுலகமே. (உக)

நாசமானவினைபின்னுநின்றுபலனல்குமாறெருமடிந்துபின்
வீசிநீள்பயிர்விளைப்பதொக்குமெனில்வேள்வியின்பயனவ்வேள்
விசெய், தேசமூடுநவவேண்டுமன்றியுபசேதனங்கருமமாதலா
லீசன்வேண்டும்வினைகண்டதற்குரியகூலிநல்குமவ னென்னவே.

வேதமானதுசுயம்புவென்றனைசுயம்புவென்றுமறைவிண்டதே
லோதுவேறுபிரமாண முண்டெனினுமுரைசெய்பாரதமுமொரு
சுயம், பாதல்கூறிலைசொல்லாகையாலொருவனறைதல்வேண்டு
முறுகாரியம், பேதையாய்தனிவருங்கொல்பேசின்மறையீசன்
வாக்கிடைபிறந்ததே. (உங)

அந்தவீசனுமொர்புருடனாதலினராகமாதிகுணமவனையும் [வன்
வந்துசூழுமதனாலவன்சொன்மறை வாய்மையன்றெனிலவ்வான
முந்துகாமமுதன்மூன்று நீங்கினவன்முழுதுணர்ந்தபரனருளினா
ற்,றந்ததாதலினவ்வேதமென்றுமொருதவறிலாததிதுசரதமே.()

பரமகாரணரகண்டபூரணர்பரஞ்சுடர்ப்பிரமமாயினோர்
வரகுணாலயரெனாவொருத்தருளரென்பதற்குமறைவாய்மையுங்
கருதுமாகமபுராணமோடுமிதிகாசமாதிபலகலைகளும்
பிரிவிலாதவநுமானமும்பெரியர்பேசுகின்றபிரமாணமே. (உரு)

வேதமானதொர்சுயம்புவான்முறைவிளம்பவந்தமையிலனைய
தும், பேதைகேளதுசுயம்புவென்றபெயர்பெற்றதாலரசர்திருமு
கத், தோதுவாய்மொழிவரைந்தவோலையையிவ்வுலகுளோர்கடி
ருமுகமெனக்,காதல்கூரவெதிர்கொண்டு கைதொழுதுகைக்கொ
ளுந்தகைமைகாண்டியால். (உசு)

அனையகாரணமுமவயவஞ்செறிபிலழிவுறுங்கடபடாதிபோற்
புனையுமன்னவவயவம தின்மைபெறி லொன்றொ டொன்றவை
பொருந்துறா, தினையதன்மையினிவ்வுலகுறுந்தகைமையில்லைவித்
துமுளைமாரியா,னனியரும்பிழுதுவேனிலாவிறலினண்ணிமுற்று
மிறுஞாலமே. (உஎ)

எங்குநிற்குமுயிரென்னினாழின்வலியெய்திநின்றழிதலின்மை
யாந்,தங்குநிற்குமுடலிற்கடத்தின்மலர்தந்தவாசமதுபோலெனி
ற்,பங்கமுற்றபொழுதெங்கணிற்குமுயிர்பரம யோகிபரகாயமா
மங்கணுற்றுவரலுந்தெரிந்திலையறிந்திலாய்சுருதியடைவுமே. ()

அன்னசிவனுயர்சொற்கபோகமுறலழிவின்முத்தியெனிலனை
யதும்,பின்னமாயழிவுறுங்கடாதியெனவினையினால்வருதல்பெறு
தலா, லின்னபான்மையினின்முத்திநித்தியநிரதிசயம்மெனவெடு
த்துமுற், சொன்னவேதமொடுமாறுகோடலுமுணர்ந்திலாயிது
கொல்சூழ்ச்சியே. (உகூ)

இன்பதுன்பமவைவேறுவேறுடலிருத்தலானுயிரனேகமென்
றன்பொடும்புகலிலொன்றதாமெனினுமந்தரிந்த்ரியவுபாதியாற்
பின்பனந்தவிதமென வயங்குதலலாதுதன்னுடையபெற்றியான்
முன்பகர்ந்தவுபிரேகமல்லதிலையென்னுமான்மறையின்முடிவுமே.

இழிவிலாதவினைசித்தசுத்திதருமின்பமுத்தியதுநல்குமோ
வழுவிலாதமறைமுடிவுணர்ந்துமுறைவந்தஞானநெறிவந்துநீ
விழைவதாகியவபெத்தமுத்திதனைமேவிவாழ்தியெனவணையனு
மழலும்வாளரவுபாதிவிட்டுமிழவவிரும்வெண்மதியமாகினன்.()

ஈசனும்மொருவனுண்டுலோகமுமவ்விறைவனுளதுகன்மமு
மாசிலாவவனையன்றியேபயன்வழங்குமாறுமிலைமுத்தியு
மாசிலாதவதனல்வரப்பெறுவதன்றெனவிவையனைத்தையும்[ன்.
பேசினனெதிரெழுஞ்சமுச்சயனெனச்சொல்வானிவைபிதற்றினு

மீமாஞ்சகச்சருக்கம் முற்றிற்று.

ஆகூ விருத்தம் - கஅசஅ.

## சo-வது, சமுச்சயன்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பறவைவரிச்சிறையிரண்டாற்பனிவிசும்பிற்படர்வதுபோற்
பயனெண்ணும, விறையவனுக்கர்ப்பிதமாயெழுதரும்வேதாகம
ங்களியம்பாநின்ற, பெறலருநற்கருமமுமேலகண்டசச்சிதானந்
தப்பிரமஞானத், துறுதியுமாமிரண்டாலுமுயிர்களின்பவீடுபுகு
ந்துறையுமென்றான். (க)

ஈதுசொலக்கேட்டவுபகிடதைமுன்னோன்சமுச்சயனையெதி
ரேநோக்கித், தீதில்கருமத்தின்முத்திவிளையுமென்றாற்கருமத்தா
ற்செனித்தவெல்லா, மீதுயருமணிமாடகூடமுயர்செய்குன்றம்
விளங்குமேடை,யாதியினையனபலவுமழிவதுபோலொருகணத்தி
லழியுமன்றே. (உ)

அன்றியுநன்முத்திபெற்றோன்மீட்டுமிழிபவக்கடலினழுந்த
வேண்டு,மொன்றியகேவலன்மீளிற்பவத்தினுக்கும்வீட்டினுக்கு
முளதோபேத,மென்றுமிலைமுத்தருக்குச்செனனமென்றுமுத்தி
நித்தமென்றுஞ்சொன்ன, வென்றிகொண்மேலோர்மொழிக்கு
மறைவழிக்கும்பின்னுமதுவிருத்தமாமே. (ங)

மெய்யுணர்வாற்பெறும்வீடுங்கருமத்தால்விளைந்ததுபோல்
வீயுமென்றாற், பொய்யுணர்வையவ்வுணர்வுசெங்கதிரைமறைத்த
கரும்புயலைத்தாக்குந், துய்யசண்டமாருதம்போற்றுரப்பதல்லா
னித்தசுத்தசொருபமான,செய்யசச்சிதானந்தத்திகழொளியையு
ண்டாக்குந்திறத்ததன்றே. (ச)

பொங்கிருளுமொளியுமெனக்கருமமுஞானமுமொருங்கே
பொருந்துமாறு,மங்கியலாததுவுமன்றிஞானத்தாலலதுமுத்திய
டையாதென்ற, துங்கமறைவிருத்தமுமாஞ்சித்தசுத்திதனைக்கரு
மந்தோற்றுவித்தே, யிங்கதுமுத்தியுமியற்றுமெனிற்சுத்தியலது
முத்தியியற்றிடாதே. (௫)

கருமத்தாற்சித்தசுத்தியலதுமுத்தியெய்தாதுகலங்காமுத்தி
பொருமைத்தா ஞானத்தாலுளதெனும்வேதாந்திமுன்னரொளி
ருமாலைப், பருவத்தாரகைபோலச்சமுச்சயனுஞ்சிறிதுணர்வுபட
ராநின்றான், றருமத்தால்வழுவாதசாங்கியனுமாங்கிணையசாற்ற
லுற்றான். (௬)

சமுச்சயன்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ௧௮௫௪.

---

## ௪௧ - வது, சாங்கியமதச் சருக்கம்.

——*)⁖(*——

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரிதருகடலந்தானைமேதினியாதியாக
வுரைதருமுலகுக்கெல்லாமுபாதானமாகிநின்ற
பொருவருபகுதியீதுபுருடன்மற்றிணையனென்னக்
கருதிவேறாகிநிற்றல்கதியெனக்கபிலர்சொல்வார். (௧)

பன்னியவிரண்டிலந்தப்பகுதிமுக்குணமுநேராய்த்
துன்னியததனாலின்பதுன்பமோகங்களாகி
மன்னியிவ்வுலகந்தோன்றும்வகைமையாற்காரியத்தின்
றன்னியல்காரணத்திற்றானில்லாதெய்திடாதால். (௨)

சாற்றுமப்பகுதிரூபஞ்சடமுமாஞ்சலமுமாகுந்
தேற்றுமப்புருடரூபஞ்சேதனமசலமன்னாற்
கேற்றபோகங்கண்முத்தியீதற்குப்பகுதிவையந்
தோற்றுவித்தருளுந்தானேசுதந்தரமாகிநின்றே. (௩)

பகருமித்தன்மைத்தாயபகுதியின்வகைமைசாற்றிற்
புகரறுமூலமென்றும்புரியட்டகந்தானென்றும்
விகுதியதென்றுமூன்றாமீண்டதைப்பரமதென்றுந்
துகளறுசூக்கமென்றுந்தூலமதென்றுஞ்சொல்வார். (௪)

ஷ வேறு.

சித்தமூலமாமென்றுசெப்பும்புரியட்டகந்தெரிக்கிற்
சத்தமாதியோரைந்தாந்தன்மாத்திரையினோடுமனம்
புத்தியாங்காரமுமாகும்புகலும்விகுதிதேகாதிக்
கொத்ததாகும்பிரபஞ்சக்கூறுமெனக்கூறுவர்மாதோ. (௫)

நித்தமாகித்தானொன்றினின்றுந்தோன்றாமையினெவைக்கும்
வித்ததாகுமப்பகுதிவிகுதியாகாதெந்நாளும்
புத்தியொன்றாங்காரமொன்றுபுகலுந்தன்மாத்திரைகளைந்தோ
டொத்தவோரேழும்பகுதிவிகுதியென்னவுரைபெறுமே. (௬)

அந்தக்கரணமோரிரண்டுமறையிற்றன்மாத்திரைகளைந்து
முந்தப்பகுதிதனிற்றோன்றுமுறையால்விகுதியெனலாகும்
பிந்தப்பிறிதாம்விகாரந்தம்மிடத்திற்பிறக்கும்பெற்றியது
வந்துற்றிடலாற்பகுதியெனலாயுமிரண்டுவகையாமால். (௭)

மருவுமகங்காரத்தில்வருமனத்தினோடிந்தியங்கள்பத்தும்
பொருவிறன்மாத்திரைகளைந்திற்பூதமைந்துந்தோன்றுதலா
லொருவிலவையோர்பதினாறுமுரைக்கில்விகுதியல்லாமல்
விரவுபகுதியுடன்பகுதிவிகுதியாதன்மேவாவே. (௮)

புருடனொன்றிற்றோன்றாதுபோதுமதனாலவனிடத்தில்
வருதலொன்றுமின்மையினான்மதிக்கில்விகுதிபகுதியிவை
யொருவிநின்றேயசங்கவுதாசீனனவனனேகனுமாங்
கருதிலவனித்தியன்வேறுகணித்தற்கில்லையோர்கருத்தாவே. (௯)

அரிதாம்பகுதியுடன்புருடனாதியாகுமப்பகுதி
தருகாரணகாரியகருத்தாத்தன்மைக்கேதுவாம்புருட
னொருவாவின்பதுன்பங்களுணர்தற்கேதுவெனலாகு
மிருபாலியல்புமியம்புங்காலிவ்வாறிருக்குமாதலினால். (௧௦)

பகுதியிடமாய்நின்றதனுட்பயிலுமொருமுக்குணங்களையு
நுகர்வன்புருடனக்குணத்திற்பற்றாய்நிற்குநோன்மையதே [க்க
திகழுமுயர்ச்சிதாழ்ச்சிகளாய்ச்செறியும்யோனி தொறுஞ்செனி
மிகவுமுறுகாரணமதனைவிடுத்தாலில்லைவெம்பிறப்பே. (௧௧)

சாற்றும்பகுதியீதெனவும்புருடன்றன்மையீதெனவும்
வீற்றுவீற்றாய்ப்பகுத்துணர்ந்துபகுதிக்கணையன்வேறாக
லேற்றமானமுத்தியதாமியம்பிலிதுநிச்சயமல்லான்
மாற்றம்வேறொன்றுளதாமென்றெவரேசொல்லவல்லாரே. (௧௨)

உன்னும்பகுதிமுக்குணமுமொத்தேயின்பதுன்பமுத்தி
துன்னும்புருடன்பெறத்தானேசுயமாயுலகந்தருமென்று
மன்னபுருடனனேகனென்றுமவனுக்கீசனில்லையென்று
மின்னபகர்ந்தசாங்கியனுக்கெதிர்வேதாந்தியிவைசொன்னான்.()

பகுதியுலகையோர்கருத்தன்பணியாற்படைத்ததோவதன்றித்
துகளில்லனையனேவலின்றிச்சுயமாய்த்தானேதந்ததுவோ
நிகழும்பணியாற்படைத்ததென்னினீயுமெமதுநெறியினுறு
மிகலியதுவேதருமேனுமெல்லாந்தருவதிசையாதால். (கச)

இலகுபகுதியியல்பாகுமின்பதுன்பமோகமகத்
தலதுபுறத்திலின்மையினுலடருங்கடபடாதிகடா
நிலவுமதனுற்பிறவாதுநிகழ்தல்வேண்டுமஃதன்றி
யுலவும்புருடார்த்தந்தரலாலொருவன்றரனுமுளதாமால். (கரு)

சுருதிபெலமுமிதற்குண்டுசொன்னபகுதியசேதனமாய்
மருவுமதனுற்பிரபஞ்சம்வருவித்திடவுமாட்டாது
தருமதென்னிற்குயவனின்றித்தானேமண்ணுங்கடந்தருமா
லருள்கொடேருமிழுப்போரற்றோடவேண்டுமோர்தொறுமே. ()

ஈறில்பகுதியசேதனமாயிருந்துமுலகையியற்றுநன்னீ
ராறுபெருகுவதுமடிதெள்ளமுதூற்றுவதும்போலென்னி
லூறிலொருவனிழைத்தபள்ளத்தோடும்புனல்கன்றினுக்கிரங்கி
வீறுபசுவின்மடிசுரந்துவெண்பால்சொரிந்துவிடுமன்றே. (களா)

அதனுற்பகுதிசேதனனுமவனேவலினுலனைத்துலகு
முதனுள்வகுத்ததெனல்வேண்டுமுளைக்கும்பசும்புற்பாலாகும்
விதமாபோலப்பகுதியுமிவ்வியன்மூதுலகாமெனிற்கறவை
பதமாய்த்தின்னிற்பாலாகும்பாலாமோதான்பசும்புல்லே.(கஅ)

விரிநீரொடுமண்ணொடுங்கலந்துவித்தங்குரத்தைவிளைப்பது
போ,லரிதாம்பகுதியொன்றினொடொன்றளவிக்கருத்தாவொரு
வனின்றிப்,பெரிதாமுலகுண்டாக்குமெனிற்பிறங்கும்விரைபோ
லவயவியாய்த்,தரியாதழியுந்தனதுசுதந்தரமுந்தனக்குச்சாராதே

சடமாதலினுலொருவனின்றிச்சாருந்திடனுஞ்சடாதா
லுடனேராமுக்குணமுந்தாழ்ந்துயர்தலொருவனுற்புரித
றிடமாதலின்வெவ்வேருகுஞ்செகத்தையிறைவனொருவனின்றி
யுடைவாய்வகுத்தல்பகுதியினுலாமோசிறிதுமாகாதே. (உ0)

இருகாலிழந்தவொருமுடவனிருகண்ணில்லான்மீதேறி
வருமாறதுபோற்பகுதிதனைவயங்கும்புருடனடத்துமெனி
னுருவாமுறுப்பவ்விருவோர்க்குமுளவாலுதவியுண்டதனா
லருவாதலினாலப்புருடற்கதனைநடத்தலாகாதே. (உக)

காந்தமுகத்திலிரும்பசையுங்காட்சிபோலப்புருடனைநிர்
வாய்ந்தபகுதிபுவனத்தைவகுக்குமெனிலவ்விருவகைக்கு
மேய்ந்தசந்நிதானமென்றுமிருக்குமதனாலிப்புவனம்
வீந்துமீளவுதிக்குமெனவிளம்புமாறெவ்விதமாமே. (உஉ)

பந்தித்திருக்குமிந்தியங்கள்பதினொன்றென்றுமேழென்று [ன்
மங்கப்புலனோர்மூன்றென்றுமஃதொன்றென்றுமொன்றுக்கொ
றிந்தப்படிசொன்மயக்காலுமிறைக்கதேலாமையினாலுஞ்
சந்தித்திடாநிச்சயஞானந்தவறாமுனதுசாங்கியமே. (உ௩)

புருடனனேகனென்றதுகற்பனையேயன்றிப்புகலுங்கான்
மருவுமியற்கையாலன்றாமற்றவகையெவ்வகையென்னிற்
பருதியொன்றாயிருந்துமந்தப்பருதிவிம்பங்கடங்கடொறு
முருவுபிறிதுபிறிதாகியுதிக்குந்தகைமையதுபோலும். (உச)

பகுதிக்கறிவின்றாதலினப்பகுதிபுருடன்பயன்கொள்ளத்
தகுமிச்சையினாலிவ்வுலகந்தராதுபுருடனிச்சையைக்கொண்
டகிலத்தினைத்தந்தனனென்றாலவனுக்கென்றுமஃதுளதாய்
மிகுமத்திறத்தாற்போகமன்றிமேலாகியவீடேலாதே. (உ௫)

அந்தப்புருடனிச்சையினாலகிலந்தருமென்றனையாயின்
முந்தப்பகரும்வேதாந்திநீயுமாவைமொழிந்தவிச்சை
வந்தித்திடுதலெமக்காரோபிதமாமுனக்குவாய்மையதா
மிந்தப்பரிசாலெமக்குமுத்தியெய்துமுனக்குண்டிடையூறே. ()

இனையதாம்பூருவபக்கமினிச்சித்தாந்தமியம்புவன்கே
ளுனைநீயுணர்ந்தங்கிரண்டின்றியொன்றாய்ச்சச்சிதானந்தந்
தனைமேவுதியென்றுபநிடதைததமயன்புகலச்சாங்கியனுங்
கனைவாரிதியிற்பருதியெழுங்காலைக்கமலம்போலிருந்தான். (உஎ)

அக்காலத்தில்வேதாந்தியலர்தாமரைவாண்முகநோக்கித்
தக்கார்புகழவறிஞர்பிரானிருந்தசபையிற்றார்க்கிகர்கோன்
மைக்கார்மேகத்தசனியெனவசனித்தொருதன்மதமோதப்
புக்கானவன்றன்வல்லமையையாரேயறிந்துபுகல்வாரே. (உஅ)

சாங்கியமதச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - கஅஅஉ.

## ௪௨ - வது, தார்க்கிகன்மதச்சருக்கம்.

*(o‥o)*

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சார்ந்ததிரவியங்குணங்கன்மஞ்சாமானியத்தோடுதகுவிசேட
மார்ந்தசமவாயமென்னு மாறுபதார்த்தங்களோடபாவமென்று
சேர்ந்ததுவை சேடிகமாமவ்வேழிற்றிரவியத்தின் றிறமைம்பூத
மோர்ந்திடுங் காலந்திசையான் மாமனமென்றித்தகையவொன்ப
தாமே. (௧)

மன்னுகுணமுருச்சுவைகந்தம்பரிசங்கணனைபரிமாணம்பேதம்
பன்னுசையோகம்விபாகம்பரத்வமபரத்வமாபாரம்பின்னுஞ்
சொன்னதிரவத்வம்ஸ்னேகஞ்சத்தம்புத்திசுகந்துக்கமிச்சை [ல்.
முன்னுதுவேடம்முயற்சியறமதன்மம்வாசனையிம்மூவெட்டாமா

கிளர்கருமவகையைந்தாலவைகுவிதல்விரிதனடைகீழ்மேற்
சேறல், வளர்தருசாமானியமுஞ்சாதியொடுபாதியெனவகையிர
ண்டாந், தளர்வறும்விசேடமொன்றுசமவாயமதுவுமொன்றித்த
கையவாமா, லுளமகிழமற்றுமோரபாவமெனப்புகன்றமையுமு
ரைப்பன்மாதோ. (௩)

பேசுமன்னியோன்னியாபாவமத்யந்தாபாவம்பிராகபாவ
நாசமெனநால்வகையாமினிக்கவுதமத்தியனுநவிலக்கேண்மோ
வாசில்பிரமாணபிரமேயசமுசயம்பிரயோசனந்திட்டாந்த [ம்.
மாசில்சித்தாந்தத்தொடவயவந்தர்க்கநிண்ணயமாவாதம்பின்னு

மெய்த்தசெற்பமொடுவிதண்டையேத்துவாபாசசலம்விளங்
குஞ்சாதி,யத்திறனிக்கிரகமெனத்தொகுத்தமையோர்பதினாறும
வற்றினூடே, யொத்தபிரமாணமவைபிரத்யட்சமநுமானமுவ
மானம்பின், சத்தமெனநால்வகைத்தாம்பிரமேயமவற்றையுமே
ற்சாற்றுவாமால். (௫)

புரையற்றவான்மாச்சரீரமிந்தியம்பொருணற்புத்திசித்தம்
பிரவிர்த்திதோடம்பிரேத்தியபாவம்பேறிடர்நன்முத்தி
வரைவுற்றமுந்நான்குவகைப்படும்பின்சமுசயமூவகையதாகு
முரைபெற்றவவயவமுமைவகையாமவ்வகையுமுரைத்துமன்னோ

உரைசெய்பிரதிக்கினையுமேதுவுமுதாகரணமுபநயம்பின்
பரவுநிகமனமுமெனும்படித்தாகுமேத்துவாபாசமப்பாற் [ப்
கருதிலவையைவகையாஞ்சித்தவிசித்தத்தொடனேகாந்திகஞ்சீர்
பிரகரணச்சமமொடுகாலாத்தியாபதிட்டமெனப்பேசலாமே. (௭)

பன்னுதிரவியமவற்றுண்மண்முதனாற்பூதத்துட்பரமாணுக்க
ளென்னுமவையுங்ககனங்காலந்திக் கான்மாவேவாடிதயமென்ன
மன்னுபொருளோரைந்து நித்தியமாங்கவற் றினுள்ளுமண்முன்
னாகச், சொன்னதொருநாற்பூதந்தோன்றுவதுமொடுங்குவதுஞ்
சொல்லுவேனால். (அ)

சகத்தினுக்குப்பிரமமுபாதானமன்றாற்சச்சிதானந்தரூப, மக
த்துவமின்மையிற் கந்தமுதனான்குமுண்மையினான்மண்முன்னாக
த், தொகுத்தபரமாணுக்களதிட்டமுறுமான்மாவைத்தொட்டுக்
கம்பித்,திகத்தலறவொன்றோடொன்றியைந்துபாதானமாயியற்
றுமன்றே. (கூ)

இத்திறத்தால்வருமுலகிலுபாதானங்குணங்களெய்துமிவை
நான்குள்ளு, மத்தரையிற்குணநான்குங்காரணகாரியங்களினும
டுபாகத்தான், மொய்த்துறுமற்றவையனித்தமப்புனல்காற்குரி
யகுணமுடியாதென்று, நித்தியமாமுலகளிக்குமிறைவிருப்பவ்வ
ணுநீக்கநீங்குமன்றே. (க0)

சமவாயிமுதலாகமூன்றுவகைக்காரணத்தாற்சகத்தையெல்
லா, மிமையாமுக்குணத்தொடுநின் றீன்றுமளித்துந்துடைத்து
மேகமாயு, மமையாநித்தியமாயு மகண்டபரி பூரணமுமாகிநிற்
போ, னமையாளும்பரமான்மாவவனருளாற்பணித்தமையுநவி
ற்றுவேமால். (கக)

தீவினைநல்வினையாகுஞ்செயல்புரிந்தச்செய்வினையின்றிறத்து
க்கேற்ப, மேவரும்பல்லுருவாகுமுடல்களெடுத்திகபரத்தும்வே
றுவேறா, மோவிலின்பதுன்பமவையனுபவிக்கும்பேதத்தாலுல
ப்பிலாமன், மேவியசீவான்மாக்களெண்ணிலெண்ணில்கோடி
யெனவிளம்பலாமே. (கஉ)

அன்னபலவுடல்கடொறுமணுவுருவாய்நித்தியமாயங்கங்குண்
டாற், சொன்னமனமென்பவையுமற்றுமுளபலபகுதித்தொகை
யும்யாவு, மின்னவையென்றிலக்கணவிசாரத்தாற்றேர்ந்துணரு
மியல்புதானே, தன்னதினைத்தானாகுந்தத்துவமெய்ஞ்ஞானத்தி
ன்றகைமையாமால். (கங)

அத்தகையநல்லறிவாலகன்றிடும்பொய்யறிவுபொய்ம்மைய
துபோங்காலைக், கைத்திடுமாசாதிபலதோடம்போமத்தோடங்
கழிந்தானீங்கு,மொத்ததருமாதருமப்பிரவிர்த்தியாங்கதுவுமொ
ழிந்தாற்சென்மத், தத்துறல்போமவ்வகையுந்தள்ளிலிடர்மூவே
ழுந்தவிருமன்றே. (கச)

உடலொன்றுமிந்தியமூவிரண்டுமவ்விந்தியங்கடம்மாலுணர் வதாறும், விடயங்களிருமூன்றுந்துக்கசுகமிரண்டுமிவைவிடுத்த ருனே, யடையுங்கைவலமிதுவேயலதுபிறிதுளவோவென்றனை யன்சொல்ல, மடலொன்றுபூந்தார்வேதாந்தியவனிலைமறுத்திம் மாற்றஞ்சொல்வான். (௧௫)

தார்க்கிகன்மதச்சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧அ௬௭.

## ௪௩ - வது, வேதாந்திமறுத்தற்சருக்கம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பரமாணுத்துவணுகத்திற்பரிமாணந்திரணுகத்திற்பரிமாணத் துக், காணுகுங்காரணமாகாமைபினுற்கணனையைக்கொண்டாத றன்னுற், றிரமாந்தன்சாதியைத்தந்திடுநியமமின்மையினுற்செக த்துக்கெல்லா, முரமாங்காரணம் பிரமமன்றுபரமாணுவென்ற வுரைகூடாதே. (௧)

அன்றியுமாருயிரினதிட்டத்தினுலொன்றோடொன்றசைந்து கூடத், துன்றுசெகமுண்டாமவ்வாறகலவிறு மெனிலத்துளக்க மெய்தற்,கொன்றுநிமித்தம்வேண்டுமதுதிட்டமோவதிட்டமோ திட்டந்தா, னென்றிடிலங்கதுமுயற்சி யென்பதுவே யலதறைத லென்பதேயோ. (௨)

அன்னவிரண்டுங்கூடாதுலகுறுநாளுடலின்மையாலதிட்ட மென்னிலஃதணுவினுக்கோசீவனுக்கோவணுவினுக்கேயென்று யென்னிற்,பன்னுமபசித்தாந்தமாகுமதுவுயிர்க்கென்னிற்பரமா ணுக்க,டுன்னுபொருட்டசையாதவணுக்களிலவ்வதிட்டமின்மை சொல்லாலன்றே. (௩)

அதிட்டமுறுமுயிரையணுத்தொடுதலாலதற்குமுண்டாமசை தலென்னி, லுதித்தல்புவிக்கென்றுமுண்டாலுயிரையணுவெப் போதுமுறலாற்பின்னு, மதித்தவணுச்செறிதலெங்குமுளதெனி ற்காரியமுமன்னவாறுமோர்பால்,விதித்ததென்னிலுறுப்பிலதே லுருதுளதேலிறுஞ்செறியும்விதங்கூடாதே. (௪)

அவயவத்தைக்கற்பனையாலுண்டாக்கியொருபுறத்திலதனற் கூடிப், புவியையணுவுண்டாக்கிற்கற்பனையாலிக்கூட்டம்பொருந் துமாற்று,லிவருறுமக்கற்பனையால்வருஞ்செகமுங்கற்பிதமாமித ஞன்மாறுக், கவலையுறுமிவ்வுலகங்கந்திருவநகரமும்புன்கனவும் போலாம். (௫)

அணுமுயற்சியுளதாகிலுலகழியாதிலதாகிலகிலமின்று, மணுமுயற்சியுண்மையுமின்மையுமுளதேலொன்றுக்கொன்றதுவிரோத, மணுமுயற்சியுண்மையுமின்மையுமிலதேலெப்போதுமதிட்டந்தன்னை, யணுவணுகலான்முயற்சியன்னதனுக்கொருகாலுமகன்றிடாதே. (௬)

கந்தமுதனுன்குகாரணமுந்தூலமுமழியுங்கடாதிக்குண்டாய் வந்தமையாற்கந்தாதிபோலமற்றையொருமூன்றுமதிக்குங்காலை முந்துபரமாணுவிற்கும்வரவேண்டுமவ்வாறுமுடியுமென்று லந்தவணுவொருகாலுமகிலகாரணமாதற்காகாதன்றே. (எ)

துக்கசுகம்வெவ்வேருய்த்தோன்றுதலாலுயிர்கள்பலதொகையாமென்று, மிக்கதொருபேரறிவாற்சிற்றறிவாற்பரன்சீவன்வேறேயாகத், தக்கதென்றுமுரைத்தனையேலவ்விரண்டுமுபாதியினுற்சார்ந்ததல்லாற், புக்கதியல்பாலன்றுலனேகமென்றும்வேறென்றும்புகலொணுதே. (அ)

எழுமூன்றுதுக்கமெல்லாநாசமுற்றுன்முத்தியெனவியம்புவாயேல், வழுவாதவுண்மையுமாயகண்டசச்சிதானந்த மயமுமாகியழியாதநிலையது வேமுத்தியெனமறைநான்குமறையும்வாய்மை பழுதாகுமாதலினுலனதுதர்க்கந்தக்கதன்றுபழிப்பாமென்முன்.

இத்திறமவ்வேதாந்தியியம்புதலும்பின்பனியினீறுந்தென்றறத்திவருமிளவேனிலாதியுமெய்தியபருவந்தன்னிற்கூவுங், கொத்தலருமாங்குயில்போற்ருர்க்கிகனங்கிருந்தவெல்லைக்குலவுயோகன், மெய்த்தவுபநிடதைமுன்னேன்முன்னர்வந்துபின்னரிது விளம்பினனே. (௧௦)

வேதாந்திமறுத்தற் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௧௦எ.

## ௪௪ – வது, யோகமதச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தன்மயமாமெமதங்கியோகமதற்கியமாதிதானெட்டாமான் முன்மகிழ்கூரங்கமவற்றியமமெனல்கொல்லாமைமுறைசேர்வாய்மை, வன்மையதாங்கள்ளாமைபிரமசரியங்கருணைவஞ்சமின்மை, நன்மையதாம்பொறைதிடனூண்சுசியெனவீரைவகைத்தாநடக்குமன்றே. (௧)

புகன்றவற்றுட்கொல்லாமைமறைநெறியாலல்லதுமுப்பொறியினுலு, மிகந்துயிரைச்சிதையாமைவாய்மையுண்மைப்பொருள்பற்றியியம்புமாற்றம், பகர்ந்திடுங்கள்ளாமைபிறர்பொருள்கவரமனத்தானும்பற்றுருமை,தகும்பிரமசரியம்விலக்கியநாளின் மாதரின்பந்தவிர்தலாமால். (உ)

இயற்கருணை தன்னுயிர்போலெவ்வுயிர்க்குமிரங்கல்வஞ்சமின்மையென்றன்,மயக்கறுநன்னடுநிலைமைபொறுமைபிறர்வருத்திலுள்ளமலங்குருமை, முயக்கிறிடன்மறைநெறியாலலதுமுத்திமற்றென்ருன்முற்றுதென்ற, றுயக்கிலுணவதுமிதவூண்சுசிபுனன்மண்கொடுமாசுதுடைப்பதாமே. (ங)

நியமமெனறவமகிழ்ச்சியுண்மைதானம்பூசைநிறைநூல்கேட்ட,லியலிலச்சைமதிசெப நோன்பின்னவையீரைவகைத்தாமிவற்றுண்முன்னர்ப்,பயிறவநன்மறைசொல்கிரிச்சிரமுதலான்மெய்வருத்தம்பகர்மகிழ்ச்சி,செயலதின்றிவரும்பொருண்மேலுவப்புண்மைமறைசொல்கன்மச்சிரத்தையாமே. (ச)

தானமறநெறியில்வரும்பொருளினைத்தக்கோர்க்கீதல்சாற்றும்பூசை, நூனவின்முத்தேவரையுமியன்றபடியிறைஞ்சனிறைநூருன்கேட்ட,லீனமில்வேதாந்தநூல்வினவல்பின்னரிலச்சையுலகியல்வைதீகத்,தானநெறிவிடுத்தலினுணுதன்மதிவைதிகத்தில் விசுவாசமாமே. (ரு)

சிறந்தசெபந்தனக்குரியதெய்வதமந்திரங்கடமைச்சிந்தைசெய்த,லறந்திகழ்நோன்பருட்குருவாற்றுன்பிறரோடுய்யவுபாயங்கடேர்த, னிறைந்திடுமாதனம்விளம்பிற்சோத்திகங்கோமுகம்பதுமநிகரில்வீர, முறைந்தசிங்கம்பத்திரநூன்முத்தமயூரஞ்சுகமென்றென்பதாமே. (சு)

நாட்டவற்றுட்சோத்திகமூருவுக்குமுழந்தாளுக்குநடுவேயுள்ளங், தாட்டுணையைச்செலுத்தியிறுமாந்திருத்தல்கோமுகம்பின்சகனப்பக்கத்,தாட்டுமிருகாற்பரடுமாறியவற்றிற்பெருவிரற்கைமாறிக், கோட்டமுறப்பிடித்திருத்தலினிப்பதுமாதனத்தியலுங்கூறுவோமால். (எ)

துடையிரண்டின்மேலுமிரண்டுள்ளங்காலையுமாறித்தோன்றவைத்த,றடையிலக்தவீரம்வலத்துடையிலிடக்காற்பரட்டைச்சா

த்தியேமாப், படையவைகல்சிங்கம்பீசக்கீழச்சிவனிபாற்பரட்டையோட்டி, யிடமுழங்கைசானுவைத்தங்குலிவிரித்துநாசியைப்பார்த்திருத்தலாமே. (அ)

பத்திரமென்பதுபீசக்கீழச்சிவனிப்புறத்துப்பரடிரண்டும்வைத்தனையபதமிருகைகொண்டிறுகப் பிணித்தசையாவண்ணம்வைகன், முத்தமெனவிடப்பரட்டாற்சிவனியையழுத்திவரன்முறைவலக்கா, லொத்தபரடப்பரட்டின்கீழழுந்தவைகுதலென்றுரைக்கலாமே. (௯)

புகலுமயூரம்முழங்கையிரண்டுமுந்திப்புறத்தழுந்தப்புவிகையூன்றி, யகமொருமித்தடிநீட்டித்தலைநிமிர்த்துவைகல்சுகமாவதப்பாற்,சுகமுமிகுதிடனுமெவ்வாறிருக்கினுண்டவ்வாறிருத்தலெருடர்சுகத்திற், கிகலறுமாதனமதுவாமினிப்ராணாயாமவிதியியம்புவோமால். (௧0)

உந்தியின்கீழ்நாடியுதிக்குங்கிழங்கொன்றுளததன்கணுதியாகிற்
மந்தமினாடியின்முளைகளந்நாடியெழுபத்தீராயிரந்தாம் [கு
வந்துறுங்கீழ்மேனுபிமருங்குமவைதிகிரியெனமல்கிச்சூழு [லே.
முந்தவற்றுண்முதன்மைபெறுநாடிகளீரைந்தாகுமொழியுங்கா

அவ்வகைநாடிகளிடைபிங்கலைசுழுனைகாந்தாரியத்திசிங்வைசெவ்வையுறு புருடனலம்புடைகுகு சங்கினியின்னதெசமியாகுமிவ்வகையா மவற்றிடைபிங்கலைசுழுனைக் கிடம்வலமாயியைந்துமாறுங், கவ்வுபுழையொடுமுடிச்சைந்துளவாகியம்மூன்றுங்கவினுமன்றே. (௧௨)

இத்தகைநாடிகளுணர்ந்துவெயில்காற்றிலாத்தனிநல்லிடத்தினெய்திச், சுத்ததனுவினனுயத்தனுவிலணிவெண்ணீற்றுத்தூளனாகி, மெய்த்தகியாசம்புரிந்துமெல்லணைமேற்குசையினற்றோல்விரித்துவைகி, யத்திமுகனைப்பரவியிட்டதெய்வத்தொடுகுருவினடிகள்போற்றி. (௧௩)

கிழக்குமுகமாயலதுவடக்குமுகமாயேனுங்கேடிலாத
பழக்கமுறுமாதனத்தின்வைகிச்சுகாதனனுய்ப்பகர்வாய்விள்ளா
துழக்குமசைவிலனுகிப்புருவநடுமதியையமுதுகுப்பதாக
விழித்துணைகணுசிகாக்கிரத்தினுறமாறுமல்விழித்துநோக்கி.(௧௪

இடைநாடியதனால்வாயுவைவாங்கியுதரத்தையெல்லாம்பூரித்
துடனாப்பணழல்சொலிப்பதாகவுன்னியதனில்விந்துவுடனேகூடி
யடைவானரேபத்தைச் சிந்தைசெய்துபிங்கலையாலனையகாற்றை
விடுமாறுபுரிந்துபின்னும்பிங்கலையா னிறைத்திடையான் மெல்ல
ப்போக்கி. (கரு)

என்றேயிவ்வகைபொழுதைக்கவ்வாறுவிசைமுப்போழ்தினு
மேயாண்டு,மூன்றேனுநான்கேனுமுயன்றக்கானாடிசுத்திமுற்று
முற்றிற், றுன்றேகம்லெகுவாகுஞ் சாடராக்கினிசொலிக்குந்த
ழைக்குநாதம், வான்றேசுபெறத்தோன்றுமிவ்வகையானாடிசுத்
திவந்தகாலை. (கசா)

எண்ணிருமாத்திரையால்வாயுவையிடையாற்பூரித்தெட்டெட்
டாற்கும்பித், தண்ணல்சிவமந்திரமான்மந்திரமேனுங்கருதியத
ற்குப்பின்னர்ப், பண்ணியபிங்கலையான்முப்பத்திருமாத்திரைப்
பொழுதிற்பையப்போக்க, னண்ணுபிரா ணாயாம மொன்றதிற்
கும்பகமிரண்டாய்நவில்வதாமால். (கஎ)

பூரகரேசகத்தினுடன்பொருந்தியகும்பகமொன்றுபொருந்தா
தாகுஞ், சீரியகும்பகமொன்றாங்கவற்றின்முதலிடைகடையாஞ்
சின்னமெய்தும்,பாரினைவிட்டெழலுடல்கம்பித்தல்வெயர்வரும்
பலிப்பாற்பிரத்யாகாரம், பேரவிடயத்தினுள்ளஞ்செல்லாதவ
கைதிருப்பும்பெற்றியாமே. (கஅ)

தாரணைமனோவியாபாரமின்றியிலக்கியத்திற்சாரச்செய்த
லேரணிதியானமிப்பாலாதாராதேயங்களிரண்டுந்தேர்த,னேருறு
மாதாரமூலாதாரமுதலாறுநிகழ்த்தம்மூலா, தாரமிலிங்கத்தின்
கீழ்க்குதத்தின்மேன்முக்கோணத்தகைமையாமே. (ககூ)

அத்தகைமூலாதாரத்துளதொருகுண்டலினிசத்தியதுபை
ந்நாக, மொத்துறுமும்மண்டலமிட்டுறையுமதற்கதிதெய்வமொ
ற்றைக்கொம்பன், மொய்த்தசுவாதிட்டானமறுகோணமாயிலி
ங்கமூலத்தெய்து, மெய்த்தவதற்கதிதெய்வம்விரைமலர்த்தாம
ரைப்பொகுட்டின்விரிஞ்சனாமால். (உ0)

உந்தியிடைவட்டமாய்மணிபூரகந்துலங்குமுறுமதற்குச்,செ
ந்திருமாறெய்வமனாகதமிப்பான்மார்பகத்திற்கிரியொப்பா,மி
ந்துமுடியோனதற்குத் தெய்வமினிவிசுத்திநன் மண்டிலமதாகிக்
கந்தரமெய்திடுந்திகழ்சீவான்மாவேயதற்குரியகடவுளாமே.(உக

படர்புருவநடுவாக்ஞையறுகோணமாமதற்குப்பரமான்மாவே
கடவுள்சமாதியதிப்பாலாருதாரத்தையுமேகடந்துமேலாய்த்,தி
டவசபையொடுபிரமரந்தரங்காறும்போயத்தேயந்தன்னி, லடர்
கதலி முகையொப்பாய் முகங்கவிழாயிரந்தோட்டோ ரரவிந்தத்
தை. (உஉ)

மாசிலச்சோதியுட்சோதியெனும்பதோச்சாரணத்தான்மலர்
த்தியப்பூங், கேசராக்கிரத்தின்மதிதனையாகுஞ்சனங்கொண்டக்
கினிபீசத்தாற், பேசுமூலாக்கினியையெழுப்பிநாடியின்வலையம்
பேதித்தப்பா, லாசுருவகையிளக்கியம்மதியூற்றமிர்தவெள்ளத்
தழுந்தலாமால். (உங)

இவ்வகைசொலியமாதியெட்டுமங்கமாய்க்கொளங்கியென்னும்
யோக, மவ்வகையங்கங்களிற்றேன்றெளிபிரவியெதிருடுக்கள
வைபோன்மட்க,மெய்வகையெங்கும்பரந்துதனதொளியேயொ
ளியாகவிளங்குமாறு, செவ்விதிற்பாவித்திருத்தலாகுமிப்பாலித
ன்பயனுஞ்செப்புவோமால். (உச)

எப்பிணியுமகன்றிடுமெவ்வினையுமறுஞ்சித்தியெல்லாமெய்து
மோங்கு, முப்புவனத்தினும்பெறுதற்கரியபொருளொன்றுமிலை
முடிக்கவேண்டி, லப்பிரமாதியர்செயலுமரைக்கணத்தின்முடித்
திடலாமாதலாலே, யொப்பரியயோகமதமிதுபோலப்பிறிதொ
ர்மதமுண்டோவென்றான். (உரு)

வாயுவிரண்டுந்தடுத்துப்புலனெடுக்கியிலக்கின்மனம்வைத்தா
தாரா,தேயமுணர்ந்தசபைகொடுத்தெய்வதங்களபிமுகமாய்த்தி
ரும்பச்செய்து, போயதன்பின்பிரமபெலத்திந்துவமுதிடைத்தி
ளைத்துப்பொருவில்சோதி, யாயதைப்பாவித்தலென்றயோகனை
ப்பார்த்திவ்வுரைவேதாந்திசொன்னான். (உசு)

நீவகுத்தவாய்மையெல்லாமொக்குமொக்குமென்றுனிகழ்
த்தக்கேளிப், பாவனையைவிடுத்தொன்றும்படிநீயேநீயாகும்பரி
சுநோக்கி, யோவில்சச்சிதானந்தவுததியின்மூழ்குதியென்றுனி
யோகனன்றி, தாவதெனுமுன்பாஞ்சராத்திரிவேதாந்தியொடீத
றைவதானன். (உஎ)

யோகமதச்சருக்கம் முற்றிற்று.

ஆகூ விருத்தம் - கசுஙச.

## சரு - வது, பாஞ்சராத்திரச்சருக்கம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருவமாயனந்தகோடியற்புதகுணபிராமச்
சுருபமாயாதியாகிச்சுடர்ப்பரஞானச்சோதி
யுருவமாயெங்குந்தானுயுறைபரவாசுதேவர்
பரிவினாலுலகுண்டாகச்சுயேச்சையாற்படிவங்கொண்டார். (க)

அயனையுந்தியிலுண்டாக்கியவனைக்கொண்டுலகையின்று
வியனுலகதனைமாற்றவேதியனிலாடத்தின்கட்
செயலுறுமரனைத்தந்துதிதிகர்த்தாத்தானுயிந்த
வியலுறுந்தொழில்களெல்லாமியற்றுவனனையனன்றே. (உ)

மன்னியகருணையாலேமாயவனுலகமெல்லாந்
தன்னடியிணைகள்போற்றிச்சற்கதிபெறுதற்கெண்ணி
யின்னவையைந்தும்பஞ்சவிராத்திரிப்பொழுதினுள்ளே
பன்னலினெமதுமெய்ந்நூல்பாஞ்சராத்திரமாமன்றே. (ங)

திவள்சங்கருஷணர்வாசுதேவர்ப்ரத்துய்ம்னரானோர்
நவிலனிருத்தரென்னுநால்வியூகாவதார
மவிர்தசாவதாரமச்யமம்சாவதாரமாக
விவையெடுத்தறங்காத்தன்பரிடுக்கண்டீர்த்தருளிச்செய்தார் (ச)

மச்சமேகூர்மங்கேழன்மானுடமடங்கல்வாம
மெச்சுமூவகையிராமர்மிக்ககண்ணனுமாய்ப்பின்னும்
வைச்சபேரருளாற்கற்கிவடிவுங்கொண்டுலகமெல்லாம்
பச்சைமாலுலகங்காக்கும்பரிசினைப்புகல்வனன்றே. (ரு)

மறிகடல்செலவுட்பெய்துமந்தரமுதுகிலேற்று
மிறுநிலமருப்பிற்கொண்டுமிரணியனுவியுண்டு
முறுமுலகளந்துமொன்றோரொங்குறக்கடிந்துந்தூது
நெறிபடநடந்தும்பின்னுநீதிசெய்தளிப்பன்மாதோ. (சு)

ஆலநேர்முதலைவாயிலகப்பட்டயானையாதி
மூலமேயென்னலோடுமுடுகிவந்தெதிரேபோல
மோலநீயஞ்சலென்னவுடன்சினத்திடங்கர்மாய்த்தந்
நீலமால்வரைக்குமுத்திநெறிகொடுத்தருளினானே. (எ)

எறிகடல்கடைந்துவானோர்க்கின்னமுதருளிச்செய்தும்
விறல்புரியவுணர்தம்மைவேரறக்களைந்துமேலோர்க்
கறநிலைபகர்ந்துமிவ்வாறண்டகோடிகளையெல்லாந்
திறலொடுபுரப்பனன்னேன்செய்தியார்தெரிக்கற்பாலார். (அ)

அனையவனருளாற்றோன்றுமண்டகோடிகளியாவு
நினைவுறுமித்தையன்றுநித்தியந்தானுமன்றாற்
கனைகடலன்னவண்ணன்கருணைபெற்றுய்யாநிற்கு
மினியதொல்லுயிருஞ்சொல்லிலேகமன்றனேகமாமே. (௯)

பிரபத்திபத்தியென்னும்பேருடைநெறியாலாசா
னருள்பெற்றவ்வரியைத்தாழ்ந் * தாசார்யமார்க்கத்தாற்சென்று
விரசைத்தண்புனலின்மூழ்கிமிகுந்திவ்யரூபம்பெற்றுக்
கருடர்மற்றனந்தர்சேனைக்காவலரெதிர்கொண்டெய்த. (௧௦)

அன்னவர்தமக்குத்தங்களருந்துக்கசுகங்கள்யாவு
முன்னர்வந்துரைத்துப்பின்னர்முகுந்தர்பேரருளினாலே
பன்னுசாலோகசாமீபசாரூபசாயுஜ்யம்பெற்
றின்னியலப்பிராகிருதவுலகத்தினெய்தி. (௧௧)

சங்கொடுதிகிரிவில்வாடண்டொடுதாங்கிப்பூமேற்
பைங்கொடிகளிக்கப்பீதாம்பரந்தரித்தரியமேனிக்
கங்குலிற்பகல்போன்மின்னுங்கவுத்துவம்புனைந்துவாழுஞ்
செங்கணெம்பெருமானேவல்சென்னியின்மீதுசூடி. (௧௨)

இங்குத்தாசோகமென்றேயினிதுபாவித்தவாற்றா
லங்குத்தாமால்கல்யாணவளப்பருங்குணங்களெல்லாந்
திங்கட்பார்த்திருந்துளார்க்கச்சீதளஞ்சேர்ந்தாலென்னத்
தங்கப்பார்த்துகந்துவாழ்வார்தத்துவமிதுவாமன்றே. (௧௩)

ஆதலாலெவருமாலுக்கடிமைபூண்டனையோனன்பர்
பாததாமரைகள்போற்றிப்பகர்கயிங்கரியஞ்செய்தே
யோதுகீர்த்தனங்களோதியும்பரோடிம்பர்வாழ்த்த
மூதுலகதனிற்சேர்ந்தம்முத்தியும்பெறுவரென்றான். (௧௪)

இத்திறஞ்சொன்னதெல்லாமினிதினிதுலகம்யாவு
மித்தையன்றென்றுமான்மாவேறுவேறனேகமென்றும்
புத்தியினினைதன்மாற்றிப்புகன்மறைமுடிவைநோக்கி
வித்தகவாழ்தியென்னவயிணவன்விகற்பந்தீர்ந்தான். (௧௫)

---

* அர்ச்சிராதி எனவும்பாடம்.

இவ்வகையனையபாஞ்சராத்திரிக்கிசையக்கூறி
மெய்வகையுணர்த்தாயின் றவேதாந்திக்கெதிரேமேலாஞ்
செவ்வியவிவேகவேந்துந்திருமுடிதுளக்கச்சுத்தச்
சைவசித்தாந்திவந்துதானிவைபுகல்வதானான். (கசூ)

பாஞ்சராத்திரச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் - ககூடுo.

## சுகூ - வது, சைவசித்தாந்தச்சருக்கம்.

———:(~):———

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காண்டலநுமானமுரையுவமையருத்தாபத்திகருதபாவம்,வே
ண்டுமிவையளவைகளாமிவைமேலும்வேண்டுவனவேண்டாயின்
றே,பூண்டநெறியாலளக்கும்பொருள்களொருமூன்றவைதாம்பு
கலுங்காலைத்,தூண்டுசுடர்போல்விளங்கும்பதிபசுபாசங்களென
ச்சொல்வரன்றே. (க)

ஓதுமொருமூவகையபதார்த்தத்துப்பதியென்பதுரைக்குங்காலை
யாதிநடுவந்தமின்றிச்சச்சிதானந்தமாயகண்டமாகி [க்கு
வேதமுடிவெனலாகிவிரிஞ்சனுக்கு மாயனுக்கும்விண்ணோர்யார்
நாதனெனமாதினொடுநயந்துதொழிலோரைந்துநடாத்துமன்றே.

அரியபரையாதியிச்சாஞானமொடுகிரியையெனவைந்ததாகி
விரிவுதருமோரபினுபாவசத்தியிடமாகிவிகாரமின்றி [ட்டி
யிரவியெதிர்கமலமென்னவெத்தொழிலுமாயையிடத்தியலக்கா
யுருவலயபோகாதிகாரமெனவொருமூன்றுயொளிருமன்றே.(ங

வினைதொலையப்படைத்துநுகரும்பரிசுகாத்திளைப்புவிடப்பேர்
த்தான்மாத்,தனையடரும்பாசமெல்லாந்தழைக்கமறைத்தப்பாச
த்தளையைநீக்கி, முனைவன்விழைந்தருள்புரிந்துமுத்திநலங்கொடு
த்திடுவன்மொழியுங்காலை, யினையதொழிலைந்துமிறைக்கியல்பல்
லாற்பிறிதொன்றுயிசைக்கொணுதே. (ச)

எல்லையிலதாய்நாசமின்றிமலத்தழுந்திவினையிரண்டிற்கீடாய்ப்
புல்லுமுடல்சிவனருளாற் பொருந்தியின்பதுன்பங்கள்புசித்திவ்
வாறே, செல்லுமலபாகம்வரத்திருவருளாற்பந்தமெல்லாந்தீர்ந்
துதீரா, வல்லலறுத்தின்பநல்வீடடையுமாற்பசுவருக்கமனைத்து
மன்றே. (ரு)

இழிவில்விஞ்ஞானகலர்மெய்ப்பிரளயாகலர்சகலரிவர்மூவர்க்குந்,தழுவுமலமுமலகன்மமுமலமாயாகன்மந்தாமும்பந்த,மொழியுமுன்ன ரிருவருக்குமீசனேயருளுவன்பின்மொழிந்தார்க்கா று, வழியிணையுந்தொலைத்தாசானிடமாய்நின் றணையனருள்வழங்குமன்றே. (௬)

இருளுமலமாயைகன்மமெனப்பாசமூன்றாகுமிவற்றுண் மாயை, தெருளும்விந்துமோகினிமாயேயமெனவொருமூன் றுதிறமாங்கன்ம, மிருவகையதாந்தருமாதருமமெனவிவைபிரண்டுமியம்புங்காலை, மருவுநினைவுரைசெயலாமற்றிவையோர்மூன்றாலும் வருமாலன்றே. (எ)

மூலவாணவமொன்றாய்நித்தமாயிருண்டமிகுமோகமாகிக்
கோலமார்தாம்பிரகாளிமமென்னவான்மாவைக்குறுகிப்பேருங்
காலமானதுவந்தாற்கையகலுமனந்தசத்திகதுவியிந்தச்
சிலமாயறிவுமுழுதையுமறைக்குமலமென்பர்தெளிந்துளோரே.

சித்தினுக்கு மசித்தினுக்கு மருள்வதியல் பாதலினாற் றீய பாசக்கொத்தினுக்குமலபாகம் வரவீசனருள்வதாய்க்குறுகு மாற்றாற் பித்தகற்றுஞ் சிவசத்தி திரோதான சத்தியென்றோர் பேராய்ச் சோதி,யெத்தினுக்குநீங்காத விருண்மயமாய்மலமெனவுமிசைவதாமால். (௯)

சுத்தமிகுமாமாயைகுடிலையின்னபற்பலபேர்சூடிவிந்து
வத்தனருட்கிடமாகிச்சிவஞ்சத்திநாதம்விந்துவருட்சாதாக்யம்
வித்தகவீச்ரஞ்சுத்தவித்தையையுந்தந்தருளிவிளம்பாநின்ற
பத்திபுரிநாதத்தில்வைகரியாதியும்பயக்கும்பண்பிற்றாமே. (க௦)

அருவாயொன்றாய்நித்தமாய்வினைகூரணுக்களுக்காவரணமாகி
விரிவாகித்தன்கருமத்தசலமாயசித்தாகிவிரிந்தயாவு
மொருவூழிகாலத்தினுயிர்க்கிடமாய்மலமாகியுலகமெல்லாம்
வருமாறீச்சுரனருளாலுபாதானமாமசுத்தமாயையன்றே. (கக)

தனுகரணபுவனபோகங்களென்வொருநான்கு தகைமைத்தாக
முனமுரைசெய்மாயாகாரியந்தோன் றுமதுதொகுத்துமொழியுங்
வினவலுறுகாலமொடுநியதிகலையக்கலையின்வித்தைவித்தை[காலை
தனிலுரியராகம்வரும்புருடனிவற்றின்செறிவுதனிலுண்டாமால்

தெரித்தகலாதத்துவத்தினவ்வியத்தங்குணமூன் றின்செறிவாய்த்தோன்று, முருத்திரராலதிற்சித்தம்புத்தியதிலகங்காரமுதிக்கு

மூன்றாய்த், தரித்திடுமாறகங்காரந்தைசதவைகாரிபூதாதியாகும்
விரித்திடுமான்மனத்தொடுஞானேந்தியமுந் தைசதந்தான்விளம்
பினன்றே. (௧௩)

தந்திடும்வைகாரிகன்மேந்திரியங்க ளோரைந்துஞ் சத்த முன்னு
வுந்திடுந்தன்மாத்திரைக ளுதிக்கும்பூதாதியினவ் வோரைந்தின்
கண், வந்திடும்விண் ணுதியாம் பூதங்களைந்துமிந்த வகைமைதன்
னுன், முந்தியம்புதத்துவங்கண்மொழியின்முப்பத்தாறுகமுடியு
மன்றே. (௧௪)

வீறுசிவஞ்சத்திசாதாக்கியமீசுரஞ்சுத்தவித்தையைந்துந்
தேறுசிவதத்துவமாஞ்சுத்ததத்துவங்களென்று தெரிப்பர்காலம்
பேறுதருநியதிகலைவித்தையராகம்புருடன்ப்ரகிர்தியேழுங் [மே.
கூறும்வித்யாதத்துவமாஞ்சுத்தாசுத்தங்களென்றுங்குறிக்கலா

மெய்த்தசித்தம்புத்தியகங்காரமனநான்குசெவிமெய்கண்வாய்
மூக்,கொத்தவிவையைந்துவாக்குப்பாணிபாதம்பாயுருபத்தமை
ந்து, சத்தமொடுபரிசமுருர்சுவைகந்தமைந்துவிண்காறழனீர்பா
ரைந், தித்தகையெண்மூன்றுன்மதத்துவமாமசுத்தமென்றுமியம்
பலாமே. (௧௬)

ஆற்றுநீர்போலவிடையீடின்றியனுதியாயாக்கையாவுந்,தோற்
றுமாறேதுவாய்நசிப்பதற்குங்காரணமாய்த்தொடர்ந்தான்மாவி
னேற்றதோர்மதிகதமாய்ப்பலவிதமாயின்பதுன்பமிசைத்துவை
ய, மாற்றுநாண் மாயைவயிற் றடங்குமிது கன்மமலம் வகுத்த
வாறே. (௧௭)

மந்திரங்களொடுபதங்கள்வன்னங்கள்புவனங்கள்வானுலோது
ந், தந்திரங்களூறுகின்றதத்துவங்கள்கலைகளிவைசடத்துவாவா
மிந்தவகைபுகல்பதினென்றெண்பத்தொன்றைம்பத்தொன்றிரு
நூற்றெண்மூன், றந்தமின்முப்பத்தாறைந்தாமிவைகளொன்றுக்
கொன்றதிகமாமே. (௧௮)

ஒன்றினென்றுவியாத்தியாயுறும்பந்தமிவையாறுமொருவி
மேலாய்ச், சென்றுநின்றதிரோதானசத்தியுமின்னருளின்வழி
திரும்பாநிற்ப, மன்றினின்றுநடம்புரிவோன்சச்சிதானந்தமாய்
வாமாகோச, மின்றிநின்றசமரசமாநிருவாணங்கொடுப்பவின்ப
மியைவரென்றான். (௧௯)

உன்னுடையவாராய்வுமுனதுசுபசரிதமுமிங்கொத்ததேனும்
பின்னமுறுதுல்லியமே முத்தியென்ற மார்க்கமொன்றும் பிழை
த்ததாமா, லின்னுமரனடிக்கமலமிறைஞ்சிமறைமுடிவினைக்கண்

டிரண்டங்கின்றி,மன்னுசச்சிதானந்தநிரதிசயமுத்திபெய்திவாழ்தியென்றான். (உ0)

உற்றசைவ சித்தாந்தி வேதாந்தி வாய்மொழிகேட் டொக்குமென்ன, வெற்றிபுரி பாசுபதன் வாமிவயிரவன்மகாவிரதியோடு மற்றையகாளாமுகனும் வந்துசைவ னுட்கொண்ட வாறே கொண்டா,ரற்றமின்மீமாஞ்சையனேயாதியருமத்தகையராகின்றார்

அன்னபொழுதறிஞர்பிரானனைவருக்குமவரவர்வாயடங்கச்சொன்ன, தன்னுடையமைத்துனனைத்தான்பார்த்துப்பகர்ந்தமொழிதக்கதேயா, வுன்னுடையநெறியைப்பினியுரைத்தியென்றானென்றலுமுள்ளுவகைகூர, மன்னவனையெதிர்நோக்கிவேதாந்தியிப்பரிசுவகுத்துச்சொன்னான். (உஉ)

சைவசித்தாந்தச் சருக்கம் முற்றிற்று.

ஆகூ விருத்தம் - ககூஎஉ.

## சஎ - வது, வேதாந்தச்சருக்கம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கங்கைமுதலாய்ப்பலபலவாங்கடவுணதிகள்கடைமுறையிற்பொங்கு பெருஞ்சாகரம்புகுந்தப் புனலோ டொன்றாய்ப்பொருந்துதல்போற், றங்குபுகழ்மீமாஞ்சன்முதற்சமயநெறிகள்பற்பலவு, மிங்கெ னுயர்வே தாந்தத்தா டெய்தி யொன்றா யிசையுமன்றே. (க)

சத்தாயகண்டபூரணமாய்த்தனியாயருவாய்த்தற்பரமாய்ச்
சித்தாயனந்தானந்தமாய்த்திகழுமொளியாயுலகெவைக்கும்
வித்தாய்வேதவளவையதாய்விமலமாகியனுபூதி
வத்தாய்நித்தமாயென்றும்வயங்குமந்தப்பிரமந்தான். (உ)

இரவியொன்றுபல்கடத்தினிருந்தபுனலினங்கங்கே
விரவிநின்றதெனவதுவேமெய்கடொறுநின்றிடுநின்று
மரபிலொன்றும்பொறிகளினுன்மதித்தற்கரிதாய்க்காட்சிமுத
லுரைசெய்கின்றபிரமாணமோராறானுமுணர்வரிதால். (ந)

மாலைப்பழுதைபணியெனவேவயங்குங்கதிரோன்வந்தெழுந்த
காலைப்பழுதைமெய்யாகிக்கண்டபணிபொய்யாமதுபோ
லோலப்பரவைச்செகமவித்தையுறமெய்யாகுமொழியாத
மேலப்பிரமவித்தையுறமெய்யாமுலகம்பொய்யாமால். (ச)

இன்றாமுலகும்பிரமத்தினிடத்திற்றோன்றுந்தோன்றாது
நின்றாலழியாதாம்பொய்யாய்நிலவுஞ்சுத்திகாரசிதங்
கன்றாரழலிற்காணாதுகாணும்வாறுவிவகாரத்
தோன்றாதாகும்பரமார்த்தத்துண்டுபோலுமுலகமுமே. (ரு)

சிலந்திவாய்நூல்கொண்டுவலைதெற்றிவிரித்துத்திரும்பவுள்ளே
வலந்தவாதுவாங்குதல்போற்பரமேதன்னுள்வையமெலாம்
பொலிந்துகாணப்புரிந்துநிலைபுகுத்திப்போக்குமாகையினா
லுலைந்துசாயாவதுநிமித்தமுபாதானமுமாமுண்மையதே. (சு)

உற்றபிரமந்தனில்வானாயுரைத்தவானின்மாருதமா
யெற்றுமதனினெரியாகியெரியிற்புனலாய்ப்புனலதனிற்
பற்றுநிலமாயிவையைந்திற்பயிராய்ப்பயிரினின்னமுதாய்ச்
சொற்றவதனிற்றுவக்காதிதாதுவனைத்துந்தோன்றினவால். (எ)

நிலவுதாதுக்களின்குழுவினிகழுமன்னமயகோச
மிலகுமதன்பாற்பிராணமயமெழுமங்கதனின்மனோமயந்தான்
றொலைவிலாவிஞ்ஞானமயந்தோன்றுமதன்கட்சொல்லுங்காற்
குலவுமதிலானந்தமயகோசந்தோன்றிவிளங்கியதால். (அ)

வானானதுதன்னிடத்துதித்தவாயுவாதிநான்கினுள்ளுந்
தானாய்நிறைந்துபுறத்தினுமத்தன்மைத்தாகுந்தகையேபோ
லானதுயர்ந்தபிரமமுந்தன்னகத்திற்றோன்றுமைங்கோச
வூனாருடலந்தோறுநிறைந்துள்ளும்புறம்புமுளதாமால். (கூ)

கோலப்பரிதிநீடுமொளிகுறைந்துகடங்கடோறுநின்றாற்
போலப்பரமைங்கோசவுருப்பொருந்திநிற்குநின்றாலு
மேலப்புனலுக்கலதசைவவ்விம்பத்தினுக்குமிலையென்றாற்
சாலச்சடத்துக்கலதசைவெவ்வாறுபரத்தைச்சார்வதுவே. (க௦)

நானாவண்ணமொருகோவைநண்ணுங்காலையங்கங்கே
நானாவண்ணமொருநூலேநண்ணுவதுபோற்கோசவுரு
நானாவிதமாகையிற்பரமுநானாவிதம்போனிற்குநின்று
நானாவிதவைங்கோசதன்மநண்ணுவதுபோனண்ணாதால். (கக)

புரியுந்தொழிலாற்பலநாமம்பொருந்திப்போகபோக்கியத்தின்
விரியுநனவுகனவினுடன்மேவுஞ்சுழுத்திதுரியமெய்துந்
தெரியினிவற்றிற்குறுங்கரணஞ்செப்பிலீரேழ்நான்கோடொன்
றாரியவிவைகளொன்றுமில்லாவொழிவுமென்பருணர்வுற்றோர்.

கருவிகரணமெல்லாநானென்னல்பிணிப்பாங்கைவல்யத்
துருவுமவைநானலனெனலாமொன்றையொன்றுயுணர்ந்திடுமம்
மருளின்மாயாகருமம்வருமருள்போம்பொழுதக்கருமமும்போந்
தெருளுமுணர்வுபின்புதிக்கத்தீரும்பேதத்திறமெல்லாம். (௧௩)

ஆற்றும்பயன்வேண்டாக்கருமமந்தக்கரணசுத்திதரும்
போற்றுஞ்சுத்திதரும்போதம்போதம்பிரமநானென்னு
மூற்றந்தருநானுதித்தலுமேயுயர்வான்மதிநீர்த்துளக்கமெனத்
தோற்றந்தருமாயையிற்றன்னைத்துளக்கமின்றிக்காணுவனால்.()

கருவிகரணாதியினீங்கிக்காணுந்தானே தானாகி
மருவுமனுபூதியிற்கண்டுமற்றொன்றினையுங்காணும
லுரையுமிறந்துவாளாதிமொழியவொழியாதேமன்னிப்
பிரமநானேயெனத்தெளியும்பேறேபெரியமெய்ஞ்ஞானம்.(௧௫)

மறையின்முடிவாம்வாக்கியந்தான்மாவாக்கியமவ்வாக்கியத்தை
யறிஞரறிவர்குருமுகத்தாலடுத்தந்நிலையிலறியாதார்
முறையினுணரும்பொருட்டாகமொழியும்பஞ்சசாதனங்கொண்
டுறுதியியமநியமாதியோகமுயற்சியுணர்குவரால். (௧௬)

என்று புகன்ற வேதாந்திக் கிடையே புகுந்து மிடலஞ்ஞ
னன்றுன் வசன மென்றிறலு நானு மிருக்கநீநவின்ற, தொன்
றும் வகையெவ் வகையவ்வா றுணர்வார் யாவ ருணர்ந்தாலுஞ்
சென்று சிதைப்பன் சிதையேனே லென்னு மெனது செருக்
கென்றான். (௧௭)

அந்தமாற்றங்கேட்டலுமேயடல்வேதாந்தியரசனைப்பார்த்
தெந்தைகேட்டியிவனாற்றலெவரேதொலைப்பார்பிரபோதன்
வந்துதாக்கினலதனையமைந்தனுதிக்கும்வகைபுரியச் [ல்.
சிந்தைமேற்கொண்டிடுதியென்னச்செவிக்கேபையச்செப்பினனா

முத்தநகையாளுபநிடதைமுன்வந்தோனம்மொழிபுகலச்
சித்தமகிழ்ந்துமதிவேந்தன்செய்யத்தகுமச்செயலென்ன
மைத்துனனைத்தன்கையாரமார்பூட்டணைத்துமற்றுமுள்ள
வித்தகருக்கும்வரன்முறையாலவனோடேகவிடைகொடுத்தான்.

வேதாந்தச் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௯௯௧.

---

## ௪௮ - வது, பிரபோதன் முடிசூடுசருக்கம்.

---:(o):---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அனையரகன்றபின்னருபநிடதையாகுமணங்கினுடன்
வனையுமிதயமெனுங்கமலமலர்ப்பூந்தவிசின்மன்னர்பிரா
னினிதினுவந்துதமனியச்சேயிதழ்த்தாமரையிலரசவன்னந் [ல்.
தனதுபெடையைப்பணைந்தெனவுள்ளுருகிக்குழைந்துதழுவினனா

சேலார்தடங்கணுமையுமுக்கட்டேவுங்கலந்துதிளைத்ததிறம்
போலாயனையரின்பவனுபோகநுகருமந்நாளிற்
பாலாழியின்வாய்வலம்புரிநித்திலச்சூற்கொண்டபான்மையென
மேலாம்வேதவுபநிடதைவயிற்றோர்கருப்பம்விளைந்ததுவே. (௨)

ஆயகருப்பந்தரித்தவந்நாளரன்மால்பத்தியோகினிக
டேயமன்னன்றனையழைத்தச்சூல்காத்தளித்திபோதியென்ன
மேயவவனுஞ்சென்றுசரவணத்திலீசன்வீரியத்தை [தான்.
யேயவிமையோர்க்கிறைவனென்ன விடையூறெய்தாவகைபுரிந்

அந்தமடந்தைதிருவயிற்றிலவன்காத்தருள்சூலுடோறு
மிந்துகலைபோல்வளர்ந்துவளர்ந்தேறிமுதிருமந்நாளிற்
சிந்தைமருளமருள்விளைக்குந்தீயமாயாகாரியங்கள்
வெந்தபடம்போல்வலிதொலைந்துவீயாதனபோல்வீய்ந்தனவே.

பின்னுநிருத்தியாசனனைப்பேராதருள்கூர்யோகினிகண்
முன்னரழைத்துநீமன்னன்முதற்காத்தளித்தமுதுசூலை
மன்னுசச்சிதானந்தமயமேயநிர்தசடதுக்க
மென்னலாகாதெனவகுக்குஞ்சீமந்தாதியியற்றென்றார். (௫)

அன்னபணிமேற்கொண்டவனுமணுகியறிஞர்பெருமானன்
முன்னர்வகுத்தசீமந்தமுதலாஞ்சடங்குமுறையியற்றி
யுன்னவரியமகவைவிழிக்குடனின்றிமைக்குமிமைபோலத்
தன்னதியலானனிபுரந்துதானங்குறையுமவ்வேலை. (௬)

பொல்லாவஞ்ஞனெனுங்கங்குற்பொழுதுதொலையவறிஞர்பிரா
னல்லானனத்தாமரைமலருநங்கையிதயவாரிசமு
மெல்லாமலரவடர்ந்தபவமென்னப்படர்ந்தபுன்பனிமேற்
செல்லாதகலப்பிரபோதச்செய்யோனுதயஞ்செய்தனனால். (௭)

சிங்கக்குருளைசெனித்திடுமந்நிலையேமதத்ததிறற்கரியைப்
பங்கப்படவல்லுயிர்செகுக்கும்படிபோலஞ்ஞப்பாவியுயிர்
மங்கத்தொலைத்துவருமகவைவாணிமகடன்மணவாள [தே.
னங்கைத்தலத்தின்மிசைக்கொடுத்தாளவனும்வாங்கியகமகிழ்ந்

தன்னையீன்றமானதனுந்தாதைத்தடக்கைத்தாமரையி
லன்னஞானக்குழவிதனையளித்தான்வாங்கியாங்கவனுந்
துன்னியுடலம்புளகரும்பத்துணைக்கண்களிக்கத்தோள்விங்கப்
பொன்னினகலத்தூடணைத்துப்புல்லிக்கொண்டபோதம்மா. (௯)

தேவர்மனிதர்விலங்குபுள்ளாதிகளுமல்லேன்றிகழசர
மாவனவுமேயல்லேன்மண்ணீர்தீக்கால்வானனைத்துமல்லே
னேவுகருமேந்தியங்களைந்துமியலுஞானேந்தியங்களைந்து
நாவினுரைக்குமுயிர்களைந்துங்கரணநான்குநானலனே. (௧௦)

பொங்குகடலுமலையும்விண்ணும்புவியுஞ்சுரருமானிடருஞ்
சிங்கம்புலியாதியவிலங்குஞ்சீவகோடிபிறவுமென்ன
வங்கங்குறுநாமரூபாதியவற்றுற்பலவாயிருப்பதெல்லா
மெங்குஞ்சச்சிதானந்தமயமாயிருந்ததெனக்கென்றான். (௧௧)

ஆயபொழுதிலக்குழவியனையநிருத்தியாசனனாற்
றாயகதிராயிரம்பரப்பித்துலங்குமுச்சிச்சுடரவன்போற்
றாயருவப்பவளர்வுழியத்தனையன்றனக்குமுடிசூட்டி
மேயவனத்திற்றான்புகவிவேகன்மதித்திவ்விதஞ்செய்தான். (௧௨

நித்தவகண்டாகாரசுபநிரதிசயசச்சிதானந்த
முத்தியெனுமோர்சாம்ப்ராச்யமுழுதுமுனதென்றறிஞர்பிரான்
பத்திநிருபகாதியர்தம்பணிமேற்கொள்ளப்பிரபோதற்
கொத்தசுபமங்களதினத்திலொளிர்மாமகுடம்புனைந்தனனால். ()

தனிவெண்கவிகைமேனிழற்றத்தனதுநிகிரிதிசைதவழ
வினிதுசெலுத்துமொருசெங்கோலெங்குமளப்பவொருதானே
யனையதிறத்துப்பிரபோதனைராஜராஜேந்த்ரன்
புனிதமணிச்சிங்காதனத்திற்போற்றவரசுவீற்றிருந்தான். (௧௪)

மைந்தனரசுபுரிநாளின்மன்னர்பெருமானன்னையொடு
முந்துமனைவிசுமதியொடுமுளரிவாணிசெல்வியொடு
நிந்தையகலக்கிளைஞரொடுநெடுங்கான்புகுந்தான்புகநோக்கித்
தந்தைதனிமையாய்தனிமையாற்றாமையிலித்தகைசெய்தான். ()

தன்னையளித்தமாமாயை தன்பான்மான தன்சார்ந்து
மன்னுமலர்ச்சேவடிதொழுமார்பூடணைத்தம்மாமகனை
யென்னையிவணீவந்தவரவென்றுளனுமியன்றதெல்லா
மன்னைவினவப்புகன்றுபின்னரனையனவள்பாலமைந்தனனால்.()

தன்னாலேவத்தகுமீமாஞ்சயனாதியர்சொற்றாழ்ந்தமையு
முன்னாகியவேதாந்திவென்றமுறையுமவனுக்கிளையவள்பாற்
பின்னாதரஞ்செய்தறிஞர்பிரான்பிரபோதனைத்தான்பெற்றமையு
மன்னானுதயஞ்செய்தளவேயஞ்ஞானவியழிந்தமையும். (கஎ)

மைந்தன்றன்பாலமைந்தமையுமதித்துட்கொதித்துவாளொளி
யந்தகாரமாக்கிவெறும்பொய்யைமெய்போலாக்கிமரு [யை
டந்தபாவியேன்செயிந்த்ரசாலமனைத்துந்தான்சிதைவுற்
றிந்தவாறுமுடிந்ததுகொலென்னாப்பின்னுமிதுசொன்னாள். ()

அலையாவியலெங்கோமான்பாலென்பாலலைவாரோபித்து
முலையாதெங்குமுறைவோனையுடற்புன்குடிலிற்சிறைவைத்துந்
தலையாமகனாலவனின்றதனையர்பலராற்றளையிட்டும்
பலவாங்கொடுமைசெய்தேனுக்கிவைநன்றாகப்பலித்தனவே. ()

ஆதலால்யான்செய்பிழையுமடுதீவினையேன்றன்மகனாற்
போதவேசெய்பிழையுமன்னோன்புதல்வர்பலராற்புரிபிழையுந்
தீதுதீதிங்கிவையனைத்துந்தீர்தற்கெங்கோன்செழுங்கமலப்
பாதமேயல்லதுபுகல்வேறிலையென்றனையன்பதத்தடைந்தாள்.()

விழித்தபொழுதிற்கனவெனவும்விரைப்பூந்தெரியலரவெனவுந்
தொழில்செய்மரத்துக்களிறெனவுஞ்சுத்திகாரசிதமெனவும்
பழித்தபூதவிகாரமெல்லாம்பாறமாயைபாறியபின்
செழித்தசோதிப்பிரபோதச்செய்யோனினையதிறஞ்செய்தான்.

அறிவுமறியப்படும்பொருளுமறிவான்றானுமவ்விகற்பம்
பிறியமோகனாதியர்செய்பிழைகண்முழுதும்பிழையாக
நெறிமையகலாத்தன்றனைநினைத்தபடியேநிறைவேற்ற
மறிவிலகண்டபூரணசின்மயத்தைத்தழுவிவயங்கினனால். (உஉ)

மடிவிலாமானதன்லயிப்பமாயையாரோபிதமறைய
முடிவிலாதசின்மயமாமூர்த்தியுபாதிமுட்டகன்று
விடிவிலாதவிருட்பிழம்பைவிழுங்கிநிமிர்ந்தவியன்சுடர்போ
னெடியசோதிபரப்பியெங்குநிறைந்தொன்றாகிநின்றனனே.(உங)

அணையாநீதிப்பிரபோதனரசுபுரியுமந்நாளின்
முனைவர்வேதபாரகரேமுதலோரெவருமூதுலகிற்
புனையும்வாழ்விற்பொருந்தியுமேபுளியம்பழமுந்தோடும்போ
னினையுமுள்ளத்தோர்பற்றுமின்றிநித்யானந்தநிலைநின்றார். (உ௪)

விரிகாசினியின் மெய்ஞ்ஞானவிளக்கமெனுமிவ் வியன்கதையை
பொருகாதுவந்து படிப்போரு முணர்வுள்ளுறக்கேட்போரும்
பெருகாதரவாலிகத்தினிற்பப்பெரும்போகங்கள்பெறுவர்பின்
னும், பரிபூரணசச்சிதானந்தபாராவாரம்படிவரன்றே. (உ௫)

மூட்டும்பந்தமிதுமேலாமுத்தியீதுமுடையுடன்றே
நீட்டுஞ்சீவனிதுபரமீதிரண்டுமொன்றாமியலீதென்
றூட்டும்பிறப்புமிறப்புமறவங்கைநெல்லிக்கனியெனவே
காட்டுமிராகவானந்தக்கருணாநிதியின்சரண்வாழி. (உ௬)

அடுத்ததொண்டர்பெரும்பவமுமலகைமுலைப்பாலொடுமுயிரு
மடுத்தென்வினையும்பெருஞ்சகடுமருதுஞ்சாய்த்துக்கோவியர்க
ளுடுத்தகலையுமொருசிறியேனுரைத்தகலையுங்கொண்டின்பங்
கொடுத்தராஜகோபாலர்கோகனகச்செஞ்சரண்வாழி. (உஎ)

போதத்தமிழ்க்கும்வடகலைக்கும்புலவோர்தமக்கும்பொருள்விரித்துச், சீதைக்கிறைவனெனநீதிச்செங்கோல்செலுத்தித்திசைபுரந்து, வேதப்பனுவன்மெய்ஞ்ஞானவிளக்காலுலகைவிளக்குமெங்கண், மாதைத் திருவேங்கடநாத மறையோன் வாழி வாழியவே. (உஅ)

பிரபோதன் முடிசூடு சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உ0௧௯.

---

பிரபோதசந்திரோதயம் என்று வழங்குகிற

## மெய்ஞ்ஞானவிளக்கம்

முற்றுப்பெற்றது.



சிவமயம்.

# மெய்ஞ்ஞானவிளக்க

# அரும்பதவுரை.

## பாயிரம்.



க. பொன்னுடை-பொற்சரிகையானுயவஸ்திரம்; இது பீதாம்பரம் எனப்படும். மரு-வாசனை.

உ. பொன்னி - காவிரிநதி. கன்னி - இளமை. தாழை - தென்னைமரம். கன்னல் - கரும்பு. வளவர் - வண்மை அல்லது,வளத்தினையுடையோராய சோணுட்டரசர்கள். வள்ளல் - வரையாது கொடுப்போன்; அதாவது:- இன்னகாலத்துக்கொடுப்பேனின்ன காலத்துக் கொடேன், இன்னபொருளைக் கொடுப்பேனின்னபொருளைக் கொடேன், இன்னார்க்குக்கொடுப்பே னின்னார்க்குக்கொடேன் என்னும் வரையறையின்றியெக்காலத்து மியார்க்குமெப்பொருளையுங் கொடுப்போன்; (வண்மை + அல்) ; அல் பெயர்விகுதி.

ங. குழைக்கும் - இளகுவிக்கப்படுகின்ற. அம்பொன் - அழகிய பொன்; அதாவது ஹாடகம், கிளிச்சிறை, ஜாதரூபம் என்னும் ஏனைப் பொன்வகைகளினும் அழகிய ஜாம்பூநதம் என்னும் பொன்; இதனைப் "பூவிற்குத்தாமரையே பொன்னுக்குச்சாம்புநதம்" என்பதானுணர்க. குயிற்றியகுன்று - செய்குன்றம்; அதாவது விளையாட்டின் பொருட்டுப்பொன், மணி முதலியவற்றைக்கொண் டியற்றப் படுவதோர் செயற்கைமலை; இது க்ரீடாபர்வதம் எனப்படும். அரமியம் - நிலாமுற்றம்; தனிகன் வீடும் ஆம்; இப்பொருளில் ஹர்ம்யம் என்னும் வடசொல்விகாரம்; ஹர்ம்யம் - (மனதைக்) கவர்வது. தரளம் - முத்து; (காந்தியானிருளைத்) தாண்டுவதெனப் பொருள்படும். வடமொழித்தற்சமம் ; தற்சமமாவது:- ஆரியத்திற்குந்தமிழிற்கும் பொதுவாகவுள்ளஎழுத்தாலாகி விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடமொழியாம். மழை - மேகம். தவழ்- நகர்ந்துசெல்கின்ற. மாதை - மாதேவிபட்டினம்; இது மன்னார்குடியினருகிலிருக்கின்றது.

ச. தந்திரம் - வேதத்தினோர் பகுதி; வடசொல் விகாரம். கற்பகம் - விரும்பியவனைத்துந் தருவதோர் தெய்வ விருக்ஷம்; கல்பகம் என்னும் வடசொல் விகாரம். செங்கை - செம்மையானகை; கைக்குச் செம்மையாவது:— இறைவனைத் தொழுத லிரப்போர்க்கீதன் முதலியன; சிவந்தகை என்னலுமாம்.

ரு. திறம் - கூறுபாடு; தன்மையுமாம். புனிதம் - பரிசுத்தம்; புநீதம் என்ற வடசொல் விகாரம். மறம் - பாவம்; (வேதத்திற்கூடாதென்று) மறுக்கப்படுவது என்பது பொருள். தருமநூல் - ஸ்மிருதி.

சு. மறை - வேதம்; ஸ்திரீசூத்திரர்கட்கு மறுக்கப்படுவது அல்லது, பொருள்களை மறைப்பது என்று பொருள்படும். நித்தம் - உயிருள்ளவரை செய்யற்பாலனவாய கருமங்கள்; வடசொல் விகாரம். நைமித்தியம் - நிமித்தம்பற்றிச் செய்யப்ப

டும் கருமங்கள்; தத்திதாந்தம்; தத்திதாந்தமாவது:— ஒருவட சொற்சிறிது மாறித் தன்னுடையைபுடைய பொருளையாயினுந் தன்பொருளையாயினு முணர்த்துவது.

எ. சூட்சி - உபாயம்.

அ. நிரை - வரிசை. வனசம்- தாமரைமலர்; முதலாகுபெயர்; வடசொல்விகாரம்; நீரிலுதிப்பதுஎன்பது பொருள். பணி - பாம்பு; படத்தையுடையது என்பது பொருள்; வடசொல்விகாரம்; கட்டளை எனவுமாம். பாவை - பிரதிமைபோன்றபெண்; உவமையாகுபெயர். தார்- ஈண்டுக் காதிற்பூ; இது கன்னவதங்கம்எனப்படும்.

௯. பதுமம் - தாமரை; வடசொல் விகாரம்; (லட்சுமி) அடைதற்கிடமானது என்பது பொருள். பாசடை - (பசுமை + அடை) பசுமையாகிய இலை. புனல்-தண்ணீர்.

௧0. அளவளாவி - கலந்து.

௧உ. கண்ணன் - திருமால். க்ருஷ்ண: என்னும் வடசொல்விகாரம்; (எல்லாஞ்)செய்வோன் அல்லது, கருமையையுடையோன் என்பது பொருள்.

௧௩. வேலை-கடற்கரை; வேலா என்ற வடசொல்லின்விகாரம்; இது இலக்கணையாய்க் கடலையுணர்த்திற்று. பெருமாள்-திருமால்; ஏகோன் ஒற்றுஈண்டு ஆடேஉமேற்று.

௧௬. காமாதி மூவிருவெம்பகை - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பவை; இவை அரிஷட்வர்க்கம் எனப்படும். செம்பொருள் - பிரம்மம்; இது நித்தமாய்த்தூய்தாயென்று மொருபடித்தாய் நிற்றலின் செம்பொருள் எனப்பட்டது; இதனைத் திருக்குறள் ௩௬-வது அதிகாரம் அ-வது குறளின் உரையானுணர்க. இரவி - சூரியன்; (ரவி:) துதிக்கப்படுவது என்பது பொருள்; வடசொல் விகாரம். புனலிரவிபோற்பார்த்தல் - நீரிற்பிரதிபிம்பிக்குஞ் சூரியகோடிகள் விண்ணில் விளங்குஞ்சூரியனில் வேறல்லாதவாறுபோல அவித்தையிற் பிரதிபிம்பிக்கும் ஜீவகோடிகள் பிரம்மத்தின் வேறல்ல எனக்கருதல்.

௧எ. வடம்-ஈண்டுக்கல்லாலமரம். (வீழ்துகளாற்றன்னிடத்தைச்) சுற்றிக் கொண்டிருப்பது என்பது பொருள். வடசொல்விகாரம். நால்வர் - ஈண்டுச்சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்போர். தேசிகன்-குரு; (வித்தையைக்) கொடுப்பவன் என்பது பொருள்; வடசொல் விகாரம்.

௧அ. சமாதி - உண்டாயிருக்கும் வாசனைகளின் ஒழிவும், அடங்கியிருக்கும் வாசனைகளின் வெளிப்பாடுமுண்டாகி யந்தக்கரண மொருமுகப்பட்டிருத்தல்; வடசொல் விகாரம்.

௧௯. குறிப்பு - பக்குவிகட்குரியதோர்குறி; விருப்பமுமாம். வயின் - இடம்; எழனுருபு.

உ0. நிறம் - மார்பு; ஒளியுமாம். நிகழ்த்தினன்-சொன்னன்.

உ௧. கல்லுறு - மலையிலுள்ள; கல் ஈண்டுக்கருவியாகுபெயர். முழை - குகை. அல்லல் - (பிறவித்) துன்பங்கள்; அவையாவன:- ஆத்யாத்மிகம், (தன்னால் வருவது) ஆதிபௌதிகம், (பிறவுயிர்களால் வருவது) ஆதிதெய்விகம் (தெய்வத்தால் வருவது) என்னும் மூன்று.

உஉ. போதமுள்ளோர் - ஈண்டுப்பிரம்மஞானிகள். ஏதமில்லுணர்விலார்-(சந்தேகவிபரீதங்களாகிய) குற்றங்களொழிந்த (பாரமார்த்திக) ஞானமில்லாத அஞ்ஞானிகள். பேதுறு - மதிமயங்குகின்ற; அஞ்ஞானிகட்கு மலர் மணம் மந்தானிலம் முதலியவற்றான் மதிமயக்கமுண்டாக்குமாதலின் “பேதுறு,, என்றார்;

பிளவுபட்ட என்னவுமாம். பேறு-பயன்; பெறப்படுவது என்பது பொருள்.

௨௩. பாந்தள் - பாம்பு. திரிபு-(பழுதையைப்பாம்பென்பது போன்ற) விபரீத (க்ஞானம்).

௨௪. மாற்றம்- சொல். புளகம்-மயிர்சிலிர்த்தல்; வடமொழித்தற்சமம். பெற்றி - தன்மை. நல்லறிவு - மெய்ஞ்ஞானம்; பிறப்பை யொழித்து வீட்டை யளித்தலின் நல்லறிவாயிற்று.

௨௫. கம்பலை - நடுக்கம். மாந்தர் - மனிதர்; ஒருமை யேலாப்பன்மைப்பெயர்; இது நித்தியபகுவசனம் எனப்படும். புலம் - அறிவு.

௨௬. உழக்கி - கலக்கி (கடைந்து என்றபடி). புலவோர்க்கு- தேவர்களின் பொருட்டு; குவ்வுருபு ஈண்டுப்பொருட்டுப்பொருளது. வாரி - நீர்; இது, இலக்கணையாய்க் கடலையுணர்த்திற்று; வடமொழித்தற்சமம். அமுது - அமிர்தம்; மரணத்தையொழிப்பது என்பது பொருள்; வடசொல்விகாரம்.

௨௭. பூசுரர் - பிராமணர்; பூமிக்குத்தேவர்என்பதுபொருள்; வடசொல் விகாரம். காப்பியம்-காவ்யம் என்னும்வடமொழியின் சிதைவு; கவியாற்செய்யப்படுவதுஎன்பது பொருள்; தத்திதாந்தம்.

## க-வது, சருக்கம்.



க. இனை - வருந்தற்குக்காரணமாகிய; இதனைக்கானல்என்பதோடுகூட்டுக. கானல் - (வெயிலின்மிகையானுளதாகும்) பேய்த்தேர். கண்டாற்போல் - காணப்பட்டாற்போல; இதுசெயப்பாட்டுவினைப்பொருளில்வந்தசெய்வினை; இவ்வாறுவருவதனைவடநூலார் "நயக்கு,, என்பர். விசும்பு - ஆகாசம். ஒன்றினிடத்து - அத்துவிதவத்துவாகிய பிரம்மத்தினிடத்தில். ஒன்று - பொருந்திய; இதனைவேர்என்பதோடுமுடிக்க. ஒன்றுவேர்-வினைத்தொகை. ஒன்றினிடத்தொன்று என்பதற்குவிசும்புமுதலியவை ஒன்றினிடத்துமற்றொன்றாக,என்றும்பொருள்கொள்ளலாம். அதாவதுவிசும்பில் வாயுவும், அதனிடத்துத்தேயுவும், அதனிடத்துஅப்புவும்,அதனிடத்துப்பிருதுவியுமாகவேர்கொண்டஎன்பதாம். அதுதேராதார்க்கு-(நிருவிகற்பசமாதிவாயிலாகத்) "தத்,, பதலக்ஷ்யார்த்தமாகிய பிரம்மத்தையறியாத அக்ஞானிகட்கு. தார்கொண்டபணியுருப்போல் - பூமாலையிற்றோன்றும் ஸர்ப்பப்பிராந்திதெளிந்தவிடத்துப் பொய்யாவதுபோல. நிபிடானந்தம் - பூரணானந்தம்; வடசொல் விகாரம். மூவுலகும், தேராதார்க்குக் கண்டாற்போன்மெய்யாகித் தேர்ந்தவிடத்துத் தவிற்பணியுருப்போற்பொய்யாம் எனமுடிக்க.

௨. இடை - வலக்காற்பெருவிரலினின்றசைந்திளகியேறியிடதுநாசியைப்பற்றிநிற்கும்நாடி; இடா என்னும்வடமொழித்திரிபு. பிங்கலை-இடக்காற்பெருவிரலினின்றசைந்தி

ளகியேறி வலதுநாசியைப்பற்றிநிற்கும்நாடி; பிங்கலாஎன்னும்வடமொழித்திரிபு. இடைநாடி - இவ்விரண்டிற்குமிடையிலுள்ள சுழிமுனை (ஸுஷும்ந) நாடி. உச்சி - ஈண்டுப்பிரம்மரந்திரம். உபசாந்தி - விருப்புவெறுப்பற்றநிலை; வடசொல்விகாரம். சின்மயம் - ஞானகாரம்; வடசொல் விகாரம். சந்ததமும் - எப்பொழுதும்.

௩. துரியம் - சுத்தநிலை; நான்காம்அவத்தை; சதுர்த்த வஸ்துவுமாம்; வடசொல்விகாரம்.

௪. மாயை - (யா-மா-ஸா மாயா) எதுஇல்லையோஅதுமாயையென்றுவேதாந்திகளும், பிரபஞ்சமெதனிடத்துச் சங்காரகாலத்தடங்கிச் சிருஷ்டிகாலத்து வெளிப்படுகின்றதோஅதுமாயையென்றுசைவசித்தாந்திகளுங்கூறுவர்; வடசொல்விகாரம்.

௫. புல்லுருவி - மரங்களிலுண்டாகி அவற்றையழிப்பதோர்கொடி.

௬. மறு - (சந்திரனிடத்துள்ளமான்அல்லது, முயல்போன்ற) களங்கம். தறுகண் - குரூரம்; அஞ்சாமையுமாம்.

௧௦. மதி - ஈண்டுமூன்றுஅல்லது, எட்டாம்பிறைச்சந்திரன்; மதிக்கப்படுவதுஎன்பதுபொருள். நுதல் - நெற்றி.

௧௨. மிடல் - வலிமை. எமுற - களிப்புற; ஏமமுறஎன்பதன்விகாரம்.

௧௩. கதம் - வலி.

௧௪. வரிசை - மரியாதை. நேரிழை - நேரியஆபரணங்களையுடையவளாகியபிரவிர்த்தி; வினைத்தொகையன்மொழி.

௧௫. தோகை - மயிற்பீலி; இதுசினையாகுபெயராய் மயிலையுணர்த்திஅதுஉவமையாகுபெயராய் ஓர்பெண்ணையுணர்த்திற்று; ஆதலின் இதுஇருமடியாகுபெயர்.

௧௬. இகந்த - மீறிய.

௧௭. தோன்றல் - பெருமையிற்சிறந்தோன்; தொழிலாகுபெயர்; ஆண்பாற்பெயருமாம்.

௧௮. நச்சு - விடம்; நஞ்சுஎன்பதுஎதுகைநோக்கிவலித்தல்விகாரம்பெற்றது. இச்சகத்து - இவ்வுலகத்தில்; உபசாரவார்த்தையையுடையஎன்னலுமாம்: அத்துஈரிடத்துஞ்சாரியை; முன்னதுஏழாம்வேற்றுமைத்தொகை; பின்னதுஇரண்டாம்வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்கதொகை.

௧௯. மிளிரும் - ஒளிசெய்கின்ற. மெல்லியல் - மெல்லியஇயலினையுடையளாகியபெண்; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

௨௦ வஞ்சி - பூங்கொடிபோன்றபெண்; உவமையாகுபெயர். சேயிழை - செவ்வியஆபரணங்களையுடையளாயபெண்; பண்புத்தொகை அன்மொழி.

௨௧. கடி - வாசனை; உரிச்சொல். அடைவுறு - பேற்றைப்பெறுத; ஒப்பினைப்பெறுதஎன்னலுமாம்.

௨௩. வியல் - பெருமை. சேய் - மகன்.

௨௫. வரம் - மேன்மை; தெய்வஈகையுமாம்; வடசொல் விகாரம்.

௨௬. கதி - மோக்ஷம்; வடசொல் விகாரம்.

௩௦. தனிவத்து - சுத்தப்பிரம்மம். வீந்திடா - அழியாத; ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம்.

௩௧. எய்த்து - மெலிவு; இது தொழிற்பெயர்; வினையெச்சமன்று; (இதற்குமுன்) மெலிவினையுடையளெனப்பொருள்கொள்க. எச்சமாகப்பொருள்கோடல்சிறவாது.

௩௬. கைதவம்- வஞ்சகம்; கிதவனதுதன்மைஎன்பதுபொருள்; தத்திதாந்தம்; (கிதவன் - வஞ்சகன்).

## உ-வது, சருக்கம்.



க. விடயத்து - லௌகிகவியாபாரங்களில்; சிற்றின்பத்தில்என்னலுமாம். ஒவிலா - ஒழிவில்லாத. களித்தும் - மகிழ்வோம்.

உ. நவத்துவாரபுரங்கள் - ஒன்பதுதுளைகளையுடையவுடல்கள்; புதியவாயில்களையுடையவூர்கள் என மற்றோர்பொருள் தொனித்தல்காண்க. நவம் - ஒன்பது, புதுமை. துவாரம் - துளைகள், வாயில். புரம் - உடல், ஊர்.

ங. பரிதி - பரிவேஷம்; இது, இலக்கணையாய்ச் சூரியனையுணர்த்திற்று; வடசொல் விகாரம். விம்பம் - எதிரொளி; வடசொல்விகாரம்.

சு. கண்டகர் - துட்டர்; கீழோருமாம்; வடசொல்விகாரம். விழுமிய- மேலான.

அ. பசுமண் -( பசுமை + மண் ) பச்சைமண்; ( ஈரமானமண்என்றபடி ). ஒருமையாய் - நிச்சயமாய்; ஒருதன்மைத்தாய்என்றுமாம்.

கூ பின்னபின்னங்களாக - வெவ்வேறாக.

க0. ஆச்சிரமம் - பிரம்மசர்யம் முதலிய நிலை; வடசொல் விகாரம். சந்நியாசிகள் - முற்றத் துறந்தோர்.

கஉ. விரை - வாசனை. புரை - குற்றம். தவிர் - நீக்குகின்ற.

கங. தாயை - தாயாகியரேணுகாதேவியை.

கச. வரி - கட்டப்பட்ட. சிலை - வில்; இதுகோதண்டம் எனப்படும். வேணி - சடை; வடசொல்விகாரம். வற்கலை - மரவுரி; வல்கலம் என்னும் வடசொல் விகாரம்.

கசு. சுளித்து - கோபித்து. வினயம் - வஞ்சகம்; வடசொல் விகாரம்.

கஎ. ஏறு - எருது. தொழு-மாட்டுக்கொட்டம்.

கஅ. எள்ளுற - இகழ. அள்ளுற - நெருக்கமுற; ( மிகஎன்றபடி ). அமுது - சோறு. அடு - சமைத்தற்குரிய.

உ0. இறைஞ்சி - வணங்கி. திறம் - தன்மை. " போலும் ,, ஈண்டுஒப்பில்போலி.

உக. தாய் - தாயாகியகேகசி. தந்தை - தந்தையாகியவிச்ரவஸ். வானரர் - குரங்குகள்; நரரையொத்திருப்போர் என்பது பொருள் ; வடசொல் விகாரம். புவனம் - பூமி; (எல்லா) முண்டாதற் கிடமாவது என்பது பொருள் ; இது இடவாகுபெயரா யதிலுள் ளோரையுணர்த்திற்று ; வடசொல் விகாரம்.

உஉ. வறிதின் - வீணாக.

உங. பொன்றினன் - இறந்தான்.

உசு. வேய் - மூங்கில். சுத்தி - முத்துச்சிப்பி ; (முத்துக்களை) யுண்டாக்குவதுஎன்பது பொருள்; வடசொல் விகாரம்.

உஎ. கனகன் - இரண்யன். அவுணர் - அசுரர்கள்.

உஅ. படாவகை - சாகாவண்ணம். அடாதென - ( பிறர் ) தகாதென் றுசொல்லும்படி.

உகூ. 'நன்றுநன்று, அடுக்குஇகழ்ச்சிப்பொருட்டு; வெகுளிப்பொருட்டுமாம்.

ங0. சுபுத்திரர் - நன்மக்கள்; சு - நல்ல; புத்திரர் - புத்என்னும் நரகத்தைத் தாண்டுவிப்போர்என்பதுபொருள்; வடசொல் விகாரம்.

ஙக. சார்வு- பற்றுக்கோடு. பரிக்க - சுமக்க.

ஙஉ. மதலை - பிள்ளை.

ஙங. கோடி -கொள்வாய்; ஒருமைஏவல்.

ஙரு. மேதகு - சிறந்த. வீற்றிருக்கும் - வேறொருவர்க்கில்லாச்சிறப்புடனிருக்கும்.

## ௩-வது, சருக்கம்.



௧. அடர்த்தல் - நெருக்கல்; பொருதலுமாம். தாவில்-குற்றமற்ற.
௨. ஞாலத்து - பூமியில்.
௪. ஏதும் - சிறிதும்.
௫. மாதுலன் - மாமன்; (தாயுடன்பிறந்தோன்) என்பது பொருள்; வடசொல் விகாரம். ஆழவீழ்விக்கும் - அமுங்கும்படிவிழச்செய்யும்; மிகவும்விரும்பச்செய்யும்என்னும் இருபொருளுங்கொள்க. இனம்-சுற்றம். இனமே, அகழாகும்என்க.
௬. உவணத்திறை - கருடனை (வாகனமாய்க்கொண்ட) கடவுளாகியதிருமால். சங்கற்பம் - மனோவியாபாரம்; வடசொல் விகாரம். சங்கற்பம், எழுவாய். மதிள், பெயர்ப்பயனிலை.
௭. பதணம் - மதிலுண்மேடை. மமகாரம், மதிலுண்மேடையாமென்க.
௮. இதுமுதல் ஐந்துகவிகள்சிலேடை. பின்னும் - (பகைவர்கள் ஊடுபுகாவண்ணம்) பின்னிக்கிடக்கின்ற, கொடி - படர்கொடிகளானவை, காதல் - (புகுவோருடல்களைக்கிழித்துக்) கூறுசெய்துகொல்லுதலை, பிரியாது - (தம்மிடத்திருந்து) நீக்காமல், உள்உணர்வு ஆ(க)-(கூர்மைவிஷயத்தில்) மெய்ஞ்ஞானம் போன்றதாக, முன்னும் - நினைக்கப்படுகின்ற, கொடாரிக்கும் - கோடாலிப்படைக்கும், முள்ஒன்று(ம்)-ஒருமுள்ளும், சிதையாது - அழியாமல், உன்னும் - மேலோங்கிவளராநிற்கிடமான, கொடுந் தீ ஒழுக்கு ஆம் - கொடியதாவாக்கினி (காட்டுத்தீ) யின்வரிசையுண்டான, இழுக்கே - வழுக்குநிலங்களே, துன்னும் - நெருங்கின, பெருங்காடு - பெரியகாட்டரணால், அது - அம்மதில், சூழ்கின்றது - சூழப்பட்டிருக்கின்றது; (எ-று.) காதல்- கொல்லுதல்; கூறுசெய்தலுமாம்; இதுதொழிற்பெயர். "உணர்வா" என்பதிலீறுதொகுத்தல். "ஒன்று" இதில் உம்மைவிகாரத்தாற்றொக்கது. கொடிகள் பிரியாது,சிதையாதுஉன்னுங்காடு, தீயொழுக்கு ஆம்காடு,இழுக்குத்துன்னுங்காடுஎன்க. பின்னும் - (முற்கூறியஅம்மதிலரண்மாத்திரத்தோடமையாது) மேலும், காதல்-பெண்ணாசையாகிய காமமென்னும், கொடி - படர்கொடியானது, பிரியாது - நீங்காமல், உள்உணர்வு ஆம் - (எல்லாரும்சிறந்ததென்று) நினைக்கின்றஅறிவுஎன்னும், முன்னும் - (கோடாலிகளிலெல்லாம் மிகச்சிறந்ததென்று) நினைக்கப்படுகின்ற,கொடாரிக்கும் - கோடாலிப்படைக்கும், முள்ஒன்று(ம்)-ஒருமுள்ளும், சிதையாது - அழியாமல், உன்னும் - கிளர்ந்தெழுகின்ற,இழுக்கேதுன்னும்-ஈனமேஅல்லது,கேடே நெருங்கின, கொடுந்தீஒழுக்குஆம் - துராசாரமாகிய, பெருங்காடு சூழ்கின்றதுஅது - பெரியகாட்டரணாற் சூழப்பட்டிருக்கின்றது அம்மதில்;(என்றவாறு.) காதலைக்கொடியாகவும் துராசாரத்தைக்காடாகவுங்கொள்க.
௯. அடைவு - (பகையஞ்சாமை, உயிரைப்பெரிதாய் எண்ணாமைமுதலியகாவலாளர் அடைதற்குரிய) பேறுகளும், ஒன்றும் மைந்து - பொருந்தியவலிமையும், ஆவி - (பகைவர்மாட்டுக்கோபத்தான் எழும்) உயிர்ப்பும், ஓர்பொழுதும்அகலாது - ஒருபோதும் நீங்காமல், நடைசென்றுபடரும் - (பகைவர்வரும்) வழிகளிற்சென்றுபரவிநிற்கின்ற, நன்காவலுடன் - நன்மையாகிய காவலாளர்களையும், விடயங்கள் எவையேனும் - (இவர்கள் பகைவர்கள் என்றறிதற்குரிய) சங்கதிகள் எவையாவது, வெளிகாணு

ழுன் - வெளியிற்காணப்பட்ட வுடனே, போய் - சென்று, புடைமண்டி - (அவர்)பக்கலினெருங்கி, எறியும் - அடிக்கின்ற அல்லது, மோதுகின்ற, பல்பொறி - அநேக (தெய்வ) யந்திரங்களையும், அது-அந்நகர்,கொண்டது - பெற்றிருக்கின்றது; (எ-று.) அடைவுங் காவலுந் தொழிலாகு பெயர்கள். தெய்வயந்திரங்களாதலின் விடயங்களை யுணருமென்க. தெய்வம்அதிட்டித்துநிற்கும் யந்திரம், தெய்வயந்திரமாமென்க. கண்டபின்னர்ப்போய்ப் புடைமண்டியெறிவதை, விரைவுபற்றிக் "காணுமுன்போய்" என்றார்.

ஒன்றும்ஐந்துஆவி- பொருந்திய பஞ்சப்பிராணன்களும்,அடைவு ஓர்பொழுதும் அகலாது -(பூர்வஜன்மகன்மத்தாற்பெற்ற) உடலைஒருபொழுதும்விட்டுநீங்காமல், நடைசென்றுபடர்கின்ற - (அவ்வுடலையடைதற்குரிய)வழியிலே (பிறவியிலே)சென்று பரவுதற்குக்காரணமான, நன்கு - மிகுதியாகிய, ஆவலுடன் - பேராசையையும்,விடயங்கள் - (சத்தாதி) விஷயபஞ்சகங்கள், எவையேனும் - யாவையேனும், வெளிகாணுமுன் - புறத்திற்காணப்படுமுன்னர், போய்- சென்று,புடைமண்டி - (அவற்றின்) பக்கத்துநெருங்கி, எறியும் - (மனதையவற்றினிடத்து) விரைவிற்செலுத்துகின்ற, பல்பொறி - ஐந்தாகிய இந்திரியங்களையும், அதுகொண்டது - அந்நகர் பெற்றிருக்கின்றது; (எ-று.) அடைவுஆகுபெயர். "படர்கின்றஆவல்" என்பதனைப் "பிழைக்கின்றமருந்து" என்பதுபோற் கொள்க. ஒன்றல்லனபலவாதலின் "ஐந்து" "பல" எனப்பட்டது.

கo. குலகோபம் - (படைவீரர்) குலத்திற்குரிய கோபத்தினையும், அடு - (பகைவரைக்)கொல்லுகின்ற, உற்ற - (தருமமாகப்) பொருந்திய, கொலை - கொலையினையும், பாது - காவலினையும்உடைய, அகத்தோர் - மனதினையுடையோரும், மறமன்றி- வலி அல்லது வீரத்தையன்றி, அறம்ஒன்றும் - ஒருதருமத்தையும், அலகுஒடி - எல்லையற்று, உணரார் - அறியாதவரும், உலகோடிநொடியின்கண் உடன்மீளும் விசையார் - நொடிப்பொழுதிலுலகு முழுதும் ஓடியுடனே திரும்பிவரும்வேகத்தினையுடையோருமாகிய, பலகோடி படைவீரர்கள்பதிகொள்ளப் பெற்றது அந்நகர்; (எ-று.) பாது - காவல். மறத்தைஅலகோடியும், பிறதருமத்தைவேண்டியவளவும், உணர்வார் என்க. குலத்திற்குரிய கோபமாவது:- பகைவர் அஞ்சிச்சரண்புக்கவிடத்தும் புறமுதுகிட்டோடியவிடத்து மிலதாகிப் புகாவிடத்தும் ஓடாவிடத்தும் உளதாகும்உத்தமகோபம் என்க. பதிகொள்ளல்- தங்குமிடமாக்கொள்ளல்.

மறம் அன்றி அறம்ஒன்றும் அலகோடியுணரார் -பாவத்தை (அதருமத்தை) எல்லையற்று உணர்வதன்றித் தருமத்தைச்சிறிதும் உணராதவரும், உலகோடி நொடியின்கணுடல்மீளும் விசையார் - கணப்போதிலுலகவியாபாரத்திற்சென்று உடலின்மீண்டுபுகும் வேகத்தினையுடையோரும் ஆகிய, கோபம் - கோபம் என்போனும், அடு உற்றகொலை - கொல்லுதலைப்பெற்ற கொலையென்பவளும், பாதகத்தோர் - பரத்துரோகன் என்பவனுமாகிய, பலகோடி குலப்படை - சிறந்த அநேககோடிபடைகளையுடைய, வீரர் - வீரத்தினையுடையோர், பதிகொண்டது அது - பதிகொள்ளப்பெற்றது அந்நகர்; (எ-று.) பெண்களிலும் வீரமுள்ளோருளராதலின், கொலையென்பாளையும் கூட்டிமொழிந்தார். கொலையை யிந்நூலிற்பெண்ணுக வுருவகப்படுத்தியிருக்கின்றனர்.

கக. எதுபெற்றும் - (பகைவரான் இடித்தல் முதலிய) எத்தொழிலைப்பெற்றும், அயராமல் - தளராமலும், அமையாமல் - அடங்காமலும், மேன்மேல் - ஆகாயத்தில், வளர்கின்ற - உயர்கின்ற, பிழைகூர் - குற்றம்மிக்க, அவாஆம் - (உயரத்தில்) ஆசையையொத்த, வானம் - ஆகாயத்துள்ள, முயல்மதியாலும் - முயல்போன்றகளங்கத்தினையுடைய சந்திரனாலும், முடிகாண அரிதா (க) - தலைகாணவரிதாகும்படி, உயர் - உயர்ந்த, வான - பெருமையையுடைய, கிரிதுர்க்கம்ஒன்று - ஒருமலைமேற்கோட்டையை, அது - அந்நகர், உள்ளது - உடைத்தாயிருக்கின்றது; (எ-று.) அயராமலும் அமையாமலும் பெயராமலும் வளர்கின்றகிரிதுர்க்கம்; அவாஆம் கிரிதுர்க்கம்; அரிதா (க) வுயர்கிரிதுர்க்கம்; வானகிரிதுர்க்கம் என்க. "மேல்,, இரண்டில்முன்னது ஆகாயம், பின்னது எழனுருபு. முயல் உவமையாகுபெயர். அரிதா, அரிதாக என்பதனீறுதொகுத்தல். கடையடியிலுள்ள வான குறிப்புப்பெயரெச்சம். ஆசைக்கு ஓர்அளவில்லாதவாறு மலைமேற்கோட்டையின் உயரத்திற்கும் அளவில்லையென்க.

அயராமல் - தளராமலும், எது - எப்பொருளை, பெற்றும் - அடைந்தும், அமையாமல் - அடங்காமலும், மேன்மேல் - (மிகவும்) பின்னும்பின்னும், பெயராமல் - நீங்காமல், வளர்கின்ற - அதிகரிக்கின்ற, பிழைகூர் - குற்றம்மிக்க, அவாஆம் - ஆசையாகிய, முயல் - (தள்ள) எத்தனிக்கின்ற, வான - சிறந்த, மதியாலும் - அறிவினாலும், முடிகாணஅரிதா (க) - (தனது) முடிவிடம் காணமுடியாவண்ணம், உயர் - உயர்ந்த, வான - மேகத்தினையுடைய, கிரிதுர்க்கம்ஒன்று - ஒரு மலைமேற்கோட்டையை, அது உள்ளது - அந்நகருடைத்தா யிருக்கின்றது; (எ-று.) முயல்மதி, வினைத்தொகை. அயராமலும், அமையாமலும், பெயராமலும் வளர்கின்ற அவாஎனவும், அவாஆம் கிரிதுர்க்கம் எனவும் முடிக்க.

கஉ. நேராகவேசெல்லும் நெறியின்றி - நேராய்ச்செல்லும் வழியேயில்லாமல், முற்றுஅறஓராது - முடிவிடத்தைத்தீர அறியாமல், திருகிச்செல் - (புகுந்தோர்) மீண்டு செல்லுதற்குக்காரணமான, கோணல்உளவாய் - வளைவுகளைத்தம்மிடத்தேபெற்றனவாகி, ஆராதவறிவின்மையதுவல்ல தெவையும் - பொருந்தாத மதியீன மன்றி (வழியைப்பற்றிய) எவையும், பாராத - பார்க்கப்படாத, குடிலங்கொள் - வஞ்சகத்தைக்கொண்ட, வாசல் - வாயில்கள், பலவுள - அநேகமிருக்கின்றன; (எ-று.) இன்றி, உளவாய், பாராதவாசல், குடிலங்கொள் வாசல்என்க. ஓராதுஎன்பதனைத், திருகிச்செல் என்பதனோடு முடிக்க.

நேராக செல்லும் நெறியே இன்றி - நீதியாகநடக்கும் நன்மார்க்கமே இல்லாது, அறம்உற்று ஓராது - தருமத்தைப்பொருந்தி ஆராயாமல், திருகிச்செல் - மாறிச்செல்கின்ற, உறுகோணல் - மிக்கமாறுபாட்டை, உளவாய் - உடையனவாகி, ஆராதவறிவின்மையதுவல்லதெவையும்பாராதகுடிலங்கொள் - பொருந்தாத அறிவீனத்தையன்றி மற்றெவற்றையும் பாராதவஞ்சகத்தைக்கொண்ட, வாசல்பலவுள - பொறிகளாகியவாயில்கள்பலவுள; (எ-று.) இன்றி, உளவாய், பாராத என்றேனண்டும்முடிக்க. "பாராத,, முற்பொருளிற் செயப்பாட்டுவினையாயும், பிற்பொருளிற் செய்வினையாயும் பொருள்கொள்ளப்பட்டது. அறிவின்மை முற்பொருளிற் செல்வோர

து பாதையுணராத் தன்மை. பிற்பொருளில் இயல்பாயுள்ள அஞ்ஞானம். ஒன்பதுவாசல் எனப்பொருள்கொள்ளின் கோணலுளவாதலும், பாராதகுடிலங்கொள்ளலும் பொருந்தாமையினப்பொருள் சிறவாதெனக. இதனுன்றே ஐம்பொறிஞானேந்திரியம் எனப்படுவதூஉம் என்க.

கங. கால் - பாதம், தூண்; (சிலேடை)முற்பொருளில் எண்ணலளவையாகுபெயர். பழுக்கழி - விலாப்புறத்துக்கம்பு.

கச. சாளரம் - பலகணி. சாக்கிரமாதியீரிருதளம் - சாக்கிர ஸ்வப்பன சுஷுத்தி துரியஸ்தானங்களாகிய நெற்றி, கண்டம், இதயம், நாபி என்னும் நான்கு உப்பரிகைகள் ; தளம் - உப்பரிகை. நாலுமுகக்கண் - ( மாடியின்மேலுள்ள மதில்களின் ) நான்குபக்கங்களிலும் (அழகின்பொருட்டு அமைக்கப்பட்டவளைவான ) சிறுதுவாரங்கள் ; நாற்புறமும் ( நோக்குங் ) கண்கள் ; சிலேடை ; முகம் - திக்கு, வாய் ; கண் - துவாரம், நேத்திரம்.

கரு. காமினி - காமம் மிகுந்த பெண் ; வடசொல்விகாரம். ஊதைக்கால் - கடுங்காற்று; ஒருபொருட்பன்மொழி. உம்பர் - மேலிடம் (ஆகாயம்).

கஎ. பாரித்து - பருத்து. திரண்டகல் - உருண்டகல் ; இது உலம் எனப்படும். சிக்கென்ற - உறுதியான. கங்குல் - இருள். ஆதித்தர் - அதிதியிடத்திற் பிறந்தவர்களாகிய சூரியர்கள்; அவராவார்:—தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டன் என்னும் பன்னிருவர் ; தத்திதாந்தம். வல்லிருள் - வன்மையாகியஇருட்டு ; அதாவது:—பெரும்புறக் கடலின்புறத்துள்ள இருட்பூமியிற்செறிந்தநீங்காஇருள் ;அவ்விருள் எக்காலத்தும் நீங்காதாதலின் வல்லிருளாயிற்று.

கஅ. நசை - ஈண்டுப்புகழ் என்னும்பொருட்டு; வசை என்னுமிதன்மறுதலை பின்னர் வருதலான். பசை - அன்பு.

கக. இலக்கு - கட்புலனுக்குவிஷயமாதல் ; லக்ஷியம் என்னும் வடசொல்விகாரம்.

உ0. மந்தன் - சனி ; வடசொல்விகாரம். மால் - பெருமைபொருந்திய ; திருமால்போன்ற என்றுமாம். வரை - கணு ; இதுசினையாகுபெயராய் மூங்கிலையும் அதுதானியாகுபெயராய் மலையையுமுணர்த்தலின் இருமடியாகுபெயர்.

உக. அவகுணம் - தீக்குணம் ; வடசொல் விகாரம். சந்தம் - சந்தனம்.

உஉ. வாவி - தாண்டி. கறங்கு - காற்றாடி. கடவி - செலுத்தி. விடயம் - லௌகிகவியாபாரம் ; வடசொல்விகாரம்.

உங. வெற்பு - மலை. அற்பு - அன்பு ; வலித்தல்விகாரம். மேவில் - சிறந்தவீடு ; பரமபதம் என்றபடி.

உச. தனு - வில்; பிரார்த்திக்கப்படுகிறது என்பதுபொருள்; வடசொல்விகாரம். துரங்கம் - குதிரை ; விரைவிற்செல்வது என்பதுபொருள்; வடசொல்விகாரம்.

உரு. காயம்-புண், உடல்; சிலேடை; பிற்பொருளில் வடமொழித்தற்சமம்; (அவயவங்களாற்) கூட்டப்படுகிறதுஎன்பதுபொருள். புண்வருவிக்கும் என்றும், உடல்வருவிக்கும் அதாவது பிறவியைத்தரும் என்றுங்கொள்க. விபரீதநெறி - மாறுபாட்டுவழி. பதாதி - காலாட்படை ; வடசொல்விகாரம்.

உ௬. வயங்கு - ஒளிசெய்கின்ற. குலவு - பிரகாசிக்கின்ற. பகிரண்டம் - ( திருவசக்கரத்திற்கு ) வெளியிலுள்ள அண்டங்கள்; வடசொல்விகாரம்.

உஎ. அங்கண் - அழகிய இடம். அமைதி - நிகழ்ச்சி. கவிகை - குடை; (தலைக்குமேற்)கவிக்கப்படுவது என்பது பொருள்.

உஅ. ஆலம் - விடம்; வடசொல்விகாரம். கொடுங்கோல் - கொடிய அரசாக்ஷி; அரசாக்ஷியின் கொடுமை கோலின்மேலேற்றப்பட்டது; ஔபசாரிகம் எனப்படும்.

உ௯. திறை - அரசிறை.

௩0. சிந்தாகுலம் - மனக்கவலை; வடமொழித் தீர்க்கசந்தி.

௩௩. ஒன்னார் - பகைவர்.

௩௫. குருளை - குட்டி. கரடம் - மதம். வீந்து - இறந்து. வாகை - வெற்றிமாலை.

௩௬. சூட்சி - ஆலோசனை.

௩எ. பொருளோ - பெருங்காரியமோ; எளிதின் முடிக்கற்பாலது என்றபடி.

௩அ. ஈரம் - அன்பு. பேர் - கீர்த்தி.

௩௯. ஒருக்கி - அழித்து. அடைய - முழுதும்.

௪க. நாகரீகம் - சாதுரியம்; வடசொல்விகாரம்.

௪உ. நியமம் - நிட்டை; ஆசாரமுமாம்; வடசொல் விகாரம்.

௪௩. கேதனம் - விருதுக்கொடி; (இன்னனென்) றறிதற்குரியது என்பதுபொருள்; வடசொல்விகாரம். மந்தானிலம் - தென்றற்காற்று; வடசொல்விகாரம். யாளிதம் - கற்பூரக்குழம்பு.

௪௪. சுருப்புநாண் - ( சுரும்பு + நாண் ) வண்டாகிய வில்லிடைக்கயிறு. உடற்றி - போர்புரிந்து.

௪௫. கறிக்கும் - கடிக்கும். புருரம் - புருவம். கொற்றம் - வெற்றி.

௪எ. சீவிதம் - உயிர்வாழ்க்கை; வடசொல் விகாரம்.

௪அ. முகமன் - உபசாரவார்த்தை.

௪௯. இவுளி - குதிரை.

௫௩. மற்கடமுட்டி - குரங்குப்பிடி; வடசொல் விகாரம். பதாகை - விருதுக்கொடி ; அசைவது என்பதுபொருள் ; வடசொல் விகாரம்.

௫எ. கறுப்பது - கோபிப்பது. சவரம் - சாமரம்.

௫அ. கமை - பொறுமை ; க்ஷமா என்ற வடசொல்விகாரம்.

௫௯. முனை - போர்க்குரிய ; நுனி என்றுமாம். குழைவது - வாட்டமாயிருப்பது. கயம் - யானை ; மதிக்கிறது என்பதுபொருள் ; கஜம் என்ற வடசொல்விகாரம்.

௬க. நொய்யவர் - வலியற்றோர்; வறியவருமாம். திமிலை - பம்பை மேளம். விகடம் - அழகானது ; பெரியதும் ஆம்.

௬௩. சிவிகை - தண்டிகை ; மங்களப்பிரதமானது என்பது பொருள் : வடசொல்விகாரம். மனோராச்சியம் - வீண் எண்ணம் ; வடசொல்விகாரம். காணி - உரிமை.

௬௫. கவ்வை - துன்பம். அவ்வை - தாய். அனிகம் - சேனை ; (வேறுபடுத்தி) அடைவிக்கப்படாதது என்பதுபொருள் ; வடசொல் விகாரம்.

௬௬. விசித்தி - கட்டுவாய் ; நிச்சயனது மனைவி என்றுங்கொள்ளலாம்.

௬எ. வாசி - குதிரை ; வேகமுடையது என்பதுபொருள் ; வாஜி என்னும் வடசொல்விகாரம்.

௬௯. வடி - கூர்மையான ; வடித்த என்றுமாம்.

எக. காமசத்திரமென - மன்மதன்குடையாகிய சந்திரனைப்போல ; (பிறர்) இன்பச்சாலையென்றுகூ

றும்படி என்னலுமாம்; வடசொல் விகாரம். கழறி - சொல்லி.

எங. திதம் - அக்கினி.

எச. வீறு - பெருமையடைகின்ற.

எகூ. நறு - கள்.

எஅ. கழல் - ஆடவர்கொடையானும் வீரத்தானும் அணிந்து கொள்ளும் வீரகண்டையெனப்படும் காலணி.

அ0. கேட்டி - கேட்பாய்.

அக. வரைவு - விவாகம். பாஷண்டவிஞ்சை - ஸம்ஸாரபந்தஹேது பூதமானஅஸத்சாஸ்திரஸம்பிரதாயம்; வடசொல் விகாரம்.

அச. அடங்கலும் - முழுதும்.



## ச-வது, சருக்கம்.

ங. சிங்கலுறல் - குறைவடைதல்.

ச. உளுக்கியது - சுளுக்கிற்று.

ரு. என்பிலது - புழு. சார் - பக்கம்.

சு. அரண் - காவல். இரவிமைந்தன் - ஈண்டுச்சுக்கிரீவன். பதரிகாச்சிரமம் - சரஸ்வதி நதிக்கருகிலுள்ளதோர் புண்ணியவனம்; வடசொல் விகாரம்.

எ. மிண்டு - நெருங்கிய. மண்டு - நெருங்கிய.

அ. வியன் - பெருமை.

கூ. ஓரும் - ஆராய்கின்ற. பேரும் - (பற்றுகளிலிருந்து) பெயர்கின்ற (நீங்குகின்ற). உழி - இடம். இருந்தவுழிஎன்றது இருந்துழி என விகாரப்பட்டது.

க0. புல்வாய் - மான்.

கக. தஞ்சம் - சரண்புக்கோர்; ஆகுபெயர். தகவு - நீதி; அறிவுமாம்.

கஉ. தாழுமவர்க்கு - வணங்குவோரை; உருபுமயக்கம்; குவ்வுருபுஇரண்டாம்வேற்றுமைப்பொருளில் வந்ததாதலான்; இதனை அமிழ்த்தும் என்பதோடியைக்க. வாரிதி- கடல்; நீரைத்தரிப்பது என்பது பொருள்; வடசொல் விகாரம். நாவாய் - மரக்கலம். போழுமவர்க்கு - பிளப்போர்க்கு. மரபு- வமிசம். மற்றையவர்க்கு மரபினும் உறவிலை எனக்கூட்டுக.

கங. நீராமோ - தன்மையுளதாகுமோ. கூரிய - மிக்க; இது கூர் என்னும் மிகுதிப்பொருளைத்தரும் உரிச்சொல்லடியாய்ப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; கூர்மையென்னும் பண்படியாய்ப் பிறந்ததன்று.

கச. பரிசு - விதம். முறையிலி - ஒழுங்கினன். கணக்கு - தன்மை.

கரு. தம்முன் - தமயன்.

கஎ. சீரனையன் - ஈண்டுமானதன். மகன்றனக்குஉரைத்தது என முடிக்க.

கஅ. உரிமை - உரிமைப்பொருள்; பண்பாகுபெயர். மிகை - துன்பம்.

ககூ. உழுவை - புலி.

உ0. நீர்மை - (பெருந்) தன்மை. இழையாது - செய்யாது.

உக. வாள் - ஒளி; உரிச்சொல்.

உங. தானவர் - தநுவயிற்றிற் பிறந்தவசுரர்; தத்திதாந்தம். தொட்டு - தொடங்கி. மறன் - வீரம்;

மறம் என்பதனிறுதிப்போலி. ஐந்தாம்வேதம் - பாரதம் ; இதனைப் "பாரத:பஞ்சமோவேத: ,, என்பதானுணர்க.

உரு. காலி-பசுக்கூட்டம். ஆரா - தெவிட்டாத.

உஅ. கமலம் - தாமரைமலர் ; முதலாகுபெயர் ; வடமொழித்தற்சமம் ; நீரையலங்கரிப்பது என்பது பொருள். செவ்வி - அழகு. முருத்தம் - (மயிலி)னிறகடி ; முருந்தம் என்பது எதுகைநோக்கி வலித்தல் விகாரம் பெற்றதென்றேனும் முருந்து என்பது சந்தியான் அம்முச்சாரியையோடு வலித்தலையும்பெற்றதென்றேனுங்கொள்க. நகை - பற்கள்.

உகூ. கோவியல் - ராஜலக்ஷணம். பாலிக்கும் - கொடுக்கும்.



## ரு-வது, சருக்கம்.

—(◡)—

ங. இகறெறும் - பகைவரையழிக்கின்ற ; இகல், பண்பாகுபெயர்.

ச. ஈடுபட்டு - பெருமைகெட்டு ; வலிகெட்டுஎன்றுமாம்.

ரு. சிமிழ்ப்புண்டு - கட்டுப்பட்டு; உண்,செயப்பாட்டு வினைவிகுதி. உறுகண் - துன்பம்.

கூ. மதாந்தகாரம் - மதமாகிய பேரிருள்; வடசொல்விகாரம்.

கஉ. தளை-கட்டு. உழையர்-மந்திரிகள்; பக்கத்துள்ளோர் என்பதுபொருள்.

கங. வேந்து - அரசன் ; இது சொல்லான ஃறிணை பொருளானுயர்திணை ; பின்னுமிவ்வாறுவருவதனையுய்த்துணர்க. கோசரம் - விஷயம் ; அதாவது புலப்படல்.

கச. சித்திரம் - மெய்போற்பேசும்பொய்.

கரு. புங்கவ - மேலானவனே! அண்மைவிளி. இயம்புவதாகிய புன்சொலும் எனக்கூட்டுக.

கசூ. இந்தனம் - விறகு; (அக்கினியைப்) பிரகாசிக்கச்செய்வது என்பதுபொருள்;வடசொல்விகாரம்.

கஎ. வறிதுடையர் - சிறுமையுடையவர்.

கஅ. ஓங்கல் - மலை ; தொழிலாகுபெயர். குறுமுனி - அகஸ்தியர்.

உக. நாள் - புதிய ; (அன்று பூத்த என்றபடி).

உஉ. மேவலர் - பகைவர்.

உங. எழு - எழாகிய ; எழுகின்ற என்னலுமாம் ; பிற்பொருளில் வினைத்தொகை.

உரு. ஒற்றர் - உருமாறிச்சென்றுண்மையுணரும்வேவுகாரர். காமியர்கள் - தூர்த்தர் (காமத்தினையுடையவர்கள்).

உசூ. தானை - சேனை. கம்பலை- அச்சம், துன்பம், ஒலியுமாம்.

உஅ. துவரை - துவாரகாபுரி; வடசொல்விகாரம். மங்கையர் - ஈண்டுக்கோபிகாஸ்திரீகள். உட்கொண்டதாகியதுறவு எனமுடிக்க.

ஙo. பார்ப்பு - பறவைக்குஞ்சு. கொடி - காக்கை.

ஙக. வாரிசம் - தாமரைமலர் ; முதலாகுபெயர் ; வாரிஜம்என்னு

ம் வடசொல்விகாரம் ; நீரிற்றோன்றுவது என்பதுபொருள். முகுளித்து - குவித்து. ஒவ்வார் - பகைவர். விழைவு - விருப்பம்.

௩௩. காதும் - கொல்கின்ற. புரவலன் - ரகூகணன் அல்லது, சவ்வீர மகாராஜன். ஊர்தி - வாகனம் ; ஏறிநடத்தப்படுவது என்பதுபொருள்.

௩௪. பரியும் - இரங்குகின்ற. துரிசு - குற்றம். திரியம்பகன் - ஓர்முனிவன் ; ஈண்டுமுக்கண்ணனாகிய சிவபிரானன்று.

௩௫. கைத்து - வெறுத்து.

௩அ. சூழல்-சுற்றிடம்; தொழிலாகுபெயர்.

௩௯. உஞற்றுதல் - செய்தல்.

## ௬-வது, சருக்கம்.

௩. தென்பால் - தெற்குப்பக்கம் ; ஈண்டுஇயமலோகம்என்னும் பொருட்டு.

௪. தெவ்-பகைவர்; சொல்லான் அஃறிணை பொருளானுயர்திணை. துருவி - தேடி. குறும்பு - பொல்லாங்கு.

௫. முரண் - வலிமை.

௬. செவிக்கு - செவியில் ; உருபுமயக்கம்.

எ. துவர்த்து - கசப்புக்கொண்டு,சிவந்து. இடைச்சேரி-ஆயர்பாடி; இது கோகுலம் எனப்படும்.

௯. சோகானலம் - (சோக + அனலம்) துக்கமாகியதீ ; வடமொழித்தீர்க்க சந்தி.

க0. வடியா - வற்றாத. தொந்திவயிறன் - விநாயகக்கடவுள். கடம்பெண் - வல்லபை. நிருவாணம் - ஆடையின்மை ; வடசொல்விகாரம்.

கக. சிறுப்பிள்ளை - சிறியமகனாகிய முருகக்கடவுள் ; பகரம்விரித்தல்விகாரம். மாடு - பக்கம். மரம் - ஈண்டுவேங்கைமரம்.

க௨. தாபதன் - ஈண்டுக்கௌதம முனிவர் ; வடசொல்விகாரம். கோசம் - ஆண்குறி ; வடசொல்விகாரம். சிலபுராணங்களில் இந்திரன் ஆண்குறிபெற்றதாகவுங் காணப்படுகிறது. வாவல் - வௌவால். நால - தொங்க. நந்தாது - கெடாமல். நாகாதிபன் - விண்ணின்றலைவனாகிய இந்திரன். மந்தாரம் - பஞ்சதருக்களில் ஒன்று; சந்தோஷிக்கச்செய்வது என்பதுபொருள் ; வடசொல்விகாரம்.

க௪. மருந்து - ஔஷதம், அமிருதம் ; சிலேடை.

க௫. போது - மலர்.

க௬. பை - பாம்பின்படம். அராவரசு - ஆதிசேஷன்.

கஎ. குழு - கூட்டம். பாயல் - படுக்கை. பணி - ஆபரணம். சாபம் - வில்; சபத்தால் (மூங்கிலாற்) செய்யப்படுவது என்பதுபொருள் ; தத்திதாந்தம்.

கஅ. அட்டமாசுணம் - எண்வகைச்சர்ப்பங்கள் ; அவையாவன:— வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பவை;

இவைமுறையே கிழக்குமுதலிய திக்குக்களிலிருந்து பூமியைத்தாங்குகின்றன.

கக. கண்ணுறுவிடனில் - பார்க்கப்படாதவிடத்தில்; இதனைஉய்யலாகும் என்பதோடியைக்க; பார்க்கப்படாத இடம்இல்லையென்றுங்கொள்ளலாம்; இல் முற்பொருளில் ஏழனுருபு; பிற்பொருளில் வினைமுற்று.

உ0. பாமரத்திமிரம் - அஞ்ஞானமாகிய இருள்; வடசொல் விகாரம். பானு - சூரியன்; பிரகாசிக்கிறவன் என்பதுபொருள்; வடசொல்விகாரம். என - என்ன? வினாவினைக்குறிப்பு; எவன் என்பதன்விகாரம்.

உஉ. பாவம் - அதருமம்; அபிப்பிராயமுமாம்; வடசொல்விகாரம்.

உ௩. மூரல் - சிரிப்பு. அண்ணல் - பெருமையிற் சிறந்தோனாய விவேகன்.

உச. முகில் - மேகம்.

உரு. கபாடம் - கதவு; காற்றை மறைக்கிறது என்பதுபொருள்; வடமொழித்தற்சமம்.

உசு. நென்னல் - நேற்று.

உஎ. உடல்பிறிதொன்று - ஈண்டியாதனுசரீரம்.

உகூ. பவ்வம் - கடல்.

௩0. இறுத்தோம் - கடன் செலுத்தினோம்.

௩உ. இறும் - அழியும்.

௩ரு. நிரயம் - நரகம்; சுபமற்றது என்பதுபொருள்; வடமொழித்தற்சமம்.

௩எ. தறுகண்ணன் - குரூரம் அல்லது, அஞ்சாமையையுடையோனாகியமோகன்.

௩அ. ஆற்றில் - (யமுனா) நதியில். பெரியோர் - பெருமையையுடையவராகிய பராசரர். மணம் - வாசனை. மணமெய்துவித்த தாவது மச்சகந்தியினுடலில் இயல்பாய்வீசும் மீன்நாற்றத்தைப்போக்கி யோசனைகமழும் திவ்விய பரிமளம் உண்டாக்கியது. இதனை மச்சகந்தி, பரிமளகந்தி, யோசனகந்தி என்னும் பெயர்களானேயே உணரலாம். மணம் என்பதற்கு விவாகம் எனப்பொருள்கொண்டு சிலர் மயங்குப; அது பொருந்தாது. மனமெய்துவித்து, என்றும் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது. சளன் - (உடலாற்) பொய்யன்; அனங்கன் என்றபடி.

௩கூ. இளைஞோர்கள் - தம்பியர்கள்; அவராவார்:— சித்திராங்கத விசித்திர வீரியர்கள். பெண்டீர் - மனைவிகள்; அவராவார்:— காசிராஜன் புத்திரிகளாகிய அம்பிகை, அம்பாலிகை என்போர். ஐங்கோல் - ஐந்து அம்புகள்; கொல்லுதற்குக்கருவி கோல்; கருவிப்பொருள் விகுதிபுணர்ந்து கெடும்போது முதனீண்டது.

ச0. பிரவிர்த்தி - தர்மாதர்மங்கள்; வடசொல்விகாரம்.

சக. பஞ்சாக்கினி - வேள்வித்தீ மூன்றும், ஔபாசனக்கினி ஒன்றும், சூரியனாகியதீயொன்றுமாகிய ஐந்துதீ; வடமொழித்தீர்க்கசந்தி.

சஉ. உழை - மான்.

சச. அகரம் - அந்தணருறைவிடம்; அக்ரஹாரம் என்றவடசொல்விகாரம்; மேற்குங் கிழக்குமாகிய இரண்டு அக்கிரங்களிலும் முறையே ஹரிஹரர்களது ஆலயங்களையுடையது என்பதுபொருள்.

சரு. சீரணித்து - சிதைந்து. மாற்றி - மாறி; தன்வினைப்பொருளில்வந்த பிறவினை; எனையவினையெச்சங்கள் தன்வினையாகலான்.

சஎ. பிரளயம் - ஈண்டு அளவுகுறியாது சேனை என்றமாத்திரையாய் நின்றது; வடசொல் விகாரம்.

இருத்தல் - தங்குதல்.

ருச. தாணு - சிவபிரான்; (பிரளயத்திலு) மிருப்பவர் என்பதுபொருள்; ஸ்தாணு: என்ற வடசொல்லின் விகாரம்.

ருசு. கறைமிடற்றன் - கருமையானகழுத்தையுடைய சிவபிரான்; கறை, தொழிற்பெயர்; மிடறு - கழுத்து.

ருஎ. கின்னரம் - ஓர்வகைப் பக்ஷி; வடசொல்விகாரம்.

சுஅ. பழையார் - புராதனராகிய சிவபிரானது; ஓர் வைப்புப்பதியெனக்கொள்ளற்க; அது "பழையாறு" ஆதலின். கச்சிப்பலதளி எனக்கூட்டுக.

சுகூ. அறப்பள்ளிகுமரி என்பது மோனையின்மையாலின்,குமரியறப்பள்ளியென மாற்றப்பட்டது.

எ0. அசோகந்திரி, மந்தானம், நன்மற்குன்றம் என்பவற்றை அசோகந்தி, மார்தானம், மன்னற்குன்றம் எனத்திருத்திக்கொள்க.

எக. பிறைக்காட்டூர் என்பதோர் வைப்புப்பதியின்மையாலின், மிறைக்காட்டூர் என இருத்தல் சிறப்புடைத்து.

எஅ. பருதியூர் என்றதோர் விஷ்ணுத்திருப்பதியின்மையாலின், பிருதியூர் எனத்திருத்தப்பட்டது.

அ0. உடு - நக்ஷத்திரம்; (ஆகாயத்திற்) சஞ்சரிப்பது என்பது பொருள்; வடசொல்விகாரம்.

அக. அலங்கல் - பூமாலை; தொழிலாகுபெயர்; அசைதல் என்பதுபொருள்.

அ௨. சத்தம் - எழு, ஓசையுமாம்; வடசொல்விகாரம்.

அ௩. ஓச்சி - செலுத்தி.

அரு. தமரம் - ஓசை.

அசு. பச்சிமம் - மேற்கு; (சூரியனுதிக்குந்திசைக்குப்)பின்னுள்ளது என்பதுபொருள். எயினர்-வேடர்.

---

## எ-வது, சருக்கம்.

௪. உவரி - கடல்; உப்பினையுடையது என்பதுபொருள். தீரம் - கரை; வடமொழித்தற்சமம்.

ரு. இற்று - இத்தன்மைத்து; "இ" என்னுஞ்சுட்டடியாய்ப்பிறந்த குறிப்புவினைமுற்று.

சு. சாரர் - ஒற்றர்; (பலவிடங்களிலுஞ்) சரிப்போர் என்பதுபொருள்; வடசொல்விகாரம்.

எ. யோகினி - ஈண்டுச்சிவவிஷ்ணுபக்திகள்; சாதியொருமை; இது ஜாத்யேகவசனம் எனப்படும்.

கூ. தெள்ளியர் - அறிவுடையோர்.

கங. இடுக்கண் - துன்பம்; இடுங்குகண் என்பதன்மரூஉ. மண்டூகம் - தவளை.

கச. சுரதரு - தெய்வ விருக்ஷமாகிய கற்பகம்; வடசொல்விகாரம்; தரு, (வெயிலைத்) தாண்டுவிக்கிறது என்பதுபொருள். சொன்னபீடம் - பொன்னாற் செய்யப்பட்ட ஆதனம்; வடசொல்விகாரம்; சொன்னம் - ஸ்வர்னம்; நன்றாய்ப்பிரகாசிப்பது என்பதுபொருள்; பீடம் - அடையப்படுவது என்றுபொருள்படும். அரமகளிர் - தெய்வமாதர்; அவராவார்:— ரம்பை, ஊர்வசி,

மேனகை, திலோத்தமை, கிருதாசி என்போர். அனவரதம் - எப்போதும்; வடசொல்விகாரம்.

கரு. வேழ்வி - யாகம்; எதுகைநோக்கிவேள்விவேழ்வியாயிற்று.

கஎ. மேல் - மறுமையில். யோகம் - கூட்டம்.

கஅ. ஆக்கம் - செல்வம்; பெருக்கமுமாம்.

கக. சீற்றம் - கோபம். இடத்தால் - இடத்தில்; உருபுமயக்கம்.

உக. ஆர்ச்சிப்பது - சம்பாதிப்பது.

உரு. மூக்குப்போனது அதிதி, சரஸ்வதி, சுவாஹாதேவி என்போர்க்கும், கைபோனதுஅக்கினிக்கும், மேனிகுழம்பிப்போனது சந்திரனுக்கும், விழிபோனது இந்திரனுக்கும், பகன் என்னுஞ்சூரியனுக்கும், பற்போனது பூஷாஎன்னுஞ்சூரியனுக்கும்என்க.

உஎ. தேசு - புகழ்; தேஜஸ்என்ற வடசொல் விகாரம்.

உஅ. பல்க - பெருக.

உக. பூதங்கள் - ஈண்டுஅவற்றிற்குரிய தேவர்களைக்குறிக்கின்றது; அவராவார்:- பிரம்மன், ஹரி, ஹரன், மஹேசன், சதாசிவன்என்போர்.

௩0. மூரல் - சிரிப்பு. ஆமா - ஆமாறு என்பதன் விகாரம். இகம் - இம்மை.

௩க. கரதலாமலகம் - (கரதல + ஆமலகம்) உள்ளங்கைநெல்லிக்கனி; இது ஒருவிஷயத்தை நன்கறிதற்குவமை கூறப்படும்; வடமொழித்தீர்க்க சந்தி. சரதம் - நிச்சயம். நிரதர் - (சற்காரியங்களில்) மிக்க பற்றுடையவர்கள்.

௩உ. காந்தலூதியதென - (காய்கள் பழுத்தற்பொருட்டுப்) புகைமுட்டிவைத்தூதியதுபோல.

௩சு. கழி - மிகுதிப்பொருளைத் தருவதோர் உரிச்சொல்.

சக. ஆயிடை - அவ்விடம்; சுட்டுநீண்டவழியகரம்பெற்றது,

சஉ. வயினதேயன் - கருடன்; வினதைமகன் என்பது பொருள்; தத்திதாந்தம். நயனம் - கண்; (பொருள்களை) அடையச்செய்வது என்பது பொருள்.

சரு. லோபமும், உருநெறியும் நடந்திலதுஎன்க; நெறி என்பதிலும்மை விகாரத்தாற்றொக்கது.

சக. கையுற - ஒழுக்கமுற; அதாவது தெளியஎன்றபடி. தேற்றிடு - தேற்றாங்கொட்டையை இடுகின்ற; தேற்று தேறு என்பதன்விரித்தல்விகாரம்; தேற்றிடுஎனஒருமொழியாய்க்கோடல் சிறவாமையுணர்க. தோயம் - தண்ணீர்; ரக்ஷிப்பதுஎன்பதுபொருள்.

ருக. வான் - மேகம்; இடவாகுபெயர்.

ருஉ. படியில் - பூமியில்; ஒப்பற்றஎன்றுமாம்.

---

## அ-வது, சருக்கம்.

—()—

க. வதனம் - முகம்; பேசற்குரியது என்பதுபொருள். நிகழ்ச்சி - சம்பவம் (உண்டாவது).

௩. அவுணர் - (சம்பரன்முதலிய) அசுரர்கள்.

சு. அருந்ததி - நக்ஷத்திரரூபமாயுள்ள வசிட்டன்மனைவி; இவர் கற்புடை மாதர்க்குவமிக்கப்படுவார்.

கக. தகை - தடை.

கஉ. மன்றல் - வாசனை. வனம் - அழகு.

உக. " உமதருட்டுணை ,, நலிந்து பொருள் கொள்ளத்தக்கது; உய்த்துணர்க.

உங. கலம் - மரக்கலம் ; இது நாமைகதேசக்கிரகணம்; அதாவது:- ஒருபெயரின் ஏகதேசத்தைக்கூறிய மாத்திரத்தானேயே அப்பெயர்முழுவதையுங்கொள்வது ; வீமசேனனென்பதில் வீமனென்பதுபோல.

## கூ-வது, சருக்கம்,



உ. பற்றலார் - பகைவர். இற்றைநாள் - இன்று + நாள் ; இன்றாகிய நாள்; மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியைபெற்றது.

ச. தொடையல் - மாலை ; தொடுக்கப்படுவது என்பது பொருள் ; அல் சாரியை.

ரு. ககனம் - ஆகாயம் ; ( தேவர்கள் ) செல்லற்கிடமாவது அல்லது, ( பக்ஷிகளின் ) சஞ்சாரப்பிரதேசம் என்பதுபொருள்.

சு. நச்சி - விரும்பி ; இதனைநடந்தஎன்பதோடியைக்க; நச்சுஎனப்பிரித்து வினைத்தொகையாக்கி யாகத்தோடியைத்தலுமாம். நச்சு + யாகம்-நச்சியாகம் ; " உக்குறள்யவ்வரின் இய்யாம் ,, என்றபடி உகரம் இகரமாயிற்று.

எ. சவுமியர்கள் - மனவொடுக்கமுள்ளோர்.

கo. காமியக்கருமம் - பயன்கருதிச்செய்யப்படும்கன்மங்கள். அரம்பையர்கள் - தெய்வமாதர்கள்.

கக. வனம் - பதரிகாச்சிரமம்.

கஉ. போதகர் - உபதேசக்குருக்கள்.

கங. கைச்ச - கோபித்த ; கைத்தஎன்பதன்போலி.

கச. ஆடும் - வெளிவேஷம்போடுகின்ற.

கரு. யோகம் - அதிர்ஷ்டம்.

கஎ. கறையடி - யானை ; உரல்போன்ற கால்களையுடையது என்பதுபொருள் ; உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

கஅ. " ஓட்டுகின்ற ,, எனநிகழ்காலத்தாற் கூறப்பட்டது, இடைவிடாதோட்டிக்கொண்டே யிருப்பதையுணர்த்தற்கு.

உo. " மூன்றேயகவும் ,, என்றபடி 'ஹ, மொழிக்கு முதலில் அகரமாதலன்றிக் ககரமாகாதாதலின், அரிகர என்பது அரியர எனத்திருத்தப்பட்டது.

உக. திறம்பினேன் - மாறுபட்டவன். முறுவல் - சிரிப்பு.

## கo-வது, சருக்கம்.



க. அடையார் - பகைவர். வாரணசி - காசி ; வரணை, அசிஎன்னும் நதிகள் ஓடுமிடத்துள்ளது என்பது பொருள்.

ச. தூமணம் - பரிசுத்தமான வாசனை : அதாவது:— புகழ்என்றபடி. தவிர்ந்தோர் - புத்தன், சமணன், கபாலிஎன்போர்.

௬. பன்னசாலை - இலைக்குடிசை; பர்ணசாலா என்ற வடசொல் விகாரம்.

௭. கோடு - (யானைக்) கொம்பு; மலையுமாம். சுரதம் - புணர்ச்சி. விடர் - காமுகர்.

௯. சமிதை - ஓமவிறகு. உபகரணம் - கருவிகள். பவித்திரம் - அநாமிகை அல்லது, ஆழிவிரலிலணியும் குசைமுடி. கையை மூக்கிடைச் செலுத்திச் செவியிடைப் போக்கல், பிராணயாமத்தின் பொருட்டு. குழை - காதணி; இது தானியாகுபெயராய்க் காதினையுணர்த்திற்று.

௧0. அக்கினிகோத்திரம் - பாவநிவிர்த்திக்காகக் கிரகஸ்தர்களாற் காலைமாலைகளிற் செய்யப்படும்பிராயச்சித்தமாகிய அக்கினிகாரியம். சர்வக்ஞதீட்சதர்-முற்றுமுணர்ந்தோரும், சோமமுள்ள யக்ஞகர்த்தாக்களுமானபெரியோர்.

௧௧. ஜிதேந்திரியர் - ஐம்பொறி வென்றோர்.

௧௨. அத்தியானம் - அந்தத்தியானம்; வேதம்ஓதல்அன்று; பெண்களைக்குறித்தலின்.

௧௫. பாசம் - அன்பு. முடங்கல் - ஓலை; தொழிலாகுபெயர்.

௧௮. இடக்கயங்கள் - தேர்க்கொடிகள்.

௧௯. விதானித்து - மேற்கட்டிகட்டி; பெயரடியாய்ப்பிறந்த வினை

௨0. இன்னணம் - இவ்விதம்; இன்னவண்ணம் என்பதன் மரூஉ.

## ௧௧ – வது, சருக்கம்.



௨. கற்பம் - ஆசுவலாயநீயம், போதாயநீயம், ஆபஸ்தம்பம்முதலிய சூத்திரரூபத்திலிருந்து வைதிக கருமங்களைப்பிரயோகிக்கும்முறையைக் கற்பிப்பது. புராணம் - உலகத்தின்றோற்றம், ஒடுக்கம், முனிவர்களரசர்களின்மரபு, அவர்கள் சரித்திரங்கள்,மன்வந்தரம்என்னும் ஐந்து விஷயங்களையும் விரவிக்கூறுவது; இது பஞ்சலக்ஷணம்என்றுங் கூறப்படும்.

௩. கிருதகிர்த்தியர் - செயற்பாலசெய்துமுடித்தோர். கவ்வை - காரியம் (தொழில்).

௪. அகந்தை - அண்மைவிளி. அத்தியானம் - வேதமோதுதல்; அத்யயநம் என்பதன்விகாரம். சுரம் - உதாத்தம், (எடுத்தலோசை) அநுதாத்தம், (படுத்தலோசை)ஸ்வரிதம், (நலிதலோசை) ப்ரசயம் (இவற்றின் வேறுயஓசை) என்பவை. பதம் - பதப்பிரிவு; நமஸ்தேஎன்பது நம: தே எனப்படுவது. கிரமம் - வேதத்தின் பதங்களை முன்பதத்தோடும்பின்பதத்தோடுங்கூட்டிக்கூறுவது; உதாரணம்:—நமஸ்தே, தேருத்ர; இதிற் பதங்களிருமுறை கூறப்படல்வேண்டும்; தே இருமுறைவந்திருத்தல் காண்க. சடை - இரண்டுபதங்களையெடுத்துக்கொண்டு முதலில்நேராயும், பின்னர்த்தலைகீழாயும், மறுபடியும்நேராயுமாகக் கூறுவது; இதிற் பதங்கள் மும்முறைவரல்வேண்டும்; உ-ம். நமஸ்தே, தேநமோ, நமஸ்தே, இதில் ஒவ்வொன்றும் மும்முறை வந்திருத்தல்காண்க. அவரோகம் - தலைகீழாகக்கூறுதல்; நமஸ்தேருத்ர என்பதை ருத்ரதேநம: எனக்கூறல். ஆரோகம் - நேராகக்கூறல். மங்களாசாரம் - மங்கலவாழ்த்து.

௫. அவதானி - (வேதத்தை மனனம்பண்ணிச்) சிந்திப்போன்.

உபாத்யாயன் - உடனிருந்து வேத மோதுவோன். அத்தியாபகன் - வேதம்ஓதுவிப்போன். நவநவமாக - புதிதுபுதிதாக. திவசம் - நாள் ; சிராத்தமுமாம்.

௬. குருமதம் - பூர்வமீமாஞ்சையிலோர்பிரிவு. பாட்டம் - பூர்வமீமாஞ்சையிற் பட்டாசாரிமதம்;தத்திதாந்தம். சாலிகாநாதம் - பூர்வமீமாஞ்சையிலோர்பிரிவு; இதுஜீவான்மாவையன்றிப் பரமான்மாவேறில்லை என்பது. மிச்சிரன் - வாசஸ்பதிமிச்சிரர்; பிரம்மசூத்திர சங்கரபாஷ்யத்திற்கு ( வியாக்கியானம் )செய்தவர். மகோததிசூத்தம் - யக்ஞமீமாஞ்சை. நியாயசூத்திரம் - தர்க்கவித்தை. காபிலம் - சாங்கியம் ; கபிலராற்றுபிக்கப்பட்டது ; தத்திதாந்தம்.

எ. மீமாஞ்சை - கன்மநூல் ; இது பூர்வமீமாஞ்சை. வியாகரணம் - அக்ஷரம், சத்தம், அர்த்தம்என்பவற்றின் இலக்கணத்தை யுணர்த்துவது.

அ. கம்பை - தேக்கு, உசிலைமுதலிய மரங்களாற்செய்து எட்டினிருபுறத்துங்கோக்கப்படுஞ் சட்டப்பலகை ; இதனைச்சிவதருமோத்தரம், சிவஞானதானவியல் ௬௮-வது, செய்யு ளுரையானுணர்க. பவுரிடப்பொருள் - புருஷார்த்தம் ; தர்மார்த்தகாமமோக்ஷங்கள்.

௯. மாறன் - சடகோபர் ( நம்மாழ்வார் ). பாஞ்சராத்திரம் - வைணவாகமம்இரண்டிலொன்று; (ஐந்திராத்திரிகளிற்கூறப்பட்டது)தத்திதாந்தம்.வைகாநசம் - வைணவாகமமிரண்டிலொன்று;விகநசசம்மந்தமானது என்பதுபொருள்;தத்திதாந்தம்.

கக. தூசு - வஸ்திரம். முத்திராதானம் - ( சங்குசக்கர ) முத்திரை ( அடையாளங் ) களைத்தரித்தல்.

கஉ. கணிகையர் - விலைமாதர் ; ( தனவான்களைமாத்திரமே ) எண்ணுவோர் என்பதுபொருள். மார்ச்சாலம் - பூனை ; (எலிகளைப்பிடித்து வீட்டைச்) சுத்தமாக்குவது என்பதுபொருள். குழைவு - வாட்டம். உரு - விக்கிரகங்கள்.

கரு. மூவர் - அப்பர், சுந்தரர், சம்பந்தர். உருக்கெடுத்து - உடலையழித்து ; பிறப்பையொழித்துஎன்றபடி ; உருக்கு எடுத்து எனப்பிரித்து உருக்கம் ( மனநெகிழ்ச்சி ) உண்டாக்கி என்றுங்கொள்ளலாம். குரு - இழிந்த உலோகங்களைப்பொன் வெள்ளியாக்கும் சிந்தூரம். கும்பி - வயிறு.

கசு. தெட்டியது - வஞ்சித்தது; அபகரித்ததுமாம்.

க௬. தண்டுலம் - அரிசி ; இச்சகம் - முகமன் (உபசாரவார்த்தை).

கஎ. பொறி - அடையாளம். அங்காரம் - ( மாத்துவர் நெற்றியிலணியுங் ) கரிக் ( கோடு ). அங்குலி - விரல். செம்பு - தாமிரமோதிரம்; கருவியாகுபெயர். எத்துவார் - வஞ்சிப்பார்.

கஅ. கமண்டலம் - கெண்டிகை; நீரை மத்தியி லுடையது என்பது பொருள்.

க௯. உபநிடதம் - பிரம்மத்தைப்பிரதிபாதிக்கும் வேத சிரசுகள். அத்துவயிதம் - ( ந + த்வைதம் ) இரண்டாவதற்ற வஸ்துவைப்பற்றியவிஷயம் ( பிரம்மவித்தை ). தெற்றுரை - மாறுபடுமொழி.

உ0. சிலாதலம் - கற்பதித்ததரை ; முதற்பதிப்பிற் றலத்திற்சிலர் என்றிருந்தது; சீர்க்கும்பொருட்கும் ஒவ்வாமையினிவ்வாறு திருத்தப்பட்டது.

உக. திரிதண்டு - மும்முனைக்கோல். சீயர் - சிகாயக்ஞோபவீதசகிதவைணவசந்நியாசிகள்.

உஉ. கலை - வஸ்திரம். " இத்த

னைபேரும் பாக்கிஷன்கமுகந்தோட்டம் ,, என்பது, முற்கூறியயாவரும் ஒவ்வொரு வஞ்சகம்மாத்திரமுடையோர், இவனோ எல்லாவஞ்சகங்களையும் ஒருசேர உடையோன்என்றபடி.

உரு. ஆச்சிரமம் - பன்னசாலை.

உச. வடிம்பு - விளிம்பு.

உரு. சுதை - சுண்ணச்சாந்து.

உகூ. சாநவி - கங்கை ; ஜந்நுவின்காதுவழி வந்ததாலிப்பெயர்த்தாயிற்று ; தத்திதாந்தம். வேதிகை - யாகசாலைத்திண்ணை. பட்டகசாலை - பண்டசாலை.

ஙக. தம்பிகை - செம்பு. காசண்டி - ஓர்வகைச்செம்பு. வட்டகை - சிறுகிண்ணம். கிடாரம் - கொப்பரை. தளிகை - உண்கலம்.

ஙஉ. தீர்த்தவேதி - அபிஷேகநீர் விழும்படி வைக்கப்படுவதோர் பாத்திரம். தர்ப்பணம் - கண்ணாடி; கர்விக்கச்செய்வது என்பதுபொருள் ; வடசொல்விகாரம். கைம்மணி - சிறுமணி.

ஙச. யூபம் - வேள்வித்தம்பம். அரணி - தீக்கடைகோல்; (அக்கினி தன்னிடத்)தடையப்பெற்றது என்பதுபொருள்.

ஙரு. சமி - வன்னிமரம் ; தோஷங்களைச் சமிப்பது ( போக்கடிப்பது ) என்பதுபொருள்.

ஙகூ. திருப்பள்ளித்தாமம்- கோயிற்பூமாலை. மஞ்சனம் - அபிஷேகம் ; மஜ்ஜனம் என்ற வடசொல்விகாரம்.

ஙஎ. கவின் - அழகு.

ஙகூ. சுத்தவாசமனம் - பரிசுத்தத்தின்பொருட்டு முக்குடிநீர்குடித்தல்.

சக. சேமக்கலம் - எறிமணி. பார்மகள்கலை - கடல். நிரந்தரம் - எப்போதும்.

சஎ. அஞ்சலிசெயாது - வந்தனைசெய்யாமல். மூசிய - மொய்த்த.

சகூ. மாச்சுரவி - காமதேனு. தேச்சு - தேய்த்து என்பதன்போலி. பூச்சுரர் - பிராமணர்கள்.

ரு0. கேள் - அன்பு. கடிமனை - அரண்மனை ; காவலையுடையவீடு என்பதுபொருள்.

ருக. கத்திரியர் - இரண்டாம் வருணத்தோர் ; க்ஷத்ரிய: என்ற வடசொல்விகாரம்,

ருஉ. கருப்போ - அரிதோ.

ருரு. நிரை - நிரப்புகின்ற ; வினைத்தொகை.

ருஎ. மறுகி - குழம்பி.

ருகூ. நவ்வி - மான். செவ்வியவர் - அழகினையுடைய டம்பர்.

கூ0. மண்டலிகர் - இருபதுயோசனை விஸ்தீர்ணமுள்ள தேசத்தை ஆள்வோர். போது - புஷ்பம். பாதுகை - மரவடி.

கூஉ. அவனி - பூமி ; ( பிரஜைகளைக் ) காப்பாற்றுவது அல்லது, ( அரசர்களாற் ) காப்பாற்றப்படுவதுஎன்பதுபொருள். தனபதி - குபேரன்.

கூங. மேதி - எருமை. தகர் - ஆட்டுக்கடா. பழனம் - வயல்.

கூரு. ஆகமம் - ( ஆ - ஞானம், க - மோக்ஷம், ம - மலநாசம் ) மலநாசஞ் செய்து ஞான முண்டாக்கி மோக்ஷத்தைக்கொடுப்பது ; சிவபிரானிடமிருந்துண்டானது என்றும் பொருள்கூறுவர். சோத்திரியர் - பிராமணப்பிறப்பு, சம்ஸ்காரம், வேதாத்யயநம் என்னும்மூன்றையும் ஒருசேரப்பெற்றோர் ; இதனை, ஜன்மநாப்ராம்ஹணோக்ஞேய, ஸம்ஸ்காராத்விஜவுச்யதே, விப்ரத்வம் வித்யயாசாபி,த்ரிபிஸ்ரோத்ரியவுச்யதே என்பதானுணர்க.

கூகூ. நொய்யர் - தரித்திரர்.

கூஎ. விப்பிர - பிராமண! அண்மைவிளி ; ( தன்னையும்பிறரையும்

பாவத்திலிருந்து நீக்கி ) இரக்ஷிப்ப வன் என்பதுபொருள்.

எஉ. விகங்கன் - அன்னப்பற வை ; ஆகாயத்திற்செல்வதுஎன்பது பொருள் ; வடமொழிவழக்குப்படி புல்லிங்கம் ( ஆண்பால் ) பெற்றது.

எச. சேணோர் - தேவர்கள் ; ஆகாயத்துள்ளோர் என்பதுபொரு ள். மகவான் - இந்திரன் ; யாகம் உடையவன்என்பதுபொருள்.

எரு. சதுமுகன்பதி - பிரம்மா வின் இடமாகிய சத்யலோகம். அ ண்மி - அடைந்து. கப்படி - சிறுதூ ண்போன்றகால் ; குறுங்கால் என்று மாம். மருப்பு - கொம்பு. துப்படி - பவளம்போற்சிவந்தகால். ஓதிமம் - அன்னப்பறவை.

எகூ. ஏழ்மாதவர் -சப்தரிஷிகள். முண்டகம் - தாமரை.

எஎ. எதில் - அந்நியமான.

எகூ. ஆணை - மெய்ம்மை.

அஉ. புண்மேல் - (புள் + மேல்) பறவைமீது.

அச. புறம் - பக்கத்தார் ; இட வாகுபெயர் ; பக்கத்தில்என்றுமாம். பேர்ஆம் - புகழுண்டாதற்குக்காரண மான.

அசு. பிரதிட்டை - ஆலயத்திற் ரூபிக்கப்படுதல். அன்ன - அத்த ன்மைய ; குலமுதலியன இல்லாத என்றபடி ; சுட்டடியாய்ப்பிறந்த கு றிப்புப்பெயரெச்சம்.

அஎ. கற்பம் - பிரம்மனுயுள் மு டியுங்காலம். சற்காரம் - உபசாரம்; குறங்கு - தொடை.

அஅ. வலைச்சிதன்பாற்பிறந்தவர் - சத்யவதியிடத்துப்பிறந்த வேதவ் யாசர். நாணற்றூற்றினிடைப்பிறந் தவர் - கௌசிகர், திருமூலர் முதலி யோர் ; திரணபிந்துமுனிவர் என் பார் ஒருசாரார். கடத்திற்பிறந்தவர் - அகஸ்தியரும், வசிஷ்டரும். வேர் ஆற்றினிடைப்பிறந்தவர் - நீலலோ கிதர், தூர்வாசர்என்போர். உள்ளத் திற்பிறந்தவர் - வசிஷ்டரும், சனகா தியரும். மானீற்றினிடைப்பிறந்த வர் - ரிச்யசிருங்கர் ( கலைக்கோட்டு முனிவர் ). கிளிவயிற்றிற்பிறந்தவர் - சுகப்பிரம்மரிஷி.

அகூ. பழிப்பு - பகக்குறிபெற்ற தாலாயிற்றென்க. “ எத்தனைமக வான் ,, இதில்மகவான் என்பது ப ன்மையில்வந்த ஒருமை.

கூக. பவுரிடம் - ஆண்மை ; புரு ஷன்தன்மை என்பதுபொருள்; தத் திதாந்தம்.

கூஉ. தாதை - தந்தை ; (குலத் தை) விஸ்தரிக்கச்செய்கிறவன் என் பதுபொருள் ( மானதன் ). சேட்ட ன் - மேன்மையுற்றோன் ; ஈண்டுத் தமயன்அன்று.

கூந. கொத்து - கூட்டம்.

கூச. ஆசாரம் - ஒழுக்கம் ; சுத் தமுமாம். வாசாலகம் - வாக்குவன் மை.

கூசு. வானிலங்கு - சிறந்தவிளங் குகின்ற ; மேகம்போன்ற விளங்குகி ன்ற என்றுமாம். தன்பெயர்கூறிக் காதைத்தொட்டுப் பிறர்காலைத்தொ டுதல் அபிவாதனம் எனப்படும்.

க0ரு. சேவை - வழிபாடு.

க0சு. கட்டுரை - உறுதிப்படச் சொல் ; ஒருமையேவல்.

க0எ. ஊற்றம் - வலிமை. ஆற் றுருமல் - பொறுக்காமல்.

க0அ. ஒன்னலார் - பகைவர்.

கக0. தாரகப்பிரமம் - பிரண வமந்திரம் (ஓம்) ; தாரகமாகிய பிர ம்மம் (அத்வைதவஸ்து)என்றுமாம்.

கககை. தம்முரு - சாருபம்; இது நால்வகைப்பதமுத்திகளில்ஒன்று.

ககந. நிருபன் - அரசன் ; நர ர்களுக்கதிபன் என்பதுபொருள்.

ககஎ. தூர்த்தர் - காமுகர் ; வ ஞ்சகருமாம்.

## கஉ-வது, சருக்கம்.

)o(

உ. பை - பாம்பின்படம். அராவரசு - ஈண்டுவாசுகி என்னும் பாம்பு.

௩. மருள் - மயக்கம். சதிர் - நடனம்.

ரு. நரையான் - மீன்குத்திப்பறவை. போத்து - செம்போத்து. வலியன் - கரிக்குருவி. சேகு - வயிரம். "போத்திகனரையான்" என்பது மோனையின்றாதலின்," நரையான்போத்திகலும்" என்மாற்றப்பட்டது. சிலபழயபிரதிகளிலும் பின்னர்க் கூறப்பட்டபடியே பாடம்.

க0. மங்குல் - மேகம். சிந்துரங்கள் - யானைகள்.

கஉ. அப்பிரதக்கணம் - இடமாய்ச்சுற்றல். பிழம்பு - திரட்சி.

க௩. சின்மதி - அற்பபுத்தி.

கச. மடங்கல் - சிங்கம்.

## க௩-வது, சருக்கம்.

:*:

க. சாருவாகன் - பிரத்யக்ஷத்தாற் காணப்படாதவை இல்பொருள்களாம் என்றுகூறும் நாஸ்திகன் ; உலகாயதனும் இவனும் ஒரேகொள்கையுடையோர்.

௩. வழுத்தி - துதித்து.

ச. துன்னும் - கிட்டுவான் ; இதுநாற்பாற்படர்க்கைவினைமுற்று ; ஈண்டு ஆண்பாலில்வந்தது.

ரு. விசையம் - வெற்றி.

சு. அந்தரம் - ஆகாயம்.

எ. வள்ளம் - கிண்ணம். உபவாசம் - பட்டினி.

கூ. தீர்வையில் - தீர்மானத்தில்; இதனைச் "சிறந்தார்கொல்லோ" என்பதோடியைக்க. காசினி - பூமி; (பரசுராமராலே தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதாற்) காச்யபருக்குச்சொந்தமானது என்பதுபொருள் ; காச்யபீ என்றவடசொல்விகாரம்.

க0. பொறித்த - எழுதிய. கைமாட்டாதார் - கையால் ஏலாதவர்.

கஉ. இரண்டும் - (பொருளும் இன்பமுமாகிய) புருஷார்த்தங்களிரண்டும்.

க௩. அமுதம் - நீர். கூவல் - கிணறு ; பூமிசம்மந்தமான நீரையுடையது என்பதுபொருள் ; கூப: என்றவடசொல்விகாரம்.

கச. வான் - பெருமை. தூமம் - புகை. சுத்தப்பாமரர் - முழுமூடர் ; அறிவுசிறிதுங்கலவாது சுத்தமாயிருக்கும் ஸ்வயம்மூடத்தனத்தையுடையோர் என்றபடி. பாவம் - அதிட்டஹீனம் ; அக்கிரமம் எனல் பொருந்தாது.

கரு. விசும்பு - ஆகாயம் (தேவலோகம்).

கசு. தென்புலத்தார் - படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்ட பிதுர்தேவதைகள் ; அவராவார்:— கவ்வியவாகன், அநலன், சோமன், யாமன், அரியமன், அக்கினிஷ்வாத்தன், பர்ஹிஷன் என்னும் எழுவர். தகளி - விளக்கில்எண்ணெய்நிற்கும்பாகம் (அகல்). மல்க - நிறைய.

கக. கிருச்சிரம் - பிராயச்சித்தவிரதம் ; பாபத்தைப்போக்கடிப்பது என்பதுபொருள் ; இது பிராயச்சித்

தமாகிய விரதங்களின் பொதுப்பெயர்; பஞ்சாமிருதத்தோடாறுநாளுண்டு ஏழாநாளுபவாசமிருப்பதாகிய ஓர் பிராயச்சித்தம் என்பாருமுளர். சாந்தபனம் - மூன்றுநாள்பகலிலும், மூன்றுநாளிரவிலும், மூன்றுநாள் அநாசிதமாய்க் கிடைத்தவற்றையும் புசித்துமூன்றுநாள்பட்டினியாயிருக்கும்விரதம்; இதனைத் "த்ர்யஹம்ப்ராதஸ்த்ர்யஹம்ஸாயம், த்ர்யஹமத்யாதயாசிதம், த்ர்யஹம்பரஞ்சநாச் நீயாத், க்ருச்ரம்ஸாந்தபனம்ஸ்ம்ருதம்,, என்பதானுணர்க. முதல்நாள்தயிர் முதலியலகுவானபதார்த்தங்களையுண்டு, மறுநாளுபவாசமிருப்பதாகிய விரதமென்று கூறுவாருமுளர்; சந்தாபத்தாலுண்டாவது என்பதுபொருள்; கோமூத்திரம், கோமயம், பால், தயிர், நெய், சுத்தஜலம்ஆகிய இவற்றை முறையே நாளொன்றுக்கொவ்வொன்றாய்ப் புசித்து இறுதி நாளிலுபவாசமிருக்கும் விரதம் என்றும் சிலர் கூறுகின்றனர்; ஆனலிது மனுதர்மசாஸ்திரத்தில் "மஹா சாந்தபனம்,, எனப்படுகின்றது.

உ0. விகடம் - வேறுபாடு.

உ௩. களபம் - கலவைச்சேறு; யானைக்கன்றுமாம்; பிற்பொருளில் நீரை யடைவது என்பது பொருள். துணை - இரண்டு. அந்தரம் - பேதம்.

உ௫. புல்லி - தழுவி. தலைப்பட்டான் - அடைந்தான்.

## கச-வது, சருக்கம்.

———)o(———

௩. நெறித்த - முறிப்புக்கொண்ட. விழிக்கவசமோ - (விழிக்க + வசமோ) பார்க்கமுடியுமோ; (விழி + கவசமோ) நமது கண்களை மறைக்குங்கவசமோ.

ச. கனகன் - இரணியன். சிங்கம் - ஈண்டுநரசிங்கப்பெருமாள்; அவயவங்களிற் சிறந்து இன்னரென்றறிதற்குரியதான முகம் சிங்கமுகம்போன்றதாதலின் சிங்கம் என்றமாத்திரை கூறப்பட்டது; அன்றிச் சிங்கம்போன்ற பௌருஷமுடையானைச்சிங்கமெனக் கூறினர் எனினுமாம்; பிற்பொருளில் உவமையாகுபெயர்.

௬. சவுமியப்படிவம் - சாந்தரூபம்.

எ. மகன் - மார்க்கண்டன். மறலி - யமன். சத்தி - சிவபத்தி.

அ. தண்டி - சண்டேசநாயனர். தேவி - மனைவியாகிய திருவெண்காட்டுநங்கை.

௯. "மக்களை,, இதுஒருமைப் பொருளில்வந்த பன்மை; மைந்தர்கள்யாவரும் நாராயணர்களல்லராதலின், "மைந்தனை,, என்றிருத்தல் சிறப்புடைத்தாம். சண்டன் - யமன். அங்கிலன் - சாகரபுரத்தில்வசித்த ஓர்வேடன். சிவகங்குல் - சிவராத்திரி; மாசிமாசத்துக்கிருஷ்ண பக்ஷசதுர்த்தசி இரவு; இது ஓர்விரததினம்.

க0. கொம்மை - அழகு, வட்டம், இளமை.

க௩. கற்பனை - கட்டளை.

கச. பன்னகம் - (பத் + ந + கம்) பாம்பு; பதத்தால் நடவாதது என்பதுபொருள். பட்சியரசு - கருடன்.

கரு. இன்னம் - மேலும்; இனியஅழகிய என்றுமாம்; இன்னஎனப் பிரித்து இத்தன்மைய என்றும் பொருள் கொள்ளலாம்.

கக. ஒல்லை - விரைவு.

உக. அவதியிட்டு - எல்லைவைத்து. கொடு-கொண்டு; தொகுத்தல்.

உஉ. இறைஞ்சி - வணங்கி.

உரு. தாய் - சத்துவச்சிரத்தை.

உசு. விறல் - வலிமை. தளை - விலங்கு. பணி - கட்டளை.

உஅ. பேதையவள் - ஈண்டுச் சாந்தி. அகீர்த்திமகள்-மிச்சாதிட்டி. ஏதம் - துன்பம்.

## கரு—வது, சருக்கம்.



க. விப்பிரமை - ஸ்திரீகளின்சிங்காரசேஷ்டை. மிச்சாதிட்டி - பொய்த்தோற்றம். சீறடி - (சிறுமை + அடி) சிறியபாதங்கள். மருங்கு - இடை. ஒசிய - துவள.

உ. வேத்தவை - (வேந்து + அவை) ராஜசபை. பொன் - இலக்குமி; தங்கமுமாம்.

ச. விரை - வாசனை.

ரு. வரையாச்செய்கை - தகாத் தொழில்.

எ. கறுப்பு - கோபம்; உரிச்சொல்; "கறுப்புஞ்சிவப்பும்வெகுளிப்பொருள" என்பதானுணர்க.

அ. வால் - வெண்மை.

கூ. தகரம் - மயிர்ச்சாந்து. தொடை - மாலை. சிகரம் - மலை, மலைமுடியுமாம். உகிர் - நகம்.

கo. பாதாதிகேசமட்டாய் - அடிமுதல் முடிவரை. வாடை - காற்று; அன்றிவாடை மணம் எனக் கூட்டி மிக்கமணம் என்னலுமாம்; இப்பொருளில் ஒருபொருட் பன்மொழி. கட்டாரை - கண்ணுகிய கூர்மைபொருந்திய; தாரை - கூர்மை. நெட்டாவி - பெரியஉயிர்.

கஉ. நறை - தேன். கொந்து - பூங்கொத்து.

கரு. துடிமேவு - உடுக்கையையொத்த. மணி-பவளம்; அழகுமாம். கோடு - கொள்கொம்பு.

கஎ. முருந்து - (மயிலின்) இறகடி. ஆகம் - மார்பு.

கக. நானிலம் - பூமி; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலமுடையது என்பது பொருள்; பண்புத்தொகையன்மொழி.

உக. சுகம் - கிளி; சரிக்கின்றது என்பதுபொருள். மிகத்தோடு பொருவிழி-(மிகம் + அத்து + ஓடு + பொருவிழி) மானேடுபோர்புரிகின்றகண்; (மிக + தோடு + பொருவிழி) காதணியை அல்லது, காதைமிக மோதுகின்ற கண் என்றுமாம்; மிகம் - (ம்ருகம்) மான்.

## கசு—வது, சருக்கம்.



க. நிலம்-கருமை; குவளை மலருமாம்; பிற்பொருளிற்பண்பாகுபெயர். நீலவிழியாள்-மிச்சாதிட்டி. கிளியது இதில் அது பகுதிப்பொருள்விகுதி.

ரு. நெடுங்கால் - கடுங்காற்று. நாண்மதி - பூர்ணசந்திரன்.

ச. நூபுரம் - பாதச்சிலம்பு ; துதிக்கப்படுவது என்பதுபொருள். அகீர்த்திமகள் - மிச்சாதிட்டி.

சு. உழை - மான் ; இதனையாதரிப்பவர் முனிவர்கள்.

எ. பொய்யுறுமடக்கொடி - மிச்சாதிட்டி.

கரு. போத - போதுமானதாகும்படி.

கச. செல்லாத - (தக்கதென்று) ஒப்புக்கொள்ளப்படாத. வன்கணர் - வைரமுள்ளோர். முனே - முதன்மை. கவரிநாண் - கவரிமானையொத்தநாணம் ; அதாவது:—கவரிமான் ஒருசிறுரோமம் நீங்கப்பெறினும் உயிர்விட்டுவிடுவதுபோல் நாணம் சிறிதுகெடவரினும் உயிர்விட்டுவிடற்குரிய நாணம் என்க.

கசு. பொறித்தது - அயனால்நெற்றியிலாவது, சிரத்திலாவதுஎழுதப்பட்டது.

கஎ. துவர் - பவளம் ; செம்மையுமாம்.

கஅ. விண்டவர் - பகைவர்.

---

## கஎ-வது, சருக்கம்.

—:*:—

க. கருணையான் - கருணையென்பாளுடன் ; ஆன் ஈண்டு உடனிகழ்ச்சிப்பொருளின்மேற்று. அன்னாள் - (முற்சருக்கத்துக் கூறப்பட்டவளாகிய) அந்தச் சத்துவச்சிரத்தையினுடைய. உறையும் சந்ததி, அன்னாள்சந்ததி என்க. அது - சத்துவச்சிரத்தை பகைவராற் பற்றப்பட்டனள் என்ற பொய்ம்மொழி.

உ. மலங்கி - கலங்கி.

ச. நானம் - கஸ்தூரி. நாவி - கஸ்தூரிமிருகம்.

அ. அங்கு - விண்ணுலகு.

கக. ஏதிலார் - பகைவர்.

கஉ. கோடி - கொள்கின்றாய் ; முன்னிலையொருமை வினைமுற்று.

கரு. பளிங்கன்னபுந்தி - தனக்கென ஓர்நிறமின்றிச்சேர்ந்தவற்றின் நிறத்தையே அடையும் பளிங்கைப்போலத் தனக்கென ஓர்அறிவின்றிச் சேர்ந்தவர்களின் அறிவையேகொள்ளும் அறிவு.

கசு. கோகுலம் - குயில்போன்ற சாந்தி ; உவமையாகுபெயர்.

கக. சதுர் - நான்கு.

உஉ. துன்னார் - பகைவர்.

உச. மேல் - பின்னர் ; இதுகாலத்தின்மேற்று.

உரு. பீலித்தொங்கல் - மயிற்றோகைக்குஞ்சம்.

உசு. பாழ் - நெற்றிக்குறியின்மை

உஎ. ஆனேர் - (ஆன்+நேர்) பசுவினையொத்த ; பசுவினையொத்தல் பரிசுத்தத்தானும், பயன்படலானுங்,கருணையானுமென்க.' இப்பால், இதனை அடுத்தசருக்கத்து முதற்பாட்டுடன் கூட்டுக.

## கஅ-வது, சருக்கம்.



க. வைப்பு - இடம் (உலகம்). திகம்பரசித்தாந்தம் - சமணநூன் முடிவு.

உ. அவி - நெய். பசு - யாகத்துக்குரியஆடு. விழிபுதைத்தல், கண்டுமுட்டுஉண்டாகாமைக்கும், செவிசேமஞ்செய்தல், கேட்டுமுட்டு உண்டாகாமைக்கும் என்க.

ங. அக்கமாலை - உருத்திராக்ஷமணிமாலை. அக்ஷமாலா என்றவடசொல் விகாரம்.

ச. அலமரல் - துன்பம். அயிஞ்சை - கொல்லாமை ; அஹிம்ஸா (ந + ஹிம்ஸா) என்ற வடசொல்விகாரம்.

ரு. உறிக்கால் - (நீர்ப்பாத்திரம் வைக்கும்) உறிக்கம்பு. வாமன் - அருகன்.

சூ. வாளா - வீணாக ; இடைச்சொல். அடிகள் - குரு.

கூ. பேழ்வாய் - பெருவாய்.

கக. தங்கால்பேர்த்து இதில்தம் அசை ; தாம் என்பதன் விகாரம் எனக்கொண்டு தமது எனப்பொருள் கோடலமையாது ; அடுத்தபாட்டில் " வருவானை ,, என ஒருமையாய் வருதலின். தாலபலம் - பனம்பழம். துவராடை - காஷாயவஸ்திரம்.

கஙு. சவுகதநூல் - புத்தநூல்.

கரு. வாசனை - பொருளில்வழியுமுளதாகுமதன்ஞாபகம்.

கசூ. சித்தாந்தம் - துற்பலவசனங்களைக் கண்டிக்கவல்ல பிரபல வசனம்.

கஎ. செல்வுழி - போகும்பொழுது ; இதிலுள்ள வகரம் உடம்படுமெய் அல்லாதமெய். குண்டன் - சமணன் ; (நீர்க்) குடுவையையுடையவன் என்பதுபொருள். கண்ணுற்றுன் - இடத்தையடைந்தான் ; பார்த்தான் எனக்கொள்ளற்க ; அவன்றன் என்னும் ஆறும்வேற்றுமைத்தொகையை அடுத்துவந்திருத்தலான்.

கஅ. வினவற்குவாராய் என்க. சவுகதன் - புத்தன்.

உ0. பிறழ் - விளங்குகின்ற ; வினைத்தொகை.

உக. முடை - புலால்நாற்றம்.

உஉ. தேறல் - கள். கண்டலமந்து - (கண்டு + அலமந்து) கண்டுகலங்கி.

உங. ' சமணன்னிது , இதிலுள்ள 'ன், விரித்தல்விகாரம்; பின்னுமிவ்வாறு வருவதையுய்த்துணர்க.

உச. வல்லை - வன்மையென்னும்பண்படியாய்ப் பிறந்த முன்னிலையொருமைக்குறிப்புவினைமுற்று. ஈமம் - நன்காடு (மயானம்).

உஎ. அபிசாரம் - மாரணஹோமம். ஆகுதி - ஓமாக்கினியிற் பெய்பொருள். எமுற - களிப்புண்டாம்படி. பாரணம் - பட்டினிவிட்டுண்ணல்.

உஅ. நாதிக்க - ஒலிக்க ; பெயரடியாய்ப்பிறந்தவினை.

உகூ. செம்மி - மூடி.

ஙங. இறைப்பொழுது - க்ஷணநேரம்.

ஙச. இனியவோசை பயத்தற்பொருட்டு இந்திரசாலம்என்பதுஇந்த்ரசாலம் எனப்பட்டது.

ஙரு. மலபங்க - குற்றமாகிய நோயினையுடையவனே ; அண்மைவிளி. பாறு - பருந்து.

ஙசூ. கேளென - நண்பினர் அல்லது, உறவினர்போல. கேட்பாயாக என்று எனப்பொருள் கோடல்பொருந்தாது ; பின்னர் ' எமக்கு , என்

னும் பன்மையிருத்தலான்.

சo. அக்கு - எலும்பு. கங்காளர் - உடன்முழுவென்பினை (அஸ்திப ஞ்சரத்தினை) யுடையோர்.

சக. விரத்தர் - பற்றற்றோர்; விரக்த: என்ற வடசொல்விகாரம். கெழுமி -நிறைந்து.

சஉ. வரத்து - வருதல்; தொழிற்பெயர். சிரத்தை - (இராசதச்) சிரத்தை. கரைத்தது -அழைத்தது. அலக்கண் - துன்பம்.

சங. சேய் - சிவந்த; செம்மை என்னும் பண்புப்பெயரின் விகாரம். அரி - இரேகை (கோடு).

சச. மொய்ச்சு - மொய்த்து; போலி. மூசும் - மொய்க்கும். ஓதி - கூந்தல். மெய்ச்சிரத்தை - சத்துவச் சிரத்தை. 'துன்பம்நீங்கினர், இதிற்றுன்பமென்னும் குணம் மாதரார் என்னும் உயர்திணைப்பெயரொடுசார்ந்து உயர்திணை முடிபைப்பெற்றது நன். சூ - நஎஎ.

சரு. விலைத்தாசிமாதர் - கூலியை விரும்பும் அடிமைத்தொழில் செய்வோர்; விலைமாதரன்று; வேசை மாதர் எனவேறு கூறப்பட்டதாதலின்.

சஎ. இறைஞ்சி - வணங்கி. இரண்டாம்வேற்றுமைத் தொகையில் லகரம் திரியாததாதலின், தொழிற்செய் என்பது தொழில் செய் எனத் திருத்தப்பட்டது. பின்னுமிவ்வாறு திருத்தப்பட்டுள்ளது.

சகூ. உம்பர் - தேவர்;இடவாகு பெயர். ஆழி - (பாற்) கடல்.

ருo. மாந்தி - குடித்து. இன்ன - இவற்றை; குறிப்புவினையாலணையும்பெயர்.

ருஉ. வாசி - தன்மை; நிமித்தமுமாம். வகுளம் - மகிழம்பூ; ரோகத்தைப் போக்கடிப்பது என்பது பொருள். பதரி - இலந்தைமரம்; ஸ்திரமாயிருப்பதுஎன்பதுபொருள். பன்னி - பலபடக்கூறி.

ருச. நட்டம் - நடனம்.

ருரு. கயங்கள் - யானைகள்.

ருசு. எண்டுளங்க - மனங்கலங்கும்படி.

ருஎ. செய்ய - சிவந்த; செம்மை என்னும் பண்படியாய்ப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். சித்தியாயது-கைகூடிற்று. ஊடு - ஏழனுருபு.

ருஅ. அட்டமாசித்தி - அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாம்மியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எண்வகைச்சித்திகள். உம்பர்மாதர் - தேவஸ்திரீகள்.

சுo. நம் - (சமணனென்னும் நீயும், புத்தனும், யானுமாகிய) நம்முடைய. கணிதம் - ஜோதிஷம்.

சுக. வராடிகை - சோகி (பலகறை); வராடகம் என்ற வடசொல் விகாரம்.

சுச. 'தானமும், இதிலுள்ள உம்மை சத்துவச்சிரத்தையுக்கதானம் கூறுதலோடு என்னும்பொருளைத்தழுவலின், இறந்ததுதழீய எச்ச உம்மை. நாள் - நக்ஷத்திரம்; திதியுமாம்.

சுரு. புராரி - சிவபிரான்; முப்புரங்களுக்குச் சத்துரு என்பது பொருள்.

சுசு. தங்கை-சத்துவச்சிரத்தை. நங்கை - நமதுகைவசம்.

சுஎ. எண் - தியானம்.

சுஅ. கூறினன், இது சுச-வது கவியிலுள்ள கணிதன் என்னும் எழுவாயின்பயனிலை.

சுகூ. ஏமம் - பொன், புதையல், இன்பம், காவலுமாம்.

எக. இயற்பங்கன் - ஒழுக்கங்கெட்டோன்.

எங. மாயி - மாயம்வல்லாள். புணர்த்தல் - உபாயஞ்செய்தல்.

எச. அட்டகாசம் - பெருநகை.

## கக - வது, சருக்கம்.



க. துன்னார் - பகைவர். துடி - இடைசுருங்குபறை. கறங்க-ஒலிக்க. வடவாமுகத்தழல் - கடலிடையுள்ள பெண்குதிரைமுகம்போன்ற வடிவினையுடையதோர்தீ; வடவை - பெண்குதிரை; ஊர்வன்றவமுஞற்றும்போதவன்பாற்சென்றநாரதாதியர் ஓர் புத்திரனைப்படைத்தருள்க என, அவன் தனது துடையையோமாக்கினிமேல் நிறுவி யோர்கூர்ச்சத்தாற்குடைந்து, சுவாலாமாலி அல்லது, ஔர்வன் என்னுமோர் புதல்வனை உண்டாக்கிப்பின் பிரம்மன் வேண்டுகோட்கிணங்கி யப்புதல்வனைக்கடலிடையிருந்து, நீர்பெருகியுலகுக்கிடையூறியற்றுவண்ணமதனைப்பருகும்படி கட்டளையிட்டான். அவ்வௌர்வனேவடவைத்தீயாய்க்கடலிடை இருக்கின்றனன்.

உ. அயிறங்கு - (அயில் + தங்கு) வேலாயுதந்தங்கிய. புயறங்கு - (புயல் + தங்கு) மேகங்கள் தங்கிய.

ங. வடி - கூர்மைபொருந்திய.
ச. தாமம் - ஒளி, மாலையாகிய என்றுமாம்.

ரு. மாயத்தி - வயிரவி. பார்ப்பு - பறவைக்குஞ்சு.

சு. அனியாயவஞ்சி - வயிரவி. சேக்கை- (பக்ஷிகளின்) படுக்கை. வேழம் - விளங்கனிக்குவருவதோர்நோய்; யானையன்று. மதம் என்பதுவேழம் என்னும் சொற்கேற்ற அடை. இதனைத் "தாம்புடை நெடுங்கை வேழம்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளின் நச்சினார்க்கினியர் உரையானுணர்க. அந்து - நெல்வண்டு.

எ. காகோதரம் - (ராகுகேதுக்களாகிய தெய்வப்) பாம்புகள்; காக்கையின்வயிறுபோன்ற அல்லது, காகம் என்னும் விஷத்தினையுடைய வயிற்றினையுடையது என்பது பொருள்.

கூ. அரந்தை - துன்பம்.

கக. தாழ் - (முழங்கால்வரையில்) தாழ்ந்த (தொங்கிய). வெகுரூபி - வயிரவி.

கஉ. இதுமுதற் பதினேழுகவிகளைக்கலிவிருத்தமாயுங்கொள்ளலாம்.

கங. சதி - அழிவு.

கச. வாரணம் - யானை; (சத்துருக்களின் பலத்தைத்) தகைவது என்பதுபொருள்.

கரு. துன்மானிடன் - துச்சாதனன்; துரியோதனனுமாம். முன்னோன் இயற்றுதற்கருத்தா. பின்னோன் ஏவுதற்கருத்தா.

கஎ. கோகனகம் - தாமரைமலர்; கோகநதம் என்ற வடசொல்விகாரம்; சக்கிரவாகங்கள் பேசுதற்கிடமாவது என்பது பொருள். கோதிலர் - (காமம், வெகுளி, மயக்கம் என்னும்முக்) குற்றங்களுமில்லாதவர்.

கஅ. நெகிழாது - தளராமல். பராமுகம் - பாராதிருத்தல்.

உ0. பான்மொழி - பால்போலும் மொழியினையுடையளாய சத்துவச்சிரத்தை; உவமைத்தொகையன்மொழி.

உக. அல் - இரவு. தெறும் - அழியும்; தன்வினைப்பொருளில்வந்த பிறவினை. நாயிறுஎழ, தெறும், அல்லார் இருள்போல் எனமுடிக்க. சன்னகம் - போர்க்கவசம்.

உரு. ஓதிமம் - அன்னம்போன்ற சத்துவச்சிரத்தை; உவமையாகுபெ

யர். தழுவி - தழுவவென்னெச்சத்திரிபு.

உசு. கராம் - முதலை; இழுத்துச்செல்வது என்பது பொருள்; க்ராஹம் என்ற வடசொல்விகாரம். முரி - ஒடிந்த; வினைத்தொகை.

உஅ. ஊனுர்வடிவாளன் - உடம்பில்நிறைந்த அழகை ஆளுதலையுடையோன்; (பகைவரது) நிணம் பொருந்திய கூரிய வாளினையுடையோன் என்றுமாம்; அவனுவான்:- தருமன். ஒண்டொடி - ஒள்ளிய வளையல்களையுடையளாய சத்துவச்சிரத்தை; பண்புத்தொகை யன்மொழி. 'ஆன், ன் சாரியை.

## உ௦-வது, சருக்கம்.

——()——

உ. இஃதும் அடுத்த கவியும் ஒரு தொடர்.
யோகினிகள் யாமே - யோகினிகளாகிய யானும், (அரிபத்தியும்) சிவபத்தியும் என்க. இது அரிபத்தி கூறுவது. (பிற்காலத்து யானும் சிவபத்தியுங்கூடிப்) பொருத்தி, அகற்றி, புனைவிப்பேம்; (தற்காலத்து) யான்மாத்திரந்தனித்து (ந) பின்றுணையாவன் என்று அரிபத்தி கூறினள் என்க. அரிபத்தி தோன்ரு எழுவாய்; (ந) சொன்னுள் பயனிலை. அதற்கும் என்பதிலுள்ள உம்மை முன் வயிரவியைக்கொல்லத் துணையானதையுணர்த்தும். இரங்கினள் முற்றெச்சம்.

ச. தாழாது - தாமதியாமல். தாமம் - மாலை.

ரு. சேறி - செல்; ஒருமையேவல். மெல்லியல் - மென்மையாகிய இயலினையுடையளாய அரிபத்தி; பண்புத்தொகையன்மொழி.

சு. தாயை - தாயாகிய சத்துவச்சிரத்தையை. கணவன் - கணவனுகிய தருமன்.

எ. மாமன் - தருமன். நாமம் - அச்சம்.

அ. தன்னைப்பிரிந்து சாந்திமிகவுந் துன்புற்றதற்காக வாட்டமும், தான் பகைவர்வாய்ப்பட்டிறந்ததாகக்கொண்டு சாந்தியிறந்து படாதிருத்தற்காகக் களிப்பும், சத்துவச்சிரத்தை கொண்டனள் என்க.

கூ. தன்னவன்றேவி-தன்னுடைய வலிய மனைவி; மான்கன்றினையொத்த வலிய மனைவி என்றுமாம். அவளாவாள்:— கருணை. தன்னம் - மான்கன்று.

க௦. முறுவலித்து - சிரித்து; பெயரடியாய்ப் பிறந்தவினை.

கக. ஒல்காது - தளராமல். விகடம் - வேறுபாடு.

கரு. செம்மல் - பெருமையிற்சிறந்தோன்.

ககூ. நவ்வி - மான்.

உக. புணர்முலை - நெருங்கிய தனங்களையுடைய சத்துவச் சிரத்தை; வினைத்தொகை யன்மொழி.

உசு. வங்கம் - மரக்கலம்.

உஅ. முகமன் - உபசாரம்.

## ௨௧-வது, சருக்கம்.



க. மைத்துனன் - நியாயன்.
உ. உரும் - இடி.
௫. சோமநாதத்து வந்தோன் - மானனலனுப்பப்பட்ட ஒற்றன்.
௬. தங்கை - ( தருமன் )தங்கையாகிய சத்துவச்சிரத்தை.
௧௦. வார் - நீண்ட.
௧௩. முறுகு - முதிர்ந்த;வினைத்தொகை. செறுநர் - பகைவர்.
௧௫. ஒருப்படுமுன் - சம்மதிக்குமுன். வேள்வி - விவாகம்.
௧௯. நிருபம் - கட்டளைப்பத்திரம். வாவ - கடந்துவர.

௨௧. பாசத்தார் - அன்பாற்கட்டுப்படுதலையுடையோர்.

௨௫. நெஞ்சும், முகமும், கணும்ஆகிய கமலங்கள் என்க. பொன்னுறும் - அழகுபொருந்திய ; இலக்குமிதங்குகின்ற என்றுமாம். பூத்து - மலர்ந்து.
௩௦. அருத்திகூர - ஆசைமிக.
௩௨. வதித்த - பெருகிய ; தங்கியஎன்றுமாம். முற்பொருளில் வத்தித்த என்பதன் ஸிருகுத்தல்; பிற்பொருளில்வதிந்த என்பதன் வலித்தல்.

## ௨௨-வது, சருக்கம்.



க. சற்சங்கம் - நல்லோரிணக்கம். அவ்வாசம் - நல்லோருடனிருத்தல் ; வாசமாகிய சந்தனம் என்க. வாசத்தை இரட்டுறமொழிதலாய்க் கொண்டு மணம் என்றும் பொருள் கொள்க. திமிர்ந்து - பூசி. கேள்வியாகிய குண்டலம் என்க.
உ. வியாசனுவல்சூத்திரம் - பிரம்மசூத்திரம் ; இது வேதாந்தசூத்திரம், உத்தரமீமாஞ்சை என்றுங் கூறப்படும். முன்னூல் - முதல் நூல் ; அதாவது:- வினையினீங்கி விளங்கியஅறிவின்முனைவனலாவது அவனருள்வழிப் பட்டோனலாவது கூறப்படும் நூல் ; மேன்மையான நூல்போற்செய்த ஆபரணம் என்றும் பொருள்கொள்க. கோதை - மாலை. வேய்ந்து - அணிந்து.
௫. அபயப்பிரதானம் - அடைக்கலங்காத்தல். ஆழி - மோதிரம்.
௬. வீக்கி - கட்டி. உத்தரியம் - மேலாடை ( அங்கவஸ்திரம் ).
எ. நித்திலம் - முத்து.
அ. கடு - விடம். அஞ்சுறுதார் - பயப்படாதவர்களாகிய மோகனதியர்களுடைய.
௯. மாலாம் - கருமையாகிய, இருள்தீர்த்து - இருளையொழித்து, உலகெங்கும்வயங்கி - உலகத்தெல்லாம் விளங்கி, யாரும் ஏலா - எத்தகைமேம்பட்டோரும் ஒவ்வாத, மதியோர்கருத்துக்கும் எட்டாது - அறிவினையுடைய வித்துவான்களுடைய மனதுக்கும் எட்டாமல், உயர்ந்து -

(புகழால்) மேம்பட்டு, மேலாகிவிரிந்து - (தலையின்) மேலாய்த்திறக்கப்பட்டு, ஒடுங்காதவியாபகம் - சிறிதாகாத (மிகப்பெரிய) வியாபித்தல், தன்பாலாம் - தன்னிடம்பொருந்திய, மதியாகிய - (பூர்ண) சந்திரன் போன்ற, வெண்குடை பாங்கினோங்க - வெண்கொற்றக்குடைபக்கத்து உயர; என்க. வியாபித்தல்-குடைதிறந்திருக்கும்பொழுதுள்ள சுற்றளவைக் குறிக்கின்றது; அன்றிப்புகழான் மூவுலகத்தும் பரவுதலுமாம். மாலாம் - மயக்கமாகிய, யாரும் ஏலாமதியோர் - எவருந்தமக்கீடாகாத மெய்ஞ்ஞானிகள், வியாபகம் - அகண்டாகாரம், மதியாகிய - ஞானமாகிய, பிறவற்றிற்கு முன்னர்க் கூறியாங்குக்கொண்டு சிலேடையாய்ப்பொருள்கொள்க.

கச. கதி - மோக்ஷம். விதி - வேதாகமமுறை. நன்னெறி - நல்ல பாதை; சன்மார்க்கம்; சிலேடை; முன்னதுகாலானும், பின்னதுகருத்தானும், நடத்தற்குரியது.

கரு. அலர் - (வெண்டாமரை) மலர்; மலர்வது என்பது பொருள்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டது. வீறு - சிறப்பு; பெருமையுமாம்.

கசா. தாரகம் - பிரணவம் (ஓங்காரம்). நாதம் - பிரணவத்தினோர் அவயவம்; அகாரமாகிய கலையையுடையது. இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுமுடன்றொக்க தொகையிரட்டுமொதலின், தார்குழல்என்பது தார்க்குழல் எனத்திருத்தப்பட்டது. விதி - தீச்செயல்களையொழித்துநற்செயல்களைக்கூறுவதாகிய, வேதத்தின் ஓர் பிரிவு. அர்த்தவாதம் - ஷட்வித லிங்கங்களி லொன்று; அதாவது:- ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயம், பிரவேசம், ஸம்யமனம், தத்துவம்பதார்த்த பரிசோதனை, பலம் என்னும் ஏழானுந்தாற்பரியம்செய்வது; கடவுளைக்கத்யபத்யங்களாற் றுதிக்கும், வேதத்தின் ஓர் பகுதியுமாம். ஷட்வித லிங்கங்களாவன:— உபக்கிரம உபசம்ஹாரங்கள், அப்பியாசம், அபூர்வதா, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்பவை; இதனை "உபக்ரமோப சம்ஹாரா, வப்பியாசோ பூர்வதாபலம், அர்த்தவாதோபபத்தீச, லிங்கம் தாத்பர்ய நிர்ணயே,, என்பதானுணர்க. பணைத்த-பருத்த. பயோதரம்-முலை. பிரகரணம் - அத்தியாயம்.

கஎ. அஞ்சுகோசங்கள் - அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்பவை; கோசம் - உறை. சச்சிதானந்தம் - உண்மையறிவானந்தம். உபபத்தி - ஷட்வித லிங்கங்களில் ஒன்று; அதாவது:— "மண்ணிறலே ,, முதலிய திருஷ்டாந்தங் கூறுவது. உபக்கிரமமுபசங்காரம் - ஷட்வித லிங்கங்களி லொன்று; துடக்கமும் முடிவும் தம்முள் ஒத்திருப்பது; அதாவது:— "சௌம்மிய! சத்தா மிதுவே முதற்கண்ணிருந்தது ,, என்று தொடங்கி, "இந்த ஜகத்தெல்லாமிதையே ஆன்மாவாகவுடையது; இது தான் சத்தியம். ,, என்றுமுடிவது. மாவாக்யம் - வேதங்களின் (நான்கு) மகா வாக்யங்கள்; அவையாவன:-ப்ரக்ஞாப்ரம்மம், அஹம்ப்ரம்மாஸ்மி, தத்வமஸி, அயமாத்மாப்ரம்மம் என்பவை; இவை முறையே ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்பவற்றின் வாக்கியங்கள்.

கஅ. வருணம் - வர்ணக்கிரமம். அலங்காரம் - யமகம், திரிபு, ப்ராசம் முதலிய சொல்லணிகளும்; உவமை, உருவகம் முதலிய பொருளணிகளு

மாம். அலங்காரமாகிய பணி என்க. பிரமாணம் - அளவை ; உண்மைய நுபவத்திற்குச்சிறப்புக்காரணம் ; அவைபிரத்யக்ஷம்முதலியன. விந்து - பிரணவத்திஞேரவயவம்; ககாராதி க்ஷகாராந்தமாகிய பஞ்ச கலைகளை யுடையது. சத்தி-உமை. பூருவம் - சுக்லபக்ஷம். சத்தியென்னும் எழில் பூருவமென்னும் ஒளி எனக்கூட்டுக. கீதை - பகவற்கீதை ; இதுப்ரஸ்தானத்ரயத்திலொன்று ; மற்றவை ப்ரம்மசூத்திரமும், உபநிடதங்களுமாம்.

௧௯. கோயில் - அரண்மனை ; இலக்கணப்போலி. ஆதரம் - அன்பு.

௨0. கலை - ஒளி. விதானம் - மேற்கட்டி. சொற்ருெடராகிய தொடை ; அளியாகிய விளக்கம் என்க. அளி - கருணை. எற்றிகழ் - பகலிலும்விளங்குகின்ற ; சூரியனைப்போன்றவிளங்குகின்றஎன்றுமாம். எழில் - அழகு.

௨௧. ஒல்லை - விரைவில். தாழ்ந்து - வணங்கி.

௨௨. எண்கண்வேதியன் - பிரம்மன். தருதி - ஒருமையேவல்.

௨௩. விதி - பிரம்மன். உடை - கொண்டிருக்கின்ற.

௨௪. ஆறியன் முனிவர் - ( வேதாங்கங்கள் ) ஆறினிலக்கணங்களுமுணர்ந்த அல்லது, ( பிறர்குற்றத்தைப் ) பொறுக்குந் தன்மையினையுடைய மனனசீலர்கள்.

௨௭ அமைவில் - அடங்குதலில்லாத. அதாவது:- யாவரானும் நன்கறியப்பட்ட.

௨௮. ஒண்டரு - ஒளிபொருந்திய. பண்டரு - இராகம்போன்ற. கிளவி - சொல்.

௩0. முளரி - தாமரைமலர் ; முள்ளையுடையநாளத்தையுடையது என்பது பொருள் ; இரண்டாம்வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தாமரையை யுணர்த்திப் பின் முதலாகுபெயராய் அதன் மலரையுணர்த்திற்று.

௩௧. சங்கு - இது பாஞ்சஜன்யமெனப்படும். சக்கரம் - இது சுதர்சனமெனப்படும். பரவு - வியாபித்த; துதிக்கப்படுகின்ற என்றுமாம். புரந்ததும் - காத்ததும்.

௩௨. தெரிக்க - அறிவிக்க ; பிறவினை ; இதன் தன்வினைதெரிய.

௩௩. விசுவரூபம் - பிரபஞ்சவடிவம்.

௩௪. அம்பரீடன் - இரண்டாம் நாபாகன் மகன். அருள்புரிந்தது:- துர்வாசரது சடையினல் பஸ்மமாகாவண்ணம் விஷ்ணு தமது சக்ராயுதத்தாற் காத்தது.

௩௫. கரா - முதலை; இழுத்துச்செல்வது என்பதுபொருள் ; க்ராஹம் என்பதன் விகாரம். தாலம் - பனைமரம். தனியைம்முன்மெலி மிகலுமாம் என்றபடிகைநீட்டி என்பது கைந்நீட்டி என்று திருத்தப்பட்டது.

௩௮. தவர் - சனகாதி நால்வர்.

௩௯. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத்தமிழ். வாதவூரர் - மாணிக்கவாசகசுவாமிகள்.

௪௧. சாத்திரம் - சாங்கியம், யோகம், வேதாந்தம்என்னும் மூன்று ; வேதாந்தம், வைசேஷிகம், பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சைஎன்னுமாறுமாம். இதிகாசம் - உபதேசபரம்பரையில் வந்த பழைய சரித்திரமொன்றைப் பிரதானமாகவெடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறுவது. இதிகாசவி என்பது இதிகாசமி எனத் திருத்தப்பட்டது.

சரு. உளம் எழுவாய், செய்தது பயனிலை.

சரு. தமனியம் - பொன்; காய்ச்சற்குரியது என்பது பொருள்; தபநீயம் என்ற வடசொல்விகாரம்.

சஎ. வழுத்தினன் - சொன்னான்.

சஅ. தொண்டை - கொவ்வைக் கனி; முதலாகுபெயர். பின்னை - நீதை.

சகூ. கஞ்சம் - தாமரைமலர்; முதலாகுபெயர்; நீரிலுண்டாவது என்பதுபொருள். காலும் - பொழிகின்ற.

ருக. தீர்த்தர் - பரிசுத்தர். ஓவியம் - சித்திரம்.

ருஉ. மகளிரைக்கண்டு மயங்குவதாகக்கூறினும், உற்றுநோக்குமிடத்து ஞானார்த்தம் புலப்படும். கண்டுகொள்க. குணித்து - கணக்கிட்டு (மதித்து).

ருங. மனோலயம் - மனது இந்திரியங்களின் வழியாய் விஷயங்களிற் செல்லாது ஒடுங்குதல். தேசிகன் - குரு.

ருச. தாரை - நீரொழுக்கு. நாண் - நாணமாகிய காப்புநாண்.

ருரு. கால்பிடித்தல் - (சப்ததண்டுலராசிகளிற் கிரமப்படி காலை வைத்தற்காகக் கணவன் கன்னிகையின் வலது) காலைப்பற்றுதல்; சப்ததண்டுலராசி - எழு, அரிசிக்குவியல்கள். அன்றி அசுமத்தில் (அம்மிக்கல்லில்) வைக்கும்போது பற்றலுமாம். வெளிகண்டு - அருந்ததியைப் பார்த்து; வெளி - ஆகாயம்; அது இடவாகுபெயராய்த் தன்னிடத்துள்ள அருந்ததியென்னும் நக்ஷத்திரத்தையுணர்த்திற்று. விவாகத்தில் அம்மி மிதித்தலும் அருந்ததியை நோக்கலுமுலகியல். இலக்கணத்திரயம் - விட்டவிலக்கணை, (ஜஹல்லக்ஷணை) விடாதவிலக்கணை, (அஜஹல்லக்ஷணை) விட்டும்விடாத விலக்கணை, (ஜஹதஜஹல்லக்ஷணை) என்னுமூன்று. இலக்கணத்திரயமாகியமங்கலியம். இலக்கணத்திரயம் - அதத்வியாவிருத்திலக்ஷணம், தடஸ்தலக்ஷணம், சுரூபலக்ஷணம், என்னும் மூன்று; அதத்வியாவிருத்திலக்ஷணமாவது:— நேதி, நேதி (இஃதில்லை, இஃதில்லை) என்று தள்ளி எஞ்சிநின்ற பொருள்யாது அஃதான்மாஎன்பது. தடஸ்தலக்ஷணமாவது:- ஜகத்திற் கிருப்பிடமாயுள்ளதே ஆன்மவஸ்து என்பது. சுரூபலக்ஷணமாவது:- சத்து, சித்து, ஆனந்தம், பூரணம், நித்தியம் ஆன்மவஸ்து என்பது. இது வாசுதேவமனனத்திற் கண்டது.

ருகூ. ஏனை - மற்ற. துந்துமி - ஓர்தெய்வப்பறை.

ருஅ. நீரயினி - சோற்றுருண்டைகலந்த ஆலத்திநீர். காப்பு - திருநீற்றிரேகை.

சுக. ஓகை - உவகை.

சுஉ. துற்ற - நெருங்கிய.

சுங. லகரம் தகரத்தோடுமயங்காதாதலின், பொருவில்த என்பது பொருவிற எனத்திருத்தப்பட்டது.

சுச. சேல் - ஓர்மீன் (கயல்). இனிய - இன்சொற்களை; குறிப்புவினையாலணையும் பெயர்.

## உரு-வது, சருக்கம்.



௳. பெற்ற - அடைந்த (திறல்); வினையாலணையும்பெயர். பின்னுள்ள ஆய், போலஎன்னும் பொருளது.

ரு. சகோரம் - நிலவினையுண்ணும் பறவை விசேஷம். மானிடமாகிய சகோரப்பறவை, துயராகிய பசி என்க. அவை - அச்சகோரப்பறவைகள். வழக்கோ - முறையோ.

ச. முழுத்த - மூழ்குவித்த; (அதிகரித்த என்றபடி). வல் என்றும் அல் என்றும் பிரிக்கலாம்; முன்னது, சென்று பயன்றருவதில் வல்லதான என்றும், பின்னது, நல்லதல்லாத என்றும் பொருள்படும். முறுகிய - திருகிய. வினையாகிய கோடை, உபநிடமாகிய கொம்பு, ஞானமாகிய பழம்என்க. ஞானமாம்பழம் என்பதை ஞானம் ஆம் பழம் என்றும், ஞானம் மாம்பழம் என்றும் பிரிக்கலாம்.

சு. அனையர் - மோகனுதியர்.

அ. காறும் - வரையிலும். மேலுன்றெவ்வரை என்றிருப்பது சிறப்புடைத்து.

கூ. காடு - பதரிகாச்சிரமம்.

கஉ. கம்பியா - கம்பித்து (அசைத்து); பெயரடியாய்ப் பிறந்த உடன்பாட்டுவினையெச்சம்.

கச. புகறி - சொல்; ஒருமை ஏவல்.

கரு. பங்கயனுடு - சத்தியலோகம். பொனுடு - தேவலோகம்; தொகுத்தல். அத்தலம் - சக்கரதீர்த்தம். சங்கம் - கூட்டம். தரிக்கலாம் - தங்கலாம்.

கஅ. தரியலார் - பகைவர். தம் - விவேகனுதியரது. தோளுங்கண்களும் - தோளுங்கண்களுமாகியஇவற்றில். இடம் - இடதுபக்கத்திலுள்ளதோளும், கண்ணும். இடந்துடித்தல் ஆடவர்க்காகாது; மகளிர்க்காகும். இதனல் விவேகனுதியர்க்குண்டான சகுனத்தையும், மோகனுதியர்க்குண்டான அபசகுனத்தையுங் கூறினர்.

உஉ. சூழல் - சுற்றிடம்; தொழிலாகுபெயர்.

உரு. சோனகர் - துலுக்கர். உரைத்தி - சொல்; ஏவல்.

## உச-வது, சருக்கம்.



க. நிருபம் - கட்டளைப்பத்திரம்.

ரு. உரவோர் - ஞானமாகிய பலத்தினையுடையோர். மருள் - மயக்கம்; தெருள் என்பதன் மறுதலை.

ச. படிமடந்தை - பூமாதேவி.

சு. நிபிடமிட்டு - நெருங்கி,

எ. உணங்கும் - துக்கப்படுதற்குரிய.

கூ. பரவி - துதித்து. அஞ்ஞமாபுரம் - அவித்யாபுரம்.

௪0. கொங்கு - வாசனை.
௪௧. கருதார்-பகைவர். நன். சூ-௨௪௨ இன்படி நாட்டின் கண்டடங்கள் என்பது 'நாட்டின்கட்டங்கள், என த்திருத்தப்பட்டது. தழீஇ - தழுவி; சொல்லிசையளபெடை.
௪௩. துன்னார் - பகைவர்.
௪௪. மட்டு - கள்வாசனை. வார் - நீண்ட.
௨௨. சித்தசன் - மனதிற் சனித்தோன். திறலோர் - வலியற்றமாதர்களாகிய யோகினிகள்; இதுபிற குறிப்பின்பாற்படும். அவர் - விவேகனுதியர்.
௨௩. அன்னவர் - யோகினிகள். மைத்துனனார் - கலி.
௨௪. மெல்லியலார் - யோகினிகள். உஞ்சிடுதற்கு - உய்ந்திடுதற்கு; போலி.
௨௫. பொதுமகளிரண்டிற் பின்னது, மிச்சாதிட்டியை யுணர்த்தும். கணக்கு - ஆலோசனை.
௨அ. தளம் - சேனையில்; இதனை நிற்பர் என்பதோடியைக்க.
௩௨. வன்பதம் - சாச்வதமான பரமபதம்.
௩௪. தூதி - சத்துவச்சிரத்தை. உண்மையா(க) என்றேனும்உண்மையாய் என்றேனும் பிரிக்கலாம்; முன்னது தொகுத்தல்; பின்னது நன். சூ- ௨௨௪இல் மேல்என்ற மிகையாற் கொள்ளப்படும்.

௩எ. செயிர் - கோபம். கயிரவம் - செவ்வாம்பற்பூ; முதலாகுபெயர்; அன்னப்புள்ளிற்குப் பிரியமானது என்பதுபொருள்.

௩அ. குணிக்கும் - (முக்காலத்து நிகழ்ந்தன) மதிக்கும். செய்தி - செய்; ஏவல்.
௩௯. பெண்கொடி - ஹரிபத்தி.
௪0. இறை - கணப்போது. போய் + யாம் - போயாம்.
௪௨. வணங்கினர் - வணங்கி; முற்றெச்சம். கன்னவில் - (கல் + நவில்) மலைபோன்ற; கல் கருவியாகுபெயர்.
௪௪. கான் - வாசனை.
௪௫. உந்தினன் - செலுத்தினேன்; அன்விகுதி புதியனபுகுதலாற் றன்மையில் வந்தது.
௪௬. அரியினம் - குரங்குக்கூட்டம்; முன்பாட்டில் வயிரவியை இந்திரஜித்தின் பாசமெனக்கூறலானிவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது. சிரத்தை அறனெடும் படர்ந்தாள் என்றியைக்க.
௪அ. நன். கஅக-ம், சூத்திரத்துரையான் இங்கு காக்கும் என்பது இங்குக்காக்கும் எனத்திருத்தப்பட்டது. கோற்றொடி - வயிரவி; அழகிய வளையல்களையுடையாள் என்பதுபொருள்; பண்புத்தொகையன்மொழி.
௫௨. அச்சரவேகம் - அந்தஅம்பின்விசை; அ, பலரறி சுட்டென்க. விச்சை - வித்தை.
௫௫. கூறினன் - கூறி; முற்றெச்சம். தாழ்ந்து - வணங்கி.
௫அ. அசுணமா - கேகயப்புள் என்னுமிசையறிபறவை.
௫௯. பொத்தி - அடித்து.
௬0. இலக்கண வழுவின்மையானும், மதுரைத்தமிழ்ச்சங்கத்து எட்டுப்பிரதியிலிருப்பதானும், உபநிடத்தைசேர் என்பது உபநிடத்தைச்சேர் எனத் திருத்தப்பட்டது.
௬௩. வடிக்கின் - தெரிந்தெடுத்தால்.
௬எ. கடம் - காடு. காத்தி - காப்பாய்; ஏவல்.
௬அ. அனுசாரன் - இயல்பின் வந்த அண்மைவிளி. கவர்தி - ஏவல்.

## ௨௫-வது, சருக்கம்.



௨. பன்னாகம் - (பல் + நாகம், பல + நாகம்) பற்களையுடைய அல்லது, பலவாகிய பாம்புகள். இன்னுள் என்பது இந்நாள் எனத் திருத்தப்பட்டது.

௯. இன்னல் - துன்பம்.

௧௦. உழந்தான் - அநுபவித்தான். வேட்டு - மணந்து.

௧௧. அன்னகர் - அந்நகரெனத் திருத்தப்பட்டது.

௧௨. அனக - பாவம் இல்லாத.

௧௩. கடற்கரையுறையுந்தீயோர்- செம்படவர்களுங்,கப்பற்கொள்ளைக்காரர்களும், பிறருமாம்.

௧௬. இனிதுவிளங்கற்பொருட்டுப் போல இரண்டும் போலும் எனத்திருத்தப்பட்டன. புயங்ககேதனன் - சர்ப்பக்கொடி படைத்த துரியோதனன். விளிவது - இறப்பது. சரதம் - நிச்சயம்.

௨௨. காந்தையர் - மனைவிகள்; அவராவார்:— தசரதன் மனைவியாகிய கைகேயியும், சந்தனுமனைவியாகிய பரிமளகந்தியுமாம்.

௨௩. இன்னிலம் - (ஈனமில்லாததால்) இனியதாகிய பூமி.

௨௪. ஒருங்கும் - அழியும்.

௨௬. பிணை - பெட்டை. கோடு - விலங்கின் கொம்பு. கடுக்கும் - ஒக்கும்.

௩௩. கபாலி - ஈண்டுவயிரவி. சேறல் - செல்லல்.

௩௫. மென்கொடி - அரிபக்தி. கோறல் - கொல்லல்.

௩௬. தாறு - புதர்.

௩௭. சங்கியாது - கனப்படுத்தாமல்.

௩௮. ஆகி தருவரேனுமென்றியைக்க. ஆகி உட்கொளாத என்றுமாம்.

---

## ௨௬-வது, சருக்கம்.



௩. தத்தை - கிளி. சின்னம் - கொடி,குடை முதலிய அடையாளங்கள்.

௭. குமிழ் - முதலாகுபெயராய் அதன்மலரையும் அது உவமையாகுபெயராய் மூக்கையுமுணர்த்தலின், இருமடியாகுபெயர்.

௮. குமுதம் - ஆம்பற்பூ ; முதலாகுபெயர் ; பூமியிற் சந்தோஷிப்பது என்பதுபொருள்.

௧௦. அஞ்சுபூ - தாமரை, அசோகு, மா, முல்லை, நீலோற்பலம் இவற்றின் மலர்கள். அஞ்சு - பயப்படுகின்ற, பூ - (ஐந்து) மலர்கள்என்றுங்கொள்ளலாம் ; இப்பொருளில் அஞ்சு வினைத்தொகை.

௧௧. அழற்றேவி - சுவாஹாதேவி. சண்டன் - (கதைக்கேற்பச்) சூரியன், அல்லது யமன் என்று கொள்க;கதைவிளங்கவில்லை. குரு - ஆசாரியனுங்,குருவென்னும்மறுபெயருடையவனுமான பிருகஸ்பதிபகவான். தாரம் - தாரை. இந்திரன் மைந்தன் - ஜயந்தன்.

௧௨. கன்னி - எட்டுவயதுப் பெண்; குந்திதேவி. கடற்கிறைவன் - வருணன்.

௧௫. காளம், குயில், தேர், தென்றல், குடை, சந்திரன். வில், கரும்பு. போது - குமிழ் அல்லது, எள்ளின்மலர். அம்பு, புஷ்பங்கள். அமையும் - போதுமானதாகும்.

௧௬. பாவு - பரப்புகின்ற ; வினைத்தொகை. பஞ்சவாசம் - இலவங்கம், ஏலம், கருப்பூரம்,சாதிக்காய், தக்கோலம் என்பவை; வாசம் பண்பாகுபெயர்.

௧௭. ஆசுரக்கோலம் - சலந்தராசுரனது வேஷம்.

௨௫. இஞ்சை - கொலை ; ஹிம்ஸா என்ற வடசொல்விகாரம்.

௨௬. போதகம் - யானை. ஓதிமன் - பிரம்மன்.

௨௮. தாய் - இரேணுகா தேவி.

௩௪. சமந்தக விரத்நம் - சூரியனாற் சத்திராஜித்துக் களிக்கப்பட்டதோர் மணி.

௩௮. யானையெதிர் - யானையை எதிர்க்கின்ற. கோட்டி - துன்பம்.

௪௧. அகடு - வயிறு.

௪௪. அதள் - (புலித்) தோல். கவுத்துவம் - பாற்கடலிலுண்டானதோர் மணி. கொண்டல் - மேகம் போன்ற திருமால் ; உவமையாகு பெயர்.

௪௫. வாசவன் - இந்திரன் ; இரத்தினங்களையுடையவன் என்பதுபொருள்.

௪௭. சில் - அற்பம்.

௪௯. நாதன் - சிவபிரான். கேதகை - தாழம்பூ ; முதலாகுபெயர்; (பரிமளத்தை)அறிவிப்பது என்பது பொருள். கிளத்துதல் - சொல்லுதல்.கிளர்த்துதல்,கிளத்துதலெனத் திருத்தப்பட்டது.

௫0. பொய் - அச்வத்தாமனிறவாதிருக்க இறந்ததாய்ப் பொருள் தரும்படி கூறியது.

௫௩. நீர்மை - தன்மை.

௫௪. ஆசு - குற்றம்.

௫௬. சேதிராசன் - சிசுபாலன்.

௫௮. பன்னி - மனைவி ; பத்நீ என்றவடசொல் விகாரம்.

௬௧. மகிணனார் - கணவனாகிய துஷ்யந்தன். பூவை - நாகணவாய்ப்புள், கிளி, அல்லது, குயில்போன்ற மறதி ; உவமையாகுபெயர்.

௬௭. நிருதன் - கும்பகருணன். நித்திரைத்துவம், நித்திரத்துவம் எனத்திருத்தப்பட்டது.

௬௮. மால் - பெருமைபொருந்திய.

௭0. தச்சு - தைத்து ; போலி. அரந்தை - துன்பம்.

௭௫. மழுவினன் - பரசுராமன். தாதையார் - ஜமதக்கிமுனிவர். உரிமை - பிதுர்க்கிரியை.

௭௭. கான்முளை - பிள்ளை (வயிரன்).

௭௮. மாதவர் - தாருகவனமுனிவர்கள்.

௭௯. கன்மாடபாதன் - மித்திரசகன்.

௮0. கைமிகும், கைம்மிகுமெனத்திருத்தப்பட்டது.

௮௧. ஊரு - தொடை ; (வஸ்திரத்தான்)மறைக்கப்படுவது என்பது பொருள். ஈரம் - அன்பு.

௮௨. குறுமுனி - அகஸ்தியர். விருத்திரன் - துவஷ்டாவின் புத்திரன்.

௮௩. இவறலில் - உலோபமில்லாத ; (தனக்கு) உயர்வில்லாத என்றுமாம்.

அசு. விசும்பினிற் பொன்னினுடு - ஆகாயத்தின்கண்ணுள்ள தேவலோகம்.

அஅ. மாமனை - மாமனாகிய தக்கனை.

அகூ. போது - செல்கின்ற; வினைத்தொகை. அளை - புற்று.

கூ௩. ஏமாசலம் - பொன்மலையாகிய மேருபர்வதம்.

கூகூ. முன்அத்தனும்என் - முதற்கடவுளும் செய்வதியாது. அன்றி, மேலான மூத்தோய் தங்களுடைய மெல்லிய எனக்கொண்டு பணிஎன் பதோடியைத்தலுமாம். சன்னத்தன் - போர்க்கு ஆயத்தமானேன். சன்னத்தனால் என்பது சன்னத்தனானால் எனத்திருத்தப்பட்டது.

க00. சாயகம் - அம்பு; (சத்துருவை) நசிக்கச்செய்வது என்பது பொருள். நெடுநீர்மை - மேம்பாடு.

க0௩. அசத்து - பொய்ப்பொருள். சத்து - மெய்ப்பொருள். ஒன்றோ - அத்துவிதமோ. இரண்டோ - துவிதமோ. அன்றிச் சகுண நிர்க்குண வேறுபாடின்றி ஒன்றாயிருப்பதோ; அவ்வேறுபாட்டான் இரண்டாயிருப்பதோ என்னலுமாம்.

க0டு. உருவம் - ரூபஸ்கந்தம்; உருவங்கட்கெல்லாங் காரணமாய பொருளை அறிவிப்பது. வேதனை - வேதனாஸ்கந்தம்; இந்திரிய விஷய சம்மந்தத்தா னுண்டாகும் ஞானம். குறிப்பு - ஸம்க்ஞாஸ்கந்தம்; பொருள்களைப் பெயரிட்டுக்குறித்துக்காட்டற்கு வேண்டிய ஞானம். பாவனை - ஸம்ஸ்காரஸ்கந்தம்; திரிகரணங்களானியற்றப்படும் வினை விகற்பங்களால்அவற்றிற்குண்டாகும் பரிபாக விசேஷம். விஞ்ஞானம் - விக்ஞானஸ்கந்தம்; சேதனர்தந் தேகங்களிலிருந்து அவர்களறிவிற்கெல்லா மாதாரமாய்நிற்குஞ் சைதன்யதத்துவமாம்.

க0சு. காந்தி - பொறுமைகொண்டு.

க0அ. அநகன் - பாவமற்றவனாகிய விச்வாமித்திரன். படாமுலை - சாயாத தனம்; முன்றானைக்குள் உள்ள தனம் என்றுமாம்.

கக௩. பிஞ்ஞகன் - சிவபிரான்.

ககடு. உருஉறும் - உருப்போடப்படுகின்ற; தேகாதித்ரியஸ்யவஸ்துக்கள் உண்டாதற்குக் காரணமாகின்ற என்றுமாம். தாரகம் - பிரணவம். வேதா - பிரம்மன்.

ககசு. கவுசிகன் - குசிகவம்சஉற்பவனான விச்வாமித்திரன்; தத்திதாந்தம். நாள் - நக்ஷத்திரங்கள்.

ககஅ. சங்கியாது - அஞ்சாமல். தேவி - அகந்தை. தேவியாலும், மமதையாலும் என்க. மமதை - அகங்காரன் மகள்.

## உஎ-வது, சருக்கம்.



உ. கழை - கரும்பு.

௩. முரண் - பகை. அறுதி - முடிவு.

கக. சிலந்தி - இரத்தக்கட்டி. பிராந்தர் - மூடர்.

கஉ. வேணு - மூங்கில்; நெய்தற்குபயோகப்படுவது என்பது பொருள்.

க௩. பல்துளை - பஃறுளை எனத்திருத்தப்பட்டது.

௧௪. கோலாகலங்கள் - சம்பிரமங்கள். சிங்கிகொள்ளும் - (வெற்றி கொள்ளலாற்) குதித்துவிளையாடும்.

௧௮. பாகு - பாக்கு. சுருள் - வெற்றிலை.

௧௯. மேகலை - மாதரிடையிலணியும் எழுகோவைமணி. பூடணங்கள் என்றவிடத்து உம்மைவிகாரத்தாற் றொக்கது.

௨௧. மடந்தை - காசிராஜன்மகளாகிய அம்பை. குரு - பரசுராமர். அங்கசன் - காமன்.

௨௨. பைம்மறிக்கும் பார்வை - பையின் உட்புறத்தைப் பார்ப்பதுபோல உடம்பின் மேற்பூச்சை நோக்கி மயங்காமல், உண்ணோக்கி அருவருத்தல்.

௨௭. சதுர் - புத்தி, திறம்.

௨௮. கைம்மிக - அதிகப்பட; கைமிக என்பது கைம்மிக எனத் திருத்தப்பட்டது.

௩௪. முந்துறு - முன்ஜன்மத்திற் செய்த; (யார்விலக்கினும்நில்லாது பயன்றரற்கு) முற்படுகின்ற என்றுமாம்.

௩௭. ஆம் எனவே அமையுமாதலின், என்னுந்தாரம் என்பது என்னந்தாரம் எனத் திருத்தப்பட்டது. என் + அம் + தாரம் - (மரியாதையாகிய) எனது அழகிய மனைவி. ஆம் - ஆகிய.

௪௧. மிடியாளர் - தரித்திரர்.

௪௨. இறும்போதில் விழுந்தால் எனக்கூட்டி, இறத்தற்குரியகாலத்திலிறந்தால் எனப்பொருள்கொள்க. எங்கே, ஈண்டுஇன்மைப் பொருளது. விழாதேயிருக்க - இறவாது உயிருடனிருக்கும்பொழுது. தடுத்தால் - (ஆசையை) விலக்கினால். தலைச்சுமை - (உடன்செல்வதாய) புண்ணிய பாவங்கள்.

௪௮. பின்பெற்றபேரும் - பிற்காலத்து (தற்காலத்துப்) பிள்ளைகளைப்பெற்றநபர்களும். பெறத்தக்க பேறு - அடையத்தக்கபயன். அது அன்றோ - அந்த இறத்தல் அல்லவா.

௫௧. குடம்பை - முட்டை; கூடு எனல் பொருந்தாது.

௬௫. மும்மதம் - கன்னமதம், கபோலமதம், பீஜமதம் என்பவை.

௬௬. மாறன் - அரிமர்த்தனபாண்டியன். பாணன் - பத்திரன் என்னும் யாழ்வல்லோன்.

௭௧. உடல் (பரிசம்) யானையையும், வாய் (சுவை) சேலையும், கண் (ஒளி) விட்டிலையும்,மூக்கு (நாற்றம்) வண்டையும், செவி (ஓசை) அசுணப்பறவையையும் (வாதிப்பதுபோல) வாதிக்கும் தெவ்வர் என்க.

௭௨. கருவூலம் - பொக்கசம் (பொருட்சாலை). திடம் - நிச்சயம். சேமம் - காவல்வீடு.

௮0. அசித்தி - கைகூடாமை. சித்தி - கைகூடல்.

௮௧. பிரவிர்த்தி - முயற்சி.

௮௨. தகைய - தன்மையது; குறிப்பு வினையாலணையும் பெயர்; தகையது என்பதன் றொகுத்தல். திருதி - உறுதி.

௮௭. அவள் - ஈண்டுப்புனிதை. பெறு - (கணவனைப்) பெற்ற.

௯0. திமிரம்-இருள் (போன்ற). உமிழ்சினம் - (யாரும்அவமதித்துத்) துப்புதற்குரிய கோபம்; (உள்ளெல்லாம் நிறைந்து இடமில்லாததால் வெளியிலும்) உமிழ்கின்ற கோபம் என்றுமாம்; மிக்ககோபம் என்றபடி.

௯௪. இன்மையாம் - அழிதன்மாலைத்தாய; அறமும் அநுபவித்த பின்னர்க் கெட்டுவிடுமாதலின், இன்மையாம் அறம் என்றார்.

௯௫. செய்தபோதினும் தீது, நன்றெனச் சொல்லற்பாலதோ என்றியைக்க.

௯௯. குரகதம் - (இந்திரனுடைய உச்சைச்சிரவம் என்னும்) குதிரை. வெள்ளிபம் - (இந்திரனுடைய ஐராவதம் என்னும்) வெள்ளையானை.

௯௮. புறவு - (சிபிசக்கரவர்த்தியைப் பரிசோதித்தற் பொருட்டு அக்கினிபகவான் எடுத்துக்கொண்ட) புறாவடிவம். இருந்தவன் - சிபிசக்கரவர்த்தி.

---

## உ௮-வது, சருக்கம்.



௧. நிச்சயத்தால், 'முடியும்' என எதிர்காலத்தாற் கூறற்பாலது 'முடிந்தது' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது; காலவழுவமைதி. புகவென்ன - புகக்கடவர் என்று (விவேகன்) கூற; புகவென்று என்பது புகவென்ன என மாற்றப்பட்டது. யோகமாகிய குஞ்சரம், வேதமாகிய பரி, தத்துவமாகிய இரதம் என்க.

௨. ஏகநாயகன் - பிரம்மம். விசிகம் - அம்பு; பேதித்துக்கொண்டு செல்வது என்பது பொருள்; இது ஈண்டுப்போர்க்குரியபடைஎன்னும் மாத்திரையாய் நின்றது. உத்தியோகம் - முயற்சி.

௩. வலவன் - தேர்ப்பாகன். எழுந்த - பலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர்; வினைமுற்றெனல் சிறவாது; பின்வருங்கவிகளிலும் பல, பலகோடி, அநந்தகோடி என முடிதலான் ஈண்டும் அவ்வாறேதேர்கள் பலஎன முடிதலே சிறப்புடைத்து. நடத்துவனவும், இலாதனவும், போவனவும், சேர்வனவும், எழுந்தவுமாகிய தேர்கள் பல என முடிக்க.

௪. சினமாகிய வனம், லோபமாகிய வோடை, ஞானமாகிய யானை என்க.

௫. இது சிலேடை. சிதை - (பகைவரை) அழிக்கின்ற, வில் - வில்லினையுடைய, மேலவர் - மீதேறிநடத்தும் போர்வீரர்களது, கருத்துணர்ந்து - அபிப்பிராயத்தை அறிந்து, அனையர் - அப்போர்வீரர்கள், செல்லவிட்டநெறி - செல்லும்படி விட்டவழியில், சென்று - போய், ஓர் ஐங்கதிவிடாது - ஒப்பற்ற மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி என்னும் ஐந்துகதிகளை விடாமல், எவையும் மாயநூறி - (ரதம், கஜம், துரகம் முதலிய) எவையும் அழியும்படி அரைத்து, முழுஞானம் - பூர்ணஞானம் போன்ற (வெண்மையான), வாயின் நுரைகக்கி - வாயிலிருந்துண்டாகும் (விலாழி) என்னும் நுரையைக் கக்கி, வந்தெதிரும் - வந்து எதிர்க்கின்ற, வாதியரை - போர்புரிவோரை, வாய்அடக்கி - (தமது) வாயிற் கவ்வியடக்கி, மறைஎழிசைக்குரலெழக்கலித்து - வேதத்தையும் எழுவகைப்பட்ட இசையையும்ஒத்தகுரல் எழும்படி கனைத்து, அதிரும்வாசிகள் - குமுறுகின்ற குதிரைகள், மற்றவை வெளிப்படை. சிதை, வினைத்தொகை. வாது - சண்டை; அதனையுடையோர் வாதியர். எழுந்துசென்றனவாகிய அதிரும் வாசிகள்

என முடிக்க. சிதைவு - குறைவு அல்லது கேடு, இல் - இல்லாத, மேலவர் - மேன்மையையுடையபெரியோர்களால், கருத்து - அபிப்பிராயம், உணர்ந்து - அறியப்பட்டு, அனையர் செல்லவிட்ட நெறிசென்று - அப்பெரியோர் செல்லும்படிவிட்ட (உதாத்தம்முதலியசுரங்களின்)வழியிற்போய், ஓர் ஐங்கதி - (செவியாதியிந்திரியங்களாகிய) ஐந்து வழிகளிலும், விடாது - (மனதை) விடாமல்,மாயம் எவையும்நூறி - பொய், வஞ்சகம் அல்லது, தீமைகள் எவற்றையும் அழித்து, முழுஞானவாய் இன்உரைகக்கி-பூர்ணஞானத்தைத் தருகின்ற மெய்ம்மையான இனிய சொற்களைப் பொழிந்து, வந்து எதிரும் வாதியரை - வந்து மாறுபடுகின்ற மத வாதியர்களை, வாய் அடக்கி - (பேசாவண்ணம்) வாயை அடக்கி,எழிசைக்குரல் எழக்கலித்ததிரும் மறைவாசிகள் - ஏழிசைகளையொத்த குரல் எழும்படி ஓதப்பட்டு முழங்குகின்ற வேதங்களாகிய குதிரைகள், அனந்தகோடி என்க. க-வது, கவியில் 'வேதவான் பரி, என்றிருத்தலால், இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது.

௬. நவிற்றும் - கூறப்படுகின்ற. அதிசயத்திறல்- (அதிசயம் + திறல்) (யாரும்)வியக்கத்தக்கவலிமை;(அதி + சயம் + திறல்) மிக்கவெற்றியைத் தருகின்ற வலிமை.

௭. அவண் - அச்சக்கரதீர்த்தத்தில்.

௧௬. உபயநற்கோயில் - சிறந்த சிவ விஷ்ணுவாலயங்கள்.

௧௮. அவர்க்குச்சேய் ஆயினர் என்க. ஆதுலர் - தரித்திரர்.

௨௬. பாதகர் - இயமன்.

௨௮. முருங்க - அழிய.

௨௯. விந்துமாதவன் - சத்தியாகிய மாதினையுடைய அந்தச் சிவபிரான்; (சிவனுக்குச்) சத்தியாய் நிற்கும் விஷ்ணு என்னலுமாம்; இந்துமாதவன் எனப்பிரித்துச் சந்திரனைத்தரித்த சிவபிரான் என்றுங்கொள்ளலாம்.

---

## ௨௯-வது, சருக்கம்.

)o(

௧. கட்டுணை - (கண் + துணை) கண்கள் இரண்டும்.

௪. ஏங்க - ஒலிக்க.

௮. சீற்றமாகிய யானை, குடிலமாகிய பரி, திறலாகிய தேர், அதிர்மொழியாகிய பறை, புருரமாகிய சாபம், விழியாகிய கணைகள் என்க.

௧௦. வளாகம் - இடம்.

௧௮. சோரி - இரத்தம்.

௧௯. மேல்பால் - எதிர்முகம். துடித்தது இடத்தோள் எனப்பிரிக்க ; நன். சூ- ௧௬௪இல் கெடும்என்றுது ஓடும் என்றமையாற் குற்றியலுகரம் சில இடங்களிற் கெடாமல் உடம்படுமெய்பெற்றும்வரும்.

௨௬. தனு - உடலாகியவில் ; இரட்டுற மொழிதல்.

௨௫. குலிசம் - வஜ்ராயுதம் ; மலையி (னிறகுகளை) அறுத்தது என்பது பொருள்.

௩௭. தும்பை - பகைவரோடு போர்புரிவோர் அணியும் மாலை.

௩௮. மீ - மேல். பவம் - பிறப்பைத் (தருகின்ற).

## ௩0-வது, சருக்கம்.



க. நாஞ்சிலுழவர் - (பகைவரது மார்பாகியவயலை) வாளாகிய (உழுபடையால் உழுகின்ற) உழவினையுடையோராகிய போர்வீரர்.

௩. மதமாக்குன்று - மதம் என்னும் பெரியமலைபோன்ற யானை ; மாக்குன்று, அடையடுத்த உவமையாகுபெயர்.

எ. சுசனன் - அமுதசீலன்.

க0. மெய்ப்புலத்துஅண்டு - உடம்பினிடத்திற்சேர்ந்த ; உண்மையான இடமாகிய (மோக்ஷத்திற்) சேர்க்கின்ற என்றும், மெய்ஞ்ஞானமடைதற்குரிய என்றுங் கொள்ளலாம்.

கக. பன்னகாதிபர்க்கு - ஆதிசேஷனை ; உருபுமயக்கம். பவனன் - வாயுபகவான்.

உக. பித்துஅளையும் - மயக்கம் கலந்த.

உஉ. மஞ்சா-மகனே ! மைந்தா என்பதன் போலி.

உ௩. ஒடு உடனிகழ்ச்சிப்பொருளதாதலின், பிரிந்தாரென என்பது பிரிந்தானென என்று திருத்தப்பட்டது.

உ௫. குணம் - வில்லிடைக்கயிறு.

௩௫. சுருப்புநெடுநாண் - (சுரும்பு + நெடுநாண்) வண்டாகியநீண்டவில்லிடைக்கயிறு. விசிகப்புட்டில் - அம்பறாத்தூணி.

ச0. கட்கம் - வாள் ; துண்டித்தற்குக்(கருவி)என்பது பொருள்.

சக. மதாசலம் - மதத்தினையுடைய மலைபோன்ற யானை ; அடையடுத்த உவமையாகுபெயர். வயிராக்கியமாகிய மதாசலம் என்க.

சஉ. லகரி - கஞ்சா, அபின்முதலிய மஸ்துள்ளபதார்த்தங்கள். லகரியாகியசாமரம்என்க. இபம் - யானை.

ச௩. அடக்கன் மதனை நிச்சயமாய்ச் சிரமமின்றி வெல்வான் என்பதைக்குறிப்பினுணர்த்தலால், மதனை விந்தகிரி, கடல் என்னுமிவற்றோடும், அடக்கனை மலையத்தந்தணனோடும் உவமித்தது வியக்கத்தக்கது.

சஅ. கேசரி - சிங்கம் ; பிடரிமயிரையுடையது என்பதுபொருள்.

௫க. இவுளி - குதிரை.

௫உ. கவி - குரங்கு ; சலித்துக்கொண்டிருப்பது என்பதுபொருள். விபுதசேனை - தேவர்படை.

௫௬. இக்கு - கரும்பு ; இச்சிக்கப்படுவது என்பது பொருள் ; இக்ஷு என்ற வடசொல்விகாரம். மலயமாருதம் - பொதிகைமலையிலிருந்துண்டாகும் (தென்றற்) காற்று. திமிரமா - இருளாகிய யானை ; மா - விலங்கின் பொது ; ஈண்டுயானை என்னும் பொருளது.

௬0. போதகஞ்சுகர் - ஞானமாகிய கவசத்தினையுடையோர். கணைகள் - அம்புகள்போன்ற கண்கள் ; உவமையாகுபெயர்.

௬உ. செங்கைவாள் - சிவந்த கையிலுள்ள வாளாயுதம் ; செம்மையான ஒழுக்கமாகிய வாளாயுதம் ; சிலேடை.

௬௩. சருவுதல் - மருவுதல் ; கொஞ்சுதலுமாம்.

௬௪. வேழம் - கரும்பு.

எஅ. விபரீதபாவனை - அசத்தாகிய ஜகத்து சத்தாய்த்தோன்றுதல் ; இது பிரதிபந்தகம்மூன்றிலொன்று. அசம்பாவனை - பிரதிபந்தகம் மூன்றிலொன்று ; அதாவது:— ஜீவன், ஈச்வரன், ஜகத்து, என்னுமிவை தம்முள் வேறுபடுதலின், அத்வைதம்யாங்ஙனம் பொருந்தும் என்னும் உணர்வு.

## ஈக-வது, சருக்கம்.



க. கோடி - நெறிதவறி. கலிப்ப - ஒலிக்க ; இது உடனிகழ்ச்சிப்பொருளதாதலின், நிகழ்காலம் காட்டும்; அடுத்த கவியில் உற்றுன்என்பதோடியையும். உலகாயிதன் - உலகஇன்பமேசிரேஷ்டமானது என்றுகூறும் நிரீச்வரவாதி; இஃதும் அடுத்தகவியில் உற்றுன் என்பதோடியையும்.

உ. நாகம் - ஆகாயம் ; யாவமில்லது, என்பது பொருள். மேதினி - பூமி ; ( மது கைடவர்களுடைய ) நிணத்தால் நனைக்கப்பட்டது என்பது பொருள். பொன்னுகத்து - ( பொன் + ஆகத்து ) அழகிய அல்லது, பொன்னுலாகியஆபரணங்களை அணிந்த மார்பின் கண்ணுள்ள ; ( பொன் + நாகத்து ) எனப்பிரித்து பொன்மலை ( மேருமலை ) போன்ற என்னலுமாம். என்னுகை - எப்பயனுண்டாதற்கு.

ஈ. கொளுவி - தொடுத்து. அற்றம் - அழிவு. வார் - நீண்ட. இகலி - எதிர்த்து. அடுபோர், வினைத்தொகை.

ச. செஞ்ச - முற்ற. செவ்வி - அழகு. கெஞ்சுபறையறைதல், அச்சத்தாலாவது. வஞ்சினம் - சபதம்.

ரு. பண்பட்ட - இராகம்போன்ற. உருமனைய - இடியையொத்த. விதண்டாவாதி-தன்கோட்பாட்டைத்தாபியாது பிறர் கோட்பாட்டை மறுப்போர்; வி - மாறுபாடு; தண்ட -( சொல்லால்) அடித்தல்.

சூ. மூண்ட - கூடிய. மனமாதி - மனம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவை. காட்சி - பிரத்யக்ஷப்பிரமாணம்; அதாவது:- செவிமுதலியபொறிகளாற் சத்தம் முதலிய புலன்களையறிதல். அநுமானம் - கருதலளவை ; அதாவது:- புகைமுதலிய குறிகளான் மலை முதலிய இடங்களிற் நீமுதலியவற்றின் இருப்பையுணர்தல். உபமானம் - உவமையளவை; அதாவது:- கவயமா பசுப்போல் என அறிதல். யாவும் - ( ஆகமம், அருத்தாபத்தி, ஐதிஹ்யம், அபாவம், சம்பவம், பாரிசேஷம், இயல்பு எனப்படும்) எல்லாப் பிரமாணங்களும்.

எ. செவ்விதின் - தெளிவாக. பூதம் - ஆகாயமொழிந்த நான்கு. கடினசீதம் - வன்மையும் தண்மையும்; இவை முறையே நிலநீர்களின் குணம்.

அ. சால் - காற்று. இரதம் - சுவை. ஊறு - பரிசம். இவை - இப்பூதங்களும், அவற்றின் குணங்களும். புணர்ப்பு - கூடுதல் ( சையோகம் ).

கூ. உருக்கள் - வடிவங்கள். உறுபுணர்ப்பு - பொருந்திய ( அளவு ஒத்த ) சையோகம். உறுஎனவே உருப்(புணர்ப்பும்) உளவெனக்கொள்க. மைந்து - அழகு ; வலிமையுமாம். கடாதி - குடம் முதலியன ; வடமொழித்தீர்க்க சந்தி. வருமா - வருமாறு ; விகாரம். உந்தி - உயர்ந்து. வாரி - தண்ணீர்; (மேடுபள்ளங்களை )மறைப்பது என்பது பொருள்.

கய. ஓர்பூதம் - ஒப்பற்றவாயு ; ஏதேனும் ஒரு பூதம் எனப்பொருள்கோடல் முன்னோர் வழக்குக்கிழுக்காம் ; இதனைச்சிவஞான சித்தியார் பரபக்ஷம், உலகாயதன் மறுதலை ரு-வது, கவியில் " பூதமதினொன்று பிரிய ,,என்பதனுரையா னுணர்க. செறி - நெருங்கிய;வினைத்தொகை. ஆதி - காரணமாகிய ( பூதங்கள் ).

௧௧. பின்னவகை - கண்டன வேறுபாடு. அணி - படைவகுப்பு. வாகை - வெற்றி. வாள் - கொடிய; இலக்கணை.

௧௨. இது, உலகாயதன் இல் பொருள் என்பவற்றைத் தொகுத்துச்சுட்டுகின்றது. கோடு - கொம்பு. வந்தி - மலடி. வகையாம் - விதத்தினையொக்கும்; அதாவது:—முழுதும் அசத்தாம் என்றபடி.

௧௩. இதுமுதல் ஆறு கவிகள், மேற்றொகுத்துச் சுட்டியவற்றை வகுத்துக் காட்டத்தொடங்கி, முதல்நான்குகவிகள், வினை இல்லை என்பதையும், ஐந்தாங்கவி, ஆன்மா இல்லைஎன்பதையும், ஆறுங்கவி, கடவுள் இல்லை என்பதையும் தடைவிடையுள்ளுறச் சாற்றுகின்றன.

௧௪. வை - வைக்கோல். ஈண்டு - நெருங்கிய. இட்டிடம் - (வையுந் தழையும்)போடப்பட்ட(வயலாகிய) இடம்; உபமேயத்தில், (கன்மங்கள்) செய்யப்பட்ட இடம்எனக் கொள்க; இட்டவிடம் என்பதன் றொகுத்தல். பலன் - (உணவு ஜீரணமானபின்னருண்டாகும்) பிரயோஜனம்; மலம் என்றபடி.

௧௫. அது - மதியுமுருவும் ஒவ்வாதவகை. இகரத்தின்முன் வலி உம்மைத்தொகையில் இரட்டாதேனும்இன்னோசை பயத்தலான், மிகுதிக்குறைவு என்பது மிகுதிக்குறைவு எனத் திருத்தப்படவில்லை; 'க்,' விரித்தல் விகாரம் என்க.

௧௬. குழைவு - இளக்கம்.

௧௭. புரை - உட்டுளை. அளவோதுதலாமே - அளவு ஓதுதலையொக்கும்; ஆமைமயிரும், முயற்கோடும், உள்ளன என்றலே பெரும் பொய்யாம்; பின் அவற்றின் அளவும் கூறுதல் மிகப் பெரும்பொய்யாம் என்றபடி.

௧௮. இருவேறியல்பு - (உருவும் அருவுமாகிய) தம்முண் மாறுபட்ட இருவகைத்தன்மை. பொருப்பு - மலை.

௧௯. அதனால் - அன்னத்தால். பின்னம்பின்னமாய் - வெவ்வேறாய். பெற்றி - தன்மை.

௨௧. வல்லை - சமர்த்துடையை; முன்னிலை யொருமைக்குறிப்புவினைமுற்று; விரைவில் எனக்கொண்டு வலக்கைதா என்பதோடியைத்தலுமாம். வாயி - வாமமதத்தோய்; அண்மைவிளி. வலக்கைதரல், மகிழ்ச்சியால்; உறுதியின் பொருட்டுமாம். என்ன வலக்கைதா என்றியைக்க. வேரி - கள்.

௨௨. பாகத்தில் - (உமாதேவியின் வலது) பங்கில்; (அரனது இடது)பங்கில் எனல்பொருந்தாது; பதித்து முதலிய எச்சங்களைப்போலக் 'கலந்து, என்பதையும் அரனெழிலாய்க்கோடல்வேண்டுதலின். வலாரி - இந்திரன்; வலன் என்பானது சத்துரு என்பது பொருள். போகத்தில் இதிலுள்ள இல், ஐந்தனுருபு; ஏதுப்பொருளது.

௨௩. அமை - மூங்கில். அலத்தகம் - செம்பஞ்சு. அலர்த்தக அலத்தக எனத்திருத்தப்பட்டது. சுவடு - அடையாளம். புலவி - ஊடல்; கலவியின் மறுதலை. தரணி - பூமி; (விச்வத்தைத்) தரிப்பது என்பது பொருள்.

௨௫. இந்துகாந்தம் - சந்திரகிரணம் படில் நீர்கால்வதாகிய சந்திரகாந்தக்கல். அமளி - மெத்தை. கரணங்கள் - (போகத்திற்குரிய )கரணங்கள்; அவையாவன:- ஆலிங்கனம் ஐந்தும், அதரபானம் பதினொன்றும்,அமிர்தம் பதினாறும், நகக்குறிஎட்டும், தந்தக்குறிஎட்டும், குரல் எட்டும், தாடனம் எட்டு

மாகிய அறுபத்து நான்குமாம். எதிலர் - பகைவர்.

௨எ. கரி - சாக்ஷி. தொண்டை - கொவ்வை.

௨அ. மாழை - பொன். சூழி - உச்சி. கோழையர் - பயங்கொளிகள்; (தவக்)குறைவையுடையோருமாம். குணபம் - பிணம்; (தனஞ்சயனென்னும் வாயுவால் உண்டாகும்) சப்தத்தைக் காப்பது என்பது பொருள்.

௨௯. பொதுளல்செல்லா - நெருங்காத. குளித்த - படிந்த.

௩0. சாதி - பெண்களின்வகை; அவையாவன:- பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்பவை. தருமங்கள் - குணங்கள். இகத்தே - இம்மையிலேயே. துய்க்கும் - அநுபவிக்கும்.

௩௩. புரோகிதன் - புரோகிதனாகிய பிருகஸ்பதி பகவான்; (சாங்திகபௌஷ்டிகாதிக் கிரியைகளில்) முன் வைக்கப்படுவோன் என்பது பொருள். மடுப்பான் - நிறைக்கும் பொருட்டு.

௩௪. இது முதலிய கவிகள், உலகாயதனைத் தார்க்கிகன் மறுப்பதைக்கூறுகின்றன. அவற்றுள் முதல் மூன்று கவிகள், மேல் ௯-வது, கவியில் "அநுமானமுபமானமுதல் யாவும் வேண்டுகிலம்,, என்றதிலடங்கிய 'அநுமானம் வேண்டுகிலம்,என்பதை மறுக்கின்றன.

௩௫. நெருநல் - நேற்று. ஓ, எதிர்மறை.

௩௬. அதும் முன் காட்சி (ஆதலின்)காட்சியேல்எனக்கூட்டித்"(தார்க்கிக! நீ அநுமானமென்று கூறிய) அஃதும் முன்காக்ஷியே (பூருவக்காக்ஷி) ஆதலின், காக்ஷிப்பிரமாணமேயாம் (அநுமானமன்று),, என்று உலகாயத! நீ கூறுவையேல் என்க. பூட்சி-சையோகம். போதம் - அறிவு.

௩எ. இது, ஆகமப் பிரமாணம் உள்ளதென்கின்றது. மருத்துநூல் - (மருந்து + நூல்) வைத்தியசாஸ்திரம்.

௩அ. இது, மேல் அ-வது, கவியில் "நித்தமிவை,, என்றதையும், ௯-வது, கவியில் "கடாதிமண்ணில் வரும்,, என்றதையும் மறுக்கின்றது. (உலகாயத! நீ) "பூதங்கள் நான்கும் அழிவற்றன.,, என்றாய். (அவை) வடிவங்களோடு பொருந்தி உற்பத்தி விநாசங்களை யடைதலால் (அழிவனவாம்). ("மண்ணூற்குடம் முதலியன உண்டாதல் போலப் பூதக்கூட்டத்தால் வடிவங்கள்உண்டாம்,,) என்றனை. மண்ணூற்குடமாதியற்றுங் குயவனைக் காண்கின்றோம். (அதுபோலப்)பூதங்களால் வடிவங்களைப் படைப்போரையும் இருப்பதாய் ஒப்புக்கோடல்வேண்டும்; (எ-று.) அழிவன என்பது வருவிக்கப்பட்டது. நீதியாளர் - நியமிப்போர்; முறைமையை யுடையோருமாம்; அகலிகை, பகுதி, தொகுப்பு என்பவை இரண்டாம் எழுத்துக்கெட்டு ஆதி நீண்டு ஆலிகை, பாதி, தோப்பு எனவருவது போல நியதியாளர் என்பதும் இரண்டாம்எழுத்துக்கெட்டு ஆதிநீண்டு நீதியாளர் என வந்தது என்க.

௩௯. இது, மேல் ௯-வது, கவியில் "புந்திகுணம்வண்பொறிபுலன்களுமவற்றின் உந்தியெழும் வாரியினுறுங் குமிழியொத்தே,, என்றதை மறுக்கின்றது. (உலகாயத! நீ "நீரின்கட் படைப்போரின்றிக் குமிழிஉண்டாவதுபோல,உடலின்கண்ணும் படைப்போரின்றிப் புந்தி, குணம், பொறி, புலன் என்பவை உண்டாம்.,, என்றாய்). நீரிற்றோன்றுங் குமிழி காற்றாலுண்டாம். (அதுபோல உடம்பிற்றோன்றும் புந்தி முதலியனவும் ஒரு கர்த்தாவாலுண்

டாக்கப்படும்). (நீரிற்)றோன்றிய குமிழி நீர்மயமேயாம். (அதுபோலச் சடமாகிய பூதங்களும்)பூதங்களாய்ச் சனிக்கவேண்டுமேயன்றிச், சித்தாகிய அறிவாய் உதித்தல் பொருந்தாது. " அற்றன்று வெற்றிலை முதலியன தம்மிற்கூடின்முன்னில்லாத ஓர் செந்நிறந் தோன்றுதல் போலப் ( பூதங்கள் கூடின் முன்னில்லாத புந்தி முதலியன உண்டாம்.),, என்று உலகாயத! நீ கூறுவையேல், (செந்நிறம்) பிரியாதிருத்தலைப்போல ( அறிவு முதலியனவும் பிரியாதிருத்தற்பாற்று. அறிவு பிரிதலுமுடைத்து ஆதலின், பூதக் கூட்டத்தாலறிவு முதலியன உண்டாமென்று நீ கூறுவது பொருந்தாது) ; ( எ-று. ) புற்புதம் - குமிழி. சாரும் அங்குஅதும் - (நீரிற்) பொருந்திய அக்குமிழியும். அன்னதுஆம் - அந்நீர்மயமேயாம். பூதமாச்சனியாது - பூதங்களாகச்சனிக்குமேயன்றி. நீறு - சுண்ணம்பு. அடை - வெற்றிலை. காய் - பாக்கு. தீர்வது - பிரிதல். உபமேயங்கள் விரிக்கப்பட்டிருக்கின்றன.

ச0. இது,முற்கவியில் " நீறடையுடன்காய்சேரின் சிவப்பெழும் ,, என்றதைப்பிறிதொராற்றான் மறுக்கின்றது. அப்படியே (வாயுப்பூதமடங்கிய ) வெற்றுடம்பினும் அறிவுண்டாதல் வேண்டும். (அங்ஙனம் அறிவுண்டாதல் இன்று. மேலும் வெற்றிலை முதலியவற்றின் கூட்டத்துச் சிவப்பு ஒன்று மாத்திரமே யுண்டாகின்றது. அதுபோலப் பூதக்கூட்டத்தும் அறிவு ஒன்று மாத்திரமேயுண்டாதல் வேண்டுமேயன்றி) வேறாகிய குணம்,பொறி, புலன் என்பவை உண்டாதல் கூடாது. (பின்னும்) வெற்றிலைமுதலியவற்றைப் பிறன் கூட்டுவதுபோலப் பூதங்களைக் கூட்டற்கும் ஓர் கருத்தா வேண்டுமென்பது போதரும். ( ஆதலின், இவ்வுவமையின் கருத்துக்கேலாது ) ; (எ-று.)

சக. ( உலகாயத! நீ ) " சிலந்திப்பூச்சியினிடத்து (முன்னில்லாத நூல் பின் உண்டாவது ) போல உடம்பின்கண்ணும் முன் இல்லாதனவாகிய உண்டி முதலியனவும், ஐம்பொறிகளும்(பின்) உண்டாம்.,, என்பாயேல், ஆகாயத்தினின்று மற்றவையுண்டாதலையும் நீ கண்டதாகவே ஒப்புக்கொள்ள நேரிடும். "(அற்றன்று அவை) பூதங்களின் கலப்பாலாம்,, என்பாயேல், (அக்கலப்பு)ஓர் இயல்பு (ஒருதன்மையானது). (ஆதலின், பெண், ஆண், அலி முதலிய வேற்றுமைகள் உண்டாகக்கூடாது. அவ்வேற்றுமைகளை நாம் காண்கின்றோம்); அவற்றின் ( காரணத்தை ) விவரித்துச்சொல் ; (எ-று.) உண்டியாதி - உணவு, துயில், பயம், மைதுனம் என்பவை. உலூதை - சிலந்திப்பூச்சி. யோனிவேற்றுமை - பிறப்பு வேறுபாடு.

சஉ. இஃதும் " பூதங்களின் கலப்பு,, என்றதையேமறுக்கின்றது. (மேலும்)ஐயறிவு,நாலறிவு,மூவறிவு, ஈரறிவு, ஓரறிவு, என்னும்அறிவின் வேறுபாடும், (அதற்கேற்ற)பொறிகளின்மிகைகுறைகளும், பிராமணாதி சாதிகளும், உண்டாதல் கூடாது. அக்ஷரபேதம் குணம்முதலியன செறிந்து பூதங்களானுண்டாகா;(ஆதலின், பூதக்கலப்பெனல்பொருந்தாது); (எ - று. ) வன்னமிரண்டில் முன்னது, சாதி. பின்னது, எழுத்து. வினைமுற்றின்முன் வலியிரட்டாதாதலின், வந்திடாப்பொறி என்றது வந்திடாபொறி எனத்திருத்தப்பட்டது. ஐயறிவு - ஸ்பரிசரசகந்த ரூப சப்தங்கள். நான்கு - சப்தமொழிந்தவை. மூன்று - ரூபசப்தங்களொழிந்தவை. இரண்டு - கந்தரூபசப்தங்களொழிந்தவை. ஒன்று - ரசகந்த ரூபசப்தங்கள் ஒழிந்தது.

சங. ( உலகாயத ! புந்தி, குணம், பொறி, புலன்கள்என்பவை

பலவேறு வகைப்படுகின்ற) அத்தன்மைகள் கன்மத்தா (னுண்டாவன) என்று அறியக்கடவாய். " முற்கூறிய பூதங்களேயறிவு „ என்பாயேல், வெளியில் (மண்முதலியவை) அறிவதில்லை. " (அவைகளறிவுஆவது அவற்றின்) சையோகத்தில்„ என்பாயேல், பிணமும் (அச்சையோகமுடைத்தாதலின்,) அறிதல்வேண்டும். "(பிணத்தில்) வாயுப்பூதமில்லை (ஆதலின், அறிவில்லையாகும்.)„ என்பாயேல், (வாயுப்பூதமுள்ள) நித்திரையில்அறிவுண்டாகாமைக்குக் காரணம்யாது? (கூறுவாயாக); (எ-று.) அறிந்திடாத் தொகுதிஎன்றது அறிந்திடாதொகுதிஎனத் திருத்தப்பட்டது. தொகுதி - சையோகம். சதாகதி - வாயுப்பூதம்.

சச. " அறிவு உடலின் குணமாம் „ என்பாயேல், பெரிதும் சிறிதுமாகிய உடல்களிற் பெரிதும் சிறிதுமாகிய அறிவு உண்டாதல்வேண்டும். (அங்ஙனமின்றி) உடல்பெரிது அறிவு சிறிது (உடல் சிறிது அறிவு பெரிது) ஆக இருத்தல்எக்காரணத்தால்? என்று தனிவைகி ஆராய்ந்து பார்ப்பாயாக; (எ-று.) பெரிது உடல் என்றதால், சிறிது அறிவு எனக்கொள்ளப்பட்டது. வைகிகுறி என முடிக்க. குறி - ஆராய். உடல் பெரிதாய்ச் சிறிதாய் என்பதற்குச் சிலவுயிர்களின் உடல் பெரிதாயும், சிலவுயிர்களின் உடல் சிறிதாயும் என்றுங்கொள்ளலாம்.

சடு. ஏற்றமும் புணர்பூதத்தின் குறைவும் என்பதற்கு (அறிவுத்தன்மையின்) மிகுதியும், கூடியபூதங்களின் குறைவும் எனக்கொண்டு அறிவு பெரிதாயும், உடல் சிறிதாயும் வருதற்குக் காரணம் கூறுவதாயும், கூடியபூதத்தின் மிகுதியும், குறைவும் என்றுகொண்டுசிலவுடல் பெரிதாயும், சிலவுடல் சிறிதாயும் வருதற்குக் காரணங் கூறுவதாயுங் கொள்க. இங்ஙனம் கொள்ளவே அறிவுத்தன்மையின் குறைவும், பூதத்தின் மிகையும், அறிவு சிறிதாயும், உடல்பெரிதாயும் வருதற்குக் காரணமாம் என்பதும்பெற்றாம்.

சசு. இயல்பு - (பூதங்களின்) சுபாவம். கொளாது, வினைமுற்று. செய்தி - (ஸ்திரீபுமான்களது புணர்ச்சியாகிய) காரியம்.

சஎ. நீத்தம் - வெள்ளம்.

ருO. " (அங்ஙனம்) அநாதியெனில் படைத்தல் எற்றுக்கு „ என்பாயேல், அநாதியாகிய ஆன்மாவின் செயலையறிந்து அதற்கேற்றஉடலைக் கன்மமுண்டாக்காது. அநாதிகாரியமாகிய உடல்களும் (தமக்கேற்ற உயிர்களைச்சென்று கூடா); அசேதனமாதலின். ஆதலால், அநாதியாகிய அவைகள் ஆதியில் ஒரு கர்த்தாவாற் கூட்டுவித் தமைக்கப்படவேண்டும்; (எ - று.)

ருக. " (உலகாயத! நீ உயிர் உள்பொருளாயின், புறக்கரணங்களாற் காணப்படல்வேண்டும்). உயிரைக் காணல் புறக்கரணங்கட்கு முடியாது; ஆதலின், உயிர்என்பதொன்றில்லை. „ என்பாயேல், குடமானது தன்னைக்கண்ட கண்களைத் தான் காணுமோ? (காணுதல்லவா) அதுபோலக் கரணங்களும் தம்மையறியுமுயிரைத் தாம் அறியாவாம். உயிர் (மாத்திரமே) அக்கரணங்களை அறியும் (ஆதலின்,உயிர் இல்லையெனல் பொருந்தாது); (எ - று.) நோக்கொணுகரணங்களுக்கு எனத் திருத்திக்கொள்க. வாக்குமாத்திரம் - அழகினை மாத்திரம்; (வாக்கு + மா + திரம்) (உன்) வார்த்தைமிக உறுதியானது என்று இகழ்வதுமாம்.

ருஉ. முன்புளது - முற்பிறப்பிலிருந்ததாகிய (செய்தி). உணர்வையோ - (நனவின்செய்தியைக் கனவில்) உணரமாட்டாய்; (அதுபோல முற்பிறப்புச்செய்தியை இப்பிறப்பில்

உணரமுடியாது). இது - (தாயின் உதரத்தைவிட்டுப் பிறந்துவந்த பின்னுண்டாகிய இப்போதுள்ள) இவ்வறிவு. உதரத்துணர்வு - (தாயின்) வயிற்றிலிருந்தகாலத்திருந்த (மெய்) அறிவு.

ருரு. வாயு அடங்கலும் - மூர்ச்சித்தவுடனே. வாயில் அடங்கி - ஐம்பொறிகளும் இல்லையாகி. வந்து - (வாயுவானது) வந்தால் (மூர்ச்சை தெளிந்தால்). எழும் - (ஐம்பொறிகளும்) உண்டாகும். ஒயும் - இறக்கின்ற. நீள்கலை தேயும் செனிக்கும் என்னுர் என்க. மதிக்குரைத்தாங்கு - (அத்தேய்வையும், செனிப்பையும் ஒற்றுமைநயம்பற்றிச்) சந்திரனுக்குக் கூறுதல்போல. இசைப்பார்-(உடலின் பிறப்பிறப்புக்களை ஒற்றுமைநயம் பற்றி உயிர்களின் மேலேற்றிக்) கூறுவர்.

ருசு. குலாலன் - குயவன்; (மண்ணின்பொருட்டுப்) பூமியைமர்த்திப்பவன் என்பது பொருள்.

ருஎ. குடம்பை - கூடு. பால் - பாற்கடல். மணி - நீலமணிபோன்ற திருமால். இவை ஆகுபெயர்கள். இவற்றிற்குப் பால், மணி என்றுங் கொள்ளலாம். நச்சினுர்க்கினியர்முன்னர்க் கூறியபொருளையே கூறியுள்ளார்; இதனைச் "சேலனைய ,, என்னுஞ்சிந்தாமணிச் செய்யுளில் "மணி அம் பாலகத்துப் பதித்தன்னபடிய வாய் ,, என்றதன்உரையாலுணர்க.

ருக. அகடு - வயிறு. புழை - துவாரம்.

சுo. குழாம் - கூட்டம்.

சுக. ஓதி - கூந்தல். புந்தி கறுத்தலாவது:— வஞ்சனை அல்லது பாபசிந்தனையுடைத்தாதல். மொழி கோடல் - சொல்திரிதல். புருவங்கோடல் - புருவம் வளைதல். மருங்குல் - இடை. அகன்றவர்க்கு - விரிந்தவர்கட்கு.

## ௨௨-வது, சருக்கம்.



உ. விளித்தாலென - அழைத்தாற்போல.

ந. எருவை - கழுகு. மண்டிலமிட - வட்டமிட.

ச. பரதுக்கதுக்கன் - பிறர்துயரத்தைத் தன்றுயரமாகக் கொண்டோன். பிடகநூல் - புத்தாகமம்; இது வினயபிடகம், சூத்திரபிடகம், அபிதர்மபிடகம் என மூவகைத்து.

ரு. ஞேயம் - அறியப்படுபொருள். கணம் - ஊசிகொண்டடிப்ப எட்டுத்தாமரை இதழ்கள் அறுபடுங் கால அளவு.

சு. ஒட்டியுணர்ந்திடும் - (இந்திரியங்களைச்) சார்ந்து (அவற்றின் விஷயங்களை) அறியும். நான்கு - உரு அரு, வீடு, வழக்கு என்பன.

எ. உரு-எண்டுஅசைதன்யரூபம்; சைதன்ய ரூபமன்று; சைதன்ய ரூபமாவது:— இந்திரியங்கள் ஐந்தும், விஷயங்கள் ஐந்தும், ஸ்திரீபும் ஸகமானபாவரூபம் இரண்டும், இதயம் ஒன்றும், ஆகாரரூபம் ஒன்றும், பூதம் நான்குமாகிய பதினெட்டுமாம். இது சித்தியாரிற் கண்டது. உபாதானம் - பற்றப்படுவது; உபாதாயம் எனவும் கூறப்படும். குற்றம் - குற்றவீடு. கந்தம் - கந்தவீடு. உள்ளது - உள்வழக்கு. இல்லது - இல்வழக்கு.

அ. எட்டும்கூடி உருவம் உண்டாகும், காண்பது (யாது ? அது) சித்தம், இருவினை (நல்வினை தீவினைகள்) கன்மம் எனமுடிக்க.

௯. இராகாதிகள் - காமம்முதலியவை. ஐந்தும் - (உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் கந்தங்கள்) ஐந்தும். தொகை - கூட்டம். தொடர்ச்சி - ஒழுக்கு (சந்தானம்). மிருத்துரை - தோற்றநாசம். ஆறு - (தொகையுள் வழக்கு, தொகையில்வழக்கு, தொடர்ச்சியுள்வழக்கு, தொடர்ச்சியில் வழக்கு, மிருத்துரையுள் வழக்கு, மிருத்துரையில் வழக்கு என்னும்) ஆறு.

௧0. செறிவு - கூட்டம். அயல் - ( ஐங்கந்தங்கட்கும் )அந்நியமான.

௧௧. விழிக்குப்போனது போல் வேறுதல் - காரியங்கெட்டுக் காரணம் நிற்றல்.

௧௨. இது, வழக்குகளைப் பிறிதொராற்றாற் பகுக்கின்றது. உண்மைசார்ந்தவுண்மை, எதமுறும்உண்மைசார்ந்த இல்வழக்கு, இல்லதுசார்ந்த வுண்மை, இன்மைசார்ந்தவின்மை எனப்பிரித்தியைக்க. பேசலால என்பது பேசலாகு எனத்திருத்தப்பட்டது.

௧௪. பொத்து - அடிக்கின்ற ; பொத்தும் என்றும் பிரிக்கலாம். பொருந்தலர் - பகைவர்.

௧௫. இது, சௌத்திராந்திகன் இல்பொருள் என்பவற்றைத்தொகுத்துச் சுட்டுகின்றது. நான்கு - உரு அரு வீடு வழக்குகள்.

௧௬. இது முதல் பதின்மூன்று கவிகள், மேற்றொகுத்துச்சுட்டியவற்றை வகுத்துக்காட்டுகின்றன. அவற்றுள் முதல் நான்கு கவிகள், அறிவன்றி ஆன்மா வேறில்லை என்பதையும், ஐந்தாங்கவி, விண் இல்லை என்பதையும்,ஆறாங்கவி, காலம்இல்லை என்பதையும், எழாங்கவி, திக்கில்லை என்பதையும், மேல் ஆறு கவிகள், இறை இல்லை என்பதையுந் தடைவிடையுள்ளுறச் சாற்றுகின்றன. (பொறியைத்) தொட்டு, (புலனைத்) தீண்டி, (நூலை) அணைந்து அறிதல் அறியும் என்றியைக்க. அறிதல் - அறியற்பாலதை.

௧௭. சார்ந்து ஒன்றைஅறியும் - ஒரு விஷயத்தை ( அதற்குரிய இந்திரியத்தைச் ) சார்ந்து அறியும். உணரும் - உணர்கின்ற (ஞாதிருவாகிய என்றபடி). கூறலாம் - கூறுதலை ஒக்கும் (அறிவெனலே அமையும் ; ஆன்மா வென்று வேறுபிரித்துக்கூறவேண்டுவதின்றுஎன்றபடி).

௧௮. உரு - உடல். உதயாத்தமனம் - தோற்றமும், கேடும்.

௧௯. எங்கும் + நிற்குமென்னில் என்று பிரிக்க. உடலமது - உடல் ; அது, பகுதிப்பொருள்விகுதி. சாயும் - (உயிரும்) அழியும்.

௨0. நிரவயவம் - உருவில்லது. எங்கும் + நின்றதெனில் எனப்பிரிக்க.

௨௧. சீலம் - தன்மை. ஞாலம் - பூமியில். என்ப - என்றுசொல்வர். துன்மதி - துர்ப்புத்தியுடையோய்! அண்மைவிளி.

௨௨. பாலே - பக்கத்தை.

௨௩. உலகதனுக்கு உபாதானந் தானுளது, காரியமாம் உரு இலது, உலகதனை அனைய உருவமாகப் படைத்தனன்என்றியைக்க. உபாதானம் - முதற்காரணம். அனையஉரு - காரியரூபம். அதற்கும் - அவ்வுபாதானத்திற்கும்.

௨௪. எங்கும் + மேவி, எங்கும் + முன்பு என்று பிரிக்க.

௨௫. அதனால் - அவ்விச்சையால் (கருமத்தாலெனல் வேண்டற்பாற்றன்று என்றபடி).

௨௭. இறைக்குஇச்சை உலகினுக்குக் கருமமென்னில் - கடவுளின் ( உருவத்திற்கு ) இச்சையும்,

உலகின் (உருவத்திற்குக்) கருமமும் (காரணமாம்) என்று சௌத்திராந்திக! நீ கூறுவையேல். இன்றாகில் - (உருவம்) இல்லையாகில். மேவான் - (அறிவை) அடையான்.

உகூ. உற்பீசம் - வித்திலிருந்து முளைப்பன. குரமாதி - தருப்பை முதலியன. அண்டசமாதி - முட்டையிற்பிறப்பன முதலியன; அவையாவன:- அண்டசம், சுவேதசம், (வியர்வையிற்பிறப்பன) சராயுசம் (கருப்பையிற் பிறப்பன) என்பவை.

ஙக. சந்தானத்தாற்கெடுதல் - காரியங்கெட்டுக் காரணம் நிற்றல். இச்சந்தானம் வாயுசந்தானம், தீபசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என நால்வகைப்படும். முற்றக்கெடுதல் - காரியத்தோடுகாரணமுங்கெடுதல். விரிவு, இந்நூல் மதவிளக்கச் சுருக்கத்துக்காண்க.

ஙங. இது முதலிய கவிகள், சவுத்திராந்திகனைத் தார்க்கிகன்மறுப்பதைக்கூறுகின்றன. என்றிடேல் - என்று கூறாதே.

ஙச. விளிந்தோன் - இறந்தவன். பருகியோன் - குடித்தவன். இது - இந்தத்(தேனும், நெய்யும்). தீதாகும் என்பது ஆம் - கொடிய (விஷம்) என்று கூறுதலையொக்கும். நலிவுபின்பேல் - (கர்த்தா) இறந்தது (வீட்டைஅடைந்தது) (அறங்களைக் கூறியதன்) பின்னர் என்று கூறுவையேல்.

ஙரு. வேட்டம் - வேட்டை. தீதனக்கு, வெட்ட என்பவை தீத்தனக்கு, வேட்டஎனத்திருத்தப்பட்டன.

ஙசு. அறிவுமங்கும் - அறிவு (கணத்திற்) கெடும். நூல் என் - நூல் (உண்டாக்கல்) எவ்வாறுமுடியும்? பங்கம் - ஈண்டுக் கெட்டுவளர்ந்திடல்.

ஙஎ. முரணுவதின்றி - மாறுபடலில்லாமல். புதன்மகன் - அறிவுடையானாகிய ஆண் மகன்; ஈண்டு மகன்ஆண் என்னும் மாத்திரையாய் நின்றது; மகன் தந்தையின்பின் வருவோனாதலின், புதன் என்பவன் பின் வருகிற பிருகஸ்பதி என்றும், புத்தனது ஞானபுத்திரனாகியசீஷன் என்றும் பொருள் கொள்ளலாம்: குருவை ஞானபிதா என்பதும், சீஷனை ஞானபுத்திரன் என்பதும் வழக்கு. இப்பொருளில் புதன் என்பது புத்தன் என்பதன் இடைக்குறை. முந்நூல் - முப்புரிநூல்; உலண்டால் நூற்கப்படுவதும், சிலம்பியால் நூற்கப்படுவதும், பருத்தியால் நூற்கப்படுவதுமான மூன்று நூல்கள் என்னலுமாம்.

ஙஅ. அனவத்தை - வரம்பின்றியோடல் (முடிவின்மை) ஆகிய குற்றம்.

ஙகூ. பாழி - புத்தாலயம். ஆர் - யார். உறைபவன் இந்நூல் சொன்னோன் என்றியைக்க. அடைவு - முறை.

சஉ. பனுவல்கொண்டு - நூலால். தேர்ந்தாற்போல் - (அநுமித்து) அறிந்ததுபோல. கொண்டுரைத்த - (தன்னிடம்) கொண்டுகூறிய. பரலோகபாதாளங்கள் பனுவல் - மேல் கீழுலகங்களின் செய்தியை (நாம் உணர்தற்கேதுவாவது) நூலேயாம். ஒன்று உரைத்ததுண்டேல் பகருதி -(இவ்வாகமப்பிரமாணமன்றிவேறு) ஒரு பிரமாணம் அறிவிக்குமெனில், அதனைக்கூறு. இவ்வாறே முன்னூல்களிலும் பொருள்கொள்ளப்பட்டிருக்கின்றது.

சச. உளது இலது அன்றித் தோன்றும் ஒருபொருள் (அநித்தமாம்), உளதுமாய்வது இன்று என்றியைக்க.

சரு. ஒன்றா - கூடமாட்டா. இகலுமாற்றால் - பகைக்குந்தன்மையால். சுக்கிலம் - இந்திரியம். உதிரம்-சுரோணிதம். உபாதானம்அவையேபோலவேறுவேறாய்உடல்தோன்

றும் - காரணமாகியவினைகள்(நல்வினை, தீவினை என இருவேறுவகைப் படுதல்) போலக் (காரியமாகிய) உடல்களும் (ஒவ்வோருயிர்க்கும் நல்வினைப்பயனுலாகியதும், தீவினைப்பயனுலாகியதும் என) இருவேறுவகையாய் இவ்விரண்டு (இரண்டு + இரண்டு) தோன்றல்வேண்டும். (அங்ஙனம் உண்டாதலின்றுதலின், இருவினையெனல் பொருந்தாது என்றபடி).

சஎ. உரு - உடல்; (சவுத்திராந்திகன் கூறும் நால்வகைப்பொருள்களில் ஒன்றுன) உருஎன்பதன் பாற்பட்ட என்னலுமாம்; இப்பொருளில் உடல் என்ற எழுவாயை சரு-வது, கவியிலிருந்து வருவித்துக்கொள்ளல்வேண்டும். சுத்தாட்டகம் - (நிலம், புனல், கனல், காற்று, கந்தம், சுவை, உருவம், பரிசம்என்னும்) எட்டின் கூட்டம். வளி - காற்று. மற்ற அடிகட்குப் பூதங்கள் ஒவ்வொன்றிற்குந் தன்குணம் ஒழிந்த ஏனைப்பூதங்களின் குணங்கள் உண்டாகா எனக்கொள்க.

சஅ. தேர - பௌத்தனே! அண்மைவிளி.

சகூ. ஆக்கிப்போம் - (அறிவு, பொருள் கன்மங்களை) உண்டாக்கிக் கெடும்.

ருO. செவ்விதிற்கெட்டு - முற்றக்கெட்டு. மூன்றும் அடியின் உபமேயமாகிய, அறிவு முற்றக் கெடாமல், சத்தியையுடைத்தாதலோடு பின்னுண்டாவதும் வேறுபடும் என்பதை விரித்துக்கொள்க.

ருக. உருவமாதி - ரூபஸ்கந்தம் முதலிய பஞ்சஸ்கந்தங்கள்.

ருஉ. நின்றறிவுடன் எய்தாவாம் - (உருவமாதி ஐந்தும் முன்னறிவோடு போகாமல்) நிலைபெற்றுப் பின்னறிவோடு கூடாதன ஆகும். மன்ற - தேற்றப்பொருளைத் தருவதோர் இடைச்சொல்.

ருச. உணர்வு - விஞ்ஞானம். உலோசனம் - கண்கள்; பார்த்தற்குக் கருவி என்பது பொருள்.

ருரு. வாயில் - பொறிகள்.

ருசு. கர்யமாதி - உடல்,பொறி, மனம் என்பவை.

ருகூ. பரிப்பது - சுமப்பது.

சுO. பின்னம் - கண்டனம். படிற்றுரை - பொய்ம்மொழி. பகர்ச்சி - சொல்.

சுக. வெளி - ஒளி.

சுஉ. பயன் - கன்மபலன்.

சுச. காரியம் - காரணத்தாலாவது.

சுரு. இழுதை - அறிவிலியே! அண்மைவிளி.

எஉ. எழலால் பொருளாய்த் தோன்றும், பிணங்கலா(லும்) வடிவின்று (மாதலாலும்) உலகு கனவு போலும், அறிவு(ஒன்றுமாத்திரமே) உளது என்றியைக்க.

எச. என்னுய் - என்று கூறுய்; எதிர்மறை வினைமுற்று.

எரு. விடயத்தோடு மணந்தபின்னெழும் - (அறிவு) புலன்களோடு கூடியபின்னர் உண்டாகின்ற. வாதனை கருத்தாம்; (ஆதலால், அறிவும்,வாதனையும் ஒன்றன்று) என்க. கண்ட - (நனவிற்) பார்த்த.

எசு. அகங்கடம் - நான்குடம்; அறிவுக்கு அந்நியமாகாது என்பதால் இப்பிரபஞ்சம் 'நான்' என்று சுட்டப்படல்வேண்டும் என்பதன் பரிபாஷை. இதம் பிரவஞ்சம் - இந்த உலகம்; அறிவுக்கு அந்நியம் ஆகும்என்பதால் 'இந்த' என்று சுட்டப்படல்வேண்டும் என்பதன் பரிபாஷை. பளிங்கேபோலுதலாவது:- பளிங்கு கூடியவற்றின் நிறத்தை யடைவதுபோல அறிவு கூடியஉருவின் உருவை அடைதல்.

எஎ. நூக்க - தள்ள.

எஅ. நெடுமொழி - தன்மேம்பாட்டுரை.

எகூ. அங்கம் - அவயவமாகிய (தசேந்திரியங்கள்). பொருள் - அங்கி (அவயவி) ஆகிய (உடல்).

அ0. இது, மாத்திமிகளை மறுக்கின்றது. அவயவி காத்துநிற்பதாகும்; (ஆதலால், அவயவியும்உண்டு.) என்க. இரண்டும் - (அவயவமும், அவயவியுமாகிய) இரண்டும். அவயவியாவது:- ஈண்டுக் கடத்திற்கு மண்ணும், படத்திற்கு நூலும் போல்வது. உடன்பட - (தம்முட்) கூடுதலால். பொருள் - உடல். உணர்வு - ஆன்மா.

அக. பொருள் - ஆன்மவஸ்து. அதுவர - ஆன்மவஸ்து உண்டாக. பொருளுண்டாக - ஆன்மா உண்டாகவே. அறிவும் நெறிவரும் - அறிவும் முறையாய் உண்டாகும்.

அஉ. பைத்த - படமெடுத்த.

அங. சிந்துரம் - செந்நிறம். பொருளறிவு - (காணப்பட்ட) பொருளும், அறிவும். ஆசுகம் - அம்பு; விரைவிற் செல்வது என்பது பொருள்.

அச. அகம் - உள்ளிடத்தது. புறம்பு - வெளியிடத்தது.

## ஙங-வது, சருக்கம்.

)o(

க. நறை - வாசனை; தேனுமாம். பேணி - விரும்பி. நிகண்டவாதி - (நி + கண்டம் + வாதி) வஸ்திரமற்றவன். ஆசீவகன் - வஸ்திரமுள்ளவன்.

உ. பிதிர்ந்தது - சிதறியதாகிய. பசுநூல் - உயிரைப்பற்றியநூல். அரணம் - கோட்டை; மதிலுமாம்.

ங. எண்குணம் - கடையிலாஞானம், கடையிலாக்காக்ஷி, கடையிலாவின்பம், கடையிலாவாற்றல், நாமமின்மை, கோத்திர மின்மை, ஆயுவின்மை, இடையூறின்மை என்பவை. ஞானவாணியமாதி - ஞானவாணியம், தரிசனவாணியம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்பவை. ஆய் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட. முக்குடை - (சந்திராதித்தம், நித்தவிநோதம், சகலபாஜனம் என்னும்) மூன்று குடைகள். அமரர் - சதேந்திரர்கள். சதேந்திரர்களின் விவரத்தை இந்நூல் மதவிளக்கச்சருக்கத்துக்காண்க. கோ - கடவுள்.

ச. தொடக்கு - சம்மந்தம். அல்லவை - தீமை; நல்லவைஎன்பதன் மறுதலை.

ரு. செற்றம் - கோபம். நசித்தல் - இறத்தல். முனிந்து - வெறுத்து. இகலன் - (இகலாத்தன்)ஆதி அருகபரமர்.

சூ. சகலாத்தர் - அநாதி அருகபரமர். கதம் பகவன் - பகவானே! எப்படி? கடிப்பு - முரசடிக்குங்குறுந்தடி. படகம் - ஓர்வாச்சியவிசேஷம். பனவர் - கடவுளாகிய அநாதிஅருகபரமர். பஞ்சாத்திமயம் என்பதுசித்தியாரிற் பஞ்சாஸ்தமயம் என்றுங் கூறப்பட்டிருக்கின்றது. வினையிலான் - இகலாத்தராகிய ஆதியருகபரமர்; சரணம் நான்கு - ஆதிசரணம், சித்தசரணம், ஆசாரியசரணம், தன்மசரணம் என்பவை.

அ. நின்றிடல் - நிகழ்காலம். பேர்தல் - இறந்தகாலம். போதல் - வருங்காலம். அன்வயவெதிரேகம் - உடன்பாடும்எதிர்மறையும். காயத்தெல்லை - உடம்புமுழுவதிலும்.

ஆரும் - நிறைந்து நிற்கும்.

௯. வெதிரேககாயம் - அதன்மாத்திகாயம். தன்மாத்திகாயம் சலித்தலும், வெதிரேககாயம் நிலையும், துன்னிவித்திடுதலைப் புரியும் என்றியைக்க. தருநிமை என்பது தருந்தீமை எனத்திருத்தப்பட்டது ; தரும், வினைமுற்று ; எச்சமன்று.

௧௦. தொழில் - உழவு, தொழில், வரைவு, வாணிபம், வித்தை, சிற்பம்என்பவை; கந்த ரச ரூப பரிச சத்த பரிமாணங்கள்என்பாருமுளர்.

௧௨. உகளமும் - (குணமுங், குற்றமுமாகிய) இரண்டும்.

௧௩. ஆற்றிய - செய்த. அனவத்தாதோடம் - முடிவின்மையாகிய குற்றம்.

௧௪. தேகி - தேகமுள்ளோன்.

௧௫. பார்த்திபர் - அரசர்கள்.

௧௬. முன்னவன் - சகலாத்தன். அணைய - மனமுதற்பொறிகளில்லாத. பின்னோன் - இகலாத்தன். விடுத்தல் - மறுமொழிகூறல்.

௨௦. "ஒப்பற்ற பொருளாகிய (ஆன்மாவுக்கு) மேலுலகத் துலாவி நின்றிடற்கும், கீழ் உலகத்துலாவி நின்றிடற்குமாக இரண்டு உடல்களை ஒரே கணத்தில்இருவினைகள்தரும்,, என்று நிகண்டவாதி ! நீ கூறுவையேல், இருவேறு தன்மைகள் (ஒன்றினிடத்) துண்டாகா. "வண்டிற்கு மேற்செலச் சிறையும், (கீழ்) வதியக் காலும் இருப்பதுபோல (ஒருபொருளாகிய ஆன்மாவுக்கும் இரண்டு காயங்கள்ஒரேகணத்துண்டாம்.),, என்பாயேல், அவ்வண்டுக்கும் (மேற்செலும்போது) கீழ் வதிதலும், (கீழ் வதியும்போது)மேற்செல்லலும்உண்டாதலின்று;(எ - று.) பொருளதனை உருபுமயக்கம். அவை - மேற்செலல் கீழ்வதிதல்கள். தனக்கு - வண்டுக்கு.

௨௨. "கல் இரும்புமரங்களில், ஓரறிவு பொருந்தியிருக்கின்றது,, என்று கூறுவையேல், (ஓரறிவுடையனதாமே அழிதல்வேண்டும் ஆதலின், கல் இரும்பு மரங்களின்) வடிவங்களும் நாசம் வருமிடத்துத் தாமே நாசமாம்என்பது போதரும்; (அவைதாமே கெடுதலில்லை ஆதலின், புற்கலம் ஒருவலியுடைத்தெனல் பொருந்தாது ); (எ - று.) மற்றவை வெளிப்படை. ஒருவலி - ஓரறிவு. புற்கலம் - கல் இரும்பு மரங்கள்.

௨௩. காரியம் - தொழில். சீலம் - ஈண்டுத் தவம். நிலவுதல் - (பொருள்) விரிதல். அதுவாம் - அவ்வூழாம்.

௨௬. நெட்டிடை - நீண்டஇடம்.

௨௭. அருத்தி - ஆசை.

௩௨. நிலம் வலி ஆம், புனல் குளிர் ஆம், அங்கி சுடு ஆம், காற்று உலாவரல் ஆம்,உயிர் புணர்ச்சி ஆம், என்றியைக்க. மன்னியபுணர்ச்சி - (மற்றை நான்கணுக்களோடு) பொருந்திய சையோகம்.

௩௩. பரம்புதல், கீழ்ப்படல், மேற்படல், ஓடல், தன் வரம்பில் நிற்பது என்பவை முறையே நிலம், புனல், அங்கி, காற்று, உயிர் என்பவைகளின் குணம் என்க.

௩௪. நான்கும் காயத்து சேர்தலும் உண்டு என்றியைக்க. உறுதராபுதுமை எனத் திருத்திக்கொள்க. உயிரணுச்செய்தி பின் கூறப்படலால், இதிற் கூறப்பட்டவை மற்றை அணுக்களின் செய்தி என்க.

௩௭. ஆகப் புகன்றிடும் எனல் நேர். ஆகி என்பதன் பின் பொருந்திய சொல்லை வருவித்துப்புகன்றிடும் என்பதோடியைக்க.மண்நான்கு, புனல் மூன்று, அனல் இரண்டு, கால் ஒன்று என்றியைக்க.

௩௮. உயர்ந்தவெண்மை - மிகு வெண்மை ; வெண்மையென வேறுன்றிருத்தல்காண்க ; இவ்விரண்டும் ஒன்றன்றென்பதை உய்த்துணர்க.

சஉ. அன்னவன் - மற்கலிதேவன். அவ்வுலகம் ஐந்தணுவையும் கூடுமாறு உம் இலே என்றியைக்க. அவ்வுலகம் - அம்மற்கலிதேவன் இருக்குமுலகமாகிய பொன்னெயில் வட்டம்.

சங. மண்டலர் - பூமியிலுள்ளவராகிய அருகபரமர். செம்போதகர் - மிக்க அறிவுடையோராகிய அருகபரமர்.

சச. வரகதி - மேலானபதவி. ஆண்டு - அப் பொன்னெயில் வட்டம். புணரி - கடல்.

சகூ. அறிவிலியாகிய ஆசீவக! (உயிரணுவொழிந்த அணுக்கள் நான்கில் நிலவணுவும், நீரணுவும்) கீழிடத்திலும், (கனலணுவுங், காற்றணுவும்) மேலிடத்திலும் நிறைதலால், (அவ்வணுக்கள் தம்மிற் கூடல் இயலாதாதலின், அவைகூடியேஉண்டாதற்பாலதாய சரீர) அவயவம் உயிரணுவாகிய ஆன்மாவிற் குண்டாகாது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? சொல்லாதே அமையும். "(அற்றன்று, உயிரணுவின்) கன்மத்தால் (அவை தம்மிற் கூடுமாதலின், அவயவமாதல்) உள்ளது" என்பாயேல், (அவ்வணுக்கள்) அழியும்; (ஆதலின், நீ அணுக்கள் அழியாதென்பதுபொய்யுரையாம்). "(அவை அவயவமாதல்) இல்லது" என்பாயேல், உடம்புண்டாகுந் தன்மை ஆராயுற்பாலதோ? அன்று; (எ - று.) அணு - உயிரணுவாகிய ஆன்மா. துளை - துவாரம்; இது ஆகுபெயராய் ஒன்பது துளைகளையுடைய உடலை உணர்த்திற்று. படும் - உண்டாகின்ற. சிவஞான சித்தியார் பரபக்ஷம் ஆசீவகன் மறுதலை ச-வது, கவியாகிய "அணுவானவை கீழ்மேலுள வானலவயவமு, நணுகாவெனலாமேவரி ஞசம்மவை யெய்தும், அணுகாவெனி னிவை தொள்ளை கொளாகம் முளவாகுந், துணிவாலிவை கலவா பலதொகையாம்வலியிலவாம்." என்பது ஈண்டு நோக்கத்தக்கது.

சஎ. நித்தவஸ்துக்கள் அழிந்து கெடா ஆதலின், (அவ்வணுக்கள் கெடுதற்குரிய உடம்பின்) அவயவத்திற் கூடும் விதத்தை ஒப்புக்கொள்வதில்லை. (அவை உடம்பின் அவயவங்களிற்) கூடுமாறு (வேண்டுவதின்று என்று) இகழ்வாயேல், (தோல் இரத்தம், தசைமுதலியதாதுக்கள்) பலவுங்கலந்து கூடா. (கூடாமற் போகவே) விலக்கற்கரிய (தாதுக்) கூட்டமாகிய உடல்கள் உண்டாந் தன்மையும் இன்றாகும்; (எ - று.) தொகை - உடல்; ஆகுபெயர்.

சஅ. மிகுதியால் - மேலான அணுவாகிய ஆன்மா (மற்றை அணுக்களைக் கூட்டுதலால்). அணுவின் - உயிரணுவொழிந்த மற்றைஅணுக்களிலிருந்து. இன், ஐந்தனுருபு.

சகூ. மேல் - மேல் எழல். கீழ் - கீழ்விழல். வினை - (நால்வகை அணுக்களின்) தொழில்கள். விகற்பித்தலால் - வேறுபடுதலால்.

## ருசு-வது, சருக்கம்.



ரு. மட்கியது - ஒளிமழுங்கிற்று.

கo. தீமையாகிய கணை, புன்மைகளாகிய புட்டில், தீச்சொல்லாகிய கழல் என்க.

கக. அயுத்தம் - (ந+யுத்தம்) பொருத்தமின்மை. விகடக்கச்சை - உன்மத்தமாகிய இடையிற் கட்டுங் கச்சை.

கஉ. மைக்காளம் - மிகு கருமை; ஒருபொருட் பன்மொழி; அஞ்சனம், இருள், மேகம் என்பவற்றைப் போன்ற கருமை என்றுமாம்.

கங. லகரம் தகரத்தோடு மயங்காதலின், சந்திவிதிப்படி மால்தவ என்றது மாறவ எனத்திருத்தப்பட்டது; பின்னிவ்வாறு வருவதையும் இங்ஙனமேகொள்க.

கச. அங்கநியாசம் - இதயம், சிரம், சிகை முதலிய அங்கங்களை மந்திரங் கூறித் தொடுதல். கரநியாசம் - சுட்டுவிரலாற் கட்டைவிரலையும், கட்டைவிரலான் மற்றையவிரல்களையும், ஒரு கையான் மற்றைக் கையின் இருபுறங்களையும் மந்திரங் கூறித்தொடுதல்.

கரு. ஆவிருத்தி - திரும்பத்திரும்ப ஓதுதல். ஆரகவேணியன் - ஆத்திமாலைக்கிடமாகிய கபர்த்தம் என்னும்ஜடையினையுடைய சிவபிரான். பூரகம் - நிறைவு.

கசு. தாசரதி - தசரதன் மகனாகிய இராமன்; தத்திதாந்தம்.

கஎ. நாப்பண் - இடை, நடு.

கஅ. யுத்தாயுத்தம் - யுக்தமும், அயுக்தமும்; பொருந்துவனவும், பொருந்தாதனவுமாம். குனித்து - வளைத்து.

உக. அத்திரம் - கைவிடுபடை; அதாவது:- கையைவிட்டு நீங்கிப் பின் பகைவர் மேற்படுவது; இதன் மறுதலை சத்திரம்(கைவிடாப்படை).

உச. மனைவி - பாஷண்டவிஞ்சை.

உரு. அவிஞ்சை - அக்ஞானம். விஞ்சை - ஞானம்.

உஎ. உந்துவாள் - செலுத்துவாளாகியதுன்மதி. உசாவும் - ஆராய்கின்ற; இதிலுள்ள உம் எண்ணும்மையெனக்கொண்டு ஒற்றர்களும் என்றுங்கொள்ளலாம். யானை - விளங்கனிக்கு வருவதோர் நோய்; இந்நோய் யானைக்குரிய பெயர்களனைத்தையும்பெறும்.

௩க. தாயாம் பெருமான் என உவமையில் ஆண்பால் பெண்பாலோடு மயங்கிற்று; நன். சூ- ௩௪௦ இல், பிறவும் என்றதாற்கொள்க. யுத்தியைப்பெண்ணாக உருவகப்படுத்தியுள்ளாராதலின், சொன்னான் என்றது சொன்னாள் எனத்திருத்தப்பட்டது.

௩௩. விசைகொண்டு - வேகம் கொண்டு; பெலன்கொண்டு என்றுமாம். விசைக்கொண்டு என்றது விசைகொண்டு எனத்திருத்தப்பட்டது.

## ௩௫-வது, சருக்கம்.



உ. கடிதின் - விரைவில். வீந்து - இறந்து.

சு. புதல்வர்தம்மால் - லோபன் முதலிய புத்திரர்களால். புதல்வர் - மோகனாதியர்.

கஉ. செல்வர் - மைந்தர்கள்; எண்வகைச் செல்வங்களில் மக்கட்பேறும் ஒன்றாதலின், மைந்தர்கள் செல்வர் எனப்பட்டார்.

கச. அண்டார் - பகைவர்.

கரு. பாறு - பருந்து. உய்ந்துளேன் - ஜீவித்திருப்பவனுகியநான்; வினையாலணையும்பெயர்.

கரு. கத்துருவின் பாலகர் - சர்ப்பங்கள். அடங்க - முழுதும்.

உக. காவி - குவளைமலர்.

உச. சிறை - பக்கம்.

## ௩௬-வது, சருக்கம்.



உ. நயனமாயிரம்பெற்றேன் - ஆயிரங்கண்கள் பெற்றவனுகிய இந்திரன்.

ச ஏதம் - துன்பம்; குற்றமுமாம்.

௬. உந்தை - உனது தந்தை; தை, முறைப்பெயர்விகுதி.

கக. மறலி - இயமன்.

கஉ. மக்களோடு - (மைந்தர்தம்) மைந்தர்களாகிய லோபன்முதலியோருடன்.

கரு. மதி - புத்தியாகிய சந்திரன்; இரட்டுறமொழிதல்.

உஉ. மிதப்பு - தெப்பம்; தொழிலாகுபெயர்.

## ௩௭-வது, சருக்கம்.



க. உரைமகள் - கலைமகள். உகைத்து - ஏறிச்செலுத்தி.

௫. பொறை - பாரம். ஆர்வமோடு, இதிலுள்ள ஓடு, அடைமொழிப்பொருளது.

௬. உழுவலன்பு - விடாததொடர்ந்த அன்பு.

அ. அயம் - இரும்பு. பரிசனவேதி - இழிந்த உலோகங்களைப் பொன்னுக்கும் மருந்து.

க௫. இனிமை - இன்சொல்; பண்பாகுபெயர்.

உ௫. மருந்து - அமுதம். அன்னலார் - (உபநிடதையும், கீதையுமாகிய) பெண்கள்.

உஅ. பரவை - கடல்; பரந்திருப்பது என்பது பொருள்; ஐ, கர்த்தாப்பொருள் விகுதி.

௩ச. மிருகண்டு எனில் இன்னேசையும், ம்ருகண்டு எனில்மோனையுங் கெடுதலின், மதுரைத் தமிழ்ச்சங்கத்து ஏட்டுப் பிரதியிலுள்ளபடி மிருண்டு எனத்திருத்தப்பட்டது; மிகண்டு என இருத்தலும் ஏற்புடைத்து.

௩௬. சுதை - சுண்ணச்சாந்து. புனிதமாகிய சுதை என்க. படங்கள் - வஸ்திரங்கள். விதானம் - மேற்கட்டி. நாற்றி - தொங்கக் கட்டி.

௩எ. உழையர் - ஏவலாட்கள். உழையரைத் தனித்தனி நோக்கிக் கூறலின், 'புரிதி, எனஒருமையாய்க் கூறப்பட்டது.

௩கூ. உவ்வைகூற - உவகையாலுண்டாவதாகிய இன் சொற்களைக்

கூற ; உவமை, காரணவாகுபெயர்.
சஉ. சது - நான்கு. சதுமறையாகியபேரிகை முதலியன எனக்கொள்க. வரைந்துகூறுமையின், இருக்காகியபேரிகை, யஜுஆகிய தடாரி, ஸாமம் ஆகிய தண்ணுமை, அதர்வணம் ஆகிய படகம் எனக்கொள்க.
சகூ. பூமிக்குப் "பூ,, என்னும் பெயர், (எப்பொருள்களும்) உண்டாவது என்னும் பொருளால் இடப்பட்டது என்பர் வித்வான்கள் ; அங்ஙனமன்று ; விவேகனது நல் அரசாக்ஷியாற் பாரம் செய்யாது ஆதிசேஷனது முடிக்குப் பூ (புஷ்பம்) ஒத்து இலகுவாயிருந்ததாதலின், உவமையாகுபெயராய்ப் 'பூ, என்றுபெயரிடப்பட்டது எனக்கவிசாதுர்யமாய்க்கூறுகின்றனர்.

## ௩அ-வது, சருக்கம்.



க. ஒருங்கினர் - அழிந்தார். அரந்தை - துன்பம்.
உ. அசனி - இடி. அரா என்பது அரஅல்லது, அரவு எனக்குறுகிற்று. நன். சூ - களஉ. புகறி - சொல்வாய்.
௩. மருமான் - மகன் (அஞ்ஞன்).
கூ. புணரி - கடல். புணை - தெப்பம். சேயவடிறத்தில் - (சேய் + அவள் + திறத்தில்) மகன் அந்தமாயையினிடத்தில் ; (சேயவள் + திறத்தில்) தூரத்திலுள்ளவளாகிய மாயையினிடத்தில்.
க0. தாதை - தந்தையாகிய மானதன். காறுக்க-(கால் + தாக்க) காற்றுமோத.
கக. சேய் - மகனுகிய (மானதன்). தாதை - தந்தையாகிய (பிரம்மம்).
க௩. செரு - போர்.
உக. கொடியவள் - கொடுமையுள்ளாள் ; கொடிபோன்ற அந்தப் பெண் என்று கவியின் அபிட்டப் பொருளையுங்கொள்க.
உஉ. வைத்தூறு - வைக்கோற்போர்.

உகூ. மொழிசுவை, மொழிச்சுவை எனத்திருத்தப்பட்டது. அமைதி - அடக்கம்.
௩0. முசிப்பு - அழிவு.

## ௩கூ-வது, சருக்கம்.



க. அதிட்டம் - தன்மாதன்மங்கள் தத்தம்பயனை அளித்தற்குரிய பரிபக்குவகாலம் ; காணப்படாதது என்பதுபொருள். உபயகாரணம்- (புண்ணியமும்,பாவமுமாகிய) இருவகைக்காரணங்கள். விசும்பாதி - ஆகாயம் முதலியவைகள்; அவை:- ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிரு

திவி என்பவை. விசும்பாதிவித்து, வையம் அங்குரம் என்க. அங்குரம் - முளை ; (வித்தில் அந்தர்க்கதமாய் முன் காணப்படாதிருந்து பின்) காணப்படுவது என்பது பொருள்.

௨. அபிதானம் - பெயர். மகம் - யாகம்.

௩. கட்டுரை - ஆகமப்பிரமாணம். பொருள் - அர்த்தாபத்தி. அபாவம் - இன்மை. எண் - வலிமை. வேணுவின் இசை காற்றின்றி -மூங்கிலில் உண்டாகும் ஓசை காற்றில்லாமல் ; வேய்ங்குழலிலுண்டாகும் இராகம் (உதான) வாயு இல்லாமல் என்றுமாம். தாலோட்டாதி - நா, உதடுமுதலியன.

௪. மழவு - குழந்தை. மண்ணை - அறிவிலி.

௫. புராதனம் - பழமை. ஏனை - மற்ற ; இடைச்சொல்.

௬. தாது-சொன்மூலம்(பகுதி). பிரத்யயம்-விகுதி. பிராதிபதிகம் - அர்த்த முடையதும், தாது பிரத்யயங்களாகாததுமானசப்தரூபம் (பெயர்ப்பகாப்பதம்).

௮. சிட்சை - வேதத்தின்உச்சாரண லக்ஷணத்தை உணர்த்துவது. நிருத்தம் - வேதார்த்தத்தை நிச்சயிப்பது. சந்தம் - பத்யங்களின் பெயர்வகைகளையும், அவற்றிற்குரிய அக்ஷரசங்கைகளையும் உணர்த்துவது. காந்தருவவேதம் - கீத சாஸ்திரம்.

௯. தயித்திரியம் - யஜுர் ; தித்திரிப் (சிச்சிலிப்)பறவைகளாற்(போற்றப்பட்டது) ; ஆதலின், இப்பெயர்த்தாயிற்று. வைசம்பாயனர்,தமது மருகனை ஓர்இரவில்அறியாதுமிதித்துக் கொன்றுவிட்டதனுற் றமக்குண்டான பிரம்மஹத்திதோஷம் நீங்கும்பொருட்டுத், தமதுசீடர்களனை வரையும் விரதங்காக்குமாறு பணிப்ப, அச்சீடர்களுள் ஒருவராகிய யாக்ஞவல்கர் , ஏனையோர் உடல்வலியிலராதலின், அப்பணியைத் தாம் ஒருவர்மாத்திரமே புரியஅனுக்ஞைதரும்படி வேண்டினர். வைசம்பாயனர், தம் உரையின்வண்ணம் நடவாது வேறுஉரைத்ததனுல்யாக்ஞவல்கரை முனிந்து, தம்பால்ஓதியுணர்ந்த யஜுர் வேதத்தை விடுத்துச்செல்லும்படி கூறினர்.அங்ஙனமே யாக்ஞவல்கர் இரத்தம் கான்று விழுமாறு குருவின் முன்னிலையில் அதனை ஓதி உமிழ்ந்துசெல்ல, அவருடன் கற்றவர்கள் அவ்விரத்தரூபமாய்க்கிடந்த யஜுர் வேதத்தை வீணுக்க மனம் பொருது தித்திரிப்பறவை வடிவங்கொண்டு உட்கொண்டார்கள் என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

௧௧. பைங்கூழ் - பசிய பயிர் ; அடையடுத்த காரியவாகுபெயர்.

௧௩. விலக்கு - நிஷேதகன்மங்கள்; அவையாவன:—மகாபாதகம், அதிபாதகம், உபபாதகம், சமபாதகம்,சாங்கரியபாதகம், மலினீகரண பாதகம், அபாத்ரீகரணபாதகம், சாதிப்பிரமிசபாதகம், பிரகீரணபாதகம் என்னும் ஒன்பதுமாம்.

௧௪. வைச்வதேவம் - எந்திரம் அல்லதுமுறம், அம்மி, துடைப்பம், உரலுலக்கை, தண்ணீர்க்குடம் என்னும் ஐந்தையும் உபயோகப்படுத்திக்கொள்வதாலுண்டாகும் பஞ்சஸூனை(ஐவகைப்பாவ) நிவிர்த்திக்காகக் கிரகஸ்தர்களால் தினந்தோறும்சூரியன்,அக்கினி, பிரஜாபதி, சோமன், வநஸ்பதி,அக்கினீஷோமர், தியாவா பிருதிவி, தன்வந்திரி என்பவர்களைக்குறித்துச் செய்யப்படுவதோர் அக்கினிகாரியம் ; சகலமான தேவர்களையும் பற்றியது என்பதுபொருள். விருந்து - அதிதிபூஜை. ஆதானம் - அக்கினிகளை யுண்டுபண்ணிக்கொள்

ஞுங்கிரியை. இட்டி - (இஷ்டி) பிரதமைதோறும் செய்யப்படும்யாகம். அக்கினிட்டோமம் - வசந்தகாலத்து ஐந்துநாட்களிற் செய்துமுடிக்கப்படுவதோர் யாகவிசேஷம். பசுபந்தம் - ஆடுகளைப் பந்திப்பதாகியயாகம். உத்தீயம் - ஓர் யாகவிசேஷம்.

கரு. விசு(விஷு) ஐப்பசி சித்திரை மாதங்களின் பிரவேசம். சங்கிராந்திகள் - சூரியன் மேஷம், கடகம், துலாம், மகரம் ஒழிந்த ராசிகளிற் பிரவேசிக்குங்காலம்; மேஷாதிகளிற் பிரவேசித்தல் வேறு பிரித்துக் கூறப்பட்டிருக்கின்றது. உபராகம் - கிரகணம். புட்கலம் - அமாவாஸ்யையும், திங்கள், செவ்வாய், வியாழன் என்னுங்கிழமைகளிலொன்றுங் கூடியகாலம்; இதனை "அமாசோமேனபௌமேன, குருணவாயுதாயதி, ஸாதிதி: புஷ்கலாநாமா, சூர்யக்ரகணஸந்நிபா,, என்பதானுணர்க. ஆயுள் விர்த்தியாக்குங்கன்ம முதலியவை என்பாருமுளர். முன்னும், பின்னும் பருவங்களே கூறப்படுதலின், முன்னர்க்கூறிய பொருளே சிறப்புடைத்தாம். அர்த்தோதயம் - புஷ்யம்அல்லதுமாகமாதம், அமாவாஸ்யை, ஞாயிற்றுக்கிழமை, வியதீபாதயோகம், திருவோணநக்ஷத்திரம் என்னும் ஐந்துங்கூடிய புண்யகாலம். மகோதயம் - திங்கட்கிழமையும், முற்கூறிய மற்றை நான்குங் கூடிய புண்யகாலம்.

கசு. அயமேதம் - அச்வமேதயாகம். களஞ்சம் - வெண்காயம் முதலிய நிஷித்த பதார்த்தங்கள் என்று சிலரும், கஞ்சா என்று சிலரும், புகையிலை என்று சிலரும், விடமூட்டிய ஆயுதத்தாற் கொல்லப்பட்ட மானின் இறைச்சியென்று சிலருங் கூறுகின்றனர்; உணர்வழி என்னும்அடையால், கஞ்சாமுதலியலாகரி வஸ்துக்கள் எனக்கொள்வதே ஏற்புடைத்தென்பர் ஒருசாரார்.

கஎ. அனசனம் - (ந + அசனம்) உபவாசவிரதம். பராகம் - பன்னிரண்டு தினம் உபவாசமிருப்பதாகிய விரதம்; இதனை "த்வாதசாஹோபவாசேன, பராக: பரிகீர்த்ததே,, என்பதானுணர்க.* சாந்திராயணம் - பௌரணை தொடங்கிஅமாவாசைவரை பதினைந்து பிடிகளிலிருந்து நாளொன்றுக்குஒவ்வொருபிடியாய்க்குறைத்துப் புசித்து அமாவாசை அன்று பட்டினியிருந்து, மறுநாள்தொடங்கிப் பௌரணை முடியநாள் ஒன்றுக்குஒவ்வொருபிடியாய்க் கூட்டி அன்னம்புசித்துவருவதாகிய ஓர்பிராயச்சித்தவிரதம்; சந்திரனது அயனத்தைப்பற்றியதுஎன்பதுபொருள். சினகரம் - கோவில்.

கஅ. பிராரத்தம் - எடுத்தஉடம்பான் முகந்து கொள்ளப்பட்டவினைப்பயன். ஆகாம்யம் - இனிவருவதாயுள்ள வினைப்பயன். சஞ்சிதம் - இறந்த உடம்புகளாற் சேகரித்துவைக்கப்பட்டுள்ள வினைப்பயன்.

உக. காரணங்கள் - புண்ணியபாவங்கள். கண்ணுறு - கூடா. மூட்டும் - கூட்டும். ஓரில் - ஆராய்ந்தால். ஒன்றுவது - கூடுவது.

உகூ. ஓலையைத் திருமுகமென்பது, மங்கலவழக்கு. காண்டி-பார்; ஏவல்.

ஙo. அந்தரிந்திரியம் - அகக்கரணம். உபாதி - ஒன்றைப்பல்வகையாய்த் தோற்றுவித்தற்குரியது.

ஙக. அபெத்தம் - (ந + பெத்தம்) பந்தமற்றது; பந்தம், பெத்தம் எனத்திரிந்தது.

---

* இது பிபீலிகாமத்தியம், யவமத்தியம், யதிசாந்திராயணம், சிசுசாந்திராயணம் என நால்வகைத்து.

## சO-வது, சருக்கம்.

உ. செய்குன்றம் - கிரீடாபர்வதம்.

௩. கேவலன் - முத்தன். பவம் - பிறப்பு. விருத்தம் - விரோதம்.

கூ. ஒருமைத்தாஞானம் - நிச்சயஞானம்(பிரம்மக்ஞானம்). தாரகை - நக்ஷத்திரம்;(ஓடக்காரர்கள்) தாண்டுதற்குக் (காரணமாவது)என்பதுபொருள்.

## சக-வது, சருக்கம்.

க. தானை - வஸ்திரம். உபாதானம் - முதற்காரணம். பகுதி - பிரகிருதி ; ஜகத்து இதனிடத்து ஆரம்பிக்கின்றது அல்லது, புருஷனுக்குப்போக்கியங்களை உண்டாக்குவது என்பதுபொருள். புருஷன் - ஜீவான்மா ; சரீரத்திலிருப்பது என்பதுபொருள்.

உ. முக்குணம் - சத்துவம், இராஜசு, தமசு என்பவை.

கூ. விகுதி - காரியம்.

கூ. அசங்க உதாசீனன் - காரணமாகிய பகுதியோடும், காரியமாகிய விகுதியோடுங் கூடாது பிரிந்திருப்போன்.

கஉ. வீற்றுவீற்ருய் - வெவ்வேருய்.

கஎ. மடி - முலைமேற்றிரள். அமுது - பால்.

உ௩. இந்தியங்கள் பதினென்று - ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், மனமுமாகிய பதினென்று. எழு - ஐம்புலன்களும், மனதும், புத்தியும்.

உகூ. வந்தித்திடுதல் - பந்தித்திடல் ( கட்டல் ).

உஎ. பூருவபக்கம் - சித்தாந்தத்தாற் கண்டிக்கப்படும் துர்ப்பலவசனம். உபநிடதைத்தமயன் என்பது உபநிடதைதமயன் எனத்திருத்தப்பட்டது; நன். சூ - கநிக.

## சஉ-வது, சருக்கம்.

க. சாமானியம் - பொதுமை. விசேஷம் - சிறப்பு. சமவாயம் - ஒற்றுமை. அபாவம் - இன்மை. வைசேஷிகம் - கணாதரதுநியாயசாத்திரம்;விசேஷத்தைஒப்புக்கொள்வது; தத்திதாந்தம்.

௨. கணனை - சங்கை (எண்). பரிமாணம் - ( நுண்மை, பெருமை, குறுமை, நெடுமை என்னும் நால் வகை ) அளவை. பேதம் - வேற்று மை. விபாகம் - பிரிவு. பரத்வம் - முன்மை. அபரத்வம் - பின்மை. பாரம் - திண்மை. திரவத்வம் - நெகிழ்ச்சி. ஸ்நேகம் - பொடி முத லியவற்றைத் திரட்டுவதற்கேதுவா கிய குணம். துவேடம் - வெறுப்பு. குணம் மூவெட்டாம் என முடிக்க.

௪. அன்னியோன்னியாபாவம் - ஒன்றிஞென்றின்மை ; அதாவது:- ஒன்றில் ஒன்று இல்லாதிருத்தல். அத்யந்தாபாவம் - முழுதுமின்மை. பிராகபாவம் - முன்னின்மை. நாசம் - அழிவுபாட்டின்மை. கவுதமம் - நையாயிகம் ; கவுதமராற் கூறப்ப ட்டது ; தத்திராந்தம். சமுசயம் - ஐயம். வர்தம் என்பது வாதம் என த்திருத்தப்பட்டது.

௫. செற்பம் - சாதனம் இரண் டுஉள்ளதன்கண் வெல்லும் வேட் கையுடையான்கதை. விதண்டை - தன் கோட்பாட்டை நிலைபெறுத் தாதகதை. ஏத்துவாபாசம் - ஏதுப் போலி. சலம் - ஒருகருத்துப்பற்றிக் கூறிய மொழிக்கு வேறுபொருள் படைத்திட்டுக்கொண்டு பழித்தல். சாதி - போலிவிடை. நிக்கிரகம் - தோல்வித்தானம். சத்தம் - ஆகமப் பிரமாணம்.

௬. பொருள் - அர்த்தம். பிர விர்த்தி - தன்மாதன்மங்கள். தோ டம்-விருப்பு வெறுப்பு மயக்கங்கள். பிரேத்தியபாவம் - சாக்காடு. பேறு - பலம் (போகம்).

௭. பிரதிக்கினை - மேற்கோள் ; பக்ஷத்தைத் (துணிபொருள் இருக் குமிடத்தைத்) துணிபொருள்உடை யதாகக் கூறுவது ; உ-ம். " மலை தீ யுடைத்து ,, என்பது. ஏது - கார ணம் ; " புகையுடைமையால் ,,என் பது. உதாகரணம்-திருஷ்டாந்தம் ; " அடுக்களைபோல ,, என்பது. உப நயம் - பக்ஷதருமத்தன்மை உணர் தற்பொருட்டுத்திருஷ்டாந்தத்தைச் சார்த்திக்கூறுவது; "இதுவும்அங்ங னம்,, என்பது. நிகமனம் - முடிந் தது முடித்தல் ; அதாவது:- "ஆத லின் இங்ஙனம் ,, என்பது. அநே காந்திகம் - ஏதுப்போலி ஐந்திலொ ன்று ; அதாவது:- பிறழ்ச்சியையு டையது ; இது பொது, சிறப்பு, மு டிவுபெறுமை எனமூவகைத்து. மற் றவை விளங்கவில்லை.

௧௫. கைவலம் - முத்தி.

## ௪௩-வது, சருக்கம்.



௧. துவணுகம் - இரண்டுபரமா ணுக்களின் கூட்டம். பரிமாணம் - அளவு. திரணுகம் - மூன்று துவணு கங்களின் கூட்டம். கணனை - சங் கை (எண்).

௨. துளக்கம் - அசைவு. திட் டம் - காணப்படுவது. அதிட்டம் - காணப்படாதது.

௩. இரண்டும் - உயிரும், அணு க்களும். கூடாது - சேராமல். அப சித்தாந்தம் - போலிமுடிவு.

ரு. கற்பிதம் - பாவனை. கந்திருவநகரம் - ஆகாயத்தில்மேகங்களாற் றோன்றும் பட்டினம்.

௬. ஒருக்காலும் என்பது ஒருகாலும் எனத் திருத்தப்பட்டது; நன். சூ - ௪௭௬.

அ. உபாதி - ஒருபொருளைப்பல்வகையாய்த் தோற்றுவித்தற்குரிய தன்மை.

## ௪௪-வது, சருக்கம்.

—✕—

௧. வகைத்தா - வகைத்தாக; தொகுத்தல்.

௨. மறைநெறியால் (சிதைத்தல்) - யாகாதிகளிற் பசுக்கள் (கொல்லப்படுதல்); இது, வைதம் எனப்படும்; இதன் மறுதலை அவைதம்.

௪. எனற்றவம் என்பது எனறவம் எனத்திருத்தப்பட்டது; நன். சூ - ௨௨௬.

ரு. தக்கோர் - ஏற்றற்குரியோர்; அவராவார்:- பெருமையுள்ளோர், மித்திரர், குலதருமம் விடாதவர், தரித்திரர், அகதிகள், பிதா, மாதா, குரு, உதவி செய்தவர் என்னும் ஒன்பதின்மர். இதனை "மாண்புடையாளர் கேண்மையர் தத்தம்வழி முதலொழுக்கினிலமர்ந்தோர், சேண்படுகிரப்பி னெய்தினோர் புரப்போர் தீர்ந்தவர் தந்தைதாய் குரவர், காண்டகுமுதவி புரிந்துளோரினையோரொன்பதின் மருமுளங் களிப்ப, வேண்டுறுநிதியமளிப்பின்மற்றொன்றே கோடியாமெனமறைவிளம்பும்,, என்பதானுணர்க.

எ. சகனம் - கடிபச்சாத்பாகம் (பிருஷ்டபாகம்).

அ. சீவனி - குல்பயத்தின் கீழ்ப் பிரதேசம். சானு - முழங்கால்; துடைகணைக்கால்களின் சந்தியாலுண்டாவது என்பதுபொருள். அங்குலி - விரல்கள்.

௯. பரட்டிரண்டும் என்பதுபரடிரண்டும் எனத்திருத்தப்பட்டது.

௧௦. ப்ராணாயாமம் - (ப்ராண + ஆயாமம்) பிராணவாயுவை அடக்குதல்.

௧௧. கிழங்கு - மூலஸ்தானத்திற்குப்பன்னிரண்டங்குலத்துக்குமேலே நாபிஇலிங்கங்களினிடையில்நான்கு அங்குல விஸ்தாரமாயுள்ளது; உவமையாகுபெயர்.

௧௨. புழை - துவாரம் (ரந்திரம்). முடிச்சு - முடி; இது கிரந்தி எனப்படும். 'புழையொடு முடிச்சு ஐந்து, என்றாரேனும், புழை இரண்டு, முடிச்சுமூன்றுஎனக்கொள்க. முடிச்சு மூன்றாவன:- பிரம்மக்கிரந்தி, விஷ்ணுக்கிரந்தி, ருத்திரக்கிரந்திஎன்பவை.

௧௩. தனு - உடல். நியாசம் - கடவுள்களை உடலில் அவ்வவர்கட்குரிய தானங்களில் (பாவனையால்) வைத்தல்.

௧௪. வைகிசுகா என்பதுவைகிச்சுகா என்றும், சுகாதனனுமாய் என்றது சுகாதனனாய் என்றுந்திருத்தப்பட்டது. நாசிகாக்கிரம் - மூக்கின் நுனி.

௧ரு. வாங்கி - இழுத்து. நாப்பண் - மத்தியில். விந்துவுடனேகூடி அடைவானரேபம் - அநுஸ்வா

ரத்துடன்(0 இவ்வடிவத்தோடு) கூடிச் செம்மையான ரகாரம்; அதாவது:- ரம் என்பது. ரேபம் - ரகாரம். விந்து - வட்டம்; அது 'ம்' என்னும் ஓசையையுடையது.

௧௬. நாதம் - இரேசக பூரக காலங்களிலுண்டாகும் அநாகதம் என்னும் சத்தம்; ஆக்கினைக் கப்பாற் சந்திரமண்டலத்திற்குப் பன்னிரண்டங்குலத்தி லிருப்பதாகிய நாதஸ்தானமுமாம்.

௧அ. பொருந்திய (து) - சகித கும்பகம். பொருந்தாதர்வது - கேவலகும்பகம். முதல் - உத்தமப்பிராணயாமம். இடை - மத்திமப்பிராணயாமம். கடை - அதமப்பிராணயாமம். அவற்றின் ஆம் என்முடிக்க. சின்னம் - அடையாளங்களாவன. எய்தும் - அடைகின்ற; பெயரெச்சம். எழல், கம்பித்தல், அரும்பல் முறையே முதல் இடை கடைகளின் சின்னங்கள் என்க.

௧௯. ஆதேயம் - ஆதாரத்துள்ளவை.

௨0. குண்டலினி - சுழிமுனை நாடியின் வாயிலைத் தன்முகத்தான் மறைத்துத்தூங்கிக்கொண்டிருக்கும் பாம்பின் வடிவுடைய ஆதாரசக்தி. பைநாகம் என்பது பைந்நாகம்என த்திருத்தப்பட்டது. பொகுட்டு - பூங்கொட்டை. விரிஞ்சன் - பிரம்மன்; பூதங்களைப்படைப்பவர் அல்லது, அன்னப்பறவைகளால் வகிக்கப்படுவோர் என்பது பொருள்.

௨௧. ஆக்கி என்பது ஆகிக் என த்திருத்தப்பட்டது. கந்தரம் - கழுத்து; தலையைத்தரித்திருப்பது என்பதுபொருள்.

௨௨. அசபை - ஹம்ஸமந்திரம்.

௨௩. ஆகுஞ்சனம் - அடக்கல். அக்கினிபீசம் -'ரம்' என்பது.

௨௫. இரண்டும் - உச்சுவாச நிச்சுவாசங்களாகிய இரண்டும். பெலம் - பிலம் (ரந்திரம்).

௨எ. உததி - கடல்; நீரைத் தரிப்பது என்பது பொருள்.

## ௩௫-வது, சருக்கம்.



௨. இலாடம் - நெற்றி. திதி - காத்தல்.

௪. திவள எனில் சுதேவர் எனப்பிரிக்கப்பட்டு மோனையின்றுவதோடு பொருளுமின்றுதலின், திவள்எனத்திருத்தப்பட்டது. வியூகம் - கூட்டம்.

௫. கூர்மம் - ஆமை; குற்சிதவேகமுடையது அல்லது, நீரைக்கெடுப்பது என்பதுபொருள். கேழல் - பன்றி (வராகம்). மானுடமடங்கல்- நரசிம்மம். கற்கி - (கலியுகமுடிவில் சம்பளகிராமத்திற் பிறக்கப்போகின்ற) குதிரைமுக வடிவஅவதாரம்.

எ. இடங்கர் - முதலை. நீலமால்வரை - கரிய பெரியமலைபோன்ற யானை; அடையடுத்த உவமையாகு பெயர்.

௯. மித்தை - பொய்.

௧0. * அர்ச்சிராதிமார்க்கம் - ஒளிமுதலியவழி; அதாவது:- பிரம்மவித்துக்களின் ஆன்மா, சிரோநாடி வாயிலாகப்புறப்பட்டு முறையேஒளி, பகல், பூர்வபக்ஷம், உத்தராயணம்,

வருஷம், சூரியன், சந்திரன், மின்னலாகிய இவற்றை அடைந்து, அதிலிருந்து அமானவன் வழிகாட்டப் பிரம்மத்தை அடையும்வழி; இது உத்தராயணமார்க்கம், ஒளிமார்க்கம், தேவயானம், மீளாநெறி என்றுங் கூறப்படும். அர்ச்சராதி என்பது அர்ச்சிராதி எனத்திருத்தப்பட்டது; அர்ச்சி: + ஆதி - அர்ச்சிராதி. இதன் மறுதலை தூமாதிமார்க்கம். விரசை - வைகுண்டம்புகுவோர் அவசியம் நீராடவேண்டிய தோர் நதி.

௧௧. அப்பிராகிருதம் - மேலானது.

௧௨. வில், வாள், தண்டு என்பவை முறையே சார்ங்கம், நந்தகம், கௌமோதகீ எனப்படும். கங்குலிற்பகல்போல் - இருள் நீங்காதிருப்ப அதனிடைச்சூரியன் இருந்தாலது போல; அபூதஉவமை. கவுத்துவம் - திருமால் மார்பிலணியும் மணி; பாற்கடலிலுண்டானது என்பதுபொருள்.

௧௩. இங்கு - இவ்வப்பிராகிருத வுலகத்தில்; சேய்மைக்கண்ணுள்ளதால் 'அங்கு, எனச்சுட்டவேண்டியதாயினும், இந்நூலாசிரியர் பரமயோகியாதலாற் சமீபித்து இருத்தலின், 'இங்கு, எனச்சுட்டினர். தாசோகம் - (தாச: + அகம்) நான் அடிமை. திங்கட்பார்த்து - சந்திரனைப் பார்த்து; இரண்டாம்வேற்றுமைத் தொகை.

௧௪. கயிங்கரியம் - வேலை; கிங்கரரது தன்மை; தத்திதாந்தம்.

## ௪௩-வது, சருக்கம்.

*

௧. உரை - ஆகமம்.

௨. மாது - சக்தி.

௩. அபினுபாவம் - நீக்கமற்றுள்ளது; அவினுபாவம் என்பதே பெரும் பான்மை; இதிலுள்ள " வகரம் ,, பகரமாயிற்றெனக் கொள்க. அபினுபாவசத்தி - அருட்சத்தி. உருவம் - அழகுபொருந்திய. லயபோகாதிகாரம் - லயமும், போகமும், அதிகாரமுமாகிய அவத்தைகள்; இவைகளிற் பதி, முறையே சிவன், சதாசிவன், மகேசன் என்னும் அருவம், அருவுருவம், உருவம் என்பவையாய்ஒளிரும்என்க. ௨-வது, கவியிலுள்ள பதிஎன்பது எழுவாய், ஒளிரும் பயனிலை.

௪. பேர்த்து - அழித்து.

௫. பசுவருக்கம் - (விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும்) உயிர்வகைகள்.

௬. விஞ்ஞானகலருக்குமலமும், பிரளயாகலருக்கு மலகன்மமும், (மலமும், கன்மமும்) சகலருக்குமல மாயாகன்மம், (மலமும், மாயையும், கன்மமும்) பந்தம் ஆகும் என்க. பின்மொழிந்தார்க்கு - இறுதியிற் கூறப்பட்ட சகலர்க்கு. ஆறுவழி - ஷட்அத்துவா; அவையாவன:— மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்பவை.

௭. இருளும்மலம் - ஆணவமலம். விந்து - சுத்தமாயையிற்றோன்றும் சத்தி. மோகினி - அசுத்தமாயை. மாயேயம் - அவ்வியத்தம்

அல்லது, பிரகிருதிமாயை ; இது 'மான்' என்றுங் கூறப்படும்.

அ. 'ஒன்றாய் அநித்தமாய், என்பது ஒன்றாய் நித்தமாய் எனத்திருத்தப்பட்டது ; ஆணவம் நித்தமாதலின். இதனைச்சிவப்பிரகாசம்பொது அ-வது, கவியாகிய "ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளும் எண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட,மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும், பாகமாம் வகைநின்று திரோதான சத்தி பண்ணுதலான் மலமெனவும் பகர்வரது பரிந்து, நாகமா நதிமதியம் பொதி சடையா னடிக ணணுகும்வகை கருணை மிகநயக்குந் தானே." என்பதானுணர்க. காளிமம்-கறுப்பு (களிம்பு).

கூ. திரோதானசத்தி - குற்றங்கண்டு கோபித்துக், குணங்கண்டு அருளும் தாயைப்போலக் கன்மங்களைப் புசிப்பிக்கும்வரை மலமாய் நின்று, பின் மலபாகம் வருவிக்கும் அருட்சத்தி.

௧௦. விந்து (என்பது) சுத்தம், மாமாயை, குடிலை இன்னபேர்குடி, ஆகி, அருளி, பண்பிற்றாம் எனமுடிக்க.விந்து + அத்தன்-விந்துவத்தன்; குற்றியலுகரம்வடமொழியாதலின், கெடாது உடம்படுமெய் பெற்றது. சாதாக்கியம் - ஞானமும், கிரியையுங்கூடிய தத்துவம். ஈசுவரம் - கிரியை எறி ஞானம் குறைந்த தத்துவம். சுத்தவித்தை - ஞானம் எறிக் கிரியை குறைந்த தத்துவம். நாதம் - ஈண்டுவிந்துவில் தோன்றிய நாதம் ; விந்து என்பதோடு கூட்டியெண்ணும் நாதம் அன்று ; அங்ஙனங்கொள்ளின், "விந்துவழா வகையே முன்னுதவு சூக்குமாதி" என்பதோடு முரணும். வைகரியாதி - வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை என்னும் நான்குவாக்குக்கள். உம்மையால் ஐம்பத்தோ ரக்ஷரங்களும், சப்தகோடி மகாமந்திரங்களும், வேதங்களும், ஆகமங்களும் கொள்க.

௧௧. இது, நிறுத்தமுறையானே அசுத்தமாயையின் இலக்கணங் கூறுகின்றது. அநித்தமாய், சித்தாகி, அசுத்தமாயை என்பன முறையே நித்தமாய், அசித்தாகி, ஆமசுத்தமாயை என்று திருத்தப்பட்டன ; சிவப்பிரகாசம் பொது,௧௦-வது, கவியாகிய "உருவாதி சதுவிதமா யொன்றொன் றாவா உண்மையதாய் நித்தமாய்ஒன்றாய்என்று, மருவாகிக் கன்மமாரணுக்களியார்க்கும் ஆவாரமாய் அசித்தாய் அசலமாகி, விரிவாய தன்செயலில் வியாபியா யெல்லாம் விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை யொடுங்க, வருகாலமுயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய் மன்னியிடு மரனருளான் மாயைதானே." என்பதும், அதன் உரையும் ஈண்டு நோக்கத்தக்கது.

௧௨. காலம் - பாவஅபாவங்களையும், கணிதங்களையும் காட்டுவது. நியதி - இது நன்று, இது தீது என்னும்தீர்மானத்தை உண்டாக்குவது. கலை - தத்துவத்தைக் கொஞ்சம் உணர்த்துவது. வித்தை-கலைஉணர்த்துவதைக் காட்டிலுஞ் சற்று அதிகமாய்த் தத்துவத்தை உணர்த்துவது. ராகம்-விஷயஇச்சையை உண்டாக்குவது. காலம் முதலிய ஐந்தும் பதியினது உருவத்தை மறைத்தலின், "பஞ்சகஞ்சுகம்" எனப்படும்.

௧௩. உருத்திரரால் கலாதத்துவத்தின் அவ்வியத்தம் தோன்றும் என்றியைக்க. அதில் - அக்குணத்திரயத்தில். சித்தம் - குணத்திரயசமம். புத்தி - குணத்திரயசமமற்றது. தைசதம் - இராஜ ஸாங்காரம்.

வைகாரி - சாத்து விகாங்காரம். பூதாதி-தாமஸாங்காரம்.

கஎ. மதிகதம் - புத்தியில் நிற்பது. மாயை - காரணமாயை.

கஅ. மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என்பவை முறையே பதினொன்று, எண்பத்தொன்று, ஐம்பத்தொன்று, இருநூற்றெண் மூன்று, முப்பத்தாறு, ஐந்து என்க. வன்னங்கள்-எழுத்துக்கள். வானால் - ஆகாயத்தினால். தந்திரங்களூறுகின்ற - தமது வலிமையை அடைகின்ற. மந்திரங்கள், ஈசானம் முதல் அத்திரம்வரையுள்ளன. பதங்கள், ப்ரணவம் முதல் நமோ நம: வரையுள்ளன. வன்னங்கள், அகாராதி க்ஷகாராந்த முள்ளன. புவனங்கள், அநாசிருதைமுதல் காலாக்கினியந்தம் உள்ளவை. தத்துவங்கள், பூதம் முதல் நாதம் வரை உள்ளவை. கலைகள், நிவிர்த்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலைஎன்பன. இவற்றின்விரிவை வல்லார்வாய் உணர்க.

கக. மன்று - சபை; அதாவது:-தகராகாசம் (சிதாகாசம்). வாமாகோசம் - பெண்ணின் கருப்பை. நிருவாணம் - மோக்ஷம்; துக்காதிகள் நிர்க்கதமாதற்கிடமாவது என்பதுபொருள்.

உ0. பின்னமுறுதுல்லியம் - வேறுகின்ற சுத்தநிலை.

## ௬எ-வது, சருக்கம்.



உ. அனுபூதிவத்தாய் - தானே கண்டறிந்ததும், பிறர்க்குச்சொல்ல இயலாததுமான அறிவேயாய்; வத்து + ஆய் எனப்பிரித்தல் ஏலாது; "வத்துவாய்,, எனக்குற்றுகரம் கெடாது உடம்படுமெய்பெறல் வேண்டுமாதலின். வத் + ஆய் எனப்பிரிக்க. வத் - போல.

ரு. காணும்வாறு - காணப்படுகின்ற வாய்ப்பு; காணுமாறு என்றிருத்தல் எளிதுணர் பொருளதாம். பரமார்த்தத்து ஒன்றாகும் என்றியைக்க.

சு. தெற்றி - பின்னி. உபாதானம் - ஈண்டு விவர்த்தோபாதானம்; அதாவது:- பாம்பின் மயக்கத்திற்குப் பழுதை காரணமாவதுபோல, ஜகத்தின் மயக்கத்திற்குப் பிரம்மம் காரணமாவது; மற்ற உபாதானங்கள்:- ஆரம்போபாதானம், பரிணமோபாதானம் என்பவை.

கஉ. நனவுமுதலியவற்றிற்கு முறையே கரணம் ஈரேழ், நான்கு, ஒன்று, ஒழிவுஎன்க. ஈரேழ்ஆவன:- பொறிகள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், அந்தக்கரணம் நான்கும்ஆகிய பதினான்கு. நான்காவன:- அந்தக்கரணங்கள் நான்கு. ஒன்றுஆவது:- சித்தம்.

கரு. பஞ்சசாதனம் - ஐந்துகருவிகள்; அவையாவன:- ஆஸனம், யோகபட்டம், தண்டு, கமண்டலம், ஜபமாலை என்பவை. வேறுநூல்களில் "பஞ்சவாதனம்,, என்று கூறப்பட்டிருக்கின்றது; அவையாவன:- கூர்மாஸனம், அநந்தாஸனம், சிம்மாஸனம், பத்மாஸனம், யோகாஸனம் என்பவை.

## ௪௮-வது, சருக்கம்.



௩. சரவணம் - (சரம் + வநம்) நாணற்காடு.

௫. அநிர்தசடதுக்கம் - பொய்ய றிவீனத்துன்பம்; சச்சிதானந்தம் என்பதன் மறுதலை. சீமந்தம் - கருப்பமான நான்கு, ஆறு அல்லது எட்டாவதுமாதத்திற் கர்ப்பிணிகட்குச் செய்வதோர் சடங்கு.

எ. ஆனனம் - முகம். நங்கை - பெண்ணிற் சிறந்தவளாகிய உபநிடதை. செய்யோன் - சூரியன்.

௯. அகலம் - மார்பு.

௧௩. சாம்ப்ராச்யம் - சம்ராட்டின்றன்மை; சம்ராட்டாவான்:— இராஜசூயயாகம் செய்தோனும்,பூமண்டலம் முழுதும் தன் வசமாக்கிக் கொண்டு அரசர்கள் அனைவரையும் ஆள்வோனுமாகிய தனிச்சக்ரவர்த்தி.

௧௫. ஆய்த்தனிமை என்பது ஆய்தனிமை எனத்திருத்தப்பட்டது; நன். சூ-௧௫௯.

௧எ. இளையவள் - உபநிடதை.

௧௮. மருட்டந்த என்பது மருடந்த எனத்திருத்தப்பட்டது; நன். சூ-௨௨௯.

௨௧. விழித்த - துயிலொழித்த என்றுகொண்டு கனமென என்பதோடும், (ஞானக்கண்ணைத்) திறந்த என்றுகொண்டுமற்றவைகளோடும் கூட்டிக்கொள்க. தெரியலரவு-பூமாலையினிடத்து(மயக்கத்தாற்றோன்றுஞ்) சர்ப்பப்பிராந்தி (பாறுவது போல).

௨௫. பாராவாரம் - கடல்; கரையை மறைப்பது என்பதுபொருள்.

௨௯. தோறீட்டும் - (தோறு + ஈட்டும்) ஒவ்வொன்றினும் தொகுக்கப்படுகின்ற; தோலீட்டும்என்பது தோறீட்டும் எனத் திருத்தப்பட்டது.

௩எ. அலகை - பூதனை. மருது - மருதவிருக்ஷங்கள்; குபேரன் புத்திரர்களாகியநளகூபர மணிக்கிரீவர்கள், நாரதரது சாபத்தால் ஆயர்பாடியில் இம்மரங்களாய் முளைத்திருந்தனர். கலை இரண்டில் முன்னது வஸ்திரம்; பின்னது சாஸ்திரம். வாழி - வாழக்கடவாய்; வாழிய என்பது வாழி என நின்றது; நன். சூ-௧௬௮.

ஓம் சச்சிதானந்த பரப்ரம்மணே நமஃ.

## மெய்ஞ்ஞான விளக்க

அரும்பத வுரை முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

# மதவிளக்கச் சுருக்கம்.

## க-வது, உலோகாயதம் அல்லது, சாருவாகமதம்.



இஃது இந்திரன்இன்பத்தையிகழ்ந்தஞான்று இவ்வின்பத்திற் சிறந்த புருஷார்த்தமியாண்டுமில்லையெனத் தாபிப்பான்புக்க பிருகஸ்பதிபகவானால் ஏற்படுத்தப்பட்டது. இது இவ்வுலக நடவடிக்கைகளைமாத்திர மொப்புக்கொள்ளும். மனம், மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் பொறிகளானுணரத்தக்க பிரத்தியக்ஷம் ஒன்றுமாத்திரமே பிரமாணம் ; அநுமானம்முதலியபிற, பிரமாணங்களாகா. கடவுள், ஆன்மா, மறுபிறப்பு, இருவினைப்பயன்கள், வருணபேதம், ஆகாசம் என்பவைகள் பிரத்தியக்ஷப் பிரமாணத்தானளந்தறியற் பாலனவல்லவாதலினவைகள் சசவிஷாணம் ( முயற்கோடு ) போல் இல்பொருள்களேயன்றி உள்பொருள்களல்ல. பிரபஞ்சம் நித்தியம். நிலம், புனல், கனல், கால் என்னும் நான்குமாத்திரமே பூதங்கள். உடல்கள், அப்பூதங்களினளவொத்த சையோகத்தாற் ( கூட்டத்தாற் ) றோன்றிப்பிரிவான்அழியும். மதுவின்கட் களிப்புண்டாதல்போல உடலின்கண் அறிவுண்டாகிக் கெடும். வாழ்வு தாழ்வுகட்கு அவரவர்செய்கின்ற முயற்சியே காரணமாவதன்றி, யதிட்டங்காரணமாகமாட்டாது. "நான் பருத்தேன்" "நான் இளைத்தேன்" என்புழி நான் என்பதற்குத் தேகமே விஷயமாதலாற் றேகமே யான்மாவாம். அணைந்த விளக்கு மீண்டுமெக்காலத்து மெவ்விடத்துமுண்டாதலை யாண்டுங்கண்டிலம். அதுபோல இறந்த * வாயுப்பூதம் மீண்டுமெக்காலத்து மெவ்விடத்துமுண்டாதலில்லை. இறந்தது இறந்ததே. ஆதலின்வாயுப்பூதம் நீங்குமுன் ஒவ்வொருவரும் அடைதற்குரியபுரு

* உலோகாயதன் உயிரை, வாயுப்பூதம் என்பான்.

ஷார்த்தங்களையடையவேண்டும். பொருள், இன்பமென்னும் இரண்டுமாத்திரமே புருஷார்த்தங்கள். ஒழிந்த தரும மோக்ஷ ங்கள் புருஷார்த்தங்களாகா. முன்னர்க்கூறிய புருஷார்த்தமி ரண்டிலும் இன்பமொன்றே சிறந்ததாதலின் மூத்தோரிளை யோர், உயர்ந்தோரிழிந்தோர், தமக்குரியர் பிறர்க்குரியர், பகலி ரவு முதலியவேற்றுமைகளைக்கருதாது உண்டுடுத்துப்பூசிமுடி த்து இன்பந்துய்க்குநரே பரமபுருஷார்த்தம்பெற்ற முத்தராவர். அங்ஙனமன்றி, உண்மையி லில்லாதனவாய மறுபிறப்பும், சொர்க்க நரகங்களுமுள்ளன வென்று மயங்கி, மாதரின்பம்விடு த்துத் தம்முடலைக்கிருச்சிர சாந்திராயணாதி விரதங்களான் வாளாவருத்தி யுழலுநர் நடைப்பிணமாவாரேயன்றிப் புருஷ ராகார். மேனமாளிகையே சொர்க்கலோகம். மாதரின்பமே ஜீவன்முக்தி. அவர்க்குக் குற்றேவல் செய்து உடலிளைப்பதே தவம். அதரபானமே தேவாமிருதபானம். இறப்பதே விதேக முக்தி. என்பது.

*உலோகாயதம் அல்லது, சாருவாகமதம் முற்றிற்று.*

---

## உ-வது, பௌத்தமதம்.

——(o)——

இது சிலவசுரர்களினழிவின்பொருட்டு விஷ்ணுவின் அவ தாரமாகிய புத்தரால் புகலப்பட்டது. இது மஹாயானம், ஹீனயானமென விருவகைப்படும். அவற்றுளிங்குக் கூறப்ப டுவது ஹீனயானம். கடவுள், ஆன்மா, ஆகாசம், காலம், திக்கு, வருணபேதம் என்பவையில்லை. தோன்றுவனவெல் லாமழியும். பொறிகளானுணரும் பிரத்தியக்ஷம், குறிகளா னுணரும் அநுமானம் என்னுமிரண்டுமாத்திரமே பிரமாணங் கள்; ஒழிந்தவை, பிரமாணங்களாகா. மறுபிறப்பு மிருவி னைப்பயன்களுமுண்டு. பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, வேண் டுவனவிழத்தல், வேண்டாதனவுறன் முதலியயாவும் துன்பங்

களே. இவற்றிற்குக்காரணம் "யான்" என்னும் அகப்பற்றும், "எனது" என்னும் புறப்பற்றுமேயாம். காரணமொழியக் காரியமொழியுமாதலாற் பற்றொழிய வதன்காரியமாகிய துன்பங்களுமொழியும். இத்துன்பநாசமே முத்தி: துன்பவநுபவமேபந்தம். யாகங்கள் கொலைக்குக் காரணமாதலின் அவற்றைஅறவே விலக்கல்வேண்டும். நீசன்முதல் ஈசன்வரையுள்ள எல்லா உயிரும் காலக் கிரமத்தில் நிருவாணமடைதற்குரியன; அந்தணர்க்குமாத்திரமே யுரியதொன்றன்று; யாவர்க்கும்பொதுவே. பற்றற்றுப் பயன்நோக்காது செய்யும் நற்கருமங்களும், காமியகரும பரித்தியாகமும் நிருவாணமடைதற்கேதுவாகும். பாளிபாஷையில் எழுதப்பட்டுள்ள திரிபிடகமே நூல். என்பது. இது கடவுள், ஆன்மா, ஆகாசம், வருணபேதமென்பன வின்றெனலா னுலோகாயதத்தை யொக்குமேனும், மறுபிறப்பு, இம்மைமறுமைப்பயன்கள், அநுமானம் என்பவைஉளவென ஒப்புக்கோடலான் ஒவ்வாதாதலின் இஃததனின்வேறாயிற்று. இது சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்யமிகம், வைபாடிகமென நால்வகைத்து; அவற்றுள்,

௧. சௌத்திராந்திகமாவது:- பூதமுமுபாதானமு(புலன்களு)மாகிய உரு இரண்டும், சித்தமுங்கன்மமுமாகிய அருஇரண்டும், குற்றவீடுங்கந்தவீடுமாகியவீடு இரண்டும்,உள்வழக்கும் இல்வழக்குமாகிய வழக்குஇரண்டுமாகியஎட்டும் பதார்த்தங்கள். ஆகாசமொழிந்த நான்கும் பூதங்கள். சத்தமொழிந்தநான்கும் உபாதானம் அல்லது, புலன்கள். பொறிகளான்விஷயத்தை அறிவது சித்தம். நல்வினை தீவினைகளிரண்டும் கன்மங்கள். பூதஉபாதானங்களாகிய ரூபஸ்கந்தங்களெட்டு; குசலம், அகுசலம், குசலாகுசலமென்னும், வேதனாஸ்கந்தங்கள் மூன்று; பொறிகளைந்தும், மனமுமாகிய ஸம்க்ஞாஸ்கந்தங்கள் ஆறு; பொய், குறளை, வன்சொல், பயனில்சொல், மெய், நல்வார்த்தை, இன்சொல், பயன்படுசொல்லென்னும்வாக்கின் *குணங்களெட்டும்,

* குணங்கள் - துற்குண சற்குணங்களாகிய இரண்டுமாம்.

கொலை, களவு, அவத்தொழில், பள்ளிவலம், தவம், தானம் என்னும் காயத்தின் குணங்களாறும், கொலைநினைப்பு, காமப்பற்று, ஆசை, அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்னும் மனத்தின்குணங்களாறுமாகிய ஸம்ஸ்காரஸ்கந்தங்கள் இருபது; சத்தாதியைந்துஞ் சித்தமுமாகிய விக்ஞானஸ்கந்தங்கள் ஆறு; ஆக நாற்பத்துமூன்றுவகைப்பட்டஸ்கந்தங்கள் ஐந்துங்காரணங்கெட்டுக் காரியம்நிற்றல் குற்றவீடு. முற்றக்கெடுதல்கந்தவீடு. உள்ளதை உள்ளதென்பது, * உள்வழக்கு. முயற்கோடும், வந்திமகனும், இன்னன பிறவும் இல்லையென்பது, இல்வழக்கு. பிறராற்கொல்லப்பட்டாவது தம்மியல்பாயாவதிறந்த உயிர்களின் ஊன் உண்டல் பாவந்தருவதொன்றன்று. பரமாணுக்களின்சமுதாயமே பொருளுற்பத்திக்குக்காரணம். என்பது.

௨. யோகாசாரமாவது:— சொப்பனத்திற் புறப்பொருள்களின்றி யறிவுமாத்திரத்தானேயே வியவஹாரங்காணப்படுதலின் அறிவுஒன்றே தத்துவமாகும். எல்லாப்பொருள்களும் அருவாய் அறிவிற்பதிந்துகிடந்து காலக்கிரமத்தில் உருவாய்ப்பாஹியபதார்த்தங்களாகின்றன. போதமின்றேற் பொருளின்று. என்பது. சௌத்திராந்திகம், பொருளுற்பத்திக்குக் காரணம் பரமாணுக்களின் சமுதாயமென, இது அறிவெனலான் அதனின் வேறுயிற்று.

௩. மாத்யமிகமாவது:— அறிவும், அறியப்படுபொருளும், சூன்யமாதலின் அவ்வறிவாற் பிரபஞ்சம்தோன்றுது; அவயவங்களேபொருளாய்த் தோன்றும். என்பது.

௪. வைபாடிகமாவது:— மஞ்சளும், சுண்ணும்பும் கூடிய

---

* இவ்வழக்குகள் தொகையுள்வழக்கு, தொடர்ச்சியுள்வழக்கு, மிகுத்துரைஉள்வழக்கு, தொகையில்வழக்கு, தொடர்ச்சியில்வழக்கு, மிகுத்துரையில்வழக்கு எனவும், உள்வழக்கு, இல்வழக்கு, உள்ளதுசார்ந்தவுண்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவின்மைவழக்கு, இல்லதுசார்ந்தவுண்மைவழக்கு, இல்லது சார்ந்தவின்மைவழக்கு எனவும் வகுத்துக் கூறப்படும்.

விடத்தோர்செந்நிறம் உண்டாதல்போல அறிவும், பொருளும் கூடியவிடத்துப் பிரபஞ்சமுண்டாகும். என்பது.

பௌத்தமதம் முற்றிற்று.

---

## ௩-வது, சமணமதம்.

—(·)—

இது திரிபுராசுரர்களி னழிவின்பொருட்டு விஷ்ணுவின் தேகசம்பூதனன மாயாரூபி அல்லது, அருகனுற்ருபிக்கப்பட்டது. உலகம் அநாதிநித்தியம். ஆன்மாவும் அநாதிநித்தியம்; சேதனம்; சரீர பரிமாணத்திற்கேற்பப் பெரிதும் சிறிதுமாகும். வேதம்பொய். வருணபேதமில்லை. ஆகாசமுங்காலமும் உள்பொருள்களே. சொர்க்கநரகங்க ளிவ்வுலகத்திலேயேயுள்ளன. கொல்லாமையே எல்லாத்தருமங்களிலும் சிறந்தது. யாகங்கள் கொலைக்கு ஆஸ்பதமானவை ; பயனற்றவை. உறுவர்ப் பேணல், உவர்ப்பின்மை, உலையாவின்பந்தலைநிற்றல், அறிவர்க்குச்செய்யும் பூஜைவிரும்பல், அழிந்தோரைப் பழையநிலையினிறுத்தல், அறங்கூறல், அறிவிலார்விலக்கல், சினமின்மை, செருக்கின்மை, தஞ்சமயத்தோர்க் கெல்லாமினியராதலென்னும் பத்தும் சிறந்தநல்லொழுக்கங்களாம். முற்றத்துறத்தல்முத்தி. துறவாமைபந்தம். நான்கு சூத்திரங்களும் நாற்பத்தைந்து ஆகமங்களும் முதனூல் ; பத்திரவாணனுராற் செய்யப்பட்ட கற்பசூத்திரம் வழிநூல். என்பது. ஆகாசம், காலம், ஆன்மா என்பவையுளவெனலானிது பௌத்தத்தின்வேறுயிற்று. இது நிகண்டவாதம் அல்லது, நிர்க்கந்தவாதம், ஆசீவகவாதமென விருவகைப்படும். அவற்றுள்,

க. நிகண்டவாதமாவது:— கடையிலாஞானம், கடையிலாக்காக்ஷி, கடையிலாவின்பம், கடையிலாவாற்றல், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, இடை

யூறின்மை யென்னுங் குணங்களெட்டும் ; உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம் என்னும் மதில்கள் மூன்றும்; சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாஜனம் என்னும் குடைகள்மூன்றும் ; நற்காக்ஷி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்னும் படைகள் மூன்றும் ; சகசாதிசயம், கன்மக்ஷயாதிசயம்,தெய்வீகாதிசயம் என்னும் அதிசயங்கள்மூன்றும்; அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்னும் ஆகமங்கள் மூன்றும் உள்ளோனும்: ஞானாவரணியம், தரிசனாவரணியம், வேதனீயம், மோகனீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்னும் குற்றங்களெட்டுமில்லோனும் : அசோகின்கீழ்ப் பவணேந்திரர் நாற்பத்திருவர், வியந்தரேந்திரர் முப்பத்திருவர், கற்பேந்திரர் இருபத்திருவர், சந்திரன், சூரியன், நரேந்திரன், மிருகேந்திரன் என்னும் சதேந்திரர்களாற் றொழப்படுவோனுமாகிய அருகதேவனேகடவுள். தன்மாத்திகாயம், அதன்மாத்திகாயம், காலம், சீவன், புண்யம், பாவம், விசும்பு, புற்கலம், பந்தம், வீடென்னும் பத்தும் நூற்பொருள். ஒரு பொருள் ஒரேகணத்தில் நித்த அநித்தத்தைப்பெறும். கரும்பிற் சுவைபோலக் காயத்திலுயிருண்டாம். ஞானவாணிய முதலிய வெட்டும், பசித்தல் முதலிய பதினெட்டும், அரசிகம், இரதி, அரதி, சோகம், சுகுச்சை, பயம் என்னுமாறுமாகிய குணங்கள் முப்பத்திரண்டையும் விட்டுப் பூர்வகன்மங்களைப்புசித்துத் தொலைப்பதே முத்தி. என்பது.

௨. ஆசீவகவாதமாவது:— அனந்த ஞானியாகிய மற்கலிதேவனே கடவுள். நவகதிர் என்பதுநூல். உயிரணு, நிலவணு, நீரணு, கனலணு, காலணு என்னும் ஐந்தும் நூற்பொருள். உயிரணு கன்மத்தானுருவங்கொண்டு மற்றையணுக்களோடுகலக்கும். பூதங்கள், தம்மியல்பிற் றிரள்வதுஞ் செய்யும்; பிரிவதுஞ்செய்யும். பரமாணுக்கள் ஐந்தும் நித்தியம். ஒரு அணு மற்றோரணுவாய்த்திரியாது. உயிர் ஒட்டித்தீ

ண்டிக்கலந்து உணரும். பெறல், இழத்தல்முதலிய எட்டும்கரு ப்பத்திலேயே அமைக்கப்பட்டன. என்பது.

சமணமதம் முற்றிற்று.

## ௬-வது, மீமாஞ்சைமதம்.



இது பூர்வ உத்தரங்களான் இருவகைத்து. இவைமுறையே ஜைமினிபகவான் வியாசர் என்பவர்களானியற்றப்பட்டது. அவற்றுள் ஈண்டுக்கூறப்படுவது பூர்வமீமாஞ்சை. வித்தின் முளையுண்டாதல்போல ஆகாசாதி பூதங்களினின்று பிரபஞ்சமுண்டாகும். பிரபஞ்சந் தானேதோன்றலின் அதற்கு நிமித்த காரணமாக ஒருகடவுள் வேண்டியதில்லை. மந்திரங்களேகடவுள். வேறு கடவுள் இல்லை. வேதம் நித்தியம்; அநாதி; ஒருவரானுக்கப்படாதது. உயிர் நித்தியம்; சேதனம்; அநேகம்; தெருள்மருள்களையுடையது; உருவற்றது; வினைக்குத்தக்ககாயமெடுத்து இந்திரியங்களான் விஷயங்களை நுகர்வது. ஸ்தூலவினைகெட்டுச் சூக்ஷுமவினைகள், ஆன்மாக்களையடைந்து இன்பதுன்பங்களை நல்கும். பிரத்தியக்ஷம் முதலிய ஆறும் பிரமாணமாகும். நித்தம், நைமித்திகம், காமியம், விலக்கு, பிராயச்சித்தம் எனக்கன்மங்கள் ஐவகைப்படும். நித்தியநைமித்திக கருமங்களாற் பிராரத்தவினைகெடும். காமிய கருமத்தாற் சொர்க்கபோகம்கிடைக்கும். விலக்கை யொழித்தலால் ஆகாம்யவினையொழியும். பிராயச்சித்தத்தாற் சஞ்சிதவினைகெடும். முற்கூறிய கருமங்களைப்புரிதலாற் சஞ்சிதாதிவினைகளை யொழித்து எக்காலத்துமழியாத சுவர்க்கத்தை யடைவதே முத்தி. என்பது. இது மறுபிறப்பும், இருவினைப்பயன்களும் உளவெனலானுலோகாயதத்தினும், பிரமாணங்களாறெனலாற் பௌத்தத்தினும், யாகாதிக்கிரியைகளை ஒப்புகோடலாற் சமணத்தினும் வேறு.

மீமாஞ்சைமதம் முற்றிற்று.

## ரு-வது, சமுச்சயன்மதம்.



இது பயன்நோக்காது இறைவனுக்கர்ப்பிதமாக வியற்றப்படும் நற்கருமங்களும், பிரம்மக்ஞானமுமாகிய இரண்டு சிறகுகளுமின்றி உயிர்களாகிய பறவைகள் மோக்ஷமாகியவானுக்குச்செல்லமுடியாது. இரண்டு சிறகுகளையுமொருசேரப் பெருது, ஒருபக்கத்துச் சிறகுடைமை மாத்திரத்தானேயே பறவைகள் வானிற்செல்லமுடியாத வாறுபோல, உயிர்கள் கர்மமும் ஞானமுமாகிய இரண்டில் ஏதேனும் ஒன்றைப்பெற்றமாத்திரத்தானேயே மோக்ஷத்தையடையமுடியாது. ஆதலின் முற்கூறிய அவ்விரண்டையு மொருசேரப்பெறுதலே முத்தியெய்தற்குரிய வழியாகும். என்பது.

சமுச்சயன்மதம் முற்றிற்று.

---

## சா-வது, சாங்கியமதம்.



இது சேச்வரசாங்கியம், நிரீச்வரசாங்கியம் என இருவகைப்படும். முன்னது கர்த்தமரிஷி புத்திரரான கபிலராலும், பின்னது மற்றொருகபிலராலுங் கூறப்பட்டது. ஈண்டுக்கூறப்படுவது நிரீச்வரசாங்கியம். பகுதியேயாவது, விகுதியேயாவது, இரண்டுமாவது, இரண்டுமற்றது என்னும் நான்கு வகையினையுடைய பிரதானமாதி இருபத்தைந்தும் தத்துவங்கள். அவையாவன:- தன்னிற்றோன்றுவனவற்றிற்கு எல்லாம் காரணமாய் ஒரு காரணத்திலிருந்துண்டான காரியமல்லாததாய் இருத்தலின், பிரதானம் அல்லது, மூலப்பிரகிருதி பகுதியேயாவதாம் ( காரணமாத்திரமேயாவதாம் ). ஒன்றைத்தோற்றுவிக்காததாற் காரணமாகாது, ஒன்றிற்றோன்றுதலாற்காரியமாத்திரமேயாதலின், பூதங்கள் ஐந்தும், இந்திரியங்கள் பத்தும், மனம் ஒன்றும் ஆகிய பதினாறும் விகுதியேயாவதாம் ( காரியமாத்திரமே

யாவது). காரணத்தைநோக்கக் காரியமும் காரியத்தைநோக்கக் காரணமும் ஆதலின், மகத்தத்துவம் ஒன்றும், அகங்காரம் ஒன்றும், தன்மாத்திரைகளைந்தும் ஆகிய ஏழும் பகுதியும் விகுதியுமாகிய இரண்டுமாவதாம். ஒன்றிற்றோன்றுததாற் காரியமும், ஒன்றைத்தோற்றுவிக்காததாற் காரணமு மாகாமையின் புருஷன் பகுதியும்விகுதியுமாகிய இரண்டுமற்றதாம். புத்திவேறு; ஆன்மாவேறு; இவ்விரண்டும் ஒன்றன்று. ஆன்மா அல்லது, புருஷன்பல. முற்கூறிய தத்துவங்களிற் பிரதானமும் புருஷனும் ஒழிந்த இருபத்துமூன்றும் காரணத்திலிருந்து தோன்றும் காரியங்களாதலின் நிமித்தகாரணமாகிய ஒரு கடவுள் அவற்றிற்கு வேண்டுவதில்லை. புருஷன் கர்த்திருத்வ போக்திருத்வங்களின்றிச் சாக்ஷிமாத்திரமாய் நிற்பதாம். முடவனுங் குருடனுங் கூடியவிடத்து நடத்தற்றொழி லுண்டாவது போலப் பிரகிருதியும் புருஷனுங் கூடியவிடத்து வியவஹாரமுண்டாம். புருஷன் அஞ்ஞானத்தை அடைந்தபொழுது பிரபஞ்சத்தைத் "தான்" என்றும், ஞானத்தையடைந்தபொழுது பிரகிருதியென்றுமறியும். புருஷன் பிரகிருதியோடு கூடி மயங்குதல் பந்தம். பிரிந்து தெளிதல் முத்தி; என்பது.

சாங்கியமதம் முற்றிற்று.

---

## எ-வது, தார்க்கிகமதம்.

—:o:—

இது நையாயிகம், வைசேஷிகம் எனவிருவகைத்து. இவைமுறையே கௌதம கணாதரர்களாற் கூறப்பட்டன. இவை இரண்டோரம்சங்களிலன்றிப் பிறவற்றிற்றம்முள் ளொக்கும். நையாயிகம், பதார்த்தம் பதினாறு ; பிரமாணம் நான்கு என்னும். வைசேஷிகம், பதார்த்தம் ஏழு ; பிரமாணமைந்து என்னும். இவையே இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு. நையாயிகம் ஒப்புக்கொள்ளாத அருத்தாபத்திப் பிரமாணத்தை வைசேஷிகம் ஒப்புக்கொள்ளும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு

என்பவைகளின் பரமாணுக்களும்,ஆகாசம், காலம்,திக்கு,ஆன்மா,மனம் என்பவைகளும்நித்தியம். சகத்திற்குப்பிரம்மம்உபாதானகாரணம் (முதற்காரணம்) அன்று; பரமாணுக்களேயாம். அப்பரமாணுக்கள் இரண்டுகூடித் துவணுகமும், துவணுகங்கள் மூன்றுகூடித் திரியணுகமும், திரியணுகங்கள் கூடிச்சகத்துமுண்டாகின்றன. பதார்த்தங்களி னுண்மையுணர்வான் அஞ்ஞானம்கெடும் ; அதுகெட ஆசாதிகளும், அவைகெடத்தருமாதருமப்பிரவிர்த்தியும், அதுகெடப் பிறப்புங்கெடும். அப்பிறப்புக்கெட இருபத்தொருதுக்கமும் நாசமாகும். இவ்விருபத்தொரு துக்கநாசமே முக்தி; என்பது.

தார்க்கிகமதம் முற்றிற்று.

---

## அ-வது, யோகமதம்.

—(:o:)—

இது பதஞ்சலிபகவானாற் பகரப்பட்டது. யோகமாவது பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்னும் பஞ்சவிர்த்திகளையு மொழித்தலாற் சித்தம் சுத்தசைதன்னியமாத்திரமாய்நிற்றலாம். இது மந்திர லய ராஜ ஹடங்களான் நால்வகைத்து. ராஜ கன்ம ஹடங்களான் மூவகைத்தென்பாருமுளர். அவற்றுள் ஈண்டுக் கூறப்படுவது ஹடயோகம். அதாவது சூரிய சந்திரகலைகளாகிய சுவாசத்தை நிரோதித்தலாம். உந்தியின்கீழுள்ள கந்தத்திலிருந்துண்டாகும் நாடிகளெழுபத்தீராயிரத்தினுஞ் சிறந்தவை தசநாடிகளே. அவற்றினுஞ் சிறந்தநாடிகள் மூன்றே. அவையாவன:— இடைகலை, பிங்கலை, சுழிமுனையென்பனவாம். இடைகலையாவது வலதுகாற் பெருவிரலிலிருந்து அசைந்திளகியேறி இடது நாசியைப்பற்றியிருப்பது. பிங்கலையாவது இடதுகாற் பெருவிரலிலிருந்தசைந்திளகியேறி வலதுநாசியைப்பற்றி யிருப்பது. சுழிமுனையாவது குதத்தைப்பற்றி நின்றேறிச் சிரசுவரைமுட்டியிருப்பது. இம்மூன்றினுஞ் சிறந்தது, சுழிமுனையொன்றே.

இச்சுழிமுனையின் வாயிலைத் தன்றலையான் மறைத்துத் தூங்கிக்கொண்டிருப்பது பாம்பின்வடிவமாகிய குண்டலினிசக்தியே. இச்சக்தியின் சலனத்தாலன்றி ஆதாராதேயங்களையுணர்தலமையாது. ஆதலின் இடைகலை பிங்கலைகளான்நடக்கும் உச்சுவாஸ நிச்சுவாஸங்களாகிய வாயுக்களிரண்டையுந் தடுத்துச் சுழிமுனையிற் செலுத்தின் அதன்வாயிலிற் றலைவைத்துத் தூங்கிக்கொண்டிருக்குங் குண்டலினிசக்தி விழித்துக்கொள்ளும். பின் இலக்ஷியத்தின் மனம்வைத்து மூலாதாரம் முதலிய வாதாரங்களையும்,ஆதேயங்களையும்உணர்ந்து, பிரம்மரந்திரங்காறுஞ்சென்று, ஆங்குள்ள ஸஹஸ்ராரபத்மத்தை மலர்த்திச் சந்திரனை மூலாக்கினியாலுருக்கி, வடியுமமுதத்திற் படிந்து சோதியைத் தெரிசித்தலே ஆனந்தமாம்; என்பது.

யோகமதம் முற்றிற்று.

---

## கூ-வது, பாஞ்சராத்திரமதம்.



இது விஷ்ணுவின் அவதாரமாகிய நாரதராற் கூறப்பட்டது. சர்வேச்வரராகிய பரவாஸுதேவர் சுயேச்சையாற்படிவங்கொண்டு தம் நாபியில் அயனையுண்டாக்கி அவனாலுலகத்தைப்படைத்து அவன்நெற்றியில் அரனையுண்டாக்கித் தாமே அரியாயினர். அயன், அரன், அரி, சுயேச்சாவடிவம், உலகம் ஆகியஐந்தையும் ஐந்திராத்திரிகளிற் பரவாஸுதேவர் படைத்தனரென்று கூறலான் இது பாஞ்சராத்திர மதமாயிற்று. வாஸுதேவரே பரமான்மா. அவரிலிருந்து உண்டாகும் சங்கர்ஷணரேஆன்மா. அவரிலிருந்து உண்டாகும் பிரத்யும்நரேமனசு. அவரிலிருந்து உண்டாகும் அநிருத்தரே அஹங்காரம். இவற்றின் வியூகமே சர்வான்மாக்கள். பிரபஞ்சம் மித்தையன்று; நித்யமுமன்று. உயிர்களநேகம். பரவாஸுதேவர் தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டு வேண்டிய திருமேனிகொண்டு வலியாராயும் எளியாராயும் தோன்றுவர். பிரபத்தி மார்க்கத்தால்

ஆசாரியாநுக்கிரகம்பெற்று அர்ச்சிராதி மார்க்கத்திற்சென்று விரஜாநதியின் மூழ்கித் திவ்வியரூபம்பெற்றுச் சாலோகாதிபத முத்திகளை அடைந்து அப்பிராகிருத உலகத்திற்சென்று கைங்கரியம்செய்துபரவாஸுதேவரை ஆண்டானாகவும் தன்னை அடியவனாகவும் பாவித்துப் பரமானந்தமடைதலே முத்தி. பரவாஸுதேவரே முழுமுதற் கடவுள். பிறகடவுளர் அவரால்சிருஷ்டிக்கப்பட்டுக் காலக்கிரமத்திலழிவர். ஆதலின், ஆசாரியாநுக்கிரகத்தால் அவரொருவரையே வணங்கி அவரருளாற் புருஷகாரபூதையாகிய லக்ஷுமீ கடாக்ஷம் பெற்று முத்தியை அடையலாம்; என்பது.

பாஞ்சராத்திரமதம் முற்றிற்று.

---

## ௧௦-வது, சைவசித்தாந்தமதம்.

——(**)——

இது ரௌரவாகமம் எழுபத்துமூன்றாவது பாசவிமோசனப்படலத்திற் கூறப்பட்டுள்ள சர்வாகமஸாரமாகிய சிவஞானபோதமென்னுந் துவாதச சூத்திரங்களை முக்கியாதாரமாகக் கொண்டது. இது பரமசிவனால், "சகத்து அனாதியோ ஆதியோ?" என்பதாதிசங்கைகளைக் குறித்துப்பிரச்னஞ்செய்த ஸ்ரீ சிலாதரபுத்திரராகிய நந்திகேச்வரருக் குபதேசிக்கப்பட்டது. அந்நந்திகேச்வரர் சனற்குமாரருக்கும், அவர் சத்ய ஞானதரிசனர்க்கும், அவர் பரஞ்சோதிமாமுனிவர்க்கும், அவர் சுவேதவனப்பெருமாள் என்னுந்திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவசிவாசாரியாருக்கும், அவர் சகலாகம பண்டிதரென்னுந் திருத்துறையூர் அருணந்திசிவாசாரியாருக்கும்,அவர்திருக்காளாஞ்சேரிமறைஞானசம்பந்தசிவாசாரியாருக்கும், அவர் கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியாருக்குமாக இதனை உபதேசஞ் செய்தருளினார்கள். பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம், உவமை, அருத்தாபத்தி, அபாவம் என்னுமாறும் பிரமாணங்கள். அவற்றானளக்கற்பால பதார்த்தங்கள் மூன்று.

அவையாவன:— பதி, பசு, பாசம் என்பனவாம். அவற்றுள் பதியாவது:— பரசிவமேயாம். பசுவாவது:— ஆன்மாக்களாம். பாசமாவது:— ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்றுமாம். சிவபிரானுடைய அருட்சத்தியாகிய திரோதாயியையும், சுத்த தத்துவத்தையும் கூட்டி யைந்தென்பாருமுளர். பதி ஒன்றே. பசு விஞ்ஞானகலர், பிரளயாகலர்,சகலர் என மூவகையாம். விஞ்ஞானகலர் ஆணவமலமாத்திரமுடையோராவர். பிரளயாகலர் ஆணவமும், கன்மமுமாகிய இரண்டுமலங்களையுடையோராவர். சகலர் ஆணவமும், கன்மமும், மாயையுமாகிய மும்மலங்களையும் உடையோராவர். பதி, தமது அபினுபாவ அருட்சத்தியாற்றரப்பட்ட இச்சாஞானக்கிரியாசத்திகளை உடம்பாய்க்கொண்டு காருண்யஸ்வரூபராகிச் சுத்தமாயை, அசுத்தமாயை, அவ்வியத்தம் அல்லது, பிரகிருதிமாயையென்னும் மூன்றுமாயைகளையும் தனித்தனி கூடிமுறையே சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என்னும் மூவகைப்பட்ட தத்துவங்கள் முப்பத்தாறையும் தோற்றுவிப்பர். சிவம், சத்தி, சாதாக்கியம், ஈச்வரதத்துவம், சுத்தவித்தை என்னுமைந்தும் சுத்தமாயையிற்றோன்றிய சுத்ததத்துவங்களாம். காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருஷன், பிரகிருதி என்னும் ஏழும் அசுத்தமாயையிற்றோன்றிய சுத்தாசுத்த தத்துவங்களாம். சித்தம், புத்தி, அகங்காரம், மனம், ச்ரோத்திராதி ஐந்து, வாக்காதியைந்து, சத்தாதியைந்து, பூதமைந்து, ஆகியஇருபத்துநான்கும் பிரகிருதி மாயையிற்றோன்றிய அசுத்த தத்துவங்களாம். பதி, விஞ்ஞானகலருக்கு உள்நின்றுணர்த்தியும், பிரளயாகலருக்கு சுயவடிவங்காட்டி முன்னின்றுணர்த்தியும், சகலருக்குமானிடத்திருமேனிகொண்டு பின்னின்றுணர்த்தியும், பாசக்ஷயம் வருவித்து முத்தியை அளிப்பார். கேவலசகலாவத்தைகளொழிந்து சுத்தாவத்தை யெய்துவதே முத்தி ; என்பது.

சைவசித்தாந்தமதம் முற்றிற்று.

---

## கக-வது, வேதாந்தமதம்.



இது சத்தியம், ஞானம், அநந்தம் முதலிய குணங்களையுடைய பிரம்மம் ஒன்றேஉள்ளது. அதைத்தவிர இரண்டாவதானவஸ்துமுக்காலத்திலுமில்லை. நமதுகட்புலனுக்கு விஷயமாகியஎல்லாப்பொருள்களும் அப்பிரம்மத்தின் வேறல்ல. வேறென்று தோன்றுதல் பொய்யுணர்வே. தெளியாதவிடத்துக் கானலில் நீரும், இப்பியில் வெள்ளியும், கயிற்றிற்பாம்பும் தோன்றித்தெளிந்தவிடத்து நீர், வெள்ளி, பாம்பு ஆகிய தோற்றம்பொய்த்துப்போய்க் கானல், இப்பி, கயிறு,என்பனவாகத்தோன்றுதலைப்போல் மயங்கியவிடத்துப் பிரம்மத்தில் பிரபஞ்சந்தோன்றித் தெளிந்தவிடத்துப் பிரபஞ்சத்தன்மைகெட்டுச் சுத்தப்பிரம்மம் மாத்திரமேதோன்றும். சிலந்திப்பூச்சி தானே தன்னிடத்தில்நாலை ஆக்கிஅழித்தலைப்போல் பிரம்மம் தானே தன்னிடத்தில் பிரபஞ்சத்தை ஆக்கி அழிக்கும். ஆதலின் பிரம்மமே பிரபஞ்சத்தின்நிமித்த உபாதானகாரணங்களாம். ஆகாசம் தன்னிற்றோன்றிய ஏனைப் பூதங்கட்கு இடமாவதன்றித் தானும் அவற்றினிடைத்தங்குதல்போலப் பிரம்மமும் தன்னிடத்திற்றோன்றியவற்றிற்குத் தானிடமாவதன்றித் தானும் அவற்றைஇடமாய்ப்பெற்றுச் சர்வவியாபகமாய் உள்ளும்புறமும் கலந்திருக்கும். பூதங்களும் இந்திரியங்களும் மனம் முதலியகரணங்களும் பிறவும் “ நான் ” அல்லவென்று நேதிகளைந்து எஞ்சிநிற்கும் பதார்த்தமாகிய பிரம்மமே நானென்றறிந்து இரண்டறக்கலந்து தன்னையும் மறத்தலே முத்தி; ' என்பது.

வேதாந்தமதம்முற்றிற்று.

## கஉ-வது, பாசுபதமதம்.

——(**)——

இது பசுபதியைக்கடவுளாய்க் கோடலின் இப்பெயர்த்து; இது சிரௌதம் அல்லது, வைதிகம், அசிரௌதம் அல்லது, அவைதிகம் என இருவகைத்து. அவற்றுள் முன்னது ஈச்வரர் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாத்திரமல்லர். நிமித்த உபாதானங்களாகிய உபயகாரணங்களும் ஆவர். அங்ஙனமாயினும் விகாரமடையார். சிவதத்துவத்திலிருந்தே ஏனைய தத்துவங்களுதிக்கின்றன. ஈச்வரர் திருநீறும், செஞ்சடையுந் தரித்த மூர்த்தியாய் அருள்புரிவர். அக்கினிமுதலிய ஆறுமந்திரங்களையுச்சரித்து விரஜாக்கினியினின்றுண்டான விபூதியை சர்வாங்கோத்தூளனம் செய்துகொள்வதாகிய பாசுபதவிரதத்தை யநுட்டிக்கவேண்டும். பிரணவம், சதருத்ரீயம்,அதர்வசிரசு, அதர்வசிகையென்னும் ஸ்வாத்தியாயத்தினின்றும் கன்மகாண்டவேதாத்யயனத்தினின்றும் தவறல் கூடாது; என்பது. பின்னது ஈச்வரர் பிரபஞ்சத்திற்குக்கேவலம் நிமித்தகாரணம் மாத்திரமேயாவர் ; உபாதானகாரணமாகார் ; ஆயின்விகாரமுறுவராதலின், மாயையே உபாதான காரணமாகும். சத்திகள் கரணம் ஆகும். சிவசத்தி சங்கற்பித்தவிடத்து மாயையிலிருந்து பிரபஞ்சந்தோன்றும் ; என்பது. இது வேதவிருத்தமான கொள்கைகளையுடையது. இவ்வவைதிகபாசுபதமானது நிரூடபாசுபதம், நகுலீசபாசுபதம் முதலியனவாகவும் பிரிக்கப்படும்.

பாசுபதமதம் முற்றிற்று.

---

## கங-வது, வாமமதம்,

இது கடவுள் அக்கினியும், உபவீதமுந்தரித்த மூர்த்தமாய் அருள்புரிவர் ; என்பது.

வாமமதம் முற்றிற்று.

---

## கசு-வது, வயிரவமதம்.

—(※)—

இது சவபஸ்மமும் நராஸ்தியுந்தரித்த வயிரவனும் வயிரவியும் கடவுள்கள். நரபலியே கடவுட்குரிய நிவேதனம். மதுவினால் அபிசாரஞ்செய்து பின்பருகுவதேபாரணம். மதுபானமே தேவாமிருதபானம். கௌரியையொத்த மாதர் இன்பமே முத்தி. கடவுள் தமருகமும், சிலம்புந்தரித்த மூர்த்தமாய் அருள்புரிவர்; என்பது.

வயிரவமதம் முற்றிற்று.

## கரு-வது, மாவிரதமதம்.

இது சிவன் என்பு மாலைதரித்த மூர்த்தமாய் அருள்புரிவர்; என்பது.

மாவிரதமதம் முற்றிற்று.

## கசா-வது, காளாமுகமதம்.

—(**)—

இது கபாலபாத்திரபோஜனம், சவபஸ்மதாரணம், சவமாம்ச புக்த்வம், தண்டதாரணம், சுராகும்பஸ்தாபனபூஜை முதலியன இகபர சார்த்தககருமங்கள். சிவன்படிகமும் புத்திரதீபகமணி யுமணிந்த மூர்த்தமாய் அருள்புரிவர்; என்பது.

காளாமுகமதம் முற்றிற்று.

மதவிளக்கச்சுருக்கம் முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

## மெய்ஞ்ஞான விளக்கத்தின்

# பரியாயப்பெயர் விளக்கம்.



| பெயர். | | விளக்கம். |
|---|---|---|
| அகங்காரற்கினியாள் | - | அகந்தை. |
| அகந்தெளிந்தவறிஞன் | - | நிச்சந்தேகன். |
| அகந்தைகேள்வன்<br>அகந்தைக்கொருதனிக்கணவன்<br>அகந்தைத்திருமணாளன்<br>அகந்தை நாயகன் | } | அகங்காரன். |
| அசத்தியன்றுதை | - | இடம்பன். |
| அசுத்தன் | - | அநாசாரன். |
| அசூயை கேள்வன் | - | மச்சரன். |
| அசோரன் | - | சத்தியன். |
| அஞ்ஞானப்பயந்திடுந்தேவி | - | பாஷண்ட விஞ்சை. |
| அமுதசீலன் | - | சுசீலன். |
| அம்புயன் மகள்<br>அயன்பெற்றமாது | } | உபநிடதை. |
| அராமுடியில்வாழ்முதல்வி | - | பூமாதேவி. |
| அறன் | - | தருமன். |
| அறன்றன்றங்கை | - | சத்துவச்சிரத்தை. |
| அறிஞர்கோன்<br>அறிஞர்தங்கோமான்<br>அறிஞர்தம்பிரான்<br>அறிஞர்பெருமான்<br>அறிஞன் | } | விவேகன். |
| அறிவிலன்<br>அறிவிலாமன்னன் | } | மோகன். |
| அறிவுடைத்தலைவன்<br>அறிவுடையமலன் | } | விவேகன். |
| ஆசை | - | இச்சை. |
| ஆணி | - | கெடுதி. |
| இஞ்சை | - | கொலை. |

இடம்பனருடனையன்
இடம்பனருந்தனையன்
இடம்பன்பாலகன்
இடம்பன் மகன்
இடம்பன் மைந்தன் } அசத்தியன்.

இலச்சை - வெகுமதி.

உட்டெளியர் - நிச்சந்தேகன்.

உணர்வுடைவேந்தன்
உத்தமர்கோன்
உத்தமர்பெருமான் } விவேகன்.

உபநிடதை தமயன் - வேதாந்தி.

உபநிடதைபின்னை - கீதை.

உபநிடதைமுன்வந்தோன்
உபநிடதைமுன்னோன் } வேதாந்தி.

உபநிடத்தோகைமன்னுகாதலன் - விவேகன்.

உருவமருவுகொண்டவன் - காமன்.

உரைமகள் - கலைமகள்.

உளந்தெளிந்தோன்
ஐயமொன்றில்லான்
ஐயுறுத்தனையன்
ஐயுறுன் } நிச்சந்தேகன்.

கஞ்சன்மாமகள் - உபநிடதை.

கபடிதன்கொழுநன்
கபடிநாதன் } கலியன்.

கபாலியேயினள் - வயிரவி.

கமலாசனன்கன்னி - உபநிடதை.

கருணைகேள்வன் - தருமன்.

கலிமகன் - அதன்மன்.

கலியைக்காய்ந்தோர் - யோகினிகள்.

கலைமான் - கலைமகள்.

கவுடதேயன்
கவுடபூபதி
கவுடமன்னன்
கவுடேசன் } அகங்காரன்.

கற்பனைமகிணன்
கற்பனைமணாளன்
கற்பனைவிடாமாமகிணன் } சங்கற்பன்.

காதிக்குமக
காதிசேய் } விஸ்வாமித்திரன்.

| | |
|---|---|
| காமன்சேய்<br>காமன்மைந்தன் | விடயாநந்தன். |
| காரியன் | - உத்தியோகன். |
| குன்றங்கள் கொண்டம்மனையாடு-<br>கின்ற கொடியாள் | வயிரவி. |
| சகுந்தலைக்கு மகிணனார் | - துஷ்யந்தன். |
| சஞ்சலன்றுதை | - கலியன். |
| சதுமுகன் மகள் | - உபநிடதை. |
| சத்துவன் மகள்<br>சத்துவன்றிருமகள் | சத்துவச்சிரத்தை, |
| சாந்திதன்கணவன் | - சமன். |
| சிரத்தை மகள்<br>சிரத்தையீன்ற மெல்லியல் | சாந்தி. |
| சுசனன் | - சுசீலன். |
| சுத்தி | - புனிதை. |
| சுத்திக்குயிரன்னவள் | - சத்துவச்சிரத்தை. |
| சுத்திசந்ததிகள் | - தருமனும்,சத்துவச்சிரத்தையும். |
| சுத்திதன்பதி | - சத்துவன். |
| சுத்திதன்றிருமகள்<br>சுத்தைமகள் | சத்துவச்சிரத்தை. |
| சுமதிநாதன்<br>சுமதிபதி<br>சுமதிமகிணன்<br>சுமதிமான்முன்னவன்<br>சுருதிமகண்மகிழ்நன் | விவேகன். |
| சுருதிமாது | - உபநிடதை. |
| சேதிராசன் | - சிசுபாலன். |
| சோமநாதத்துவந்தோன் | - மானனனுப்பிய ஒற்றன். |
| ஞானதீரன் | - பொறை. (ரு0-ச,சுஅ-பா). |
| டம்பன்மைந்தன்<br>டம்பன்றனையன் | அசத்தியன், |
| தக்கோன் | - விவேகன். |
| தருமன்தங்கை | - சத்துவச்சிரத்தை. |
| தருமன்றேவி | - கருணை, |

| | |
|---|---|
| தர்க்கநீலவாள்விழி<br>தர்க்கவாள்விழி<br>தவளாரவிந்தைமகள் | உபநிடதை. |
| தாந்திகேள்வன் | - தமன். |
| தாமதன் மகள் | - தாமதச்சிரத்தை, நித்திரையுமா[ம். |
| திருட்டணை | - இச்சை. |
| துய்யவன்றாதி | - சத்துவச்சிரத்தை. |
| துன்மதிகேள்வன்<br>துன்மதிமகிணன் | மோகன். |
| நல்விருத்திநாயகிதன்-<br>பெருங்கேள்வன் | த்வன். |
| நாமகண்மகள் | - உபநிடதை. |
| நாமகள் | - கலைமகள். |
| நாமாதின்மகள் | - உபநிடதை. |
| நான்மறைப்பஞ்சரப்பசுங்கிளி | - கலைமகள். |
| நான்முகன்மகள் | - உபநிடதை. |
| நிராகன் | - விராகன். |
| நிலைமை | - தன்னிலை. |
| * நிவிர்த்தி | - மானதன்மனைவி; விரத்தியுமாம். |
| நிவிர்த்திகேள்வன் | - மானதன். |
| நிவிர்த்திபாலன்<br>நிவிர்த்திமகன்<br>நிவிர்த்தியீன்றகாதலன்<br>நிவிர்த்தியீன்றெடுத்த நற்சேய் | விவேகன். |
| நீதிகேள்வன்<br>நீதிநாயகன்<br>நீதிமணாளன் | நியாயன். |
| நீதிமுன்பிறந்தோன் | - விவேகன். |
| நீலி | - வயிரவி. |
| பதுமன்மகள்<br>புண்டரிகன்மகள் | உபநிடதை. |
| புனிதர்கோமான் | - விவேகன். |
| புனிதைகேள்வன் | - சத்துவன். |
| புனிதைசெல்வி<br>புனிதைமகள் | சத்துவச்சிரத்தை. |
| பொய்யன் | - அசத்தியன். |

* இதற்கு இடத்துக்கேற்பப் பொருள் கொள்க.

| | |
|---|---|
| மகிழ்ச்சிபதி<br>மகிழ்ச்சிமாமகிழ்நன்<br>மகிழ்வோன் | சந்தோஷன். |
| மச்சரன்மதலை | வயிரன். |
| மதிக்கணவனூர் | விவேகன். |
| மதிநாதம் | சோமநாதம். |
| மதிநாதன்<br>மதிநிருபன்<br>மதிமகிழ்நன்<br>மதிமணாளன்<br>மதியுடைமன்னன்<br>மதிவேந்தன் | விவேகன். |
| மமதைக்கொருதாதை<br>மமதைதந்தை<br>மமதைதாதை<br>மமதைமடக்கொடிதாதை | அகங்காரன். |
| மலரயன்மகள் | உபநிடதை. |
| மனம் | மானதன். |
| மாதைக்குமன்னன்<br>மாதைவேந்தன் | திருவேங்கடஸ்வாமிகள். |
| மாயை மகன் | மானதன். |
| மானப்பாமரன்சுதன்<br>மானனூர் குமாரன் | உற்சாகன். |
| மிகத்தெளிந்தமதியோன் | நிச்சந்தேகன். |
| மீனகேதனன் சுதன் | விடயாநந்தன். |
| முண்டகமலரோன்றேவி<br>முதுமறைக்கிழத்தி | கலைமகள். |
| மெய்ப்போதன் | பிரபோதன். |
| மெய்வாக்கினன்<br>மெய்வாசகன்<br>மெய்யன் | சத்தியன். |
| மோகன்மாமனைவி | பாஷண்டவிஞ்சை. (௩௪-௪,௨௪-பா.) |
| யுத்திதன்கணவன் | நிரூபகன். |
| லோபன்மாமகன்<br>வஞ்சகிமணாளன்<br>வஞ்சனைமகிழ்நன் | இடம்பன். |
| வாஞ்சை | இச்சை. |
| வாணி | கலைமகள். |

| | |
|---|---|
| வாணிசெல்வி<br>வாணிபேதை<br>வாணிமகள் | } உபநிடதை. |
| விவேகர்கோன்<br>விவேகர்தங்கோமகன் | } விவேகன். |
| விரோதமற்றவீரன் | - அவிரோதன். |
| வெகுரூபி<br>வெண்டாமவெண்புபுனைமாது | } வயிரவி. |
| வேதநாயகன் | - விவேகன். |
| வேதவித்தகி | - கலைமகள். |
| வேதனன்மகள்<br>வேதன்மங்கை<br>வேதன்றனியருட்புதல்வி | } உபநிடதை. |

---

மெய்ஞ்ஞான விளக்கத்தின்

பரியாயப்பெயர் விளக்கம்

முற்றுப்பெற்றது.



# மெய்ஞ்ஞான விளக்கத்தின்
# சரித்திர மேற்கோள் விளக்கம்.



இங்குக்காட்டியவை வசனநூல்கள். பலமுறைவரும் ஒரே சரித்திரம் ஒருமுறை மாத்திரம் விளக்கப்படும்.

## பாயிரம்.

### க. பிரமன் உற்பவம்.

ஸ்ரீ சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை, ஜோதிலிங்கோற்பவ வர்ணன முரைத்த அத்தியாயம்.

### க0. சனகன் உள்ளத்துறவு.

பாரதம் சாந்திபர்வம், திருமுடிபுனைந்த சருக்கம். பாகவதம் நவமஸ்கந்தம், கங-வது அத்தியாயம்.

### கக. பிரகலாதன் பக்தி.

பாகவதம் சப்தமஸ்கந்தம், அ-வது அத்தியாயம். கம்பராமாயணம் உயுத்தகாண்டம்,இரணியன் வதைப்படலம். சிவபராக்கிரமம், ங0-வது அத்தியாயம்.

### கஎ. தக்ஷிணாமூர்த்தி சனகாதியருக்குபதேசஞ் செய்தது.

கந்தபுராணம் உற்பத்திகாண்டம், மேருப்படலம். சிவபராக்கிரமம் ஙங-வது அத்தியாயம்.

### உஎ. க்ஷீராப்தி மதனம்.

கந்தபுராணம் அசுரகாண்டம், மகாசாத்தப்படலம். பாகவதம் அஷ்டமஸ்கந்தம், எ-வது அ-வது அத்தியாயங்கள்.

## க-வது, சருக்கம்.

### ஙரு. காசிபன் மக்கட்பேறு.

பாரதம் ஆதிபர்வம், பிரபஞ்சஉற்பவச்சருக்கம்.

## உ-வது, சருக்கம்.

### கஉ. ஆவின் சிறப்பு.

பாரதம் அனுசாசனிகபர்வம், வேதாகமப்பிரமாணமுரைத்த சருக்கம் (சவனகமுனிவர் சரித்திரம்). சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை

௩௧-வது சண்பகப்பூவின்சாபம். இரண்டு சரித்திரமும் பார்க்கவேண்டும்.

கரு. பரசுராமன் மாதுருவதம்.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம். காஞ்சிபுராணம், பரசுராமப்படலம்.

கச. தந்தைக்காக இராமன் வனஞ்சென்றது.

கம்பராமாயணம் அயோத்தியாகாண்டம், கைகேசி சூழ்வினைப்படலம்; நகர்நீங்கு படலம்.

உக. தந்தையியல் நீத்துத் தசமுகன் மாண்டது.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், இராவணன் வதைச்சருக்கம்.

உரு. தருமத்தால் வீடணன் மேன்மையடைந்தது.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், விபீஷணரடைக்கலப்படலம்.

## ௩-வது, சருக்கம்.

அ௩. திரிபுரதகனம்.

சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை, உச-வது திரிபுரதகனமுரைத்த அத்தியாயம். கந்தபுராணம் உபதேசகாண்டம், முப்புரதகனம்.

## ச-வது, சருக்கம்.

கூ. சுக்ரீவன் வாலிக்கஞ்சி மதங்கமலையிலிருந்தது.

கம்பரரமாயணம் கிஷ்கிந்தாகாண்டம், நட்புக்கோட்படலம்.

எ. பாண்டவர் கரந்துறைந்தது.

பாரதம் விராடபர்வம், பாண்டவர் கரந்துறை சருக்கம்.

எ. நளன் வனவாசம்.

நளசரித்திரம், நகர்நீங்குபடலம்.

உ௦. வடபத்திர சயனம்.

பாரதம் சபாபர்வம், இராஜசூயச்சருக்கம், (கிருஷ்ணமூர்த்தியின் சற்கிருத்திய மகிமை).

## ரு-வது, சருக்கம்.

ச. தமயன்தள்ள வீடணன் புறஞ்சென்றது.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், விபீஷணன் அடைக்கலப்படலம்.

கஅ. அகத்தியர் சமுத்திரபானம்.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம், (தேவேந்திரன் சரித்திரம்).

கஅ. அகத்தியர் விந்தமலையையடக்கியது.

கந்தபுராணம் அசுரகாண்டம், விந்தகிரிப்படலம். பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம்.

௩௩. சடபரதர் சரித்திரம்.

பாகவதம் சதுர்த்தஸ்கந்தம், அ, கூ-வது அத்தியாயங்கள். விஷ்ணுபுராணம் உ-ம் அம்சம் க௩-வது அத்தியாயம்.

௩௪. திரியம்பகன் கழைக்கூத்தியின் மிச்சில் நுகர்ந்தது முதலியன.

முத்தமிழ்ரத்ஞகரம் ம. ஸ்ரீ. பானுகவி அவர்களால் இயற்றப்பட்ட ஹரிஹர தாரதம்மியம், (ஹரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரம்) ௬௩-ம் பக்கம் உ-ம் பாரா.

௬-வது, சருக்கம்.

எ. க்ஷீராப்தி சயனம்.

பாகவதம் தசமஸ்கந்தம், க-வது அத்தியாயம்.

அ. சிவன் கங்கையைத் தரித்தது.

பாகவதம் நவமஸ்கந்தம், கூ-வது அத்தியாயம். பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம். கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம். சிவபராக்கிரமம், கஅ-வது அத்தியாயம். கம்பராமாயணம் பாலகாண்டம், கங்கையின் வரலாறு.

கூ. பிரமன் சிரமிழந்தது.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம். சிவமகாபுராணம் வித்யேசுவரசம்ஹிதை, ௬-வது அத்தியாயம்.

க0. விநாயகர் வழிதொறுநின்றது முதலியன.

விநாயகர் புராணம், திருமணப்படலம். சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை, ௩௬-வது அத்தியாயம்.

கஉ. இந்திரனுயிரங்கோசம் பெற்றது.

கம்பராமாயணம் பாலகாண்டம், அகலிகையின் வரலாறு.

ருஎ. சௌபரி சரித்திரம்.

பாகவதம் நவமஸ்கந்தம், சு-வது அத்தியாயம். விஷ்ணுபுராணம், ச-ம் அம்சம்.

ருஅ. பராசரர் மச்சகந்தியைக்கூடியது.

பாரதம் ஆதிபர்வம், வேதவியாசர் உற்பவச்சருக்கம். கந்தபுராணம், பாயிரப்படலம்.

ருகூ. வியாசர் விதவாகமனம்.

பாரதம் ஆதிபர்வம், சம்பவச்சருக்கம்.

## எ-வது, சருக்கம்.

உசு. தக்கன் தலையிழந்தது.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், யாகசங்காரப்படலம்.

## கக-வது, சருக்கம்.

அஅ. வேதவியாசர் உற்பவம்.

பாரதம் ஆதிபர்வம், வேதவியாசர் உற்பவச்சருக்கம்.

அஅ. அகஸ்தியர் உற்பவம்.

கம்பராமாயணம் உத்தரகாண்டம், (ஸ்ரீராமர் லட்சுமணருக்கு சினங்கடியாமையைப்பற்றிக் கூறிய வசிட்டமுனி சரித்திரம்).

அஅ. உள்ளத்திற் பிறந்தவர்.

பாகவதம் திருதியஸ்கந்தம், கஉ-வது அத்தியாயம். விஷ்ணுபுராணம், க-ம் அம்சம் எ-வது அத்தியாயம். வேதாரணியபுராணம் பிரமசிருட்டிச்சருக்கம், கச-ம் பாட்டு. பிரமன் உள்ளத்தில் பிறந்தவர், வசிட்டர்.

அஅ. மான்வயிற்றிற் பிறந்தவர்.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம்.

அஅ. கிளிவயிற்றிற் பிறந்தவர்.

பாரதம் சாந்திபர்வம், தருமவியலுரைத்த சருக்கம். (ஞானசாதனத்தைப்பற்றிக்கூறிய சுகயோகியின் கதை).

## கச-வது, சருக்கம்.

அ. தண்டி தந்தையைக்கொன்றது.

பெரியபுராணம், சண்டேசுவர நாயனார் சரித்திரம்.

கூ. அஜாமிளன் சரித்திரம்.

பாகவதம் ஷஷ்டமஸ்கந்தம், க-வது அத்தியாயம்.

கூ. அங்கிலன் சரித்திரம்.

யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளையவர்களியற்றிய தமிழ்ப்பேரகராதி, உ-வது பொருளகராதியில் பார்க்கவும். சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை, எச-வது அத்தியாயம்.

## ககூ-வது, சருக்கம்.

கச. கஜேந்திரன் சரித்திரம்.

பாகவதம் அஷ்டமஸ்கந்தம், உ-ஙு-ச-வது அத்தியாயங்கள்.

## உ0-வது, சருக்கம்.

கரு. சிவன் உமைக்கொருபாகமளித்தது.

அருணசலபுராணம், இடப்பாகம் பெற்றசருக்கம். சிவபராக்கிரமம் உஉ-வது அத்தியாயம்.

கரு. விஷ்ணுமார்பில் இலக்குமியைத்தரித்தது.

பாகவதம் அஷ்டமஸ்கந்தம், அ-வது அத்தியாயம்.

## உஉ-வது, சருக்கம்.

ச. ததீசியின் ஈகை.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம், (தேவேந்திரன் சரித்திரம்).

ஙரு. திருமால் விசுவரூபம்.

பாரதம் பீஷ்மபர்வம், முதற்போர்ச்சருக்கம். பகவத்கீதை, விசுவரூப அத்தியாயம்.

ஙச. திருமால் அம்பரீடனுக்கருள் புரிந்தது.

பாகவதம் நவமஸ்கந்தம், ரு-வது அத்தியாயம்.

ஙச. தேவருக்கு அமுதங்கொடுத்தது.

பாகவதம் அஷ்டமஸ்கந்தம், எ, அ, கூ-வது அத்தியாயங்கள்.

ஙஅ. சிவன் விஷமுண்டது.

பாகவதம் அஷ்டமஸ்கந்தம், எ-வது அத்தியாயம்.

## உச-வது, சருக்கம்.

உகூ, மகிஷாசுரமர்த்தனம்.

தேவீபாகவதம். காஞ்சிபுராணம். அருணசலபுராணம்.

ரு0. மேருசிகரபேதனம்.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், இலங்கைகேள்விப்படலம்.

## உரு-வது, சருக்கம்.

கசு. வீடுமன் தம்பிகளுக்கு இராஜ்யமளித்தது.

பாரதம் ஆதிபர்வம், சம்பவச்சருக்கம்.

கரு. இராவணன் அங்கதனுரையை மறுத்தது.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், அங்கதன் றூதுப்படலம்.

கரு. துரியோதனன் கண்ணனுரையை மறுத்தது.

பாரதம் உத்தியோகபர்வம், கிருஷ்ணன் றூதுச்சருக்கம்.

## உசு-வது, சருக்கம்.

கக. ஜயந்தன் ஒருகண்ணிழந்தது.

வால்மீகி ராமாயணம் சுந்தரகாண்டம், ௬அ-வது அத்தியாயம், (சீதையடையாளமாகச் சூடாமணிகொடுத்தல்).

கஉ. மித்திரனும், வருணனும் குடத்தில் வீரியம் விட்டது.

பாகவதம் நவமஸ்கந்தம், க௩-வது அத்தியாயம். ராமாயணம் உத்தரகாண்டம், சாந்திப்படலம்.

கஎ. விஷ்ணு விருந்தையின்பொருட்டு ஆசுரகோலங்கொண்டது.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம்.

உரு. விசுவாமித்திரன் வசிட்டன்மக்களைச்சபித்தது.

வால்மீகி ராமாயணம் பாலகாண்டம், ருஅ-வது சருக்கம், (திரிசங்குசாபம்).

உரு. கபிலமுநிவர் சகரரைச் சபித்தது.

கம்பராமாயணம் பாலகாண்டம், கங்கையின் வரலாறு. பாகவதம் நவமஸ்கந்தம், அ-வது அத்தியாயம்.

உசா. சிவன் யானையையுரித்தது.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம்.

உசா. இராவண கர்வபங்கம்.

கம்பராமாயணம், உத்தரகாண்டம்.

உஅ. விசுவரூபன் வதை.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம். பாகவதம் ஷஷ்டமஸ்கந்தம், கூ-வது அத்தியாயம். பெரியபுராணம் க-வது இந்திரன் பழிதீர்த்தபடலம்.

நூச. பிரசேனன் லோபகுணம்.

பாகவதம் தசமஸ்கந்தம், ருசு-வது அத்தியாயம். விஷ்ணுபுராணம் ச-ம் அம்சம் கநூ-வது அத்தியாயம்.

நூசு. பிரமன் பலியேற்றது.

கோயிற்புராணம்.

நூசு. சிவன் பலியேற்றது.

சிவபராக்கிரமம், உகூ-வது அத்தியாயம். கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம்.

நூசு. விஷ்ணு மாவலியையாசித்தது.

கம்பராமாயணம் பாலகாண்டம்.

சச. பாற்கடல் சிவனுக்கு விஷமும், விஷ்ணுவுக்குக் கௌத்துவமணியும் கொடுத்தது.

பாகவதம் அஷ்டமஸ்கந்தம், எ-வது அத்தியாயம். பாரதம், பாரதவரலாறு, (கருடபகவான் சருக்கம்).

சகூ. தாழம்பூ பொய்யுரைத்தது.

சிவமகாபுராணம் ஞானசம்ஹிதை, நூ0-வது தாழம்பூவின் சாபமுரைத்தது. அருணாசலபுராணம், திருமலைச்சருக்கம். இவ்விரண்டு சரித்திரங்களையும் பார்க்கவேண்டும்.

ருச. இந்திரன் துர்வாசனளித்த மாலையை அலட்சியஞ்செய்தது.

திருவிளையாடல், வெள்ளையானை சாபந்தீர்த்தபடலம்.

ருசு. சிசுபாலன் கிருஷ்ணதூஷணம்.

பாரதம் சபாபர்வம், இராஜசூயச்சருக்கம்.

ருசு. துரியோதனன் கிருஷ்ணதூஷணம்.

பாரதம் உத்தியோகபர்வம், கிருஷ்ணன் தூதுச்சருக்கம்.

ருசு. இராவணன் நந்திதூஷணம்.

கம்பராமாயணம் உத்தரகாண்டம்.

ருகூ. நகுஷன் சப்தரிஷிதாடனம்.

பாரதம் ஆதிபர்வம், ச-வது குருகுலச்சருக்கம். திருவிளையாடல் தேவேந்திரன் பழிதீர்த்தபடலம்.

ருஎ. துந்துமி வீரம்.

கம்பராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம், துந்துமிப்படலம்.

சூ0. பிரகலாதன் நன்றிமறத்தல்.

சிவபத்தமகிமை சூஎ-வது பக்கம்.

சூ0. துருபதன் நன்றிமறத்தல்.

பாரதம் ஆதிபர்வம், வாரணாவதச்சருக்கம்.

சூரு. இராவணன்பால் விஷ்ணுவினழுக்காறு.

கம்பராமாயணம் உத்தரகாண்டம்.

சூசூ. திலீபன்பால் இந்திரனுக்கழுக்காறு.

வடமொழி, ரகுவம்சம் ங-வது சருக்கம்.

சூஎ. கும்பகர்னன்பால் தேவர்க்கழுக்காறு.

கம்பராமாயணம் உத்தரகாண்டம்.

சூகூ. சுக்கிரன் ஈகைக்கிடையூறு செய்தது.

கம்பராமாயணம் பாலகாண்டம், மாவலிகதை.

எரு. பரசுராமர் பிதுர் தர்ப்பணம்.

பாரதம் சபாபர்வம், இராஜசூயச்சருக்கம், (ஸ்ரீ பரசுராமர் அவதாரமகிமை). காஞ்சிபுராணம் பார்க்க.

எஅ. சிவன்தாருகாவனஸ்திரீகள் கமனம்.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம். கூர்மபுராணம், சிவன் தாருகா வனஞ்சென்ற அத்தியாயம்.

எஅ. விஷ்ணு மோகனவதாரம்.

கந்தபுராணம் அசுரகாண்டம், மகாசாத்தப்படலம்.

எஅ. இராமன் அக்கிரமம்.

கம்பராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம், வாலிவதைப்படலம்.

எகூ. வசிட்டர் கன்மாடபாதனைச்சபித்தது.

பாரதம் ஆதிபர்வம், சுயம்வரச்சருக்கம், (வசிட்டர் சரித்திரம் கேட்டுவழிநடத்தல்). கம்பராமாயணம் உத்தரகாண்டம்.

எகூ. கன்மாடபாதன் வசிட்டரைச்சபிக்கத்தொடங்கியது.

பாரதம் ஆதிபர்வம், சுயம்வரச்சருக்கம். கம்பராமாயணம் உத்தரகாண்டம்.

அ0. வசிட்டவிசுவாமித்திரயுத்தம்.

பாரதம் ஆதிபர்வம், சுயம்வரச்சருக்கம், (வசிட்டர் சரித்திரங்கேட்டுவழிநடத்தல்).

அக, வீமன் அக்கிரமம்.

பாரதம் சவுத்திகபர்வம், சுயோதனன் வதைச்சருக்கம்.

அஉ. விருத்திரன்பால் இந்திரன் அக்கிரமம்.

திருவிளையாடல், இந்திரன் பழிதீர்த்தபடலம். பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம், (தேவேந்திரன் சரித்திரம்).

அங. விராடன் அக்கிரமம்.

பாரதம் விராடபர்வம், உத்தரநிரைமீக்ஷிச்சருக்கம்.

அஅ. தாக்ஷாயணியக்கினிப்பிரவேசம்.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், உமைவருபடலம். பாகவதம் சதுர்த்தஸ்கந்தம், ச-வது அத்தியாயம்.

கூ0. சுயோதனன் மானம்.

பாரதம் சவுத்திகபர்வம், சுயோதனன் வதைச்சருக்கம்.

கூ0. வாலியின் மானம்.

கம்பராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம், வாலிவதைப்படலம்.

க00. இராமன் வருணன்மேல் அம்புதொடுத்தது.

கம்பராமாயணம் உயுத்தகாண்டம், (வருணனை வழிவேண்டுபடலம்).

ககங. பிரம விஷ்ணுக்களினகங்காரம்.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், அடிமுடி தேடுபடலம்.

ககரு. சுப்பிரமணியக்கடவுள் பிரமனைக்குட்டியது.

கந்தபுராணம் உற்பத்திகாண்டம், அயனைச்சிறைபுரிபடலம்.

ககரு. சுப்பிரமணியக்கடவுள் சிவனுக்குபதேசஞ்செய்தது.

கந்தபுராணம் உற்பத்திகாண்டம், அயனைச்சிறைநீக்குபடலம்.

## உஎ-வது, சருக்கம்.

உக. வீடுமன் அம்பையைமணஞ்செய்ய மறுத்தது.

பாரதம் ஆதிபர்வம், சம்பவச்சருக்கம், (பீஷ்மர் உற்பவம்).

ருங. வசிட்ட விசுவாமித்திரர்களின் சரித்திரம்.

பாரதம் சுயம்வரச்சருக்கம், (பாண்டவர், வசிட்டர் சரித்திரங்கேட்டுவழிநடத்தல்).

சூo. சிவன், மான், மழு, பாம்பு, புலித்தோல், யானைத்தோல் முதலியவற்றைப்புனைந்தது.

கந்தபுராணம் தக்ஷகாண்டம், ததீசியுத்தரப்படலம்.

கூஅ. சிபிசக்கரவர்த்தியின் ஈகைச்சிறப்பு.

பாரதம் ஆரண்யபர்வம், உரோமசமுனிச்சருக்கம்.

கoக. மநுநீதிகண்ட சோழன் நீதிமுறை.

பெரியபுராணம், திருவாரூர்ச்சிறப்பு.

## உஅ-வது, சருக்கம்.

உஉ. சிவன் கல்லெறியுண்டது.

பெரியபுராணம், சாக்கியநாயனார் சரித்திரம்.

## ௩௫-வது, சருக்கம்.

கசு. கத்துருவின் சரித்திரம்.

பாரதம், பாரதவரலாறு, (கருடபகவான் சருக்கம்).

## சஅ-வது, சருக்கம்.

ங. இந்திரன் ஈசன்வீரியத்தைக்காத்தது.

கந்தபுராணம் உற்பத்திகாண்டம், திருவவதாரப்படலம்.

---

மெய்ஞ்ஞான விளக்கத்தின்

சரித்திரமேற்கோள் விளக்கம்

முற்றுப்பெற்றது.



உ

பரப்பிரம்மணேநமஃ.

# சிவவிஷ்ணுத் திருப்பதிகள்.

———(:※:)———

## வெண்பா.

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்.

வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாந்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார
ஆண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி.

வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு.

மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம்
நற்றொண்ட நாடெனவே நாட்டு.

———

## பாடல்பெற்ற
## சிவத்திருப்பதிகள்.

——(:※:)——

சகூ - ம், விருத்தம்.

தில்லை - சிதம்பரம்
திருவேட்களம்
திருநெல்வாயில் - சிவபுரி
திருக்கழிப்பாலை

திருநல்லூர்ப்பெருமணம் - ஆச்சாபுரம்.
திருமயேந்திரப்பள்ளி
திருத்தென்முல்லைவாயில்
திருக்கலிக்காமூர் - அன்னப்பன்பேட்டை.

திருச்சாய்க்காடு - சாயாவனம்
பல்லவனீச்சரம் - காவிரிப் பூம்பட்டினத்துள்ள ஆலயம்.
திருவெண்காடு
கீழைத்திருக்காட்டுப்பள்ளி
திருக்குருகாவூர்
சீர்காழி
புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன் கோயில்.
திருக்கோலக்கா - திருத்தாளமுடையார் கோயில்.
திருக்கண்ணார் கோயில்
திருப்புன்கூர்
திருநீடூர்

௫0.

திருக்கடைமுடி - கீழையூர்
திருநின்றியூர்
திருவேள்விக்குடி
திருஅன்னியூர்
எதிர்கொள்பாடி
திருக்குறுக்கைவீரட்டம்
திருக்கருப்பறியலூர்
கீழைத்திருமணஞ்சேரி
குரக்குக்கா
வாழ்கொளிபுத்தூர்
திருப்பழமண்ணிப்படிக்கரை - இலுப்பைப்பட்டு.
ஓமாம்புலியூர்
திருநாரையூர்
திருக்கடம்பூர்
கானாட்டுமுள்ளூர்
திருப்பந்தணநல்லூர்
திருக்கஞ்சனூர்

௫க.

திருக்கோடிகா
திருப்பனந்தாள்
திருமங்கலக்குடி
திருஆப்பாடி
திருச்சேய்ஞலூர்
திருவியலூர்
திருந்துதேவன்குடி
திருவின்னம்பர்
கொட்டையூர்
திருவைகாவூர்
திருவிசையமங்கை
திருப்புறம்பயம்
திருப்பழனம்
வடகுரங்காடுதுறை
திருவையாறு
திருநெய்த்தானம்
பெரும்புலியூர்
திருமழபாடி
அன்பிலாலந்துறை
திருக்கானூர்

௫உ.

திருப்பழுவூர்வீரட்டம்
திருமாந்துறை
திருப்பாற்றுறை
திருவானைக்கா - ஜம்புகேச்வரம்
திருப்பாச்சிலாச்சிராமம் - திருவாசி.
திருப்பைஞ்ஞீலி
திருஈங்கோய்மாமலை
திருக்கடம்பந்துறை
வாட்போக்கி - இரத்தினகிரி
திருக்கற்குடி
திருப்பராய்த்துறை
திருமூக்கீச்சரம் - உறையூர்
எறும்பியூர்

௫௩.

திருச்சிராப்பள்ளி
நெடுங்களம்
மேலைத்திருக்காட்டுப்பள்ளி
திருஆலம்பொழில்
திருப்பூந்துருத்தி
திருக்கண்டியூர்வீரட்டம்
திருச்சோற்றுத்துறை
திருப்புள்ளமங்கை
திருச்சக்கரப்பள்ளி - ஐயம்பேட்டை
தென்குடித்திட்டை
திருவேதிகுடி
திருக்கருகாவூர்
திருப்பாலைத்துறை
திருவாவூர்ப்பசுபதீச்சரம்
திருநல்லூர்
திருச்சத்திமுற்றம்

